


அருங்கலைக்கோன், ஸ்ரீசடகோபன் பொன்னடி, சேவா ரத்னா,
தமிழ்ப்பேரவைச் செம்மல், கலைமாமணி, ஆய்வுத்தமிழரசு,
பொதுமறைச் செம்மல், வைணவ இலக்கிய மாமணி

பேராசிரியர் முனைவர்
**ந சுப்பு ரெட்டியார்**
முன்னாள் வாழ்நாள் மதிப்பியல் பேராசிரியர்

தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்




# ஆண்டாள்
# திருப்பாவை விளக்கம்



மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்!
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்!
கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்
ஏராந்த கண்ணி யசோதை யிளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்
நாராயணனே நமக்கே பறைதருவான்
பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய்.







**ந சுப்பு ரெட்டியார்100**
*Centenary Committee Publications*

# ஆண்டாள்

# திருப்பாவை விளக்கம்

அருங்கலைக்கோன், ஸ்ரீசடகோபன் பொன்னடி, சேவா இரத்னா,
தமிழ்ப்பேரவைச் செம்மல்,கலைமாமணி, ஆய்வுத்தமிழரசு,
பொதுமறைச் செம்மல், வைணவ இலக்கிய மாமணி

**பேராசிரியர் முனைவர்**

## ந சுப்பு ரெட்டியார்

**முன்னாள் வாழ்நாள் மதிப்பியல் பேராசிரியர்**
தமிழ் இலக்கியத் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்






ந சுப்பு ரெட்டியார் 100
*Centenary Committee Publications*

# FOREWORD

Thiruppavai is the famous treatise of Andal containing thirty verses in Tamil. Six Vaishnavite commentators like Periyavachanpillai the king of the kings among the commentators have written beautiful commentaries in Sanscritised - Tamil (Manipravalam) denoting the quint essence of Vaishnavite Philosopy which cannot be read and comprehended by an ordinary Tamil reader. Prof. Dr. N. Subbu Reddiar, former Founder - Proffessor and Head of the Department of Tamil of Sri Venkateshwar University, Tiruppathi has taken enormous pains to go through the six commentaries and rendered them in simple readable Tamil which can be read and comprehended even by ordinary lay Tamil reader who can enjoy the philosophy of Vaishnavism. T. T. Devasthanam is happy to publish the beautiful treatise for the benefit of even the lay public and offer its thanks to Prof. Reddiar.

Executive Officer

T. T. Devasthanam

குன்றின்மேல் விளக்குபோல
நின்ற திருக்கோலத்தில்
சேவைசாதித்து ஆசிகூறும்
'வேங்கடம் மேவிய விளக்கின்'
இணைத்தாமரை அடிகளில்

## பக்திப் படையல்

**திங்களின் முகத்துச் சேயிழை யார்கள்**
**சென்றிறைஞ் சியதிருப் பாவைச்**
**சங்கமார் தமிழின் அவையெலாம் தெரிக்கும்**
**தக்கபே ருரைகளில் எங்கும்**
**தங்கிய பொருளின் சாரமாம் இதனைத்**
**தனித்தமிழ்ப் பனுவலாய்த் திரட்டிச்**
**செங்கணான் ஏழு மலையவன் பொன்னார்**
**திருவடிக் கணியெனப் படைத்தேன்!**

# அணிந்துரை

## (டாக்டர் பிரேமா நந்தகுமார்)

நம் அனைவருக்கும் எளிதில் விளங்கும் வகையில், பழம்பெரும் உரைகள் இட்ட கோட்டை மீறாமல், திருப்பாவைக்கு ஒரு புதிய உரை டாக்டர் ந. சுப்புரெட்டியார் மூலம் மலர்ந்திருக்கிறது. செழுமையான நிலத்தில், ஜலஸம்ருத்தி உள்ள இடத்தில், நல்லதோர் தாமரைப் பொய்கையில் செங்கழுநீர்ப் பூக்கள் பட்டுப்பாயாக விரிந்து கதிரவனை நோக்குவது போல் இந்த உரை அமைந்திருக்கிறது. இதில் ஆச்சரியமில்லை. உரையாசிரியர் திரு. சுப்புரெட்டியார் ஆயிற்றே!

டாக்டர் ரெட்டியார் அவர்களை சுமார் நாற்பதாண்டுகளாக அறிந்திருக்கிறேன். என் தந்தையார், கே. ஆர். ஸ்ரீநிவாச அய்யங்கார் இவரது கடினமான உழைப்பைப் பற்றி அடிக்கடி சொல்வார். திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் பேராசிரியர் என்று தெரியும். ஆயினும், 'நினைவுக் குமிழிகள்' என்னும் அவரது சுயசரிதை படித்தபின்தான் கல்வி எனும் பெருந்தனத்தைப் பெற டாக்டர் ரெட்டியார் எவ்வளவு சிரமப்பட்டு உழைத்திருக்கிறார் என்று தெரிந்துகொண்டேன். பல்வேறு தடங்கல்களைத் தாண்டி வந்து பெற்றதனால் போலும், அவர் கல்வியை இன்றுவரை போற்றுகிறார். நமது எழுத்துக்கள் மூலம் பல்லாயிரவர் போற்றும் ஆசிரியராக விளங்குகிறார். குறிப்பாக வைணவத்திற்கு இவர் ஆற்றி வரும் தொண்டு மிகவும் அற்புதமானது.

திருப்பாவைக்கு பேராசிரியர் ரெட்டியார் உரை எழுதுவது நமக்கு வரப்பிரசாதம். ஆனால் இந்நூலுக்கு அணிந்துரை எழுத எனக்கேது தகுதி? திருப்பாவை எப்படிப்பட்ட நூல். உவார் உள்ளத்து எங்கும் பெருஞ் செந்நெல்லாக வளர்ந்து, பல நூற்றாண்டுகளாக கணம் தோறும் புதுப்புதுப் பொருள்கள் நமக்களிக்கும் வள்ளன்மை பூண்ட நூல். உரையாசிரியரோ நூற்றுக்கு மேற்பட்ட நூல்கள் வெளியிட்டும் அடுத்து எந்த உயர்ந்த நூலைப் பற்றி எழுதி மக்களிடையே நன்னெறி பரப்பலாம் என்று அயராது உழைத்துக்

கொண்டிருக்கும் கலைவாணியின் அருட்செல்வர். எனக்கிருக்கும் தகுதியெல்லாம் நான் திருவரங்கத்தில் வசிக்கும் பாக்கியம் பெற்றவள், மற்றும் என் தந்தையார் கண்ணன் சரிதையை ஆங்கிலத்தில் மிகச் சிறப்பாக Krishna Geetham என்ற காவியமாக இயற்றியிருக்கிறார் என்பதே. டாக்டர் ரெட்டியார் அவர்கள் என்னிடமுள்ள அன்பு காரணமாக எனக்குத் தெரிந்ததை எழுதச் சொன்னார். பெரியவர் சொல்வது ஆசீர்வாதம் என்பதால், அந்த ஆசிகளே பலமாக ஓரிரு வார்த்தைகள்.

சமீபத்தில் இந்திரா பார்த்தசாரதி அவர்கள் கிருஷ்ணா... கிருஷ்ணா என்று கண்ணனின் சரிதத்தை புனிதமாக வெளியிட்டார். முன்னுரையில் அவர் சொல்வார் : அறிய வேண்டியவற்றின் எல்லை நிலம் கிருஷ்ணன்... என்று. சரியான வார்த்தை.

அந்த எல்லை நிலத்தைத் தேடிப்போகிறாள் ஆண்டாள். விளைவு : ஒரு அற்புதமான ஆன்மிக நாடகம் இரட்டை நோக்கில் (Diorama) படைக்கப்படுகிறது. அரங்கத்தின் முன்புறம் காண்பது ஒருவரை ஒருவர் எழுப்பும் ஆயர்பாடிப் பெண்களைத்தான். இப்பெண்கள் மழை வேண்டிப் பாடுகிறார்கள். அதிகாலையில் நீராடப் போகிறார்கள். இவர்களது வேண்டுதலுக்கு உபயோகப்படுத்தக்கூடிய சங்கு, விளக்கு, கொடி, பறை, விதானம் முதலியவற்றைக் கண்ணனிடம் கேட்டுப் பெறுகிறார்கள். கண்ணனுடன் மகிழ்ந்து பால் சோறு உண்கிறார்கள். சங்கமாகக் (கூட்டமாக) கூடி ஆடுகிறார்கள், பாடுகிறார்கள்.

இந்நாடகத்திற்குப் பின்புலமும் அரங்கத்தில் தெரிகிறது. அங்கே ஆயர்பாடிப் பெண்கள் கண்ணனுடன் சேர்ந்து மகிழ்ந்திட சுனையாடுவதாகக் கூறுகிறார்கள். மழை வேண்டி பறை கேட்டதும் ஒரு வியாஜமே. இப்பெண்கள் எம்பெருமானுக்கு என்றென்றும் சேவகம் (கைங்கர்யம்) செய்வதையே விரும்புகிறார்கள். கண்ணனால் இவர்களை ஏமாற்ற முடியாது. ஏமாற்றவும் மாட்டான். கேட்ட பொழுது பொருள் கொடுக்கும் கண்ணனிடம் மிக அழுத்தமாக ஆயர்பாடிப் பெண்கள் கூறுகிறார்கள் :

**பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்துநீ**
**குற்றவேல் எங்களைக் கொள்ளாமல் போகாது**
**இற்றைப் பறைகொள்வான் அன்றுகாண் கோவிந்தா**
**எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு**
**உற்றோமே யாவோம் உனக்கேநாம் ஆட் செய்வோம்...**

திரு ரெட்டியாரின் உரை பெரியவாச்சான் பிள்ளையின் மூவாயிரப்படியில் ஆரம்பித்தும் பின்பு தோன்றிய உரைகளின் சாரத்தை உள்வாங்கிக்கொண்டும் அமைந்திருக்கிறது. உரையாசிரியர்கள் தொட்டது எதையுமே நமது ஆசிரியர் மறக்கவில்லை. மார்கழித் திங்கள் பாசுரத்திலேயே இது தெரிந்துவிடுகிறது. மார்கழி மாதமான வைணவ மாதத்தின் பெருமை, நிலவின் குளிர்ச்சி, திருவின் பொலிவு நிறைந்த ஆயர்பாடி, பரிவுக்கோர் பதிவான நந்தகோபன், அன்னையின் நெஞ்சத்திற்கு உருவகமான யசோதை, போதனகவி கூறிய "நல்லனிவோடு பத்ம நயனம்பு கலவாடு" என்றபடி கார்மேனிக் கண்ணன்... இவையாவும் ஒருசேர நாம் ஆனந்தாநுபவத்தில திக்குமுக்காடும்போது கோதை சொல்வாள் : "நாராயணனே நமக்கே பறை தருவான்" என்று. ஆய்ப்பாடிப் பெண்களுக்குத்தான் தங்களது இரட்சகன் பற்றி எத்துணை தெளிவு! அதனால்தான் சுவாமி விவேகானந்தர் தெளிந்த பக்தியிலே கோபிகைகளுக்கு நிகரில்லை என்பார்.

"அவனால்தானே பேறு, வேறு இரட்சகராலேயல்ல என்று அநந்யகதிகளாக இருக்கிற நமக்கே சக்தியுண்டெனினும், நமது சொரூபத்திற்குச் சிறிதும் பொருந்தாது என்று உபாய சூன்யரான நமக்கே ஆகிஞ்சநயாய் அவன் கை பார்த்திருக்கின்ற நமக்கே" கைங்கர்யஸ்ரீயைத் தருவான். இதுவே மகாவிசுவாசம்! நமக்கு அவசியமான குணநலன் இந்த அசைவற்ற நம்பிக்கைதான் என்பதில் சந்தேகமில்லை.

பாசுரங்களில் உட்புகுந்து சிந்திப்பது டாக்டர் ரெட்டியாரவர்களுக்கு வாழ்க்கை நெறியாகிவிட்டது. அதனால் இந்நூலைப் படிக்கப் படிக்க பலப்பல பொருளார்ந்த, சுவைமிக்க விஷயங்கள் கிடைக்கின்றன. இனியேனும் இத்தீந்தமிழ்ப் பாசுரங்களை தவறேதும் நேராதபடி படிக்கவேணும் என்று புரிகிறது. ஓர் எடுத்துக்காட்டு. இரண்டாவது பாசுரம். ஆண்டாள் நோன்பிற்கான விதிமுறைகளைப் பட்டியலிடுகிறாள் : "செய்யாதன செய்யோம் தீக்குறளை சென்றோதோம்" டாக்டர் ரெட்டியார் எழுதுகிறார் :

"தீக்குறளைச் சென்றோதோம் என்று பலர் வாயிலும் வருகின்ற பாடம் தவிர்க்கத்தக்கது. இங்கு 'குறள்' என்பது சொல் வடிவம் அன்று. 'குறளை' என்பதே சொல் வடிவம். குறளை சென்று, என்ற சந்தியில் சகரம் இரட்டிக்காது. இயல்பேயாகும். கோட் சொல், நிந்தை, வம்புப்பேச்சு, பொய்யுரை இவற்றிற்குத் தீக்குறளை என்று பெயர். தன்னிடத்தில் தீயகுணங்கள் நிரம்பியிருப்பினும் தன்னை

ஒரு மகா குணசாலியாகப் புகழ்ந்து கொள்ளுதல், பிறரிடம் பல நற்குணங்கள் இருந்தபோதிலும் அவற்றைவிட்டுச் சில குற்றங்களையே விரித்துரைத்தல், நற்றங்களைக் குற்றமாக்கிப் பேசிடுதல், உண்மையல்லவான பேச்சுகளைப் பேசுதல், பிராப்த விஷயங்களைத் துதிக்க அமைந்த நாவைக் கொண்டு அபிராப்த விஷயங்களைத் துதித்தல், காரணமில்லாமல் பெரியோரைப் பழித்தல் முதலிய நாவகாரியங்களைத் தவிர வேண்டுமென்று கூறியவாறு."

மணிமேகலையோ, திரிகடுகமோ படித்திருந்தால்தானே குறளை என்றொரு சொல் உண்டு, அது கோட்சொல்லாகும் என்று தெரியும்? பொதுவாக குறள் என்றால் குறளடிதானே நினைவுக்கு வரும்? வாய்தவறி தீக்குறளை என்பதை திருக்குறளை என்றால் போச்சுது! இன்றைய தலைமுறைக்கு திரு ரெட்டியாரின் விளக்க நூல் எவ்வளவு அவசியம் என்று புரிகிறதல்லவா?

இதுவரை வந்த உரைகளைச் சொல்வதுடன் வேறு பல புதிய சேர்க்கைகளையும் இந்நூலில் காணலாம். ஆசார்ய ஹ்ருதயம், யதிராஜ ஸப்ததி போன்ற எடுத்துக்காட்டுகள். பல இடங்களில் கம்பன் தோன்றுவான். பொதுவாக வால்மீகி இராமாயணத்தையே மணிப்பிரவாள நூலாசிரியர்கள் எடுத்தாள்கிறார்கள். மூலத்தை ஒட்டியோ, அதைவிட்டுச் சற்று நகர்ந்தோ காணும் கம்பனை நமக்குக் காட்டுவது திரு ரெட்டியாரின் முயற்சி. (எடுத்துக்காட்டு : கிஷ்கிந்தா காண்டத்தில் தாரை இலட்சுமணனிடம் வரும் காட்சி) இப்படி மெள்ள மெள்ள நமது மனத்தை கம்பனிடம் இழுத்துக் கட்டிப் போட்டு, ஓர் இடத்தில் கிஷ்கிந்தா காண்டக்காட்சியை வர்ணிக்கும் போது, "இந்தப் படலம் முழுவதும் படிந்து அநுபவிக்கத்தக்கது" என்று ஒரு போடு போட்டுவிடுகிறார். நாம் நல்ல மாணாக்கர்கள் எனில் உடனே கம்பனைக் கையில் எடுத்துக்கொண்டு விடுவோம்!

பனிச்சென்று குறிப்புகள், ஆண்டாள் மற்றும் உரையாசிரியர்கள் சரிதை என்று செம்மையாக நூல் வார்க்கப்பட்டிருக்கிறது. நமது விழிக்குத் துணை கண்ணன் கழலிணைகள் என்றால், நம் வழிக்குத் துணை திருப்பாவைதான். அந்த வழித்துணையை நன்றாகப் புரிந்து கொண்டு வாழ்வைச் சீராக நடத்திக்கொள்ள இந்நூல் பேருதவியாகும்.

ரெட்டியாரவர்கள் தோரணவாயிலில் திருப்பாவையின் த்வனி பற்றித் தெளிவாக விளக்கியிருக்கிறார். பூர்வாசாரியர்கள் கூறுவதை கிரகித்துக் கொண்டு சில பாசுரங்கள் குறிப்பிடும் நீரோட்டம் தண்ணீரில் மூழ்குவது அன்று என்று கூறி, இதன் த்வனி "பகவானுடன்

சேர்தலையும், பாகவதர்களோடு கூடுவதையும், ஆசார்யர்களோடு சேர்வதையும் நீராட்டமாகச் சொல்லப்பெற்றுள்ளது என்றும் அறுதியிடப் போதுமான தகுதியுடையதாக அமைகிறது" என்று எழுதுகிறார்.

பேராசிரியர் ரெட்டியாரவர்களது நூலுக்கும் ஒரு சிறப்பான 'த்வனி' இருப்பதாக உணர்கிறேன். ஆரம்ப முதல் கடைசி வரை உன்னிப்பாகப் படிப்பவருக்கு அது தெரியவரும். அதுதான் உலகம் வாழ வருணன் பெய்யும் மழை. இந்நூல் வெளிவரும் வேளை, எங்கெங்குமே இனி பலகோடி நூறாயிரம் ஆண்டு நீங்காமல் நின்று மழை பெய்து உலகம் மகிழ்ச்சியுடன் இருக்கும் என்ற 'த்வனி'. பக்தர்களின் மகா விசுவாசத்தை எம்பெருமான் புறக்கணிப்பதில்லை. எம்பெருமான் இருப்பதால் நமது மகிழ்ச்சிக்கோர் குறையுமில்லை.

என்னையும் ஒரு பொருட்டாக நினைத்து இந்த நூலுடன் இணைத்த பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் பெருந்தன்மைக்கு என் நெஞ்சார்ந்த வணக்கம். நன்றி கூற நல்லதோர் சொல்லினையும் ஆண்டாள் தந்திருக்கிறாள். ஆம், ஆசிரியருக்குத் 'தலையலால்' கைம்மாறிலேனே!

- பிரேமா நந்தகுமார்

முதல் திருமாளிகை
91, தெற்குச் சித்திரை வீதி,
ஸ்ரீரங்கம் - 620 006.
சுபானு, பங்குனி உத்திரம்

# நூல் முகம்

முன்னைய பிறப்புக்களிலும் இன்றைய பிறப்பிலும் செய்த தவப்பயனின் விளைவாக **"திருப்பாவை விளக்கம்"** என்ற நூல் எழுதும் பேறு பெற்றேன், சற்றேறக்குறைய இருபது (1960-1980) ஆண்டுகள் திருமலையப்பன் அடிவாரத்தில் நிறுவப் பெற்றுள்ள திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறை நிறுவனப் பேராசிரியராகப் பணிபுரிந்து **'நாலாயிரம் நம்மாழ்வார் தத்துவம்'** என்ற பொருள் பற்றி ஆய்ந்து டாக்டர் பட்டம் பெற்றதன் பயனாக திருமலை திருப்பதி தேவஸ்தானம் மூலம் 'திருப்பாவை விளக்கம்' வெளிவரும் பேற்றையும் பெறுகின்றேன்.

திருவரங்கவாசியும் பேராசிரியர் கே.ஆர்.சீநிவாச அய்யங்கார் அவர்களின் திருமகளும் திருவரங்கம் முதல்திருமாளிகை தாத்தாசாச்சாரியர் வீட்டு மருமகளும் பல்லாண்டுகளாக ஆழ்வார் பாசுரங்களில் சிறப்பாக ஆண்டாள் அருளிச் செயல்களில் ஈடுபட்டு அவற்றில் உள்ளத்தைப் பறிகொடுத்து வரும் பல வைணவ சமய - தத்துவங்களில் ஆங்கில நூல்களை வெளியிட்டு நற்புகழ் பெற்றவருமாகிய டாக்டர் பிரேமாநந்தகுமாரின் அணிந்துரை பெற்றது இந்நூலின் பேறு; அடியேனின் பேறும்கூட.

இந்நூல் அச்சாகும்போது மூலக் கைபடியுடன் பார்வைப்படிகளை ஒப்பிட்டுத் திருத்தம் செய்த என் அபிமான புத்திரி டாக்டர் மு. ப. சியாமளா பலராமுக்கு என் அன்பு கலந்த நன்றி உரியது.

அணிந்துரை அருளிய அன்பருக்கும் நூலை வெளியிட்டருளிய திருமலை - திருப்பதி தேவஸ்தானத்தாருக்கும் இதற்கெல்லாம் புருஷகாரமாமாய் உதவிய என் கெழுதகை மாணவரும் தேவஸ்தான பதிப்பாசிரியர் (Editor) டாக்டர் என். எஸ். இராமமூர்த்திக்கும் இதயங்கனிந்த நன்றி என்றும் உரியது. நூல் அச்சுவடிவம் பெறுவதற்குக் காரணமாக இருந்த திருமதி ஆர். தேவகி அவர்கட்கு (அவ்வை, எண் 1, 3 ஆவது மாடி, புதூர் 13 வது தெரு, அசோக் நகர், சென்னை - 600 083, தொ.பே. 55688527) அடியேனின் நன்றி உரியது. எண்பததொன்பது அகவையை எட்டும் அடியேனுக்கு நல்ல உடல் நலமும் மனவளமும் குன்றாத கண்ணொளியும் நல்கி வரும் என் இதயத்தில் நிரந்தர குடியிருப்புக் கொண்ட 'வேங்கடம் மேவிய விளக்கிற்கு' புருஷகார பூதையாகிய பெரிய பிராட்டியார் மூலம் எண்ணற்ற சரணாகதி வணக்கங்கள்.

"வேங்கடம்"
AD-13-14, அண்ணாநகர்,
சென்னை - 600 040.
ஜுலை - 2005

அடியேன்
ந. சுப்புரெட்டியார்
தொ.பே. 2621 1583

# உள்ளுறை

# தோரணவாயில்

இந்த உலகில் ஞானபக்தி வைராக்கியங்களுடன் திகழ்ந்து முக்தியடைந்த பெரியோர்கள் பலர். அவர்களுள் உயர்நிலையில் நின்று புகழ் பெற்றவர்கள் இருடிஞம் (ரிஷிகளும்) ஆழ்வார்களும் ஆவர் என்று பெரியோர்கள் பணிப்பர். இவர்களுள்ளும் இறையன்பில் ஒருவரோடொருவரிடையே ஏற்றத்தாழ்வு உண்டு என்ற பெற்றியை வியாக்கிரபான சக்கரவர்த்தி **பெரியவாச்சான் பிள்ளை** எடுத்துக்காட்டி மிகத் தெளிவாக விளக்குவர். இருடிகளையும் ஆழ்வார்களையும் ஒப்பு நோக்குங்கால் இருடிகளின் பக்தி அணுவளவாகவும் ஆழ்வார்களின் பக்தி மலையளவாகவும் காணப்பெறும். அங்ஙனமே மற்றைய ஆழ்வார்களின் பக்தியையும் பெரியாழ்வாரின் பக்தியையும் ஒப்பிட்டு நோக்கினால் மற்றையோர் பக்தி அணு அளவாகவும் பெரியாழ்வாரின் பக்தி மலையளவாகவும் தோற்றம் அளிக்கும். பெரியாழ்வார் பக்தியையும் அவர்தம் அருமை மகள் ஆண்டாள் பக்தியையும் சீர்தூக்கி ஆராய்ந்தால், பெரியாழ்வார் பக்தி அணுவளவாகவும் ஆண்டாள் பக்தி மலையளவாகவும் தோன்றா நிற்கும்.

2. ஆழ்வார்கள் சம்சாரத்தில் கிடந்து உறங்கா நிற்க, எம்பெருமான் தானாகவந்து அவர்களை உணர்த்த, பிறகு உணர்ந்தனர். ஆண்டாள் அங்ஙனமின்றி மத்துடன் முளைக்கும் திருத்துழாய் போன்று எம்பெருமான் திறத்து ஆராத காதலுடன் அவதரித்து, இவள் தானே எம்பெருமான் சந்நிதி சென்று "எம்பர் கோமானே உறங்காது எழுந்திராய்" என்று அவனை உணர்த்தினளாதலால் ஆழ்வார்களிலும் ஆண்டாளுக்குள்ள தனிச்சிறப்புள்ளமை தெளிவாகும். ஆடவரை ஆடவர்கண்டு காமுறுவதைக் காட்டிலும் மகளிர் கண்டு காமுறுதல் பன்மடையாயிருக்கும் என்பது உலகறிந்த செய்தி. எம்பெருமானாகிய

புருடோத்தமன் விஷயத்தில் ஆழ்வார்களின் காமம் மேட்டு மடையாக இருந்தது; இவ்வாண்டாளுடைய காமம் பள்ளமடையாயிருந்தது. இது மற்றோர் சிறப்பு. ஆழ்வார்கள் காமத்தின் மெய்ப்பாட்டிற்காகப் பெண்ணுடை உடுத்துப் பேசினார்கள். இவளுக்கு அங்ஙனம் ஏறிட்டுக் கொண்டு பேச வேண்டிய அவசியம் இல்லை.

3. ஆண்டாள் அருளிச் செய்த திருப்பாவையின் மருமம் அறிந்த முன்னோர்கள்,

**பாதகங்கள் தீர்க்கும் பரமனடி காட்டும்**
**வேதம் அனைத்திற்கும் வித்தாகும் – கோதைதமிழ்**
**ஐயைந்தும் அறியாத மானுடரை**
**வையம் சுமப்பது வம்பு.**

(வையம் - மானிட உடலாகிய உயர்ந்த வண்டி. வம்பு - புதுமை)

என்று பணித்தார்கள். திருப்பாவை 'வேதம் அனைத்திற்கும் வித்து' என்பது உண்மை உரை. இதுபற்றியே **சுவாமி எம்பெருமானார்** இத்திருப்பாவையில் மிகவும் ஊன்றியிருந்து **'திருப்பாவை ஜீயர்'** என்ற திருநாமப் புகழ் பெற்றார். திருப்பாவைக்கு ஏற்றம் மார்கழி மாதத்தில மட்டுமன்று. சந்நிதிகளிலும், திருமாளிகைகளிலும் நாடோறும் நடைபெறும் திருவாராதனம் திருப்பாவை சேவையையும் சாத்து முறையையுமே தலையாகக் கொண்டு எங்கும் சமரீதியாகத் திகழ்கின்றது. ஆழ்வார் ஆசாரியர்களின் திருநட்சத்திரக் கொண்டாட்டங்களிலும் திருப்பாவை சாத்து முறையே முதன்மை பெற்று விளங்குகின்றது. இம்முறை பண்டிருந்து இன்றுவரை எங்கும் எவ்விதத் தடையுமின்றி நடைபெற்று வருகின்றது.

4. எல்லாப் பொருள்களும் திருப்பாவையில் அடங்கிக் கிடப்பதால் இதற்குப் பல உரைகள் எழுந்து பெருமைபெற்றது. இதற்கு **ஆயிரப்படி, ஈராயிரப்படி, மூவாயிரப்படி, நாலாயிரப்படி, ஐயாயிரப்படி, ஆறாயிரப்படி** என்று பல வியாக்கியானங்கள் அருளிச் செய்த பேராசிரியப் பெருமக்கள் சொற்பொருளைச் சுவைக்கத் தக்கவாறு அருளிச் செய்தனரேயன்றி உள்ளுறையுப் பொருள், தொனிப்பொருள் ஆகியவற்றைச் சிறப்பாக வெளியிட்டருளவில்லை. அவை உபதேசத்தால் அறியக்கூடியவை என்றும் அவரவர்களின் புத்திசமத்காரத்திற்கேற்பப் பல்வேறு விதமாகவும் ஊகிக்கத்தக்கவை என்றும் திருவுள்ளம் பற்றியே வெளியிடவில்லை. ஒருசில முக்கியமானவிடங்களில் மட்டிலும் வெளியிட்டுள்ளார்கள்.

ஆண்டாள் தம் பிரபந்தத்தில் மேலெழுந்தவாரியாகவுள்ள பொருளில் முழு நோக்கின்றி உள்ளுறைப் பொருளிலேயே உள்ளத்தை வைத்தவள் என்பதை இரண்டு எடுத்துக்காட்டுகளால் விளக்குவேன்.

1. திருப்பாவை முதற் பாசுரத்தில் "நீராடப்போது வீர் போதுமினோ" என்று நீராட வருகின்றவர்கள் எலலோரும் வாருங்கள் என்று அழைத்து, நான்காம் பாசுரத்தில் "நாங்களும் மார்கழி நீராட உலகினில் பெய்திடாய்" என்று மழை பெய்ய நியமிக்கின்றாள். இவற்றை நோக்கும்போது நீராடுவதற்கே ஆண்டாள் (ஆய்ச்சிமார்) புறப்படுவதாகவும் நீராடுவதற்கே தோழியரை அழைப்பதாகவும், நீராடுவதற்கு வேண்டிய அதிகமான நீர் உண்டாவதற்காகவே மழை பெய்ய மேகதேவதையை நியமிப்பதாகவும் அறியக் கிடக்கின்றது. இதுவே உண்மைப் பொருளாகில் இவர்கள் எல்லாரும் கூடி ஒரு பொய்கைக் கரைக்குச் சென்றிருக்க வேண்டும். நீராடும் இடம் பொய்கையன்றோ? இவர்கள் ஒரு பொய்கைக் கரையில் சென்று சேர்ந்ததாக திருப்பாவையில் ஒரு பாசுரத்திலும் குறிப்பிடப் பெறவில்லை. இவர்கள் நந்தகோபரின் திருமாளிகைக்குச் சென்று "நப்பினைக் கொங்கைமேல் வைத்துக் கிடந்த மலர் மார்பனை" (19) உணர்த்த, நப்பினைப் பிராட்டியை உணர்த்தி அவர்களைத் தோத்திரம் செய்து, சிற்றஞ் சிறுகாலே எழுந்து இங்கு நாம் வந்தது எதற்காக எனில்: "உன்றன்னோடு உற்றோமேயாவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்" (29) என்று விண்ணப்பம் செய்வதற்காகவே என்று தலைக்கட்டியுள்ளனர். ஆகவே, 'நீராடப் போதுவீர்' (1) 'நாங்களும் மார்கழி நீராட' (4), 'குள்ளக் குளிரக் குடைந்து நீராடாதே' (13), 'உக்கமும் தட்டொளியும் தந்துன் மணாளனை, இப்போதே எம்மை நீராட்டு' (20), 'மாலேமணிவண்ணா மார்கழி நீராடுவான்' (26), என்கின்ற பாசுரங்களில் குறிப்பிடப் பெற்ற நீராட்டம் தண்ணீரில் மூழ்குவது அன்று என்றும், பகவானுடன் சேர்தலையும், பாகவதர்களோடு கூடுவதையும், ஆசாரியர்களுடன் சேர்வதையும் நீராட்டமாகச் சொல்லப் பெற்றுள்ளது என்றும் அறுதியிடப் போதுமான தகுதியுடையதாக அமைகின்றது.

இதை மூவாயிரப்படியில் பெரியவாச்சான்பிள்ளையும், ஆறாயிரப்படியில் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் தெளிவாக விளக்கியுள்ளனர். 'நீராடப் போதுவீர்' என்ற விடத்துப் பெரியவாச்சான் பிள்ளையின் ஸ்ரீசூக்தி வருமாறு: "நீராட - இத்தால இவர்கள் நினைக்கிறது கிருஷ்ண சம்ஸ்லேஷம் (சம்ஸ்லேஷம் - சேர்க்கை). தமிழரும் கலவியைச் 'சுனையாடல்' என்றார்கள். பகவத்

சம்ஸ்லேஷத்திற்கு கரீஷ்மகாலத்தில் (கோடைகாலத்தில்) குளிர்ந்த மடுவில்படிவதைத் திருஷ்டாந்தமாகச் செல்லிறே" என்று.

**ஆறாயிரப்படி ஸ்ரீ சூக்தி** வருமாறு : நீராட - இவர்கள் தங்களுக்கு நீராட என்று நோயாசையிறே. யமுனை நீர் ஒருத்தியினுடைய விரகாக்னிபோலேசுவறுமே. தமிழர்கள் கலவியைச் 'சுனையாடல்' என்றல்லவா சொல்லுவது. கிருஷ்ண சம்ஸ்லேஷத்தை (கிருஷ்ணனோடு சேர்தலை) இவர்கள் நீராட என்கிறது.

ஆக, இவற்றால் உள்ளே கொண்ட பொருள் வேறென்றும் வெளியே இடும் சொல் வேறென்றும் அறுதியிடப் பெறுகின்றது. நீராட என்கிற ஒரு சொல் விஷயத்தில் மாத்திரமன்று. இது பெரும்பாலும் எல்லாச் சொற்களும் அந்தரங்கமான வேறொரு பொருளைக் கொண்டே பயன்படுத்தப் பெற்றுள்ளன என்று தேறலாம்.

2. **ஏழாவது** பாசுரத்தில் "கலந்து பேசின **பேச்சரவம்** கேட்டிலையோ பேய்ப் பெண்ணே" என்று சொல்லப் பெறுகின்றது. 'பேசின பேச்சு கேட்டிலையோ?' என்றால் போதும். 'நான் சொல்லுகின்ற வார்த்தையைக் கேள்' என்றும் நான் சொல்லுகின்ற வார்த்தை உன் செவியில் புகவில்லையோ?' என்றும் இப்படித்தானே உலக வழக்கு உள்ளது? இந்த முறையில் பேசின பேச்சு கேட்டிலையோ? என்று சொல்லும் முறை இருக்க, **பேச்சரவம்** கேட்டிலையோ? என்றது சிறப்பான கருத்தையுடையது. பேச்சைக் கேட்பதில் சுவை இல்லை, பேச்சிலிருந்து தோன்றுகின்ற **அரவம்** (தொனிப்பொருளை) கேட்டுணர்வதுதான் சுவைமிக்கது என்று ஆண்டாளே காட்டியுள்ளாள்.

5. பெரியாழ்வார் வளர்ப்பு மகளாக ஆண்டாள் வளர்ந்து வரும் நாளில் இல்லத்துச் சூழ்நிலையாலும் தானான தன்மையாலும் அவளிடம் ஞானபக்திகள் கணந்தோறும் இட்டு மாறினாப் போலே பெருகி வளர்ந்தது. ஒருநாள் இவள் நந்தவனத்திற்குச் சென்றபோது ஒரு மரத்தைச் சுற்றிப் படர்ந்திருந்த பூங்கொடி அவள் கண்ணில்பட்டது. தனக்கும் ஒரு கொம்பைப் படர வேண்டிய வயது வந்துவிட்டது என்பதை உணர்ந்து கொண்டாள். யுவதியாக வளர்ந்த பிறகு கோதையின் (பெரியாழ்வார் இவருக்கு இட்ட திருநாமம்) காதல் நிமிடத்திற்கு நிமிடம் வளரத் தொடங்கியது. நாளடைவில் காதல் இவளை முற்றும் விழுங்கிவிட்டது. தான் படர்வதற்கு வேண்டிய கோலைத் தேடி வளையும் பூங்கொடி போலானாள்.

கோல்தேடி ஓடும்
கொழுந்தே போன்றதே
மால்தேடி ஓடும்
மனம்[1]

என்ற நம்மாழ்வாரின் அநுபவம் இவளுக்கு ஏற்பட்டுவிட்டது. புருடோத்தமனான வேணுகோபால்தான் தான் படர வேண்டிய கொள் கொம்பு என்பதை உணர்ந்தாள்; உறுதியும் கொண்டாள்.

6. தான் வாழ்ந்த ஊரில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் ஆலிலைப் பள்ளியானைத் (வடபத்திர சாயி) தழுவி முழுகிப் பரிமாற வேண்டும் என்று செல்லுகின்றாள். அவனோ இவள் கருதியபடி முகம் காட்டிற்றிலன். இதனால் துக்கத்தால் தளர்ந்து ஓய்ந்து போனவனின் நிலையை அடைந்தாள். இங்ஙனம் மனம் நொந்தவள் "இந்த எம்பெருமானோடு கலவி பெற்றவள் ஆரேனும் உண்டோ?" என்று ஆராய்ந்தவிடத்து திருவாய்ப்பாடியிலுள்ள ஐந்து இலட்சம் குடி ஆயர்மகளிர் கண்ணனுடன் கலந்து களிக்கப் பெற்றார்கள் என்ற வரலாறு இவள் நினைவிற்கு வந்தது. காலவெள்ளத்தை பின்னோக்கிக் கடந்து சென்று அந்த அவதார காலத்தை எப்படி அடைவது? இஃது இயலாத காரியம் என்பதை அவள் நன்கு அறிவாள். ஆனால் கண்ணன் விளையாடின பிருந்தாவனம், யமுனை நதிக்கரை, நந்தகோபன் வாழ்ந்த இடம், கண்ணன் தூக்கிய கோவர்த்தனம் இன்றளவும் உண்டு. அவற்றையாவது கண் குளிரக் கண்டு ஆறுதல் அடைய நினைத்தாள். பகவத் விரகத்தாலே உடல் மெலிவுற்ற இவ்வாண்டாள் அவ்விடங்கட்குச் செல்ல வசதியும் வாய்ப்பும் இல்லாதவளானாள். அவற்றை நினைத்து மிகவும் மனம் தளர்ந்தாள். சனகன் தன் மகள் சீதாப் பிராட்டிக்கு **'வில்முறி'** என்பதைக் கன்யாசுல்கமாக வைத்தாற்போலவும், கும்பன் தன் மகளான நப்பின்னைக்கு **'ஏறுதழுவல்'** என்ற ஒரு முறையை அமைத்தாற் போலவும் தன் தந்தை தனக்கு ஒரு முறையும் வைக்கவில்லையே என்று சிந்தித்துத் தளர்ந்திருந்தாள்.

7. இந்நிலையில் சில பெரியோர்கள், "திருவாய்ப்பாடியில் கண்ணபிரான் ஆயர்மங்கையருடன் குரவை[2] கோத்து விளையாடும் போது, ஆனந்த ரசம் தலைப்பற்றி வாங்க கொண்டு சென்றது.

1. பெரி. திருவந். 27
2. இக்குரவை கூத்து. வடமொழியில் 'இராசக் கிரீடை' என வழங்கும். அஃதாவது கண்ணபிரான் பல திருவுருவம் கொண்டு ஒவ்வோர் ஆய்ச்சியின் பக்கத்திலும் ஒவ்வொரு கண்ணனாக நின்று ஆடிய கூத்து.

'இனி நற்கேடு கெடாது' என்று அந்த ரசம் மாறுகைக்காகக் கண்ணபிரான் பெண்களைப் பிரிந்து மறைந்திருக்கின்றான். அப்போது அப்பெண்பிள்ளைகள் தங்கள் ஆற்றாமையாலே 'இனி எவ்வகையிலேனும் நாம் தரிக்க வேண்டும்' என்று ஓர் ஆய்ச்சி, 'நான் காளிய நாகத்தின் வலி அடக்குகின்றேன் காண்' என்பது, மற்றொருத்தி 'நான் தேநுகாசுரனைத் தொலைத் தொழிக்கின்றேன் காண்' என்பது, வேறொருத்தி 'நான் பூதனை முலையைச் சுவைத்து உண்ணுகின்றேன் காண்' என்பதாய் இப்படி அனைவரும் தாங்கள் கண்ணபிரான்போல் அநுகரித்து (ஒருவனைப் போல் செய்து) ஒருவாறு தரித்தார்கள்' என்று அப்பெரியோர்கள் சொல்லைக் கேட்டு ஆண்டாளும் அவர்களைப் போல்[3] அநுகரித்துத் தரிக்கப் பார்க்கின்றாள்.

8. இந்த நிலையில் ஆண்டாளுக்கு அவளது பாவனா சக்தி துணை செய்தது. சிரீவில்லிபுத்தூர் ஆயர் பாடியாகியது. அங்குள்ள பெண்கள் இடைப் பெண்கள் ஆயினர். ஆலிலைப் பள்ளியான் திருக்கோயில் நந்தகோபர் மாளிகையாகிவிட்டது. வடபெருங் கோயிலுடையான் கண்ணனாகக் காட்சி தந்தான். ஆண்டாளுடைய திருவுள்ளம் திருவாய்ப்பாடிக்குக் குடிபோய்விட்டது. பாவனாசக்தி முற்றியது. அவைதானேயாய், இடைநடையும் இடைப்பேச்சும்[3] முடைநாற்றமாய்விட்டது ஆண்டாள் இருந்த சூழ்நிலை. இந்தச் சூழ்நிலையில் ஆண்டாள் திருவாயினின்றும் பிறந்தது திருப்பாவை.

9. திருமகள் கேள்வனாய் அடையப்பட்ட எல்லா விருப்பத்தையு முடையவனாய் வைகுண்டவாசனாய் இருக்கின்ற சர்வேசுவரன் இவ்வுலகைக் கருணையால் படைத்து ஆன்மாக்களுக்குப் பொறி புலன்களை நல்கிச் செய்ய வேண்டுவன, விலக்க வேண்டுவன இவை இவை என்று கூறும் வேதசாத்திரங்களைத் தன்னைப் பெறுவதற்காகக் காட்டிக் கொடுப்பான். ஆனால் ஆன்மாக்கள் அவற்றைப் புறக்கணித்து விஷயாந்தரங்களில் மண்டி அநர்த்தப்பட்டுக் கிடக்கின்ற நிலையைக் காண்கின்றான். உடனே தான் வந்து பிறந்தருளித் தன்னுடைய சௌதரியத்தாலும் சீல குணங்களாலும் இந்த உலகங்களை ஈடுபடுத்தி வாரிப் பிடியாகப் பிடித்துக்கொண்டு போவனாகையாலே, திருவாய்ப்பாடியில் கண்ணனாய்த் திருவவதரித்து, தன்னுடைய சௌந்தரியத்தாலும் குணசேஷ்டிதங்களாலும் ஐந்து இலட்சம் குடியிலுள்ள பெண்களைத் தோற்பித்துக் கொண்டு

3. இடை நடை முதலியன "ஆயர் சிறுமியரோம்" எனல். இடைப் பேச்சு – "நெய்யுண்ணோம்" "பாலுண்ணோம்" எனல்.

பெண்களும் தானுமாக வளர்ந்து வரலானான். கண்ணனும் யுவனாய் பெண்களும் யுவதிகளாய் பருவம் எட்டினார்கள்.

இந்நிலையை அறிந்த இடைக்குல முதியோர்கள் எல்லோரும் ஒன்றுகூடி, "கிருஷ்ணன் காமுகனாய் இருக்கின்றான். இவன் முகத்தில் பெண்கள் விழிக்கலாகாது" என்று கருதி இவர்களைக் கொண்டுபோய் நிலவறைகளில் அடைக்கின்றனர். பெண்களும் கிருஷ்ணனும் பண்ணின நற்பேற்றாலே நாடும் மழையின்றி வளம் குன்றிக் கிடக்கின்றது. ஆயர்குலப் பெண்கள் "மழைக்காக இடையர் குல முதியோர் தம்மை நோற்கச் சொல்லக் கடவர்கள் என்றும், கிருஷ்ணன் நோன்புக்கு வேண்டியவற்றைத் தரக்கடவன் என்றும், இதனால் தமக்கு எந்தவித துக்கமும் இல்லை" என்றும் மனோரதங் கொண்டு பொறுத்துக் கொண்டுள்ளனர்.

10. மழையின்றி நாடு வறண்டு கிடக்கும் நிலையைக் கண்டு ஆயர்குல முதியவர்கள் யாவரும் ஒன்றுகூடி, "பசுக்களும் மனிதர்களும் பிழைக்கும் விரகு ஏதோ" என்று ஆய்கின்றனர். ஆய்வின் முடிவாக, "மழைக்காக நோன்பு நோற்றால் மழை பெய்யும்" என்று அறுதியிடுகின்றனர். ஆகவே "இவ்வூரிலுள்ள பெண்கள் யாவரும் நோற்கக் கடவர்கள். இந்த நோன்புக்கு இவ்வூரிலுள்ள நந்தகோபன் மகனாக கிருஷ்ணன் தலைவனாக இருந்து நிறைவேற்றுபவனாவான்" என்று தீர்மானிக்கின்றனர். பெண் பிள்ளைகள் அனைவரையும் அழைத்து, கிருஷ்ணனையும் அழைத்து, பெண்களை நோன்பு நோற்கச் சொல்லி, "இவர்கள் நோன்புக்கு நீ பொறுப்பாளனாக இருக்க வேண்டும்" என்று கிருஷ்ணனை வேண்டுகின்றனர். "என்னால் இயலாது" என்று சொல்ல, "இத்தனையும் நீ செய்தாக வேண்டும்" என்று அவன் மறுக்கவொண்ணாதபடி நிர்ப்பந்திக்கின்றனர். அவனும் ஒருவாறு இசைகின்றான். எல்லோரும் கூடியிருக்கும் கூட்டத்தில், இடைக்குல முதியோர்கள், "பெண்கள் நோற்பர், கிருஷ்ணன் நோன்புக்கு வேண்டியவற்றைத் தந்து உதவுவான்" என்று ஏக மனதாக ஒப்புக்கொண்டு, கிருஷ்ணனிடம் பெண்களைக் காட்டிக் கொடுத்து முதியவர்கள் கலைந்து போகின்றனர். முதியோர்கள் சென்ற பின்னர் பெண்களும் கிருஷ்ணனும் கூடவிருந்து "குரவைகோத்த இரவு போலே, பெண்காள் இதுவும் நமக்கு ஓர் இரவே" என்று கிருஷ்ணன் கொண்டாடி, "இனி ஆயாசம் பிறக்க இருப்போமல்லோம், இப்போது எல்லோரும் சென்று இரவின் பிற்பகுதியில் (அதிகாலையில்) வந்து எழுப்புங்கள். நோன்புக்குக் குளிக்கலாம்" என்று அருளிச் செய்து,

கிருஷ்ணனும் பெண்களைப் பிரிந்திருக்கமாட்டாமல் நப்பின்னைப் பிராட்டியின் திருமாளிகையில் சென்று புகுந்தான்.

*11.* பெண்களும் ஒருவர்க்கொருவர் சேர்ந்தமையால் கால்நடை தந்து போய் தம்தாம் மாளிகையில் புகுந்தனர். உறங்க முயன்றும் கண் உறங்கவில்லை. முற்பட எழுந்தவர்கள், கிருஷ்ண குண சேஷ்டிதங்களை நினைந்து எழுந்திருக்கமாட்டாமல் கிடக்கின்ற வர்களைத் தனித்தனியே சென்று எழுப்புகின்றார்கள். பிறகு எல்லோரும் கூடி உத்தேச்யமான நந்தகோபரின் திருமாளிகை சென்று சேர்கின்றனர். அங்கு கண்ணனை எழுப்பி தங்கள் விருப்பத்தை அறிவிக்கின்றனர். பரதாழ்வான் பெருமாள் திருவடிகளிலே விழுந்து "துருவசக்கரம் எவ்வளவு காலம் சுழலுமோ, பூமியும் எவ்வளவு பரப்புள்ளதோ, அவ்வளவு காலமும் தேசமும், தாங்கள் இங்கு அனைத்திற்கும் சுவாமித்வத்தை அநுவர்த்திக்க வேண்டும்"[4] என்று வேண்டிக்கொண்டது போலவும், கீதையில் சோகித்திருக்கும் பார்த்தனைக் கிருஷ்ணன் எடுக்கவும், மீண்டும் பார்த்தன் சோகித்துச் சாயவுமாய்ச் சென்று **சரமசுலோகம்** கேட்டுத் தரித்தாப்போலவும் ஆயப் பெண்கள் தங்கள் விருப்பம் நிறைவேறப் பெறுகின்றனர்.

இங்கு ஆயர் பெண்கட்கு உத்தேச்யம் வேறொன்று. அதாவது கிருஷ்ணனோடு சேர்தல். "நோன்பு வியாஜ மாத்திரமே (வெளிப்படையாகத் தெரிவதுமட்டுமே) பொய்யாக நோற்கின்றோம்" என்று சொல்லலாமோ? என்னில் சொல்லலாம். திருமண காலத்திலும், ஆண் பெண்ணுமாகக் கூடி மகிழும் காலத்திலும், தன் உயிருக்கே ஆபத்து நேரிடுங் காலத்திலும், சகல சொத்தும் பறிமுதலாகும் காலத்திலும் ஒரு பாகவதன் நலத்தின் பொருட்டும் பொய்யைச் சொல்லுகிறார்களன்றோ? இங்குக் குறிப்பிடப் பெற்ற பாபங்கள் ஐந்தும் பாபமல்ல என்று பெரியோர்கள் சொன்னார்கள்.

**திருப்பாவை :** திருப்பாவை முப்பது பாசுரங்கட்கும் முதற்பாசுரம் சுருக்கமாக (சங்கிரகமாக) இருக்கும். எங்ஙனே என்னில்: ஸ்ரீ பாஷ்யம் ஒன்பதாயிர கிரந்தத்துக்கும் முதற் சுலோகம் சுருக்கமாக இருப்பதைப் போலவும், ஸ்ரீ ராமாயணம் இருபத்து நாலாயிரம் கிரந்தத்துக்கும் முதல் சருக்கம் சுருக்கமானாப் போலவும், ஸ்ரீ மகாபாரதம் நூறாயிரத்து இருபத்தையாயிரம் கிரந்தத்துக்கு முதல் இயல் சுருக்கமானாப் போலவும், திருவாய்மொழிக்கு முதல் திருவாய்மொழி சுருக்கமானாப் போலவும், முதல் திருவாய்மொழிக்கு முதல் பாசுரம்

4. இராமாயணம். 131:11

சுருக்கமானாப் போலவும், மந்திர சேஷத்துக்கு பிரணவம் சுருக்கமானாப் போலவும் முப்பது பாசுரங்கட்கும் முதல் பாசுரம் சுருக்கமாக அமையும். இதனை விளக்குவேன்.

விளக்கம் : 'மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளால்' என்பதால் முதல் ஐந்து பாசுரங்கட்கும் சுருக்கம் சொல்லப்பட்டதென்றது. 'நீராடப் போகவீர் போது மினோநேரிழையீர், சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்' என்பதாலே பத்துப் பெண் பிள்ளைகளை எழுப்புவதற்குச் சுருக்கமாக அமைகின்றது. 'கூர்வேல் கொடுந்தொழிலன்' என்பதாலே 'கோயில் காப்பானே' (16) என்பதற்குச் சுருக்கமாகச் சொல்லுகின்றது. 'கூர்வேல் கொடுந்தொழிலன் நந்த கோபன்' என்றவிடம் 'நாயகனாய் நின்ற நந்தகோபன்' (16) என்றும், 'ஓடாத தோள் வலியன் நந்தகோபாலன்' (18) என்றும் குறிப்பிடும் இடங்களுக்குச் சுருக்கம். 'குமரன்' என்றதாலே 'மாற்றாதே பால் சொரியும் வள்ளல் பெரும் பசுக்கள் ஆற்றப் படைத்தான் மகனே' (21) என்ற இடத்துக்குச் சுருக்கம். 'கார்மேனி' என்பதாலே 'முகில் வண்ணன்' (11) என்றும், 'பூவைப் பூவண்ணா' (23) என்றும், 'மாயன் மணிவண்ணன்' (16) என்றும், 'மாலே மணிவண்ணா' (26) என்ற இடங்களுக்குச் சுருக்கம். 'செங்கண்' என்ற இடத்தாலே 'கிண்கிணி வாய்ச் செய்த தாமரைப் பூப்போலே, செங்கண் சிறிச் சிறிதே எம்மேல் விழியாவோ?... அங்கண் இரண்டும் கொண்டு (22) என்றும், 'பங்கயக் கண்ணன்' (14) என்றும், 'செங்கண் திருமுகம்' (30) என்றும் சொல்லுகின்ற இடங்கட்குச் சுருக்கம்.

'கதிர்மதியம் போல் முகத்தான்' என்பதாலே 'திங்களும் ஆதித்தியனும் எழுந்தாற்போல்' (22) என்றும், 'உலகினில் தோற்றமாய் நின்ற சுடரே' (21) என்றும், இவை போன்றவைகளுக்குச் சுருக்கம். நாராயணன் என்பதாலே, 'நாராயண மூர்த்தி கேசவன்' (7) என்றும், 'நாற்றத்துழாய்முடி நாராயணன்' (10) என்றும், 'ஓங்கி உலகளந்த உத்தமன்' (3) என்றும், 'மாமாயன் மாதவன் வைகுந்தன்' (9) என்றும், 'முகில்வண்ணன் பேர்பாட்' (11) என்றும், 'சிறுபேர் அழைத்தனவும் சீறியருளாதே' (28) என்றும், 'வங்கக் கடல் கடைந்த மாதவன்' (30) என்றும் சொல்லுகின்ற இடங்களுக்குச் சுருக்கம்.

'நமக்கே பறை தருவான்' என்ற இத்தாலே, 'உன்தன்னைப் பாடிப்பறை கொண்டு' (27) என்றும், 'நம்மால் போற்றப்பறைதரும்' (10) என்றும், 'இற்றைப் பறை கொள்வான்' (29) என்றும், 'அறைபறை மாயன்' (16) என்றும், 'சாலப் பெரும்பறை' (26) என்றும், 'அருத்தித்து வந்தோம் பறை தருதியாகில்' (25) என்றும்,

'இறைவா நீ தாராய் பறை' (28) என்றும், 'அங்கு அப்பறை கொண்ட ஆற்றை' (30) என்றும், சொல்லுகின்ற இடங்களுக்குச் சுருக்கம். 'பாரோர் புகழ் என்கிற இடத்தாலே நாடு புகழும்' (270 என்றும், 'எங்கும் அருள் பெற்று இன்புறுவர்' (30) என்றும் சொல்லுகின்ற இடங்களுக்கு சுருக்கம்.

'ஏலோர் எம்பாவாய்' என்கின்ற இடத்தாலே முப்பது பாசுரங்களிலும் ஏலோர் எம்பாவைக்குச் சுருக்கம்.

# 1. அனைவரையும் அழைப்பது

## முதற்பாசுரம் விளக்கம்

### "மார்கழித் திங்கள்"

**மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்**
**நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்!**
**சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்!**
**கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோ பன்குமரன்**
**ஏரார்ந்த கண்ணி யசோதை யிளஞ்சிங்கம்**
**கார்மேனி செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்**
**நாரா யணனே நமக்கே பறைதருவான்**
**பாரோர் புகழப் படிந்தேலோர் எம்பாவாய்![1]**

(சொ.பொ) : சீர்மல்கும் - செல்வம் நிறைந்துள்ள; ஆய்ப்பாடி - திருவாய்ப்பாடியில்; செல்வச்சிறுமீர்கள் - கைங்கர்ய சம்பத்தையும் இளம் பருவத்தையும் உடைய பெண்களே; நேர்இழையீர் - அழகிய ஆபரணங்களை அணிந்து கொண்டிருப்பவர்களே; (இந்த நாள்) மார்கழித் திங்கள் - மாதங்களில் சிறந்த மார்கழி மாதமும்; மதிநிறைந்த - நிறைநிலாவாயுடைய (பூர்ணசந்திரோதயத்தையுடைய; நல்நாள் - நல்ல நாளுமாக (வாய்த்திருக்கின்றது); (இந்த முகூர்த்த நாளில்) கூர்வேல் - கூர்மையான வேலாயுதத்தையுடையவனும்; கொடுந்தொழிலன் - (கண்ணபிரானுக்குத் தீங்கு செய்யவரும் சிறிய பிராணிகளிடத்திலும் சீறிக்) கொடிய தொழிலைப் புரிபவனுமான; நந்தகோபன் - நந்தகோபனுக்கு; குமரன் - மகனாகப் பிறந்தவனும்; ஏர்ஆர்ந்த கண்ணி - அழகு பொருந்திய கண்களையுடையவளான; யசோதை - யசோதைப் பிராட்டிக்கு; இளம் சிங்கம் - சிங்கக் குட்டிபோல இருப்பவனும்; கார்மேனி - காள மேகத்தோடொத்த திருமேனியையும்; செங்கண் - செந்தாமரை மலர் போன்ற திருக்கண்களையும்; கதிர்போல் - சூரியனைப் போல் பிரகாசமாய்; மதியம்போல் - சந்திரனைப் போல் குளிர்ச்சியும் உடைய; முகத்தன் - முகத்தையுடையவனுமான; நாராயணனே - ஸ்ரீமந் நாராயணனே; நமக்கே - (அவனால் பேறு என நம்பியிருக்கும்) நமக்கே; பறைதருவான் - (நோன்பிற்கு வேண்டிய) பறையைத் தருபவனாக ஏற்பட்டிருக்கின்றான்; (ஆதலால்) பாரோர் - (கிருஷ்ணனுடன் இத்தனை நாளும்

1. இப்பிரபந்தப் பாசுரங்கள் முப்பது – பெரும்பாலும் வெண்டளையால் வந்த எட்டடி நாற்சீர் ஒருவித கற்பகொச்சகக் கலிப்பா.

சேரவொட்டாமல் தடுத்த) இவ்வாய்ப்பாடி இடையர்கள் (கோபவிருத்தர்கள்); புகழ - கொண்டாடும்படி; படிந்து - (நோன்பிலே) ஊன்றி (நோற்கவுடன்பட்டு); நீர்ஆட - நீராடும்படி; போதுவீர் - வரவேண்டும் என்ற விருப்பமுடையவர்களே; போதுமின் - வாரங்கள்; ஓ - அசை.

எம்பாவாய் - அடி நிறைக்க வந்த சொற்றொடர். சிலர் கூறும் பொருள் எல்லாவிடத்திற்கும் பொருந்துவதில்லை யாதலால் இவ்வாறு கொள்ளுதலே பொருந்தும். வென்றவர் முன்னே தோற்றவர் 'தடம் பொங்குத்தம், பொங்கோ' (பெரி. திரு. 10.2) என்பது முதலியவைபோல, நோன்பு நோற்கப் புக்கவர் 'ஏலோ ரெம்பாவாய்' என்ற மகுடத்தினால் பாசுரம் கூறுவது மரபு எனக் கொள்ளலாம். ஆகவே, அடுத்த பாசுரம் முதல் இத்தொடருக்குச் சொற்பொருள் எழுதுவதற்கு எடுத்துக் கொள்ளவில்லை.

(க.து) : "திருவாய்ப்பாடியில் பிறந்த சிறுமியர்களே வடிவழகையுடைய கண்ணன் நமது நோன்புக்கு வேண்டும் பொருள்களைத் தருவானாதலால், நோன்பு நோற்க விருப்பமுடையவர்கள் எல்லோரும் வாருங்கள்" திருவாய்ப்பாடியில் பஞ்ச லட்சங் குடியிலுள்ள இடைச் சிறுமியர்களில் சிலர் மற்றைக் கன்னிமாரை அழைப்பதாக அமைந்தது இப்பாசுரம்.[2]

**விளக்கம் : மார்கழித் திங்கள் :** அதிக வெப்பமும் அதிகக் குளிரும் இல்லாத மாதம். நாளுக்கு பிரம்ம முகூர்த்தம் போலே ஆண்டிற்கு இம்மாதமாகையாலே சத்துவ உத்தமமான காலம். "மாதங்களில் நான் மார்கழி" (கீதை 10.35) என்று கண்ணன் கீதையில் அருளிச் செய்திருப்பதால் இது வைணவ மாதம். எல்லாப் பொருள்களும் அங்குரிக்கும் காலமாகையாலே தங்களுடைய விருத்திக்குப் பொருத்தமான காலம் (அர்ஹமான காலம்). தேவர்கட்கு விடிகின்ற காலமாகையாலே விரதங்கள் அநுட்டிப்பால் தொடங்கும் காலம். விரதங்கள் அநுட்டிப்பார் தொடங்கும் காலமாகவும் இருத்தல். கைங்கரியத்திற்கு ஏகாந்த காலமாகையாலே "ஒழிவில் காலமெல்லாம்" (திருவாய் 3.3.1) என்னுமாப்போலே கொண்டாடுகின்றார்கள்.

**மார்கழித் திங்கள் :** இடைக்குல முதியோர்கள் குளிருக்கு அஞ்சிப் புறப்படமாட்டாத காலம். கண்ணன் வீறுபாடு தோன்ற அருளிச் செய்த 'மார்கழி மாதம்' தன் அடைவே வாய்க்கப் பெற்றவர்கள் அதனைக் கொண்டாடாதிருக்கவல்லரல்லரே. இராமபிரானை யுவராஜாவாக முடிசூட்டப் பாரித்து முயன்றபொழுது

2. திருவாய்மொழியின் முதற்பாசுரம் மேல்பரக்கச் சொல்லும் பொருளுக்குச் சுருக்கமானாற் போல 'மார்கழித் திங்கள்' என்ற இப்பாசுரமும் மேலே சொல்லும் பொருள்கட்குச் சுருக்கமாக அமைந்தது.

வசந்த இருதுவின் முதல் மாதமாகிய சித்திரை, தன்னடைவிலே நேர்பட அதனை அங்குக் கொண்டாடினாற் போல இவர்களும் நோன்பு நோற்க முயலத் தன்னடைவே வாய்த்த மார்கழி மாதத்தை நினைந்து நெஞ்சு களிக்கின்றனர். இடைக்குல முதியோர்கள் குளிருக்கு அஞ்சிப் புறப்படமாட்டாத காலமுமாதலால் இவர்கள் குதூகலத்துடன் கொண்டாடுவதற்குக் குறையில்லை அல்லவா?

**மதி நிறைந்த நன்னாள் :** மாதம் நேர்பட்டாற் போலே பட்சமும் (சுக்கில பட்சம்) நேர்பட்டது நல்லவாய்ப்பு. நற்காரியங்களைச் செய்ய விரும்பினார்கட்குச் சாத்திரங்களில் விதிக்கப்பட்ட வளர்பிறையும் இவர்கட்கு நினைவின்றி தன்னடைவே வாய்த்தபடியால் அதனையும் மதிநிறைந்த நன்னாள் என்று கொண்டாடுகின்றனர்.

நெடுநாள் சிறையிற் கிடந்தவன், அதினின்று விடுபட்டுச் சுற்றத்தாருடன் கூடப் பெற்ற நாளில் "கீழ்க்கழிந்த நாட்களைப் போலன்றியே இந்நாளின் அழகிருந்தவாறு என்கொல்?" என்று அந்நாளை முந்துற முன்னம் கொண்டாடுவதைப்போல், நெடுநாளாக நிலவறைகளில் அடைபட்டுக் கண்ணபிரானுடன் கலவியை இழந்து கிடந்த இவ்வாயர் சிறுமியரும் தாங்கள் கண்ணபிரானோடு சேர்ந்து மகிழ்வதற்கு வாய்த்த நாள் என்று அந்நாளைக் கொண்டாடுகின்றனர் - **முதலடியில்.**

**மதிநிறைந்த நன்னாள் :** ஒருவரையொருவர் முகங்கண்டு அநுபவித்தற்கும், எல்லாருமாகக் கூடிச் சென்று கண்ணபிரானை எழுப்புவதற்கும் பாங்காக நிலவு நேர்பட்டமையால் அவர்கள் மகிழ்ச்சி மிக்கதாகப் பெருகுவதாயிற்று. இவர்கள் கண்ணபிரானோடு சேர்வதற்கு ஊரார் விரோதிகளாக இருக்குங்காலத்தில் "நந்தகோபாலன். கடைத்தலைக்கே நள்ளிருட்கண் என்னை உய்த்திடுமின்" (நாச். திரு. 12.3) என்று நள்ளிருளை வேண்டுவார்கள். இப்போது அங்ஙனமின்றி கண்ணபிரானோடு சேர்வதற்கு ஊரார் அனைவரும் இசைந்து நின்றமையால் இருளை வெறுத்து நிலாவினைக் கொண்டாடுகின்றனர். கீழ்க் கழிந்த நாட்கள் எல்லாம் தீயவை என்று தோன்றும், இப்போது **'நன்னாள்'** என்றமையால்.

முன்பு இருள் தேட்டமானாற்போல, இப்போது நிலா தேட்டமாக அமைந்தது. காமுகர்க்கும் இடைக்குல முதியோர்க்கும் இருள் தேட்டமாயிருக்குமல்லவா? "தாய்க்கும் தகப்பனுக்கும் அஞ்ச வேண்டா, இருளிலே புறப்பட்டு அணைக்கலாம்" என்றாள் முன்பு. 'இருளன்னமா மேனி எம்இறை' - இருளோடு சேர்ந்த அவனுடைய விடிவும் நமக்கு வாய்ப்பாக இருக்கும்" என்றாள் பிஷக்குகள் (மருத்துவர்கள்) வாசலிலே ஆர்த்தர் கட்டணமாய்க்

கிடக்குமாப்போலே நந்தகோபர் வாசல் கிருஷ்ணனாலே புண்பட்ட புண்கள் கிடக்குமாய்க் கொள்ளீர்" என்பது பட்டர் நிர்வாகம். "இப்போது நிலவிலே இந்தச் சங்கடம் இல்லை. ஊர் இசைந்து மேல் எழுத்திட்ட நாளா நாளாதலால் இனித் தொல்லை இல்லை" என்கின்றார்கள். "சந்திரனும் க்ஷயம் முதலிய நோய்கள் நீங்கி" பூர்ணனாயிருக்கின்றான். நாமும் நாமும் உளோமாய் என்று பூர்ணைகளாக (சுதந்திரர்களாக) உள்ளோம் - வாருங்கள்" என்கின்றார்கள்.

**நன்னாள் ஆல்!** : மாதத்திற்கும் பட்சத்திற்கும் நாயகக் கல் (பிரகாசமான கல்) போலேயிருப்பதொரு கல் நேர்பட்டபடி என் **நன்னாளால்** : முன்பு கழிந்த நாள் தீயநாள் போலே நம்மை கிருஷ்ணனோடு கிட்டவொட்டாதவர்கள் சேருக்கைக்குப் பிரமாணம் கொடுத்த நாளாகப் பெற்றதே பகவத் பிரசாதத்திற்கு இலக்காகப் பெற்ற நாளல்லவா - இவ்வான்மாவுக்கு நல்ல நாளாகிறது. சர்வேசுவரனுடன் எதிரம்பு கோத்தல் தவிர்ந்து, "அவன் நமக்கு இரட்சகன்" என்றும் விசுவாசம் பிறந்தநாள் அல்லவா - நல்ல நாளாகிறது. "துவேஷயான கம்சன் சோறுண்டு வளர்ந்த எனக்கு விஷ்ணு ரூபியான கிருஷ்ணனுடைய திருமுக மண்டலத்தைச் சேவிப்பதால் நல்விடிவு உண்டாகப் பெறுவதே" என்றானல்லவா அக்ரூரன்? மாதத்தைக் கொண்டாடுவது, பட்சத்தைக் கொண்டாடுவது, நாளைக் கொண்டாடுவதாய், இதிலே இவர்களுக்குண்டான வேகம் (த்வரை) வெள்ளம் போன்றது. இதற்குக் காரணம் இவர்கள் பிராப்யருசி இருந்தவாறு.

**நீராட** : நோன்புக்காகக் குளிர்தல் என்பது சொற்பொருள். கிருஷ்ணனைக் கூடுதல் உள்ளுறைப் பொருள். தமிழ் அகப்பொருள் இலக்கியத்தில் சுனையாடல், புனலாடல் என்பவை கலவியைக் குறித்தல் ஈண்டு நினைத்தல் தகும். இதை எண்ணியே இடைச்சிறுமிகள் நீராட என்று கௌரவமான சொல்லைப் பயன்படுத்துகின்றனர்.

**நீராட** : கிருஷ்ணவிரகத்தால் பிறந்த தாபம் அறும்படிப் போய்க் குளிக்கை. இத்தால் இவர்கள் நினைப்பது கிருஷ்ணனோடு சேர்தல். பகவானோடு சேர்வதற்கு முதுவேனிற் காலத்தில் குளிர்ந்த மடுவை எடுத்துக்காட்டாகச் சொல்லுவதுண்டல்லவா? தாங்கள் நினைத்தபடி சொலலுவதற்கீடான முறை இருந்தும் அதைத் தவிர்ந்து பகவானோடு உறவையே நோக்கி கௌரவித்து 'நீராட' என்கின்றார்கள். திருமங்கையாழ்வாரும்,

**பெற்றேன்வாய்ச் சொல்லிறையும் பேசக்கேளாள்**
**பேர்பாடித் தண்குடந்தை நகரும் பாடி**
**பெற்றாம ரைக்கயம்நீ ராடப் போனாள்**
**பொருவற்றாள் என்மகள்உம் பொன்னும் அஃதே?**

**திருநெடுந். 19**

என்ற பாசுரத்தில் நீராடுதலின் தாற்பரியத்தைக் கூறியிருத்தல் காண்க. இதனால் இடைப்பெண்கள் தங்கள் பிராப்பியத்தை 'நீராட' என்று சொல்லுகின்றார்கள்.

நீராட : தோழிமார் ஒருவருக்கொருவர் மனம் விட்டுத் தாராளமாகப் பழகுவார்களாயினும், பகவத் சம்பந்தத்தை நோக்கும்போது கௌரவைகளாக இருப்பார்களல்லவா? "கள்ளவிழ சோகை கணபுரம் கைதொழும், பிள்ளையைப் பிள்ளையென் றெண்ணப் பெறுவாரே" என்றும், "பெருந்தவத்தள் என்றல்லாற் பேசலாமே" என்றும், "நேரிழை நடந்தாள்" என்றும் தாய்மார்கள் சொல்லிச் சென்றார்களன்றோ? இப்படியல்லவா வைணவர்களை 'நீராட' என்றது? ஆசார்யர்களை நம்பி என்றதும், மதுரகவிகள் 'நம்பி' என்று[3] சொன்னதாலே அல்லவா? பட்டர் ஸ்ரீ பாதத்தைக் கழுவித் தீர்த்தம் கொள்ளும் ஆண்டாள்[4] எம்பெருமானாரும் ஸ்ரீவைணவர்களும் எழுந்தருளினபோது, பெரியநம்பி தெண்டனிட்டுக் கிடந்தார். "நம்மை இங்ஙனம் செய்தருளினமைக்குக் காரணம் ஏன்?" என்று உடையவர் கேட்க, "ஆளவந்தார் எழுந்தருளியுள்ளார் என்றிருந்தேன்" என்றருளிச் செய்தார். இவையல்லவா பகவத்சம்பந் தத்தையிட்டு கௌரவிக்கும் முறை? 'நீராட:' இவர்கள் (ஆயர் சிறுமிகள்) 'நீராட' என்றது காதல் நோயாசை அன்றோ? யமுனை நீர் ஒருத்தியின் காதல் நெருப்பாலே சுவறுமே!

பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில ஐம்பதுக்கு மேற்பட்ட சுலோகங்களினால் திருக்காவேரியையும், திருச்சோலைகளையும், திருமதில்களையும், திருவீதிகளையும், திருமண்டபங்களையும் சந்திரபுஷ்கரிணி, திருப்புன்னை முதலானவைகளையும் அநுபவித்து, ஸ்ரீரங்கநாதனை அநுபவிக்கும்படியைச் சொல்ல வேண்டுமிடத்து ஒரு தாமரைத் தடாகத்தில் படிவதாகப் பணித்தாரேயன்றி "பகவானைச் சேவிக்கின்றேன்" என்று பணித்திலார். நம்மாழ்வார் திருவாய்மொழியில்,

**கண்கைகால் தூயசெய்ய மலர்களா**
**சோதிச் செவ்வாய் முகிழ்தா,**

3. 'கண்ணிநுண் சிறுத்தாம்பில்' பாசுரந்தோறும் 'நம்பி' என்ற சொல்லாட்சியைக் காண்க.
4. ஆண்டாள் – பட்டரின் திருத்தாயார்.

**சாயல்சாமத் திருமேனி தண்பாகடையா**
**தாமரைநீள் வாசத்தடம்போல் வருவானே** (திருவாய்)

என்று அருளச் செய்திருப்பதும் கண்டு சிந்திக்கத்தக்கது. வாசத்தடம் - பரிமளம் மிக்க தடாகம். ஆகவே 'நீராட' என்பது பகவான் திருக்குணங்களில் மூழ்கி என்றபடியாகும். இன்னும் சிறிது உட்புகுந்து சிந்தித்தால் இச்சொல்லுக்கே "ஆசாரியகுலத்தில மூழ்க" என்கின்ற பொருளும் கிடைக்கும். திருவிருத்தத்தில் (93) சடகோபர் 'காலைநல் ஞானத் துறைபடிந்து ஆடி' என்றார். இங்கு ஞானத்துறைபடிந்தாடுவது 'ஆசாரிய குலத்தில் மூழ்கி' என்பது பொருளன்றோ? ஆக, இவ்விடத்தில் காலைநன் ஞானத்துறை படிந்தாட அழைக்கிறபடியாம்.

அற்ப பலமாகிய சுவர்க்காநுபவத்திற்கு உறுப்பாகப் பண்ண வேண்டும் தேவைகட்கு ஓர் எல்லை இல்லை. கூச்மாண்ட கணஹோமம்[5] முதலிய அரிய பெரிய செயல்களைச் செய்யவேண்டும். மீட்சியின்றி வைகுந்தமாநகர் புகுவதற்கீடான பகவத் சங்கத்திற்கு அபேட்சை (விருப்பம் - இச்சை) மட்டிலும் போதும். வேறு ஒருவகை அதிகாரமும் வேண்டா என்பது **"போதுவீர்! போதுமினோ"** என்ற சொற்பெருக்காற் போதரும். அப்ராப்த விஷயமான சொக்காநுபவத்திற்கு அதிகாரி சம்பந்தி உண்டாக்கிக் கொண்டு இழிய வேண்டும். இது வகுத்த விஷயமானகையாலே இச்சைக்கு மேற்பட வேண்டுவதில்லை. நெடுங்காலம் இழந்ததும் இவன் பக்கல் இச்சை இல்லாமையாகையாலே, இந்த இச்சையே வேண்டுவது. சக்தியும், பிராப்தியும் அவனிடம் பூர்ணமாகையாலே, இச்சைக்கு மேற்பட வேண்டியதில்லை. இஃது இல்லையாகில் இஃது இவனுக்குப் புருஷார்த்தமாகமாட்டாதல்லவா? எலுமிச்சம்பழங்கொண்டு மன்னனைக் கண்டு இராஜ்யம் பெற்றார்க்கு அந்தப் பழம் சாதன கோடியிற் புகமாட்டாதவாறு போலே, இந்த இச்சையும் சாதனமாக வகையில்லை என்பதும் ஈண்டு உணரத்தக்கது.

பிரதிகூலரையும் சேர்த்துப் "போதுவீர்" என்று கூறுவதற்குக் காரணம், அவர்களைத் திருத்துகைக்கு பிராட்டியைப் போலே இவர்களும் கடகராகையாலே, திருத்துவது இவர்களுக்கு இயல்பு. "வம்மின்" என்னாமல், "போதுமினோ" என்பது அவர்கள் முன்னே போகத் தாங்களும் வாழும்படி அவர்கள் நடையழகு கண்டு பின்னே போவதைக் குறிக்கும்.

**நேரிழையீர்** : இழையாவது ஆபரணம். 'நேர்த்தியான ஆபரணங்களை அணிந்துள்ளவர்களே' என்பது சொற்பொருள்.

5. கூச் மாண்டம் – பூசணிக்காய்

'கண்ணபிரான் நம்மை எப்போது அணைத்துக்கொள்ள வருவானோ?' என்று ஆய்ச்சிகள் அனைவரும் எப்பொழுதுமே ஆபரணம் பூண்டிருத்தலால் 'நேரிழையிர்' என விளிக்கப்பெற்றனர். 'எம்பெருமானோடு சேர வாருங்கள்' என்று இவர்கள் விளித்தவுடனே உவப்பினால் அவர்கள் மேனி ஆபரணம் பூண்டாற் போலாயிற்று என்பது உள்ளுறை.

**நேரிழையீர்** : விலட்சணமான ஆபரணத்தையுடையீர். இவர்கள் 'போதுமினோ' என்ற பின்பு அவர்கள் வடிவிலே பிறந்த புதுக்கணிப்பு இருந்தபடி. "புனையிழைகளணியும் ஆடையுடையும் புதுக்கணிப்பும் நினையும் நீர்மைய தன்று இவட்கு" (திருவாய் 8.9.5) என்னுமாப்போலே ஆபரணங்களை மாறாடிப் பூண்டிருந்த படியாலும், திருப்பரியட்ட மாறாட்டத்தாலும், வடிவில் வேறுபாட்டாலும் இவள் சர்வேசுவரனுக்கு பிரசாத பாத்திரமானாள் என்று தோற்றா நின்றதென்றாப் போலே" "கிருஷ்ணன் எப்போது அணைப்பான்" என்று அறியாமையாலே எப்போதும் அலங்கரித்தபடி இருப்பார்கள். நேர்மையால் நினைக்கிறது - வைலட்சண்யத்தை. முன்பு கிருஷ்ணனுடன் நடைபெற்ற கலவியாலே பிறந்த புகர் இப்போது தோற்றும்படி இருந்தது.

ஸ்ரீ வைணவர்கட்கு சமதமாதி குணங்கள்[6] ஆபரணமாகச் சொல்லப் பெறுகின்றன. கங்கணம், குண்டலம் முதலிய ஆபரணங்கள் உடலுக்கு அலங்காரம், சமதமாதி குணங்கள் ஆன்மாவுக்கு அலங்காரம். ஸ்ரீவசனபூஷணத்தில் "ஆன்ம குணங்களில் பிரதானம் சமமும் தமமும்" (96). இவையிரண்டும் உண்டானால் ஆசாரியன் கை புகும், கை புகுந்தவாறே திருமந்திரம் கை புகும், திருமந்திரம் கை புகுந்தவாறே ஈசுவரன் கை புகும், ஈசவரன் கை புகுந்தவாறே 'வைகுந்த மாநகர் மற்றது கையதுவே' என்கின்றபடியே பிராப்பிய பூமி கை புகும்" (97) என்று அருளிச் செய்யப்படுகின்றது. ஆசாரியன் கை புகும் என்கையாலே 'நீங்கள் நேரிழையீராக இருந்து நீராடப் போதுமின்' எனப்பட்டது. ஆசாரியனைப் பணிந்தால் நேரிழையீரா வீர்கள் என்றபடியுமாம்.

**சீர்மல்கும் ஆய்ப்பாடி** : பண்டேபாலாலும் வெண்ணெயாலும் நெய்யாலும் சீர்மை பொருந்திய திருவாய்ப்பாடியில், திருநாட்டுக்குத் தலைவனான கண்ணபிரான் வந்து பிறந்தமையால் சம்பத்து மிகுந்து கிடந்தது. குணங்கள் முதலியவற்றால் தாம் பொருளுக்குப் பெருமை. பரத்தவம் மாத்திரம் பொலிய நிற்கும் பரமபதம். ஆய்ப்பாடியில்

6. சமம் – அகத்துறுப்பாகிய மனத்தை அடக்குதல். தமம் – புறத்துறுப்புகளாகிய ஐம்பொறிகளை அடக்குதல்.

சௌசீல்யம் சௌலப்பியம் வாத்சல்யம் முதலிய சகல குணங்களும் சாலவிளங்கும். **சீர்மல்கும் ஆய்ப்பாடி** : கிருஷ்ணனுடைய குணசம்பத்தும் ஆய்ப்பாடியின் பசு சம்பத்தும் பரமபரதத்தில் அலையெறிதல்.

**அழுகையும் அஞ்சிநோக்கும் அந்நோக்கும்**
**அணிகொள் செஞ்சிறுவாய் நெளிப்பதுவும்**
**தொழுகையும் இவைகண்ட அசோதை** (பெரு.திரு. 7.8)

இவை கண்ட இடம் **ஆய்ப்பாடி**. இவற்றைக் காண்பதற்காகவே வைக புத்திரர்கள் வியாஜத்தாலே நாய்ச்சிமார் அழைத்துக் கண்டது நீர்மை என்ற குணம். சௌலப்பிய குணத்தாலே உயர்த்தி இங்கு. **ஆய்ப்பாடி** : பரமபதத்தையும் அயோத்தியையும் விட மேலானது ஆய்ப்பாடி. பரமபதத்தில் வேறு உடல் கொண்டு எம்பெருமானை அநுபவிக்க வேண்டும். ஆய்ப்பாடியில் மானிட உடல் கொண்டே ஈசுவராநுபவம் பெறலாம். இங்கு கிருஷ்ணாநுபவம் பெறலாம், பரமபதத்தில் அது பெற முடியாது. அயோத்தி வசிட்டர் முதலான ஆசாரிய பிரதானவர்கள் இருக்கும் ஊர், ஆய்ப்பாடி இடக்கையும் வலக்கையும் அறியாத இடையர் வசிக்கும் ஊர். அயோத்தி பெருமாள் குணங்கண்டு உகக்கும் ஊர், ஆய்ப்பாடி கிருஷ்ணன் தீம்புகண்டு உகக்கும் ஊர். "இந்திரனுக்கு இடும் சோற்றை மலைக்கு இடுங்கள்" என்றால் அதற்கு இசையும் ஊர்.

**செல்வச் சிறுமீர்காள்** : இவ்வான்மாவுக்கு நிலைநின்ற ஐசுவர்யம் பகவத் சம்பந்தம் செல்வமாதற்கு இளைய பெருமாள்[7] வீபிஷணாழ்வான், கஜேந்திராழ்வான் ஆகிய மூவரும் எடுத்துக்காட்டுகளாவர். இவர்கட்கு ஸ்ரீவைணவ ஸ்ரீமாலையிட்டபடி. வலிபாதி, வழக்குபாதி, தர்மம் பாதியாக, பஞ்சலட்சம் குடியிற் பெண்களில் கிருஷ்ணனாலே தொடப்பெறாதவர் ஒருவரும் இலர். வலியாவது - தன் செல்லாமை, சேராவிடில் தரியாமை. வழக்காவது, மைத்துனமை, தீண்டுவதற்கு உரிமையுடைய உறவு. தர்மமாவது - ஆந்ருசம்ஸ்யம், ஆந்ரு சம்ஸ்யம் என்பது, தன்னோடு கலவாவிடில் தரியாத பெண்களிடத்தில் பண்ணும் காருண்யம். **சிறுமீர்காள்** : கிருஷ்ணனோ டொத்த பருவமாயிருத்தல். இராகவனுக்குத் தகுந்தவள் வைதேகி என்று சிறிய திருவடி நினைத்ததுபோல் இருத்தல். **சிறுமீர்காள்:** பருவம் கழிந்திருத்தல், முரட்டாள்களா

7. இளைய பெருமாள் – சொந்த முறையில் சுதந்திரம், பிறருக்கு அடிமை எப்போதும் இல்லாதவர். விபீஷணாழ்வான் – சொந்த முறையில் சுதந்திரம் எப்போதும் இல்லாமல் பிறருக்கு அடிமை கழித்தவன். கசேந்திராழ்வான் – பிறருக்கு அடிமையின்றி, சொந்த முறையில் இரட்சிக்கப்படுதல், சுதந்திரம் ஆகியவை உடையவனாயிருந்து அதையும் கழித்தவன். இவை எடுத்துக்காட்டுகளுக்குள்ள வேற்றுமை.

யிருத்தல் செய்யாதேயிருக்கை. அகங்கார உணர்வாதல் தேவதாந்திர உணர்வாதல் இல்லாதிருத்தல். இத்தால் சொல்லியதாவது - பிறருக்கு அடிமை, சொந்த முறையில் சுதந்திரம் இல்லாமை என்பவையாம். கண்ணன் இவர்களைத் தனக்கு அடிமையுள்ளவர்களாக நினைத்திருத்தல். இதனால் அவனுக்கேயாயிருக்கிற யோக்கியதையைச் சொன்னபடி. அதாவது - கோவிந்தனுக்கல்லால் பிறவாயில் போகாதிருக்கை.

எம்பெருமானிடத்து அன்புடைமைக்கு மேற்பட்ட செல்வம் ஆன்மாவுக்கு இல்லாததாலும், தண்டகாரண்யவாசிகளான முனிவர்கள் இராமபிரானின் அழகு முதலிய திருக்குணங்களில் ஈடுபட்டு அன்பு மிகுதியால் பெண்மையை விரும்பி மற்றொரு பிறப்பில் ஆயர்மங்கையாய்க் கண்ணனைக் கூடினர் என்பதாகச் சொல்லப்பெறுவதாலும் 'செல்வச் சிறுமீர்காள்' என விளிக்கப் பெற்றனர் என்பதாகக் கொள்க.

**கூர்வேல் கொடுந்தொழிலன் :** எறும்பு முதலிய சிற்றுயிர்களின் இறப்புக்கு அஞ்சிப் பசும்புல்லும் காலை ஊன்ற வைத்து நடந்தறியாதவன் நந்தகோபன். கண்ணனை மகனாகப் பெற்ற பின்பு அவன் மேலுண்டான பரிவு மிகுதியாலே, கண்ணன் படுத்துறங்கும் தொட்டிலின் கீழே எறும்பு புகுந்து ஊர்ந்தாலும் சாணைப்பிடித்த வேலைக்கொண்டு அதனைக் கொல்லுவதென்று தயார் நிலையில் இருந்தமை பற்றிக் 'கூர்வேல் கொடுந்தொழிலனாகக்' கூறப்பெற்றனன். **நந்தகோபன் :** பிள்ளையைக் கண்ட அன்புனாலே ஆனந்தத்தை யுடையர் என்று சொல்லுதல். நாமதேயம் என்றும் கருதலாம். இப்போது இவரைச் சொல்லுவான் என்? என்னில் குறிக்கோள் பொருளை நோக்கித் தருமவர் என்னும் பிரீதியாலே என்க. "நந்தகோபாலா எழுந்திராய்" (17) என்று எழுப்பிக் காரியம் கொள்ளலாம்படி அளவுக்கு இவர்களுக்கு அவர் விதேயராக இருந்தார். **நந்தகோபன் குமரன் :** நந்தகோபர் சந்நிதியில் 'கோற் கீழ்க்கன்றாய்' (நாச். திரு. 14.1) இருப்பான். உலகில் சிறுவர்கள் தந்தைபால் அஞ்சி நிற்பதும், தாய்மார்பால் அடங்கா தொழிவதுமாயிருத்தல்போல, கண்ணபிரானும் நந்தகோபருக்கு கோல் கீழ்க்கன்றாகவும் யசோதை பிராட்டிக்குச் சிங்கக் குருளையாகவும் இருந்தமைபற்றி 'நந்தகோபன் குமாரன்', 'அசோதை இளஞ்சிங்கம்' எனப்பட்டது. தகப்பனார்க்குப் பவ்யனாக இருப்பையும் தாயார்க்கு அடங்கா இருப்பையும் சொல்லியவாறாம்.

**ஏரார்ந்த கண்ணி :** யசோதைப் பிராட்டியின் கண்ணிலே அழகு குடி கொண்டிருக்கும். கிருஷ்ணாநுபவத்தால் பிறந்த மகிழ்ச்சி

கண்ணிலே காணலாம்படி இருக்கும். பிள்ளையை மாறாதே பார்த்துக் கொண்டிருக்கையாலே அவ்வாசி அடையக் கண்ணிலே தோற்றும் படியாக இருத்தல். நாட்டார்க்குப் புண்ணிய பாபங்கள் கலந்திருக் கையாலே கண்ணிலே பொலிவு இராது. இவளுக்கு சர்வேசுவரனைப் பிள்ளையாகப் பெற்றபேறு அடையக் கண்ணிலே தோற்றியிருக்கும். "அம்பன்ன கண்ணாள் அசோதைதன் சிங்கம்" என்று போற்றக் கூடியவனல்லவா? "பிள்ளைக்குத் தாய் வழி ஆகாதே கண்" என்பது **பிள்ளை உறங்கா வில்லிதாசரின்** வார்த்தை. "அழுகையும் அஞ்சி நோக்கும் அந்நோக்கும் தொழுகையும்" (பெரு.திரு. 7.8) இவை கண்ட கண்களல்லவா யசோதையின் கண்கள்? **யசோதை :** "யசோதாய் அறிவுறாய்" (17) என்று எழுப்பிக் காரியம் கொள்ளும் படியல்லவா இவர்கள் திறத்தில் அவள் அநுகூலம் பண்ணுவது?

**இளஞ்சிங்கம் :** நந்தகோபர் அறிவுரை கூறுபவராகையாலே விநயம் தோன்ற நின்றபடியைச் சொன்னவாறு இவள் அன்பை மட்டிலும் கொண்டு நடத்துபவளாகையாலே செருக்கும் மேனாணிப்பும் தோற்ற நின்ற நிலையைச் சொன்னபடி. அஞ்ச உரப்பாள் அசோதை ஆணாடவிட்டிருக்கும்[8] என்று இவன் செய்வன எல்லாம் உத்தேச்யமாக அல்லவா இவள் நினைத்திருப்பது? ஆரேனும் வந்து முறையிட்டால் "அஞ்ச உரப்பாள்". இவன் தீம்பிலே தகணேறும்படியல்லவா[9] இவள் உரப்புவது? **இளஞ்சிங்கம் :** சிறுமியர்க்கு ஒத்த பருவமாயிருத்தல். "சிங்கக் குரு" என்று பட்டர் அருளிச் செய்வர். "சிறுமீர்காள்" என்றால் "இளஞ்சிங்கம்" என்ன வேண்டாவோ "நந்தகோபாலா எழுந்திராய்" என்பதற்கும், யசோதா அறிவுறாய்" என்பதற்கும் அடி இருக்கிறபடி.

**கார்மேனி :** நம்முடைய சகலதாபங்களும் ஆறும்படியான வடிவு. "தூநீர் முகில் போல் தோன்றாய்" என்று வேண்டின பொருள் அல்லவா இவர்களுக்கு நேராக நிற்கிறது? மாதாபிதாக்கள் மறைத்து வைத்தாலும் விடாவொண்ணாத வடிவழகு. **செங்கண் :** வாத்சல்யத்தைத் தெரிவிக்கின்ற கண்கள். ஒரு மேகத்திலே இரண்டு தாமரைப் பூத்தாற்போலே இருத்தல். இரவில் நடைபெறும் திருநாள் சேவித்தார் கண்போல் இருத்தல். வடிவாலே அணைத்துக் கண்ணாலே குளிர நோக்குகையில் என்பது கருத்து.

**கதிர்மதியம் போல் முகத்தான் :** சந்திரனைத் தண்ணளியிலே ஆதித்தியனின் புகரையூட்டினாற் போலே திருமுகம் இருத்தல். பிரதிகூலர்க்குக் கிட்டுவதற்கு அரியனாய், அநுகூலர்க்கு எளியனாய்க்

8. உரப்பாள் – அதட்டாள்; ஆணாட – ஆண்பிள்ளைத்தனம் கொண்டாட.
9. தகணேறும்படியாக . முற்றும்படியாக.

கிட்டி நின்று அநுபவிக்கலாம்படி இருத்தல். 'கதிர்மதியம் போல்' என்ற உவமைக்கு மிகமிக மேலான முகம். ஆகையாலே 'முகத்தான்' என்று சொல்ல வேண்டியதாயிற்று. **முகத்தான் :** அவ்வளவிலும் உவமானம் நேர் நிற்க மாட்டாமையாலே உபமேயத்தையே சொல்லுகிறது என்பதாகும்.

**நாராயணனே :** வடிவழகைக் கொண்டு வேறொரு விஷயத்தைப் பற்ற வேண்டாமல் பிராப்த விஷயமாக இருத்தல். உகந்த விஷயமே வகுத்த விஷயமாக இருத்தல். அவனாலும் தன்னை அநுபவிக்கத்தாரேன் என்று சொல்லவொண்ணாது. நாராயணன் என்ற அபூர்வப் பொருள் இடைச்சிகளுக்குக் கூட எளிதானபடி. தேவதாந்தரங்களை அறியாத இடக்குல முதியோர்கள் நோன்புக்கு அங்கமாக செபிக்கும் மந்தரமாக உபதேசிக்கையாலே இவ்வாறு சொல்லுகின்றார்கள். மேலும், தம்முடைய தந்தைமார் சொல்லவும் கேட்டிருப்பார்களல்லவா? "நன்மை தீமைகளொன்று மறியேன் நாரணா என்னும் இத்தனையல்லால்" என்றும், "நான் கண்டுகொண்டேன் நாராயணா என்னும் நாமம்" (பெரி.திரு. 1.1) என்றும், "திண்ணம் நாரணம்" (திருவாய் 10.5.1), "நாரணனை நன்கு அறிந்தேன்" என்றும், "நாரணன் - முழு ஏழ் உலகுக்கும் நாதன்" (மேலது - 2.7.2) என்றும் பலவிடத்திலே சொல்லப்பட்டுள்ளதன்றோ? நாராயணனே என்றவிடத்தில் அவதாரணம், உபாய நைரபேட்சத்தைச் சொல்லுகிறது. இதில் அவதாரணம், பிராப்தாவினுடைய ஆகிஞ்சந்யத்தை அறிவிக்கின்றது. அவனுக்கு உபாயபாவனை இயல்பாகவே அமைந்தது அவன் பக்கம் நிறைவாலும் அவனே உபாயம். இவர்கள் பக்கம் குறைவாலும் அவனே உபாயம். போக்கற்றவனுக்குத் திறந்து கிடந்த வாசலிலே புக வேண்டும். வைகிறவனுக்கும் பேர் சொல்லி வைய வேண்டும். இவற்றையல்லா காகமும் சிசுபாலனும் செய்தது? இவற்றாலே இருவரும் ஆட்கொள்ளப் பெற்றார்களன்றோ? இந்த கைமுதலும் தமக்கு இல்லை என்கின்றார்கள். **நமக்கே :** அவனால்தானே பேறு, வேறு இரட்கராலேயல்ல என்று அநந்யகதிகளாக இருக்கிற நமக்கே. சக்தியுண்டெனினும், நமது சொருபத்திற்குச் சிறிதும் பொருந்தாது என்று உபாய சூந்யரான நமக்கே, ஆகிஞ்சநயாய் அவன் கை பார்த்திருக்கின்ற நமக்கே. **தருவான்:** இதனைச் சாதித்துத் தருவார் இவர்களேயானாலும் அவன் தரக் கொள்வதே முறை என்கின்றார்கள். **பறை தருவான் :** "உக்கமும் தட்டொளியும்" *(20)* என்று நாட்டுக்கு ஒரு பேர் சொல்லிக்கிட்டினவாறே, "உன்றன்னோடு உற்றோமே யாவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்" *(29)* என்று

சொன்னார்களல்லவா? "இற்றைப்பறை கொள்வான் அன்றுகாண்" (29) என்கையாலே - யாவதான்மபாவியான அடிமையை நினைக்கிறது. "பாடிப்பறை[10] கொண்டு" (27) என்றதையும் நினைக்கிறது.

பாரோர் புகழ : கிருஷ்ணனையும் தம்மையும் சேர வொட்டா இசையாதவர்களும் கொண்டாபடும்படி. மழை வரும் என் கையால் ஆய்ப்பாடிவாசிகளும் புகழ மகிழ என்றுமாம். சொரூப ஞானமுடையார் யாத்திரையை சொரூப ஞானமில்லாதார் நிந்திப்பார்கள். மழை பெய்தமையால் அது வேண்டா இவர்கட்கு. படிந்து - இந்த நோன்பிலே மூழ்கி. படிந்து - நீராடப் போதுவீர் போதுமினோ என்று கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளவேண்டும். கிருஷ்ணன் வேண்டும் உபகரணங்கள் கொடுக்க பெண்கள் நோன்பினைத் தொடங்கினார்கள்.

இந்த பாசுரத்தில் இவ்வாறு காலத்தைக் கொண்டாடி, பலத்தைச் சொல்லி, அதிகாரிகளைச் செப்பி, இது கேட்ட பின்பு அவர்கட்குப் பிறந்த பௌடிகல்யத்தைச் சொல்லி, கிருஷ்ணனோடே சேர்வதற்கு ஏகாந்தமான ஊரிலே பிறக்க நேர்ந்த நீங்களும் சிலரே என்று நந்தகோபர்க்கும் யசோதைப் பிராட்டிக்கும் பவ்யனாகையாலே இழக்க வேண்டா என்று அவர்கள் ஒழித்தாலும் விடவொண்ணாத வடிவழகைச் சொல்லி ஆகிஞ்சந்யத்தால் நைரபேட்சயம் சொல்லி உகவாதாரும் உகந்து கொண்டாடும்படி சொல்லித்தலைக் கட்டுகின்றார்.

10. பறை – சிறுவர்கள் கையில் வைத்துக்கொண்டு அடிக்கின்ற தப்பட்டை.

# 2. செய்வனவற்றையும் தவிர்வனவற்றையும் கூறுதல்

## இரண்டாம் பாசுர விளக்கம்

### "வையத்து வாழ்வீர்காள்"

**வையத்து வாழ்வீர்காள் நாமும்நம் பாவைக்கு**
**செய்யும் கிரிசைகள் கேளீரோ பாற்கடலுள்**
**பையத் துயின்ற பரமன் அடிபாடி**
**நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி**
**மையிட் டெழுதோம் மலரிட்டு நாம் முடியோம்**
**செய்யா தனசெய்யோம் தீக்குறளைச் சென்றோதோம்**
**ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி**
**உய்யுமா றெண்ணி உகந்தேலோர் எம்பாவாய்**

(சொ.பொ) வையத்து - (கிருஷ்ணன் திருவவதரித்த காலத்தில்) இவ்வுலகில்; வாழ்வீர்காள் - வாழப் பிறந்தவர்களே; நாமும் - (அவனாலேதான் நமக்குப் புருஷார்த்தம் கைகூடும் என்று இருக்கின்ற) நாமும்; உய்யும் ஆறு - உய்யும் வழியை; எண்ணி - ஆராய்ந்து; உவந்து - உவப்புக் கொண்டு; நம்பாவைக்கு - நம்முடைய நோன்புக்கு; செய்யும் - செய்யப் போகின்ற; கிரிசைகள் - காரியங்களை; கேளீர் - கேட்பீராக; (அவையாளவை எனில்). நாம் - (நோன்பை நோற்கத் தொடங்கின) நாம் - (நோன்பை நோற்கத் தொடங்கின) நாம்; பாற்கடலுள் - திருப்பாற்கடலில்; பைய - மெல்ல; துயின்ற - யோக நித்திரை செய்கின்ற; பரமன் - (குணங்களால்) யாவரினும் சிறந்த எம்பெருமானது; அடி - திருவடிகளை; பாடி - (புகழ்ந்து) பாடி; நாள் காலை நீர் ஆடி - விடியற் காலத்திலேயே நீரில மூழ்கி; ஐயமும் - (அறிவுடையோர்க்கு மிகுதியான) பொருள் கொடுத்தலும்; பிச்சையும் - (பிரம்மச்சாரிகட்கும் சந்நியாசிகட்கும்) இடப்படும் பிச்சையும்; ஆம்தனையும் - (இரப்பவர்) மனநிறைவு கொள்ளும் அளவும்; கைகாட்டி - (நாம் கொடுத்தோம் என்ற) அபிமானம் இல்லாமல் கொடுத்தும்; நெய் உண்ணோம் - நெய் பருகோம்; மை இட்டு எழுதோம் - (கண்களை) மை இட்டு அலங்கரியோம்; மலர் இட்டு முடியோம் - (குழலில்) பூ வைத்து முடிக்கமாட்டோம்; செய்யாதன செய்யோம் - (முன்னோர்) செய்யாத காரியங்களைச் செய்யமாட்டோம்; தீ - (பிறர்க்குத்) தீமை விளைவிக்கின்ற; குறளை - பொய்யான கோட்சொற்களை; சென்று ஓதோம் - (கிருஷ்ணனிடம்) போய்ச் சொல்லமாட்டோம்).

(கு-து) : "நீராடப் போதுவீர் போதுமினோ, நாராயணனே நமக்கே பறை தருவான்" என்று அப்பெண்கள் தாங்கள் செய்வனவற்றையும் தவிர்வனவற்றையும் கூறுகின்றார்கள் இத்திருப்பாசுரத்தில்.

**விளக்கம் : வையத்து வாழ்வீர்காள் :** 'சர்வேசுவரன் திருவாய்ப் பாடியிலே கிருஷ்ணனாய் வந்து திருவவதரித்துத் தன்னைத் தாழவிட்டுப் பரிமாறுகிற காலத்தில் வாழப் பிறந்த பேறு பெற்றவர்களே' என்று மகளிரை விளித்தபடி. முன்னைய பாசுரத்தில் 'சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்' என்று திருவாய்ப் பாடியிலுள்ளாரை மட்டிலும் அழைத்துவிட்டு, இப்பாசுரத்தில் பூ மண்டலத்திலுள்ளவர்களையெல்லாம் அழைப்பதாகக் கூறுவது பொருந்துமோ? என்று வினா எழுகின்றது. உள்ளுறைப் பொருளை மறவாமல் நெஞ்சிற் கொண்டால் இந்த ஐயம் எழாது. முன்னைய பாசுரத்தில் ஆய்ப்பாடி என்றது வடமதுரையில் அருகிலுள்ள 'கோகுலம்' என்கின்ற ஓரிடத்தை மாத்திரம் குறிப்பிட்டதன்று. ஆநிரைகளை மேய்ப்பவர்களாய் அறிவிலிகளான நாம் எல்லாரும் வாழும் இடமே ஆய்ப்பாடி எனப்பட்டது என்பது அறியப்படும். வாழ்ச்சி என்பது இந்நிலத்திலேயன்றிப் பரமபதத்தில் அன்று என்பதைக் காட்டியவாறு. ஆண்டாள், நாச்சியார்திருமொழியில் "கொம்மை முலைகள் இடர்தீரக் கோவிந்தர்க்கோர் குற்றேவல், இம்மைப் பிறவி செய்யாதே இனிப் போய்ச் செய்யும் தவந்தான் என்? (13.9) என்று அருளிச் செய்தவளாகையாலும் தொண்டரடிப் பொடிகள் 'இச்சுவை தவிர யான்போய் இந்திரலோகம் ஆளும், அச்சுவை பெறினும் வேண்டேன்' (திருமாலை - 2) என்றும், திருப்பாணாழ்வார் 'அண்டர்கோன் அணியரங்கன் என் அமுதினைக் கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே' (அமலனாதி - 10) என்றும் சொல்லுகின்ற வகுப்பிலே சேர்ந்தவர்களாதலாலும் 'வையத்தில் வாழ்ச்சியுள்ளவர்கள்' என்று சொன்னபடியாம். **வையத்து :** பரமபதத்தில் மேன்மை மட்டிலுமே காணலாம்படி இருக்கும். அங்கு தயை நீர்மை முதலிய குணங்கள் பிரகாசிக்கும் வாய்ப்பு இல்லாத படியாகையாலே, நித்திய சூரிகள் அக்குறை தீர இங்கு வந்து அநுபவிப்பர். அவதாரத்தின் நீர்மையிலே அகப்பட்டவர்களுக்கு மற்றோரிடம் நாடுவது வேண்டாதபடியாயிருக்கும். 'வையத்துள்ளீர்' என்னாது 'வையத்து வாழ்வீர்காள்' என்பதற்குப் பல படியாகத் தாற்பரியம் உண்டு. அவை (1) கிருஷ்ணனது கடாட்சத்திற்கு ஒத்த பருவமாயிருத்தல், (2) கிருஷ்ணாவதாரத்திற்கு முன்னோ பின்னோ பிறக்காமல் சமகாலத்தில் பிறத்தல், (3) இவ்வூரை யொழிந்தவிடத்தில் பிறக்காமல் அவன் பிறந்த ஊரிலேயே பிறத்தல், (4) அவன் நித்திய

வாசம் செய்யும் ஊரிலேயே வாழ்தல், 'வேங்கடத்தைப் பதியாக வாழ்வீர்காள்' (நாச். திரு. 8.9)'' என்று சொல்லுவது போலல்லவா? இது கோயிலிலே வாழ்வது போலே காணும், (5) தாங்கள் தனியே அநுபவிக்கும் அநுபவம் ரசாநுபவமாகத் தோற்றாமையாலே, அதனை ரசமாக்கித் தருபவர்களை உட்படுத்தி 'வாழ்வீர்காள்' என அழைத்தல். அதாவது, கிருஷ்ணன் பிறந்த காலத்தில் அவ்வூரிலே பிறந்து அவனை அநுபவித்தக்க பருவம் இடைக்கன்னியர் எல்லார்க்கும் ஒத்திருக்க, பிறரை 'வாழ்வீர்காள்' என்பது - தாம் தனியே அநுபவியாமல் பிறருடன் சேர்ந்து அநுபவிக்கும் போதே அநுபவத்தின் இன்பம் தோன்றுதலால், அப்படிப்பட்ட அநுபவத்திற்குக் காரணமாக இருப்பவர்களைச் சொல்லும் கருத்தினால் என்பதாகும்.

**வையத்து வாழ்வீர்காள்** : இதர விஷயங்களில் மண்டி முடியும் நிலத்தில் வகுத்த விஷயமே அநுபவிக்கப் பெற்றவர்களன்றோ? 'பல நீ காட்டிப் படுப்பாயோ' என்றும், 'இன்னங்கெடுப்பாயோ' என்றும் உணர்ந்தவர்கள் கூப்பிடும் நிலமல்லவா? வையத்து வாழ்வீர்காள் : இந்தளத்தில் தாமரை போலே வையத்து வாழ்வீர்காள் - உழுது பயிரிடும் பூமியிலே புலம் புசிப்பதே. வானிலே போய்ச் சிறை இராதே. கிருஷ்ண குணங்கள் திருவாய்ப்பாடியில் ஆழி மூழையாய்ப் பரிமாறா நிற்க, வானில் இருப்பாகிறது - பெருமாள் காடேற எழுந்தருள திருவயோத்தியின் இருப்புப் போலவும், கிருஷ்ணன் திருவாய்ப்பாடியிலே வளர்ந்தருளா நிற்க, மதுரையில் இருப்புப் போலவும் அல்லவா? அயோத்தி பட்டது பட்டிற்றல்லவா அங்குக் கிடக்கின்றது? அங்கு மேன்மை, இங்கு, நீர்மை குணத்தைப் பற்றியதல்லவா பொருளுக்கு ஏற்றம்? அங்குள்ளாருக்கு இங்கு வர வொண்ணாதே. இங்குள்ளார்க்கு மேன்மையும் காணலாம். ஆகையினாலல்லவா "விண்ணுளாரிலும் சீரியரே" என்கிறது? 'முழுதும் வெண்ணெய்... தொல்லை இன்பத்து இறுதி கண்டாளே' (பெரு.திரு. 7.8) என்று கூறுவது? நாம் தொழும் அளவு தானே அங்கு (பரமபதத்தில்) சீல குணத்திற்கு அகப்பட்டார் மற்றொரு குணத்திற்கு அளாகாரல்லவா?

**நாமும்** : 'நாராயணனே நமக்கே பறை தருவான்' என்று உபாயத்தின் மீது பெரு நம்பிக்கை வைத்திருக்கின்ற நாமும் அஃதாவது 'அத்தலையாலே பேறு' என்றிருக்கின்ற நாமும் அவனாலே பேறாகிலும் ருசி இருந்தவிடத்தில் இருக்கவொட்டாதல்லவா? **நம்பாவைக்கு** : நம்முடைய நோன்புக்கு பிறர் அழிதற்காகச் செய்யும் அபிசாரயாகம் போலன்றி, கிருஷ்ணனும் நாமும் வாழ்வதற்குச்

11. ஆண்டாள் மேகத்தை நோக்கிப் பேசுவது.

செய்யும் நோன்பு. பயனைக் கருதிச் செய்யும் நோன்பன்றியே, கிருஷ்ணனும் கிருஷ்ண விபூதியும் உண்டாவதற்காக மேற்கொள்ளப்பெறும் நோன்பு. **செய்யும் கிரிசைகள் :** பண்ணக் கடவதாகிய செயல்கள். சேதநனாகையாலே அடையத்தக்க குறிக்கோள் பெறும் அளவும் காலட்சேபத்திற்காக இழிந்து அநுபவிக்கக் கடவதான அநுட்டானங்கள் ஆரம்பித்துத் தருபவைகளல்ல. பத்தும் பத்தாகச் செய்யவேண்டும். "பெருந்தெருவே ஊரார் இகழிலும் ஊரா தொழியேன் நான்வரா பூம் பெண்ணை மடல்" என்று மடல் எடுப்பதாகக் காட்டிவிடுவதல்ல. ஈண்டு 'செய்யும் கிரிசைகள்' என்றதில் செய்யப் பெறுபவை, விடப்படுபவை என்ற இரண்டு காரியங்களும் அடங்கும். பாற்கடலுள் பையத்துயின்ற பரமன் அடிபாடுகை, நாட்காலே நீராடுகை, ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கை காட்டுகை ஆகிய இம்மூன்றும் செய்யப்பெற வேண்டுபவை. நெய்யுண்ணல், பாலுண்ணல், கண்கட்கு மையிட்டு எழுதுதல், கூந்தலை மலரிட்டு முடித்தல், செய்யாதன செய்கை, தீக்குறளைச் சென்றோதுதல் ஆகியவை விட பெற வேண்டுபவை. இவை பின்னர் விளக்கப்பெறும். **கேளீரோ :** 'பெண்களைக் கிருஷ்ணனோடு சேரவொட்டோம் என்று இருக்கும் ஊரிலே கிருஷ்ணாநுபவத்திற்கு இத்தனைபேர் உண்டாவதே!' என்ற மகிழ்ச்சியினால் மெய்மறந்திருப்போரை துடைதட்டி எழுப்புவாரைப் போல் 'கேளீரோ' என்று தட்டி உணர்த்த வேண்டியதாயிற்று. மேய்ச்சல் தலையில்[12] அசையிடுவார் உண்டோ? இந்த நாலு நாளும் போனால் நம்மை ஒருவரையொருவர் சேரவொட்டுவார்களோ? **கேளீரோ :** கேட்டலே மிக்க பயனாக இருக்கிறபடி. அதுவே புருஷார்த்தம். சொல்லுகின்றவர்கள் தாம் ஆசாரியர்கள் என்று நினைத்துச் சொல்லுகிறார்கள் அல்லர் கேட்கின்றவர்களும் தங்கட்கு இது தெரியாது என்று கேட்கின்றார்கள் அல்லர். நாங்களும் வாய்ப்படைத்த இலாபம் பெற்று, நீங்களும் செவியடைத்த இலாபம் பெற வேண்டாவோ? மகாபாரதத்திலே இலட்சகிரந்தத்தால் அறம் பொருள் இன்பம் வீடு என்பவற்றைச் சொன்னவை **சம்பாயன பகவான்** தம் சீடனாகிய **ஜனமேஜய மகாராஜனை** நோக்கி "எது புருஷார்த்தம்?" என்று கேட்க, அவரும், "தேவரீர் பகவானுடைய திருக்குணங்களைச் சொல்ல, நான் தென்றலும் சிறு துளியும் பட்டாப்போலே குளிர செவிமடுத்துக் கேட்பதையே புருஷார்த்தமாக எண்ணினேன்" என்றார். இந்த நிகழ்ச்சியை ஈண்டு நினைப்பது.

கேட்பவர்கள் 'எது சொன்னாலும் நல்லது ஆகில் சொல்லுங்கள்'

12. மேய்ச்சல் தலை – கிருஷ்ணனோடு சேர்ந்திருக்கும் காலம்.

என்ன, இவர்கள் மேல் சொல்லுகின்றார்கள். கிருஷ்ணன் பேரைச் சொல்லிப் பாடினால் முன்பு கிருஷ்ணனை அநுபவிக்க வொட்டாமல் தடுத்த இடைக்குல முதியோர்கள் மீண்டும் ஒருவேளை தடுப்பார்களோ என்று அச்சமுற்ற ஆயர் சிறுமிகள் முதற்பாசுரத்தில் நாராயணத்துவம் சொல்லி **பரத்துவத்தில்** இழிந்தார்கள். இப்பாசுரத்தில், கிருஷ்ணாவதாரத்திற்கு மூலக்கிழங்கான **வியூகத்தில்** இழிகின்றார்கள்.

**பாற்கடலுள் பையத்துயின்ற** : பரமபதத்திலிருந்து அடியார்களை இரட்சிக்கும் பொருட்டு பயிர்த் தலையில் குடில் கட்டிப் பயிர் நோக்கும் உழவனைப் போலே திருப்பாற்கடலளவும் ஒரு பயணம் எடுத்துவிட்டு உலகைக் காக்கும் சிந்தனையிலே ஆர்த்தர்களுடைய கூக்குரலுக்குச் செவி கொடுத்துக் கொண்டு கிடக்கின்ற நிலை இது. **பையத்துயின்ற** : "வெள்ளை வெள்ளத்தின் மேல் ஒரு பாம்பை, மெத்தையாக விரித்து அதன் மேலே, கள்ள நித்திரை கொள்கின்ற மார்க்கம்" (பெரியாழ். திரு. 5.1.7) என்று சொல்லக்கடவதன்றோ? இவ்வுறக்கத்தின் உண்மை அறிந்தவர் "கள்ளம்" என்று வெளியிட்டார்கள் அல்லவா? **பைய** : "மெல்லத் துயின்றானை" என்னுமாப் போலே. ஆர்த்தர்கள் கூக்குரல் கேட்கும்படி, "ஆராலே ஆருக்கு என்ன நலிவு வருகின்றதோ" என்று அிலே மூழ்கி அசையாமல் கிடக்கின்ற நிலை. "உறங்குவான் போல் யோகநித்திரை செய்யும்" நிலை. **துயின்ற** : இவனது உறக்கம் தமோ குணத்தாலே வந்த உறக்கம் அன்று. ஆர்த்தர்களின் கூக்குரல் கேளாதபோதுதான் பிராட்டிமார் போகமும். உலகம் காத்தலில் திருவுள்ளம் பற்றினபோது பிச்சேற்றப் பண்ணும் பிராட்டிமார்களின் பேச்சும் அவனது திருச்செவியில் நுழையாது. **பரமன்** : வண்ணத்தகட்டில் அழுத்தின மாணிக்கம் போலே திருவனந் தாழ்வானின் மீது சாய்ந்தருளின புகர் பெருமை சொல்லுந்தரமன்று. **பரமன்** : வீற்றிருக்கும் நிலையினைவிட சாய்ந்தருளின் நிலையில்தான் அவனுடைய உடல் உறுப்புகளில் புகுந்து அநுபவிக்க முடியும். "கிடந்ததோர் கிடக்கை" என்றும், "கோலந்திகழக் கிடந்தாய்" என்றும் ஆழ்வார்கள் சொல்லி மகிழ்ந்தனரன்றோ? கண்வளர்ந்தருளும் போதுதான் எல்லாவற்றாலும் அதிகன் என்ற தோரணையும் பாவனையும் தலைக்காட்டும்.

**அடிபாடி** : மகரிஷிகளோடு அல்லாதாரோடு வாசியற சேஷத்துவம் சமானமாயிருப்பதாலே 'திருவடிகளைப் பாடி' என்கின்றார்கள். அவன் உறக்கம் புருஷோத்தமத்துக்குச் சூசகமானாப்போலே, இவர்களும் நாரீணா முத்தமைகளானமைக்கு

சூசகம் திருவடிகளைப் பாடுகை. அவன் சேஷித்துவத்துக்குச் சமைந்தாப்போலே. இவர்கள் சேஷத்துவத்துக்குச் சமைந்தபடி பிழைக்க வேண்டிய குழந்தை தாயின் முலையிலல்லவா வாய் வைப்பது "செவ்வடி செவ்வி திருக்காப்பு" என்று பல்லாண்டு பாடும் அடியல்லவா? 'அடிபாடி' என்பதனால் உபலட்சணமாய்த் திருமேனியின் அழகைச் சொல்லுகிறதாகவும் கொள்ளலாம்.

**உள்ளுறையில்,** பரமனடி பாடுதலாவது, என் என்னில் : "உனது, பாலேபோல சீரில் பழுத்தொழிந்தேன்" (பெரி. திருவந். 58) - 'உனது பால்போன்ற பரம போக்கியமான திருக்கல்யாண குணங்களில் ஆழ்ந்துவிட்டேன்' என்ற திருவாக்கையொட்டி 'பால்' என்பது எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களைச் சொல்வதைக் காணலாம். அவை பிரிக்க முடியாத நிலையில் இருப்பதால் கடல் போன்றதாகும். பகவத் குணக்கடலில் பரமானந்தாநுபவம் செய்து கொண்டிருக்கும் பரமன் - ஆசாரியன் அவனுடைய அடிபாடுதல் - அவருடைய திருவடிகளைப் பாடுகையும், திருவடியை அடைந்தவர்களான அந்தரங்க சீடர்களைப் பாடுகையுமாம். நம்மாழ்வாருக்குத் திருவடி இராமாநுசர், இராமாநுசருக்குத் திருவடி முதலியாண்டான் என்று அந்தரங்க சீடர்களைத் திருவடியாகச் சொல்லுவதுண்டல்லவா?

**பாடி நெய்யுண்ணோம் பாலுண்ணோம்** : இன்ப நுகர்ச்சிகளில் ஈடுபடோம். உண்டார்க்கு உண்ண வேண்டா அல்லவா? இவர்கள் உண்டார்களோ எனில், ஆம். "உண்ணா நாள் பசி யாவதொன்று இல்லை ஓவாதே 'நமோ நாராயணா' என்று எண்ணா நாளும் வேதகால மலர் கொண்டு உன பாதம் நண்ணாநாள் - அவை எனக்குப் பட்டினி நாளே (பெரியாழ்.திரு. 5.1.6) என்றும், "உண்ணும் சோறு, பருகும் நீர் தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணன்" (திருவாய் 6.7.1) என்றும், "கூறை சோறு இவை வேண்டுவதில்லை" என்றும், "வாசுதேவஸ் சர்வம்" (கீதை 7.9) என்றும் இப்படியல்லவா ஞானம் பிறந்த நிலை இருப்பது? இவர்கள் சௌகுமாரியந்தான் திருவடிகளைப் பாடுதல் நெய்யும் பாலும் குடித்தாப் போலே. குடியோம் என்னாமல் உண்ணோம் என்பது சாதிப் பேச்சு. ஆகையால்தான் நெய்யுண்டான் பாலுண்டான் என்பவை கிருஷ்ணனுக்குத் திருநாமங்கள் வழங்குவனவாயின. அன்றியும், திருவாய்ப்பாடியில் கண்ணன் பிறந்த பின்னர் நெய், பால் முதலியவற்றை ஒருவரும் கண்டறியாதாராய் பேர்மாத்திரம் காதில் கேட்டுள்ளவர்களாய், அவை உண்ணாத்தகுந்தவையோ என்பதையும் ஆராய்ந்தறிந்திலராதலால் "அவை உட்கொள்ளப்படுபவை" என்றே

கருத்தில் கொண்டு "நெய்யுண்ணோம், பாலுண்ணோம்" என்கின்றார்கள் என்று ரசோக்தியாகவும் அருளிச் செய்வர்.

**அடிபாடி நெய்யுண்ணோம்** : இந்தத் தொடரின் சொற்போக்கால் அடிபாடுவதற்கு முன்பு நெய்யும் பாலும் தாரகமாய் இருந்தனவாயினும், அடிபாடப் பெற்ற பின்னர் "எல்லாம் கண்ணன்" என்று இருக்கும் நிலைமை வாய்த்தமை தோற்றும் என்பதாகவும் கொள்ளலாம். 'நெய் உண்ணோம்' - விரகதசைக்கு அநுகுணமாக பிரணயரோஷம் (ஊடல்) தோற்றச் சொல்லுவதாகவும் கருதலாம்.

**நெய்யுண்ணோம் பாலுண்ணோம்** :[13] உடலை வளர்ப்பதற்காகவன்றோ நெய் உண்பது? முமுட்சுகளாய் ஆன்ம சீவனத்தில் ஊன்றினவர்களாய் இருப்பார்க்கு "கணைநாணில், ஓவாத் தொழில் சார்ங்கன் தொல்சீரை நன்னெஞ்சே ஓவாத ஊண் ஆக உண்" (பெரி.திருவந். 78) என்ற ஆழ்வார் வாக்குப்படி பகவத் குணங்களே இடையறாது உண்ணத்தக்கவை என்று காட்டுகிறபடி. "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்" (திருவாய் 6.7.1) என்று நம் போல்வரால் இருக்க முடியாதாகிலும் அங்ஙனம் இருக்க ஆசைப்படலாம் அன்றோ?

**நாட்காலே நீராடி** : நோன்பு நோற்றலுக்கு அங்கமாகவும், விரகதாபம் மாறுகைக்காகவும் சொல்லுகிறது. 'நாட்காலே நீராடி' என்று 'நீராடி' என்பதில் மூன்று தாற்பரியம் தெரியக்கிடக்கின்றது. அவை 1. அவன் போகார்த்தம், அவன் வந்தால் குளிக்க முடியாது. குறிக்கோள் வேறாகும். அதற்கு முன்பே தமது போக போக்கியமாகக் குளித்து, விடியற் காலையிலே நீராடுவோம், 2. அவனைப் பெறுகைக்குச் சாதனம். "ஓதி நாமம் குளித்துச் சிதன்னால் ஒளிமாமலர்ப் பாதநாளும் பணிவோம் நமக்கே நலமாகில்" என்னும் வேகம், 3. விரக்தாபம் மாறுகைக்கு கண்ணனைப் பிரிந்து வாழும்போது ஏற்படும் விரகதாபம் ஆறும்படி என்றவாறு.

**நாட்காலே நீராடி** - பிரம்ம முகூர்த்தத்தில் குளிக்கக்கடவோம். நீராடுதலைச் சொன்னது நித்திய நைமித்தியங்களான அனைத்துக் கருமங்களையும் சொன்னபடியாம். "குளித்து மூன்றனலையோம்பும் குறிக்கொளந் தண்மை தன்னை, ஒளித்திராமல்" (திருமாலை 25) என்பது காண்க. "இருமுப்பொழுதேத்தி எல்லையில்லாத தொன்னெறிக்கண் நிலைநின்ற தொண்டரான அறந்திகழும் மனத்தவர்" (பெரு.திரு. 1.7) என்று குலசேகரப் பெருமாள் அருளிச்செய்தபடியே பஞ்சகால பாராயணர்களாக இருக்க வேண்டும்படியைச் சொன்னவாறாம்.

13. கார்த்தியாயனி விரதத்தில் வெறுஞ் சோறு தவிர வேறு ஒன்றும் உண்ணவில்லை என்று பாகவதத்தில் கூறியிருப்பதற்கு ஏற்ப 'நெய்யுண்ணோம் பாலுண்ணோம்' என்று இங்குக் கூறியது என்பதாகவும் கொள்ளலாம்.

அன்றியும் சக்கரவர்த்தித் திருமகன் நாடு துறந்து காடு சென்றபின் பரதாழ்வான் 'இராமபிரானைக் காட்டுக்கு ஓட்டிய பாவிகாண் இவன்' உலக நிந்தைக்கு அஞ்சி ஒருவர் கண்ணுக்கும் இலக்காகாதபடி பொழுதுவிடியும் முன்பே சரயுநதி சென்று நீராடி வந்தாற் போலே இவளும் விரகதாபம் மாறுகைக்காக 'நோன்பு' என்று ஒரு வியாஜத்தையிட்டு ஊரார் சொல்லுக்கு அஞ்சி ஒருவராலும் காணவொண்ணாதபடி பின் மாலையில்[14] குளிக்கத் தேடுகின்றார் களன்றோ?

**மையிட்டெழுதோம் மலரிட்டு நாம் முடியோம்** : கண்ணுக்கு மையிட்டுக் கொள்ளுதலும் தலைக்கு மலர்சூடிக் கொள்ளதலும் உடல் அலங்காரத்தில் சேர்ந்தவை. "அரங்கனார்க்கு ஆட்வெய்யாதே, புறஞ்சுவர்க்கோலம் செய்து புள்கௌவக் கிடக்கின்றீரே" (திருமாலை-6) என்ற **தொண்டரடிப் பொடிகள்** கூறியவாறு "புறஞ்சுவர் கோலஞ் செய்கையாகின்ற உடல் அலங்காரத்தளவில் நில்லாமல் ஆன்மாலங்காரமாகின்ற சமம் தமாதி ஆன்ம குணங்களைச் சம்பாதித்துக் கொள்வதிலே கண்ணும் கருத்துமாய் இருப்போம்" என்கின்றார்கள்.

**மையிட்டெழுதோம்** : முதலிலேயே மைய கண்ணாளாய் இருப்பவள் இனி, அஞ்சனம் இடுவதும் மங்களார்த்தமாக அல்லவா இருப்பது? தவிர, அதுபுகர் கொடுப்பதாகவும் உள்ளது. அது தவிரக் கடவோம் என் கையாலே, "அவனுக்கு அவகாசப் பிரதானம் பண்ணக் கடவோம் அல்லோம்" என்கின்றார்கள். இவர்கள் அஞ்சனம் எழுதப்புக்கால் குறையையும் தலைக்கட்டுவான் அவனேயல்லவா? அவன் கிஞ்சித்காரத்துக்கு அவகாசப் பிரதானம் பண்ணோம். சேஷிக்குக் குறைதலைக் கட்டாதபோது சேஷித்துவம் இல்லை; அவன் நிரபேட்சணாகையாலே குறையைத் தலைக்கட்டுவதற்கு இடம் இல்லை.

**மலரிட்டு நாம் முடியோம்** : "கரும்பார் குழற் கேதை" என்றும், "வாசஞ் செய் பூங்குழலாள்" என்றுமல்லவா இருப்பது? "இனி பூவுக்குத் தான் நாற்றம் கொடுப்பதற்காக அல்லவா பூ முடிப்பது? அப்போதலர்ந்த செவ்விப் பூவினின்றும் வண்டுகள் கால்வாங்கி இவள் குழலிலே படியும்படி அல்லவா திருக்குழலின் செவ்வி இருப்பது? தான் 'மாலை சூட' என்று தொடங்கினால் குறையும் அவன் வந்து சூட்டி அலங்கரிக்குமல்லவா? அதற்கு அவனுக்கு அவகாசம் வையோம்" என்கின்றார்கள்.

14. பின்மாலை – அதிகாலை (வைணவர் பேச்சவழக்கு)

மேலும் ஐம்பொறிகளில் முக்கியமான கண்களுக்கு "காணாதார் கண்ணென்னுங் கண்ணல்ல கண்டோமே" என்றாற்போல எம்பெருமானை அநுபவித்தல் ஒழிய வேறு பேறு இல்லாததால் அப்பேறு வாய்க்கும் முன் அக்கண்களை அலங்கரிக்கக் கடவோம் அல்லோம். "நின் பாதபாதபங்கயமே தலைக் கணியாய்", "தாள் கண்டு கொண்டு என் தலை புனைந்தேனே" என்றவாறு எம்பெருமானின் இணையடிகளைப் புனைதலே தலைக்குப் பேறாதலால் அப்பேறு பெறுவதற்கு முன் "தலையை அலங்கரிக்கக் கடவோம் அல்லோம்" என்கின்றார்கள்.

**செய்யாதன செய்யோம்** : "முன்னோர் அநுட்டிக்காத கடமைகளை அநுட்டிக்கக் கடவோம் அல்லோம். புருஷகாரத்தை முன்னிட்டுக் கொண்டல்லது அவனைக் கிட்டாமை நம் முன்னோர்கள் செய்யாதவை. ஆகையால் ததீயரை முன்னிட்டுக் கொண்டல்லது அவனைக்கிட்டக் கடவோம் அல்லோம். பெண்களில் முற்பட உணர்ந்தார் ஒருவரையொருவர் எழுப்பி, எல்லாரும் கூடியல்லது கிருஷ்ணனைக் கிட்டக் கடவோம் அல்லோம்" என்கின்றார்கள். தசரதச் சக்கரவர்த்தியின் கட்டளையாலும் பெருமாள் நியமனத்தாலும் பரதாழ்வான் அரசாளுகைக்கு உரியனாயிருந்தும் அங்ஙனம் ஆளாதொழிந்தது மூத்தார் இருக்க இளையார் முடிசூடுதல் தம் முன்னோர் அநுட்டானத்திற்குச் சேராதென்னும் நினைவாலன்றோ?

**தீக்குறளை சென்றோதோம்** : 'தீக்குறளைச் சென்றோதோம்' என்று பலர் வாயிலும் வருகின்ற பாடம் தவிர்க்கத்தக்கது. இங்கு குறள் என்பது சொல்வடிவம் அன்று[15]; குறளை என்பதே சொல்வடிவம். **'குறளை'** சென்று, என்ற சந்தியில் சகரம் இரட்டிக்காது; இயல்பேயாகும். கோட்சொல், நிந்தை, வம்புப் பேச்சு, பொய்யுரை இவற்றிற்குத் தீக்குறளை என்று பெயர். தன்னிடத்தில் தீய குணங்கள் நிரம்பியிருப்பினும் தன்னை ஒரு மகா குணசாலியாகப் புகழ்ந்து கொள்ளுதல், பிறரிடம் பல நற்குணங்கள் இருந்தபோதிலும் அவற்றைவிட்டு சில குற்றங்களையே விரித்துரைத்தல், நற்றங்களைக் குற்றமாக்கிப் பேசுதல், உண்மையல்லாத பேச்சுக்களைப் பேசுதல் பிராப்த விஷயங்களைத் துதிக்க அமைந்த நாவைக் கொண்டு அப்ராப்த விஷயங்களைத் துதித்தல், காரணமில்லாமல்

15. இப்படிப் பாடம் கொண்டு பல்லாண்டுகட்கு முன் (1950களில்) 'திருக்குறளைப் படிக்க மாட்டோம்' என்று வானொலியில் காஞ்சி முனிவர் வாய் தவறி சொல்லிவிட்டதையும், அதனைச் செவிமடுத்த கருமுத்து தியாகராசச் செட்டியார் போன்ற பல திருக்குறள் அன்பர்கள் போர்க்குரல் எழுப்பிக் கண்டனம் தெரிவித்ததையும் திரு. கி.வா. ஜகந்நாதன் ஏதோ சமாதானம் செய்ததையும் ஈண்டு நினைவு கூர நேரிடுகின்றது. 1962 இல் வெளிவந்த 'திருப்பாவை – ஆழ் பொருள் விளக்கு' என்ற தம் நூலில் விளக்கம் எழுதியுள்ளார்கள். அதனையே நாமும் மேற்கொண்டு எழுதியுள்ளோம்.

பெரியோர்களைப் பழித்தல் முதலிய 'நாவகாரியங்களைத்' தவிர வேண்டுமென்று கூறியவாறு.

தோழிமார் ஒருவர்க்கொருவர் உரையாடும்போது "பேய்ப் பெண்ணே" என்றும், "நாயகப் பெண் பிள்ளாய்" என்றும் பலவகையாக விளிப்பார்களாதலால், 'அவளைக் கௌரவப் படுத்தினாள்', 'என்னை லாகவப்படுத்தினாள்' எனச் சீறி எம்பெருமானிடம் சென்று ஒருவர்மேல் ஒருவர் குற்றங்குறை கூறுதல் கூடாதென்று தம்மிஅல தாம் உறுதி கொள்ளுகின்றனர், 'தீக்குறளைச் சென்றோதோம்' என்று. ஒரு விரதத்தைக் கடைப்பிடிக்கின்றவர் தீய சொற்களைச் சொல்லுதல் தவிர வேண்டும் என்பது விதியாதலால், அவ்விதிக்கிணங்க சங்கற்பித்துக் கொள்ளுகின்றனர் என்பதாம். 'பேய்ப்பெண்ணே' என்று வையவும் கடவோம் 'நாயகப் பெண் பிள்ளாய்' என்று காலிலே விழவும் கடவோம். அவன் செவிப்படுத்தோம்". "பத்து மாதம் சுற்று மிருந்து அரக்கிகள் பண்ணின கொடூரமான செயல்களால் தன்னை நலிந்தபடி ஏகாந்தத்திலும் பெருமாளுக்கு விண்ணப்பம் செய்யாத பிராட்டியைப் போல" என்ற **ஆறாயிரப்படி** அருளிச் செயல் ஈண்டு அறியத்தக்கது.

**ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி** : தக்கவர்கள் விஷயத்திலும் ஆசாரியர் விஷயத்திலும் உரிபய காலங்களில் வெகுமானத்துடன் மிகுதியாகச் சமர்ப்பிப்பது **ஐயம்**; 'கொடுங்கள்' என்று கெஞ்சும் நிலைபிட்சுக்கள் விஷயத்தில் ஆதரத்துடன் அளவாகச் சமர்ப்பிப்பது **பிச்சை**. இவ்விரண்டையும் இயன்ற அளவு செய்யக்கடவோம் என்கின்றார்கள். **ஆந்தனையும்** என்றது ஆமளவு என்றவாறு, சக்தி உள்ள அளவும் என்றபடி. அவர்கள் கொள்ளவல்லராந்தனையும் என்றும் உரைப்பர். **கைகாட்டி** என்ற சொல் நயத்தால் எவ்வளவு கொடுத்தாலும், 'நாம் என்ன கொடுத்து விட்டோம்' என்றே நெஞ்சிலோட வேண்டும் என்பது போதரும்.

**நம்மாழ்வார்** திருவாய்மொழியில் "ஞானக்கைதா காலக் கழிவு செய்யேலே (திருவாய் 2.9.2) என்று அருளிச் செய்திருக்கையாலே ஞானோபதேசம் பண்ணுவதுதான் கைகாட்டுதல் என்பது. ஐயம் - சந்தேகம். அது உருமாறு ஞானோபதேசம் செய்வர் சிலர். விபுவான கிருஷ்ணனை அநுபவித்தல் என்பதுமாம். பிச்சையாவது வாய் திறந்து கேட்கை. அணுசொருபமானத் தியரை அநுபவித்தல். சீடர்கள் வாய் திறந்து கேட்டால் விணயங்களைச் சொல்லுவர் சிலர். ஆகவே ஐயமாந்தனையும் கை காட்டுதல், பிச்சையாந்தனையும் கை காட்டுதல் என்று இருவகை. சீடர்களின் ஐயங்களைத் தாமே தெரிந்து கொண்டு எடுத்துக் கூறும் ஆசாரியர்களும் உண்டு. சீடர்கள்

தங்களுக்குண்டான ஐயங்களைத் தாமே வாய்விட்டுச் சொல்லக் கேட்ட பின்பு சொல்லும் ஆசாரியர்களும் உண்டு. ஈண்டு இரு வகுப்பினரையும் தெரிவித்தபடி.

**உய்யுமாறு எண்ணி** : ஞானோபதேசம் பண்ணி உய்விக்கும் படியை எண்ணி - சிந்தித்து உகந்து - மகிழ்ந்து. இவ்வாறு சீடர்கள் சொல்ல வேண்டியது. **எண்ணி உகந்து** : மநோரதமே பிடித்து நித்தியா நிற்பது போலே. உன்னுடைய கல்யாண குணங்களை அநுசந்திக்கும் அநுசந்தானத்தோடு ஒக்குமோ நீ போரப் பொலியக் கொடுக்கும் பரமபதம். "மாலேபடிச் சோதி மாற்றேன் இனி" மறப்பின்மையான வேண்டுமாம் உகந்து - செய்யுங் கிரிசைகள் கேளீரோ" என்று இயைத்துப் பொருள் கொள்ளல் வேண்டும். விதி பூர்வமாகச் செய்வதுமல்லாமல் பிரீதி பூர்வமாகச் செய்தல் என்றவாறு.

ஆறு என்றது 'ஆறு' எண்ணும் இலக்கத்தைச் சொன்னதாகக் கொண்டு எம்பெருமானாருக்காகத் திருக்கச்சி நம்பிகள் தேவபெருமான் பக்கலில் பெற்று வெளியிட்டருளின ஆறுவார்த்தைகளைச் சிந்தித்து உகப்பதும் உசிதமாகின்றது. திருக்கச்சி நம்பிகள் அருளின ஆறுவார்த்தைகளாவன : (1) ஸ்ரீமந்நாராயணனே பரத்துவம், (2) சீவான்மா - பரமான்பேதம், (3) பிரபத்தியே சரியான நெறி, (4) பெரிய நம்பிகளை ஆச்ரயிப்பது, (5) தேகாவசானத்தில் முக்தி, (6) அந்திம சுமிர்தியின் அவசியமில்லாமை.

**உள்ளுறை** : "இருள் தருமா இந்த உலகத்தில் பிறந்தும் பகவதநுபவத்தைப் பெற்று வாழ்பவர்களே நாங்கள் மேற்கொண்டு ஒழுகுகின்ற (அநுட்டிக்கின்ற) பிரபத்திக்கு உறுப்பானவற்றைச் சொல்லுகின்றோம். கேளுங்கள். நாங்கள் உய்யும் வகையைச் சிந்தித்து மகிழ்ந்து பகவானையே போக்கியமாக (அநுபவப் பொருளாக)க் கொண்டு வேறு போக்கியப் பொருள்களைத் தவிர்ந்து, பகவத்கைங்கரியமாக வருணாசிரமங்களுக்குத் தக்க கருமங்களைச் செய்து கொண்டும், சாத்திரங்கள் விதித்தாலும் முன்னோர்கள் அநுட்டியாதபடியினால் ஞானபக்தி யோகங்களைக் கொள்ளாமலும், பிறர்க்கும் அவற்றை உபதேசியாமலும், தெரிந்தவரையிலும் பகவத் வைபவங்களைச் சிறிதும் கர்வமில்லாமல் பேசுவோம்" என்பதாம். மையிட்டு எழுதுதல் - ஞானயோகம். மலரிட்டு முடித்தல் - பக்தியோகம், ஐயம் - பகவத் வைபவம், பிச்சை - பாகவதவைபவம்.

## 3. நோன்பு நோற்பவர்கட்கு இசைவு தந்தவர்கட்கு வரக்கூடிய பலனைக் கூறுவது

### மூன்றாம் பாசுர விளக்கம்

"ஓங்கி உலகளந்த"

**ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி**
**நாங்கள்நம் பாவைக்குச் சாற்றிநீ ராடினால்**
**தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரிபெய்து**
**ஓங்குபெருஞ் செந்நெல் ஊடு கயலுகள**
**பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்ப**
**தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி**
**வாங்க, குடம்நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள்**
**நீங்காத செல்வம் நிறைந்தேலோர் எம்பாவாய்!**

(சொ.பொ) : ஓங்கி - (மாவலி வார்த்த கமல் நீர் கையில் விழுந்தவுடனே திரிவிக்கிரமனாய்) ஆகாயத்தளவும் உயர வளர்ந்து; உலகளுஅந்த - உலகங்களை (மூன்று அடியால்) அளந்து கொண்ட; உத்தமன் - புருடோத்தமனுடைய; பேர் - திருநாமங்களை; நாங்கள் - (இடைக்குலக் கன்னிகைகளாகிய) நாங்கள்; பாடி - (அன்புடன்) இசைபாடி; நம்பாவைக்கு - எங்களுடைய நோன்புக்கு; சாற்றி - (அங்கமென்று) சொல்லி; நீர்ஆடினால் - தீர்த்தமாடினால்; (அதன் பயனாக); நாடெல்லாம் - தேசம் முழுவதும்; தீங்குஇன்றி - (வெள்ளக்கேடும் வறட்சிக்கேடும்) ஆகிய ஒருங்கும் இல்லாதபடியாக; திங்கள் மும்மாரி பெய்து - மாதம்தோறும் மூன்று முறை மழை பொழிய; (அதனால்), ஓங்கு பெருஞ் செந்நெல் ஊடு - உயர வளர்ந்து பருத்த செந்நெல் பயிர்களின் நடுவில்; கயல உகள் - (களிப்பினால்) மீன்கள் துள்ளவும்; பூ - அழகு மிக்கு உள்ள; குவளைப் போதில் - செங்கழுநீர் மலரில்; பொறி வண்டு - மிக்க புள்ளிகளையுடைய வண்டுகள்; கண்படுப்ப - இனிது உறங்கவும்; நீங்காத செல்வம் நிறைந்து - குறையாத செல்வம் நிறையும்படி; வள்ளல் பெரும் பசுக்கள் - வள்ளல் தன்மையுடைய பெரியபசுக்கள்; புக்கு - (மாட்டுத் தொழுவத்தில்) புகுந்து; இருந்து - நிலையாயிருந்து; தேங்காது - அசையாமல்; சீர்த்த முலை - பருத்த முலைகளை; பற்றி - (இடையர்கள் இருகைகளாலும்) பிடித்து; வாங்க - வலிக்க; குடம் - குடங்களை; நிறைத்துவிடும்.

(க-து) : தாங்கள் நோன்பு நோற்பதற்கு இசைவு தந்தவர்களுக்கு வரக்கூடிய பலம் இருக்கும்படியைச் சொல்லுகின்றார்கள் - இப்பாசுரத்தில்.

**விளக்கம் : ஓங்கி உலகளந்த உத்தமன் :** முதற்பாசுரத்தில் நாராயணன் என்ற உபய விபூதி தத்துவத்தைச் சொன்னார்கள். இரண்டாவது பாசுரத்தில் 'பாற்கடலில் பையத்துயின்ற பரமன்' என்பதனால் அவதாரத்தின் பொருட்டுத் திருப்பாற்கடலில் (வியூகம்) சாய்ந்தபடி சொல்லப்பட்டது. இப்பாசுரத்தில் 'ஓங்கி உலகளந்த உத்தமன்' என்பதனால் அவதாரம் சொல்லப்பெறுகின்றது **ஓங்கி:** உலகத்தைக் காப்பாற்றும் பொருட்டு திருப்பாற்கடலில் சாய்ந்தருளின போது ஆர்த்தர் - இரட்சணம் பண்ணப் பெறாமையாலே, பனிப்பட்டுச் சாய்ந்த மூங்கில் போலே கிடந்தான். மாவலி வார்த்த நீர் கையில் பட்டவுடன் சாய்ந்த மூங்கில் ஆதித்தியனின் ஒளி பட்டவுடன் வளருமாப் போலே வளர்ந்தபடியைச் சொல்லுகிறது. வளர்ந்த கடுமையான வேகத்தையும் காட்டுகின்றது. வாமனன் கையில் எற்ற நீரும், ஓங்கி வளர்ந்த திரிவிக்கிரமன் திருவடியை நான்முகன் விளக்கிய நீரும் ஒன்றாக விழுந்தன என்றபடியாம். பிறர்காரியம் செய்யப் பெறுகையாலே வளர்ந்தபடி என்னவுமாம். "உவந்த உள்ளத்தனாய் உலகம் அளந்து" (அமலனாதி - 2) என்பது திருப்பாணாழ்வாரின் திருவாக்கு அல்லவா? அன்றியும் இரப்பு பெறுவதற்கு முன்னே வாமனனாயிருந்தவன் இரப்பு வாய்ந்த மகிழ்ச்சியாலே வளர்ந்தபடியாகவுமாம். "இந்தப் பூமியை நாராயணன் தம் திருவடியால் அளந்தார்" (புருஷசூக்தம்) என்கின்றபடியே - குணாகுண நிருபணம் பண்ணாமல் அனைத்துப் பிராணிகள் தலையிலும் திருவடிகளை வைத்தபடி 'இங்கு இவர்களுடைய தொடு உணர்வு தாரகமாக இருக்கிறதாக அல்லவா அவர் நினைத்திருப்பது? இவற்றுக்கு அபேட்சிதம் இல்லாதிருந்தாலும், உறங்குகின்ற குழந்தையை அணைத்துக்கொண்டு கிடக்கும் தாயைப்போலே, இவற்றினுடைய தொடு உணர்வுக்குத் தான் உகக்கின்றானன்றோ? தாரதம்யம் பாராமையும், அதிமானுஷ்ய சேஷ்டிதங்களும், வடிவழகும் கிருஷ்ணாவதாரத்தோடு ஒத்திருக்கையாலே, வாமனாவதாரத்தை அநுபவிக்கின்றார்கள்.

**உத்தமன்** : மாவலியை நிரசிப்பதன் காரணமாக, உலகளந்ததைத் தன் பேறாக நினைத்திருப்பதால் உத்தமன் என்பதே சிறந்த பொருள் உத்தமன் என்பதற்குக் கருத்து : **அதமா அதமன், அதமன், மத்தியமன், உத்தமன்** என்று மக்கள் நால்வகைப் பட்டிருப்பர். பிறரை நலிந்து தன் வயிறு வளர்ப்பவன் **அதமாதமன்**;

பிறரும் வாழ்ந்தால் வாழட்டும் என்றிருப்பவன் **அதமன்;** பிறரும் வாழ வேண்டும் நாமும் வாழ வேண்டும் என்றிருப்பவன் **மதியமன்;** தான் கெட்டும் பிறரை வாழ்விப்பவன் **உத்தமன்** (தானும் கெட்டுப் பிறரையும் கெடுப்பவனுடைய வகுப்பு அறிவரிது). எம்பெருமான் தன்வடிவைக் குறுகச் செய்வதும், பிறர்பாற் சென்று இரப்பதுமாகிய கேடுகளைத் தான் அடைந்தும் இந்திரன் முதலிய தேவர்களை வாழ்வித்தமைபற்றி இங்கு உத்தமனாகக் கூறப்பட்டனன் என்க. இப்போது உலகளந்த வரலாற்றை ஆயச் சிறுமிகள் கூறுவதற்குக் காரணம் யாதெனில் : "என் முடிமேல் அடிவைக்க வேண்டும்" என்று ஒருவரும் வேண்டாமலேயே, விலக்காமையைப் பற்றாசாகக் கொண்டு அனைவர் முடியிலும் அடியிட்டருளின எம்பெருமான் இன்று **இரந்து வேண்டும்** தமது காரியத்தைத் தலைக்கட்டா தொழியான் என்ற கருத்து தோன்ற என்க.

**பேர் பாடி :** எம்பெருமான் உலகம் அளந்தருளின அன்று சிலர் கழஞ்சுமண் பெற்றுக் கழித்தொழிந்தனர். சிலர் கழஞ்சுமண் இழந்து வருந்தியொழிந்தனர். இவ்வளவே அன்றி, அந்த வரலாற்றுக்குப் பலலாண்டு பாடினார் அக்காலத்தில் யாரும் இலர். அந்தக் குறைதீர ஆயச் சிறுமிகள் பாட வேண்டும் என்று பாரிக்கின்றனர். '**உத்தமன் பேர்பாடி**' இன்று இலாபாலாபம் பாராமல் அவன் பேர் பாடுகையே தங்களுக்கு உத்தேச்யம் - குறிக்கோள் - என்கின்றனர். கட்டிப் பொன் போன்றவன் அவன். பணிப்பொன் போன்றது அவனது திருநாமம். வாச்ய பூதனானவன் சத்தை உண்டாக்கும். அவனுக்கு வாசகமான திருநாமங்களல்லவா அநுபவிக்கத்தக்கவை? 'திருநாமம் சொல்லுவதற்கு அதிகாரி சம்பந்திவேண்டாவோ?' என்று **நஞ்சீயர் பட்டரைக்** கேட்டருள, அதற்கு அவர், "யோக்கியனாகில் இருந்தபடி சொல்லுகிறான். அயோக்கியனாகில் யோக்கியதை சம்பாதிக்க வேண்டா' என்று அருளிச் செய்தார். அஃதெப்படி என்ன : "மேலுள்ள நன்மைகளைத் தரக்கடவதாக விசுவசித்தவனுக்கு கீழுள்ள விரோதிகளையும் போக்கமாட்டாதோ?" என்று அருளிச் செய்தார். "கங்கையாடப் போகின்றவனுக்கு வேறொரு குழியிலே மூழ்கிப்போக வேண்டுமோ?" மாத்ருகாதகன் தனது அன்னையைக் கையால் அடித்துத் துன்புறுத்துபவன். அடிப்பதனால் கை நோகும்போது, தன்னையறியாமல் 'அம்மா' என்று சிரமபரிகாரம் செய்து கொள்வான் 'அம்மா' என்கின்ற தாய் ஆகாவிட்டாலும் அம்மா என்கின்ற பெயர் பெருமை அடைகின்றது. பகவத் விஷயத்தில் விரோதித்தாருக்கும் திருநாமம் சொல்ல பிராப்தி உண்டு. திருநாமம் எல்லா அதிகாரிகட்கும் வேண்டும். கர்மயோகம் அநுட்டிப்பவனுக்குப்

பாபத்தைத் தொலைக்கத் திருநாமம் வேண்டும். ஞான யோகத்தை அநுட்டிப்பவனுக்கு ஞான வைசித்யத்தைப் பண்ணிக் கொடுக்கும். பக்தியோக நிஷ்டனுக்கு பக்தி விருத்திக்காக வேண்டும். பிரபந்தனுக்கு தேகயாத்திரைக்கு வேண்டும. "விரோதியைப் போக்கித் திருநாமம் சொல்ல வேண்டும்" என்னும் தாமதம் பெறாதவனல்லவா இதற்கு அதிகாரி. **பேர்பாடி :** பிரீதி பூர்வகமாகப் பாடுதல். "ஆர்வத்தால் பாடாதார்" என்னுமாப்போலே.

**நாங்கள் :** வேறு பயன்களைக் கருதாமல் திருநாமம் பாடுவதையே பயனாகக் கொண்ட நாங்கள் திருநாமத்தை வாயால் சொல்லாவிடில் தரிக்கமாட்டாத நாங்கள். நெஞ்சு காவலிடுகிற ஊரிலே இது நமக்குச் சிதைப்பதே என்று தாங்களைச் சிலாகித்தபடி என்னுமாம். "பாடி நெய்யுண்ணோம்" (2) என்றவர்களின் பாட்டல்லவா? "இன்று வந்து இத்தனையும் அமுது செய்யப்பெறில், நான் - ஒன்று நூறாயிரமாக் கொடுத்துப் பின்னும் ஆளும் கொள்வன்" (நாச்.திரு. 9.7) என்று சொன்னவர்களல்லவா? என்னையும் கொடுத்து என் உடைமையும் கொடுத்து என்கின்றார்கள். **நம்பாவைக்கு :** பிராப்யருசி இருந்தவிடத்தில் இருக்கவொட்டாமல் செய்கின்ற நோன்புக்கு **பாவைக்குச் சாற்றி :** நாட்டார்க்கு 'நோன்பு' என்று பேரையிட்டு, **நீராடினால்** விரகதாபம் போகக் குளித்தால். நோன்பு என்று ஒரு வியாஜத்தையிட்டு கிருஷ்ணனோடு சேர்ந்தால் என்றுமாம். **பேர்பாடி நீராடினால் :** திருமந்திரம் சொல்லி என்றாகி, சம்பந்த ஞான பூர்வமாக கிருஷ்ணனோடு சேர்ந்தால், பலமும் பலத்தைத் தருபவனான உலகளந்தவன்படியாதல்.

**தீங்கின்றி நாடெல்லாம் :** இது தொடங்கி மேல் அடிகளினாலும் மார்கழி நீராட்டத்தினால் நாட்டுக்கு விளையும் வளம் கூறப்பெறுகின்றது. ஒருநாள் மழையும் ஒன்பது நாள் வெயிலுமாக மாதந்தோறும் மும்மாரி பெய்தால் நாட்டுக்கு நன்மை என்க. **தீங்கு இன்றி :** நோய், பஞ்சம், கள்ளர் பயம் முதலிய தீங்கொன்றுமன்றி என்றுமாம். **திங்கள் மும்மாரி பெய்து :** வெள்ளக்கேடும் வறட்சிக்கேடும் இல்லாமல் ஊறு எண்ணெய்விட்டாற்போல இருத்தல்: ஒன்பது நாள் வெயிலும் ஒருநாள் மழையுமாக இருத்தல் என்றபடியாம் "வேதமோதிய வேதியர்க்கோர் மழை, நீதி நன்னெறி மன்னவர்க்கோர் மழை, மாதர் மங்கையர் கற்பினுக்கோர் மழை, மாதம் மூன்றும் மழையெனப் பெய்யுமே" (விவேக சிந்தாமணி) என்பது நூற்கொள்கை. மூன்று நன்மைகளுக்காக மாதம் மூன்று மழை பெய்யும் என்றபடி.

**ஓங்கு பெருஞ் செந்நெல் :** குனிந்து நின்று முதலிட்டு மேலே நோக்கினால் ஒரு முதலே ஒரு செய்யை விளாக்குலை கொண்டு, அங்ஙனம் ஒரு வரம்பின்மையாலே ஆகாயத்தை வெளியமைப்பது போல் வளர்ந்திருத்தல். செந்நெற்கு இட்ட 'ஓங்கு' என்னும் அடைமொழி உயர்ச்சியையும், 'பெரு' என்னும் அடைமொழி சுற்றிலே பணைக்கையையும் கூறும். **ஊடு கயல் உகள :** நீரிலும் நிலத்திலும் கிடந்து வளர்ந்த செருக்காலே யானைக் கன்றுகள் போல் வளர்ந்த கயல்களானவை செந்நெல் வயிரத்துண்கள் போலே நிற்கையால் அவற்றினோடு உள்ளே புக்கு மேலே போக இடம் பெறாமையாலே துள்ளா நிற்கும். "பள்ளச் செருவில் கயல் உகள என்னுமாப்போல அவை நேரே சஞ்சரிக்க இயலாமல் ஒருக்கடுத்துப் பாய்ந்து உலாவும். விழுக்காடறியாமல் அகப்பட்டதைக் காட்டுவது. திருவுலகளந்தருளின சர்வேசுவரனைக் கண்ட அநுவலப்பட்டது படாநிற்கும் இக்கயல்கள்.

**சலங்கொண்டு மலர்சொரியும் மலலிகைஒண் செருந்தி**
**செண்பகங்கள் மணம்நாறும் வண்பொழிலி னூடே**
**வலங்கொண்டு கயல்ஓடி விளையாடும் நாங்கூர்.**

– பெரி.திரு., 3.9:1

என்பார் **திருமங்கையாழ்வார்**

**பூங்குவளைப் போதில் :** அழகிய குவளைப் பூவிலே. குவளைப் பூ அலர்ந்த போதிலே என்று காலபரமாகவுமாம். **பொறிவண்டு கண்படுப்ப :** மதுபானத்தாலும் அந்நோன்ய சேர்க்கையாலும் பிறந்த புகரடைய வடிவிலே தொடை கொள்ளலாம் படியிருக்கும் வண்டுகள், தன்னில் தானொன்றா மாகரத்தைப் பாரித்துக்கொண்டு புக்கு, மலர்களில் மென்மை சௌக்கியத்தாலே நஞ்சுண்டாரைப் போலே கிடந்து உறங்கி உணர்ந்து எழுந்திருக்கும்போது "என்னை எழுப்பிற்றிலை, என்னை எழுப்பிற்றிலை" என்று ஒன்றுக்கொன்று "சீறுபாறு" என்னா நிற்கும். "பள்ளிக் கமலத்திடைப்பட்ட பகுவாய் அலவன் முகம் நோக்கி, நள்ளியூடும் (பெரி.திரு. 6.7.6) என்ற கலியனின் பாசுரத்தை நினைப்பது. **ஊடு கயல் உகள - பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்ப :** குவளைப் பூவிலே, வண்டு, மதுபானம் பண்ண என்று படிந்த தசையிலே கயல் ஊடே உகள செந்நெல்லும் குவளையும் ஒக்க அசைந்த தூங்கு மெத்தையிலே உறங்கும் இராஜபுத்திரர்களைப் போல வாயில் மதுவோடே வண்டுகள் கண்படுப்ப என்றபடி. இஃது வயல்வளம். இனி ஊரின் வளம் சொல்லுகிறது.

**தேங்காதே புக்கு** : பால் வெள்ளந்தாள், கறக்கப் புகுந்தவர்கள் அஞ்சிப் பிற்காலிக்கும்படி (பின்நோக்கித் தள்ளப்பெறும்படி) அல்லவா இருப்பது? சிறிய திருவடி மாக்கடலுக்கு அஞ்சாமல் இழிந்தாற் போலே இழிய வேண்டியதாயிற்று. முத்துக் குளிப்பவர் கடலுக்கு அஞ்சாதார் போலே நனைத்தில்லம் சேறாக்குமல்லவா? (12), **இருந்து** : அசையாது நிலைபெற்றிருந்து. **சீர்த்தமுலை** : பால விம்மி விரலிட்டுச் சுற்றிப் பிடிக்க வெண்ணாமல் இரண்டு கையாலும் அணைத்துக் கறக்கும்படி கனத்திருத்தல். **பற்றி வாங்கக் குடம் நிறைக்கும்** : வலிக்கையாய், பற்றிக் கறக்கக் குடம் நிறைந்துவிடும் என்னுதல். குடம்இடாதார் இழக்கிறது பசுவின் குற்றமன்றல்லவா? இச்சையுடையார் ஈசுவரனைப் பற்றி இதயம் நிறைந்தாற்போலே ஆயிற்று இவையும்.

**வள்ளல்** : கீழே பால் பெருகும் பெருமையைச் சொல்லற்றாகில் இனி வள்ளல் தன்மையைச் சொல்லுகிறது. கிருஷ்ணனின் நிலை இப்பசுக்களுக்கும் உண்டாகியிருத்தல். ஆரேனும் இவன் கழுத்திலே ஓலைகட்டித் தூதுபோ என்றால், அவன் போவதுபோலே ஆயிற்று இவையும். சிறு பிள்ளைகளும் கட்டவும் கறக்குமாம்படித் தம்மைக் கொடுத்துக் கொண்டு நிற்றல். **பெரும் பசுக்கள்** : சத்துருக் காழ்வானைப் போலே இருத்தல். புல்லும் தண்ணீரும் தாரகமாக வளர்ந்தவையில்லாமல், கிருஷ்ணன் தொடுதலையும் தீங்குழல் ஓசையையும் தாரகமாகக் கொண்டு வளர்ந்தவை அல்லவா? "கானகம்பாடி உலாவி உலாவிக் கருஞ்சிறுக்கன் குழல் ஊதினபோது" (பெரியாழ்.திரு. 3.6.4) அவன் கணிசியாது நடக்க, தேவமாதர்கள் வெள்கிமயங்கி ஆடல் பாடல் மறந்தார்கள். அவன் குழலூத இவர்கள் (இடைச்சிறுமிகள்) பாட்டு மறந்தார்கள். "சிறுவிரல்கள் தடவிப் பரிமாற" (மேலது 3.6.8) இவர்களுக்குச் சிறுவிரலிலே கண் சென்றபடி **செய்யவாய் கொப்பளிப்ப** : சௌகுமார்யத்தாலே திருப்பவளம் கொப்பளிப்ப. **குறுவியர்ப்புரவம் கூடலிப்ப** : வேர்த்துப் புருவம் வளைய. **கோந்தன் குழல் கொடுதீன போது** : பசுக்கள் மேய்ந்து அவற்றின் வயிறு நிறைந்து மகிழ்ச்சியாலே தான் குழல் ஊதி நிற்கும்படி ஆயிற்று. **நீங்காத செல்வம் நிறைந்து** : அழிவில்லாத சம்பத்து நிரவதிகமாம்படி. சேதநருடைய புண்ணிய பாபநுரூபமாகப் படிவிடும் சர்வேசுவரன் அடியாக வந்த சம்பத்தாகில் அல்லவா அளவுபட்டிருப்பது? கண்ணன் கருணையால் வளர்ந்த சம்பத் தாகையாலே ஊற்று உடைத்தாகி இருக்குமல்லவா இது? ஆகையாலே நீங்காத செல்வம் ஆகிறது. திருமந்திரத்தை நினைப்பாருடைய பெருமையைக் கூறுவதாகக் கொள்வர் இப்பாசுரத்தை.

**உள்ளுறை :** பயன் கருதாத நாங்கள் திருமந்திரத்தைக் கூறுதலால் நாடு முழுவதும் தேகாபிமானம் முதலிய குற்றம் நீங்கி, அநந்யார்க சேஷத்துவம், அநந்ய சரணத்துவம், அநந்ய போக்கியத்துவம் ஆகிய மூன்று தன்மைகளும் உண்டாகி, ஓர் ஊருக்கு ஒருவரே போதும் என்னும்படி இருக்கிற ஞானவான்களைச் சேர்ந்து ஆன்மவர்க்கங்களின் இதயத் தாமரையில் ஸ்ரீமந் நாராயணன் பிராட்டியோடும் இனிதுவந்து சேர்ந்து சுகமாகக் கண்வளர்வான். உறுதியான மனத்துடன் தம்மைப் பிரார்த்திக்கும் சீடருக்குப் பரிபூர்ணமான ஞானத்தைக் கொடுத்துப் பகவத் குணங்களை அநுபவிப்பித்துப் புஷ்டராக்கும் ஆசாரிய சம்ருத்தி உண்டாகும் என்பதாம்.

# 4. மழைக் கடவுளுக்கு இடப்படும் கட்டளை

## நான்காம் பாசுர விளக்கம்

### "ஆழிமழைக் கண்ணா"

**ஆழி மழைக்கண்ணா ஒன்றுநீ கைகரவேல்**
**ஆழியுள் புக்கு முகந்துகொடு ஆர்த்தேறி**
**ஊழி முதல்வன் உருவம்போல் மெய்கறுத்துப்**
**பாழியந் தோளுடைப் பத்மநா பன்கையில்**
**ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நிற்திர்ந்து**
**தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழைபோல்**
**வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்**
**மார்கழிநீ ராட மகிழ்ந்தேலோர் எம்பாவாய்**

(சொ.பொ) ஆழி - மாக்கடல்போல் கம்பீரமாயிருக்கின்ற; மழைக்கண்ணா - மழைக்கு நிர்வாககனே; நீ - நீ ஒன்றும் கைகரவேல் - சிறிதும் (மழை பொழியாமல்) ஒளிக்காதே; (நீ செய்ய வேண்டிய பணி என்னவென்றால்) ஆழியில் புக்கு - கடலினுள் புகுந்து; முகந்து கொடு - அங்குள்ள நீரை முகந்துகொண்டு; ஆர்த்து - பெரு முழக்கமிட்டு; ஏறி - ஆகாயமெங்கும் பரவிநின்று; ஊழி முதல்வன் - காலம் முதலிய சகல திரவியங்களுக்கும் காரணபூதனான; உருவம்போல - (எம்பெருமானின்) திருமேனிபோல்; மெய்கறுத்து - உடம்பு கறுத்துத்தோன்றி; பாழியும் தோளுடை பத்மநாபன் கையில் - பெருமையும் அழகும் பொருந்திய தோள்களையுடையவனும் நாபிக்கமலமுடைவனுமான பெருமானுடைய திருக்கையில்; ஆழிபோல மின்னி - (வலக்கையிலுள்ள திருவாழியாழ்வானைப் போடில் ஒளி மல்கி; வலம்புரிபோல நின்று அதிர்ந்து - இடகையிலுள்ள பாஞ்சசன்னி யாழ்வானைப் போல நிலை நின்று முழங்கி; சார்ங்கம் உதைத்த சரமழைபோல - சார்ங்கத்தாலே தள்ளப்பெற்ற அம்பு மழை போல்; வாழ - உலகத்தார் அனைவரும் நல்வாழ்வு பெரும்படியாகவும்; நாங்களும் - (கண்ணபிரானுடன் கலவிக்கு நோன்பு நோக்கின்ற) இடைச்சிறுமிகளாகிய நாங்களும்; மகிழ்ந்து - களிப்புடனே; மார்கழி நீராட - மார்கழி நீராட்டம் செய்யும்படியாகவும்; உலகினில் - இவ்வுலகத்தில்; தாழாதே - தாமதம் செய்யாமல்; பெய்திடாய் - மழைபொழியக் கடவை.

**(க-து) :** பகவானுக்கு அடிமைப்பட்ட பாகவதர்கட்கு மற்றைத் தேவர்கள் அடிமை செய்வார்கள் என்பது சாத்திரசித்தம். ஆகையாலே

மழைக்கு அதிதெய்வமான வருணன் பரமபாகவதைகளான இவர்கள் இருக்குமிடத்திற்கு வந்து 'நான் இவ்விடத்திற்குச் செய்யவேண்டிய அடிமையை நியமிக்க வேண்டும்' என்று விண்ணப்பிக்க, சிறுமிகள் அவன் செய்ய வேண்டியபடியை 'இன்னபடியும் இன்னபடியும்' என்று கையோலை[16] செய்து கொடுக்கிறார்கள் - இத்திருப்பாசுரத்தால்.

**விளக்கம் :** கிருட்டிணன் கோகுலப் பெண்களுக்குக் கையாளாய் இருப்பதைக் காண்கின்றார்கள் இதர தேவதைகள். அவர்களுக்கும் தாமும் இப்பெண்களுக்குச் சிறிதாவது உதவி சொரூபஇலாபம் பெற வேண்டும் என்று நினைப்பது இயல்பு. ஆகவே மழைக்கடவுள் பகவானிடத்து பக்தைகளாக இருக்கும் இவர்கட்குத் தன்னால் கூடிய உதவிகளைச் செய்யும் விருப்பத்துடன் இவர்கள் முன்வந்து நின்று தன்னை அறிமுகப்படுத்திக்கொண்டு இவர்தம் கட்டளையை எதிர்பார்த்துக் கொண்டு நிற்கின்றான். இந்த உலக நடைமுறையை **திருமழிசைபிரானின்** "திறம்பேல்மின்" (68) என்ற நான்முகன் திருவந்தாதியில் அருளிச் செய்யப் பெற்றிருப்பதைக் காணலாம். யமனுடைய தூதர்கள் பாசங்களைக் கைக்கொண்ட தம் கடமைகளைச் செலுத்தப் புறப்படும்போது யமன் அவர்களிடம் சொன்னது : "தூதுவர்களே நீங்கள் பாகவதர்களிடத்தில் சிறிதும் அதிகாரம் செலுத்த வேண்டா. அவர்கள் அருகில் நீங்கள் செல்லக் கூடாது. ஒருகால் அவர்கள் நேர்பட்டால் வணங்கி வலஞ்செய்து பரம சாதுவராய் விலகுங்கள்" என்பது. இதனையொட்டி இடைப்பெண்கள் மழைக்கடவுளுக்கு இடும் கட்டளை இது.

**ஆழிமழைக் கண்ணா :** கம்பீர சுபாவத்தையுடையவனாய் மழைக்கு நிர்வாககனானவனே. ஆழி - சமுத்திரம். அதனால் நினைப்பது - காம்பீர்யத்தையும் இடம் உடைமையையுமாய் சர்வேசுவரன் தன் காரியம் செய்வதற்கு அளவுடையவன் இவன் என்று திருவுள்ளத்திலே தோற்றி நியமிக்கும்படி பிறந்தவனன்றோ நீ. ஆழி என்பது வட்டமாய் உள்ளது. அதனால் நினைப்பது - மண்டலத்தையுடையவாய், ஒரோவிடங்களில் சுழித்துப் பெய்கையுமாய் இருப்பதால் மண்டலவர்ஷத்துக்கு நிர்வாககனானவன் என்றுமாம்.

**ஆழிமழைக் கண்ணா :** மழைக்குத் திருஷ்டியாய் நிர்வகிக்கு பவனாகையாலே" மழைக்கண்ணன் என்று பெயரிட்டு அழைக்கின்றனர். இப்பெண்கள் பாலைகளாகையாலே இவன் பேர்சொல்ல அறியார்களாதலால், இவன் மேற்கொண்ட தொழிலை இட்டே "மழைக்கண்ணா" என்கின்றார்கள். இவர்களை எவரை

16. கையோலை – நினைவுச்சீட்டு (Memo)

அழைத்தாலும் "கண்ணா" என்றில்லாமல் அழையார்கள் கிருட்டிணனோடு கொண்ட வாசனையாலே. படைத்தல், அழித்தல் காரியங்களை நான்முகன் உருத்திரன் தலையிலே போகவிட்டு உன் நீர்மைக்குப் பொருந்த எல்லாரையும் குளிர நோக்கிக் காத்தல் செயலைத்தான் நடத்துமாப்போலே "அடிபிடி" என்று நாட்டோரைக் கட்டுவது விடுவதாகின்ற செயல்களை யமன் போன்றவர்களின் தலையிலே ஏறிட்டுச் 'சகத்தை ஈரக்கையால் தடவி நோக்க வல்லவன்' என்று ஈசுவரனால் மதிக்கப் பெற்றவன் அல்லையோ நீ? இதனால் நாட்டார் சிறுமை பாராதே உன் பெருமைக்கு ஈடாகப் பொழிய வேண்டும் என்னுதல். புண்ணியம் பண்ணினாரிருந்த இடத்தில் பொழிந்தும், பாவம் பண்ணினாரிடத்தில் பொழியாமையும் போவதான நியதி ஒன்று உண்டல்லவா? எங்கள் பாக்கியத்தை நினைத்துப் புசிக்கும் நாடாகையாலே நீ அங்ஙனம் சில தேசத்தில் பெய்யாமல் நீரை அடக்கிக்கொண்டு இருத்தலாகாது. "மழைக்கடவுளே, பெண்கள் நோற்றபடி என் மழை பெய்தபடி என் என்று அனைவரும் தலை துலுக்கிக் கொண்டோடும்படி பொழிய வேண்டும்" என்று வேண்டுகின்றார்கள்.

**ஒன்று நீ கை கரவேல்** : உன்னுடைய வள்ளன்மையில் ஒன்றும் மாறாதபடி தோற்ற வேண்டும். "கை" என்பது - கொடை, கரக்கை - மாறுகை. அர்த்திகள், வாரி வழங்குபவனை "கை பெரியன்" என்று சொல்லுகையாலே, உன் கொடையில் ஒன்றும் வஞ்சியாது ஒழிய வேண்டும். குற்றம் செய்யாதவர் ஒருவரும் இலராதலால், பாபமே உபாகாரமாக இரட்சிக்கும் எங்கள் படியைப் பார்த்து எங்கும் ஒக்கப்பொழிய வேண்டும்.

**ஆழியுள்புக்கு** : கண்டநீர் நிலைகள், மாக்கடலின் முதற்பகுதி, நடுக்கடல் கரைப்பகுதி முதலிய பகுதிகளைத் தவிர்த்து நடுக்கடலில் சென்று இழிந்து, **முகந்து கொடு** : தரையின் மணல் தெரியும்படி கடல்நீர் முழுவதையம் முகந்துகொண்டு. **ஆர்த்து** : நாடு முழுவதும் மின்னல். வானவில் இடி கண்டும் கேட்டும் வாழும்படி பெரிய முழக்கத்தோடு வந்து தோற்ற வேண்டும். முகம் காட்டாமல் ஈசுவரனைப்போல வரக்கூடாது. தாய் தந்தையர் அரவணைப்பை விட்டு வெளியேறி அறச்சாலையில் பட்டினி கிடக்கும் நடத்தை கெட்ட பிள்ளைகட்கு இரங்கி அன்னம் தருதல் போலவும் வரக்கூடாது. கடல் கடந்து இலங்கை சென்று பிராட்டியைக் கண்டு தொழுத திருவடி மகிழ்ச்சிப் பெருக்காலே ஆர்த்துக் கொண்டு வந்ததைப் போல வர வேண்டும். **ஏறி** : ஆகாய முழுவதும் இடம் அடையும்படி உங்கள் வடிவைப் பரப்பிக் கொண்டு "விண்ணில மேலாப்பு

விரித்தாற் போல் மேகங்காள்" (நாச்.திரு. 8.1) என்றும், "வான் கொண்டு கிளர்ந்தெழுந்த மாமுகில்காள்" (8.5) என்றும், "மதயானை போலெழுந்த மாமுகில்காள்" (8.9) என்றும் சொல்லுகிறபடியே பாரித்து வரவேண்டும். கர்ப்பிணிகள் சுரமேறுமாப்போலே மெல்லமெல்ல ஏறிவரவேண்டும்.

**ஊழி முதல்வன் உருவம்போல் மெய்கறுத்து** : ஜகத் காரண பூதனானவனுடைய வடிவுபோல இருக்கவேண்டும். இதன் கருத்து: நெடுநாள் தன் பக்கலிலே மயங்கிக் கிடந்த ஜகத்தையுண்டாக்குவதாக சங்கல்பித்தவாறே பண்டு போலல்லாமல் கருவடைந்த பயிர் போலே நிறத்திலே உருவதொரு வேறுபாடு உண்டு. அதனை நினைக்கின்றார்கள். இவர்கள் புண்ணியபாவாநு குணமாக அல்லாமல், தன்னுடைய கேவல கிருபையாலே இவற்றிற்கு உபகரணங்களைக் கொடுத்து, "நாமம் இவர்களுமாய்க் கலக்க வேண்டும்" என்று திருவுள்ளத்தில் நினைக்கையாலே தன் பேறாக இவற்றை உண்டாக்கும்போது அவன் திருநிறம் புகர் பெற்றிருக்கும் - படைப்பில். ஆகவே எல்லாப் பொருள்களையும் படைத்தவனுடைய வடிவு உங்களுக்கு உண்டாக வேண்டும். இக்கருத்தில் ஈடுபட்ட ஆழ்வார்கள் "மூந்நீர் ஞாலம் படைத்த எம்முகில் வண்ணனே" (திருவாய் 3.2.1) என்றும், "பாமரு மூவுலகம் படைத்த" (மேலது 7.6.1) என்றும் குணமாகக் கொண்டாடினார்கள்.

**உருவம்போல் மெய் கறுத்து** : அவன் அகவாயில் தண்ணளி (நீர்மை) உங்களால் உண்டாக்க வெண்ணாதல்லவா? பொழிந்தால் உடனே வெளுத்துப் போவன மேகங்கள். அன்றியும் இவற்றின் அகவாயும் நீரன்றோ என்னில் : அவனுடைய நீர்மையைப் பார்த்தால் "இது நெருப்பு" என்னலாம்படியன்றோ இருப்பது? **உருவம்போல் மெய் கருத்து** : என்ற சொல்நயத்தால் அவ்வெம்பெருமானது திருமேனியின் நிறத்தை மாத்திரம் ஒரு புடை ஏறிட்டுக் கொள்ளலாமேயன்றி, அவனது அகவாயில் நீர்மை எவ்வகையாலும் உங்களால் ஏறிட்டுக் கொள்ளல் அரிது என்னும் கருத்துத் தோன்றும் இங்கு. இங்கு, "நாச்சியார் விழி விழிக்க வொண்ணாது என்றாப் போலே" என்ற **ஆறாயிரப்படி** அருளிச் செயல் **(அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்)** நோக்கத்தக்கது.[17]

17. இந்த வாக்கியத்தின் பொருள் வருமாறு : திருவரங்கம் பெரிய கோமிலில் சிறிய திருவத்யயநோத்ஸவத்தில் கடை நாள் இரவு அரங்கநாதன் நாச்சியார் திருக்கோலம் பூண்டு சேவை சாதித்தருள, பட்டர் சேவித்துப் பெருமானை நோக்கி, "நாச்சியார் வேடத்தை ஏறிட்டுக் கொண்டனையேயன்றி அவள் போல விழி விழிக்க உன்னால் ஆகாதே" என்று உரைத்தருளினார் என்ற ஐதிகத்தை உளப்படுத்தியவாறு.

**பாழி அம்தோள் :** பாழி - இடமுடைமை என்னுதல். வலி என்னுதல். உபய விபூதி தோள் நிழலில் ஒதுங்கினாலும், ஒதுங்கின இரட்சயவர்க்கம் அளவுபட்டு, ஆள் கருங்கி நிழல் பெருத்திருத்தல். **அம்தோள் :** அழகிய தோள், நோக்காதே படுகுலையக்கிலும் விடப்போகாத தோள், சுந்தரத் தோளுடையான் அல்லவா? அன்றியும், குழைச்சரக்கேயாகிலும்[18] விடவொண்ணாத போக்கியதை மிக்கிரத்தல், இரட்சகமுமாய் அதுதானே போக்கியமுமாயிருத்தல்.

**பாழி அம்தோளுடைய பற்பநாபன் :** பிள்ளைகளைத் தொட்டிலிலே வளர்த்து, புற்பாயிட்டுப் பூரித்து[19] ஆயுதங்கொண்டு நோக்கியிருப்பாரைப் போலே, திருநாபி கமலத்திலே வியஸ்டி சிருஷ்டிக்கு (Secondary Creation) காரணபூதனான நான்முகனைப் பெற்றுத் தன் திருத்தோள்களாலே காத்துக் கொண்டிருக்கின்றவன்.

**பற்பநாபன் கையில் ஆழிபோல் மின்னி :** சிருஷ்டிக்கு[20] முதலான நான்முகனைச் சிருஷ்டித்த திருநாபிகமலத்தை யுடையவனான என்பெருமான் கையில் திருவாழியாழ்வானோடு மின்ன வேண்டும்[21] **பற்பநாபன் :** "கொப்பூழில் எழுகமலப் பூவழகர்" (நாச்.திரு. *11.2*) என்று தான் தோற்றிருக்கும் துறை. "பற்பநாபா ஓ" என்று நம்மாழ்வாரைக் கூப்பிடப் பண்ணிற்று அல்லவா?

**வலம்புரிபோல் நின்றதிர்ந்து :** பாரதப்போரில் பாஞ்ச சன்னியத் தொனிபோலே இருக்க வேண்டும். அந்தச் சங்கத்தொனி அநுகூலர் வாழவும் பிரதிகூலர் முடியவும் ஆக வேண்டும். **வலம்புரிபோல் :** "சுடராழியும் பல்லாண்டு" (பல்லாண்டு-1) என்னா, "அப்பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே" (மேலது) என்று கூறுபவர்களல்லவா? "பூங்கொள் திருமுகத்து மடுத்தூதய சங்கொலியும்" என்று செவிமடத்துக் கிடக்கமல்லவா? "உண்பது சொல்லில்" (நாச்.திரு.7.8) ஒண்ணாது, மாறாதே நின்று அதிர வேண்டும். **நின்றதிர்ந்து :** பாரதப்போரில் போலே ஒருக்கால் அதிர்ந்துவிடவொண்ணாது, எதிரிகள் நெஞ்சு பிளக்கும்படி ஒலிக்க வொண்ணாது. நாங்கள் வாழும்படி நின்று முழங்க வேண்டும்.

18. குழைச்சரக்கு – சாரமில்லாத பொருள்
19. பதும நாபனின் நாபிக்கமலத்தில் முதலில் தோன்றின நான்முகனுக்கு நாபிக் கமலத்திலுள்ள கர்ணிகையே தொட்டில்: கேசரங்களே புல்பாய். மகன் பிறந்தான் எனக் கேட்டவுடனே பிதாவுக்கு வரும் மகிழ்ச்சி விஞ்சியிருந்தும் அதனை வெளிக்காட்டுவதில்லை. ஆனால் அகம்படியத் தொண்டு செய்பவர்கள் மகிழ்ச்சியை வெளிக்காட்டி ஆரவாரிப்பார்கள். (அகம்படியர் – அந்தரங்கர்; அகம்படியத் தொண்டு – அந்தரங்கத் தொண்டு).
20. இது சமஸ்டி சிருஷ்டி (Primary Creation). எம்பெருமான் தானே உலகைப் படைத்தல் இச்சிருஷ்டி.
21. அகம்படியத் தொண்டு பூண்டவனாதலால் திருவாழியாழ்வான் மின்னுகின்றான்.

**தாழாதே** : மித்திரர்கள் குறையிரந்தால், சக்கரவர்த்தித் திருமகனைப் போல் தாமதமின்றிக் கவனிக்க வேண்டும். **சார்ங்கம் உதைத்த சரமழை போல்** : இரைபெறாத பாம்பு போலே இலக்குகாணாமையாலே வாளா கிடக்கும் சார்ங்கம். சக்கரவர்த்தித் திருமகன் கடைக்கணித்தால் சரமழை பண்ணாநிற்கும். அவராலும் மீட்க முடியாது. அகம்படியார் சினந்தால் அசுரனாலும் அடக்க முடியாதல்லவா? "சார்ங்கமென்னும் வில்லாண்டான்" என்பது ஆழ்வார் வாக்கல்லவா? **சரமழை** - அம்புமாரி. இராக்கதசேனையின் மீது இராமபிரான் சரமாரி பெய்தார் என்பது போல.

**வாழ உலகினில் பெய்திடாய்** : அம்புமாரியால் அரக்கர் சாதி அடங்க முடிந்தது. அநுகூலர் பிரதிகூலர் என்ற வேறுபாடு இல்லாமல் உலகம் முழுவதும் உய்வதற்காக மழை பெய்ய வேண்டும். "உலகம் என்பது உயர்ந்தோர்மாட்டே" என்பது தமிழர் வழக்காதலால், உயர்ந்தோரை வாழச் செய்தருள வேண்டும் "நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை" என்பது பாட்டியின் வாக்கு அல்லவா?

"அழகிது. ஈசுவரன் ஆணையாலே நானே மேற்கொண்ட காரியமல்லவா இது? நீங்கள் இப்போது வேண்டுவது என்ன?" என்று மழைக்கடவுள் வினவ, **"நாங்களும் மார்கழி நீராட"** என்கின்றார்கள், நாங்களும் கிருட்டிணனும் சேர்ந்து தீர்த்த மாடல் உனக்குக் கிடைக்கும் பேறு அல்லவா? நாங்கள் உன் வடிவைக் கண்டு, உன் தொனியைக் கேட்டு, எங்களுடைய தாபத்தை ஆற்றி மிகவும் ஆர்வத்துடன் மார்கழி நீராடக் கடவோம்.

**உள்ளுறை** : பகவானது குணங்களாகின்ற மாக்கடலை நன்றாக அநுபவித்த, ஆசாரியப் பதவியைக் கைக் கொண்டு, எம்பெருமானது காருண்யத்தை அநுபவிப்பதனாலும், எம்பெருமானை நேராக உணர்ந்ததனாலும், திருமேனியில் வேறுபாட்டையும் காந்தியையும் அடைந்து எம்பெருமானது திருவருளை நன்றாக அறிந்து **முதலாழ்வார்கள், எம்பெருமானார்** போன்ற ஆசாரியரை நோக்கி, 'எல்லாரும் அறியும்படி பிரணவத்தின் பொருளைச் சொல்ல, அதன் மூலமாக எம்பெருமானது காருண்யத்தை எல்லாரும் அறிந்து உய்விக்கும்படி வெளியிட வேண்டும்' என்று பிரார்த்திப்பதாக அமைந்துள்ளது இப்பாசுரத்திற்கான உள்ளுறையாகும்.

## 5. 'பாவங்களைப் பற்றி அஞ்ச வேண்டாம்' எனல்

### ஐந்தாம் பாசுர விளக்கம்

"மாயனை"

**மாயனை மன்னு வடமுதரை மைந்தனைத்**
**தூய பெருநீர் யமுனைத் துறைவனை**
**ஆயர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கைத்**
**தாயைக் குடல்விளக்கம் செய்ததா மோதரனைத்**
**தூயோமாய் வந்துநாம தூமலர்த்தூவித் தொழுது**
**வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கப்**
**போய பிழையும் புகுதருவான் நின்றனவும்**
**தீயினில் தூசாகும் செப்பேலோர் எம்பாவாய்**

(சொ.பொ): மாயனை - ஆச்சாயமான செயல்களையுடையவனும்; மன்னு - (பகவத் சம்பந்தம்) நித்தியமாகப் பெற்றுள்ள; வடமதுரை மைந்தனை - வடமதுரைக்குத் தலைவனும்; தூயபெருநீர் - பரிசுத்தமான ஆழம் மிக்க நீரையுடைய; யமுனைத் துறைவனை - யமுனை நதியின் துறையையுடையவனும்; ஆயர் குலத்தினில் - இடைக்குலத்தில்; தோன்றும் - விளங்காநின்றுள்ள; அணிவிளக்கை - பிரகாசமாக விளக்கைப் போன்றவனும்; தாயை - தேவகிப் பிராட்டியினுடைய; குடல் - வயிற்றை; விளக்கம் செய்த - மேன்மையுண்டாக்கினவனுமான; தாமோதரனை - கண்ணிக் குறுங்கயின்றால் கட்டுண்ட எம்பெருமானை; நாம் - (அடிச்சியோமாகி) நாங்கள்; தூயோமாய் - பரிசுத்தம் உடையவர்களாய்; வந்து - கிட்டி; தூமலர்கள் - நல்லமலர்களை; தூய் - தூவி; தொழுது - வணங்கி; வாயினாற்பாடி - வாயினால் தோத்திரம் செய்து; மனத்தினால் சிந்திக்க - நெஞ்சாரத் தியானம் பண்ண; (அதன்பிறகு); போயபிழையும் - அவன்சேஷி, நாம் சேஷபூதர் என்ற ஞானம் பிறப்பதற்கு முன்பு உண்டான பாவங்களும்; புகுதருவான் நின்றனவும் - பின்பு தன்னை அறியாமல் வருகின்ற பாவங்களும்; தீயினில் - நெருப்பிலிட்ட; தூசாகும் - பஞ்சு போல் உருமாய்ந்து போகும்; செப்பு - (ஆகையினால் அவனுடைய திருநாமங்களை) அநுசந்திப்பீர்களாக.

(க-து) : ஆயமங்கையரில் ஒருத்தி, "நாம் இப்படியே கனக்கப் பாரித்துக் கொண்டு நோன்பிலே இழியா நின்றால் நம்முடைய விருப்பம் நிறைவேறும் என்று உறுதியாகக் கொள்வது எதனால்? நாம் இதுகாறும் செய்த பாவங்கள் தடைவெய்யாவோ?" என்று சங்கிக்க, அவர்களிலே வேதாந்த ஞானமுடையாள் ஒருத்தி, "நாம் நம்முடைய பாவங்களையெல்லாம் போக்கிக் கொண்டு இதிலே இழிதல் என்பது சாத்தியம் இல்லை, நாம் நோன்பை அநுட்டித்துப் பகவானை முக்கரணங்களாலும் கொண்டாடினால், சேர்ப்பால் போக ரூபமாகப் பருகுபவனுக்குத் தன்னடைவே பித்தம் போமாப் போலே இவை தன்னடைவே விட்டோடிப்போம். ஆகவே, நாம் பாவங்களைப் பார்த்து அஞ்சவேண்டியதில்லை" என்பதாக உணர்த்துகின்றாள் இப்பாசுரத்தில்.

**விளக்கம் : மாயனை :** மாயன் ஆச்சரிய பூதன். பரமபதத்திலே அயர்வறும் அமரர்கட்கு அதிபதியாய் இருந்துகொண்டு எண்ணற்ற கல்யாண குணங்களுடனும் ஐசுவர்யங்களுடனும் இருக்கும் இருப்பு வாசாமகோசரமாய் (சொல்லால் கூறவொண்ணாநிலையில்) இருப்பதை நினைந்து 'மாயன்' என்கிறது. இத்தகையவன் திருவாய்ப்பாடியில் கண்ணனாக அவதரித்துக் கோவலர்க்கும் கோக்களுக்கு எளியனாய் வெண்ணெய் களவாடுவது, மங்கையர்களைக் களவு காண்பது போன்ற ஆச்சரிய செயல்களின் அளவின்மையை நினைந்து "மாயன்" என்று சொன்னபடியாம். இவ்விடத்தில் "சூட்டு நன்மாலைகள்" (திருவிருத் 21) என்ற பாசுரத்தில் "ஓர் மாயையினால் ஈட்டிய வெண்ணெய் தொடு உண்ணப் போந்து, அடல் ஆயர்தம் கொம்பினுக்கு இமில் ஏறு வல்கூன் கோட்டிடை ஆடினை கூத்து" என்பதால் வெண்ணெய் உண்டதையும் நப்பின்னைப் பிராட்டியை மணந்ததையும் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

**மாயனை :** மாயமாவது ஆச்சரியம். ஆச்சரியம் செய்பவனுக்கு மாயன் என்று பெயர். கிருத்திரிமம் செய்பவனுக்கும் மாயன் என்ற பெயரும் உண்டு. கிரத்திரிமம் செய்வதைப் பித்தலாடகம் செய்வதாக உலகம் வழங்குகின்றது. பித்தலம், ஆடகம் என்ற இரண்டு சொற்கள் சேர்ந்து பித்தலாடகம் (பித்தலாட்டம் - உலகவழக்கு) ஆகிறது. பித்தலம் என்பது பித்தளை. ஆடகமாவது (ஹாடகம்) பொன். பித்தளையைப் பொன்னாகக் காட்டுவது பித்தலாடகம். பொன்னைக் காட்டிலும் எத்தனையோ மடங்கு கீழான பித்தளைகளைப் பொன்னாகக் காட்டுவது வெறும் கிருத்திரிமம் ஆகும்.

**மன்னு வடமதுரை மைந்தனை :** திருவடமதுரையில் சித்தாசிரமத்தில் வாமனனாய்த்தவம் புரிந்தமையும், சத்துருக்கனாழ்வான் படையறுத்துத் தனக்குப் படைவீடாகப் பெற்று நெடுநாளாக அரசாண்டமையாலும் இவ்வகையாலே மதுரைக்குப் பகவத் சம்பந்தம் நித்தியமாய் இருக்கும் தன்மை பற்றி "மன்னு" என்ற அடைமொழி மதுரைக்குக் கொடுக்கப் பெற்றுள்ளது.

**வடமதுரை** - "மல்லைமூதூர் வடமதுரை" (திருவாய் 9.1.6) என்று நம்மாழ்வார் மங்களாசாசனம் செய்த திவ்வியதேசம். அங்ஙனமே மாமுனிவர்களும் ஈடுபட்ட ஊர். பரமபதத்தைவிட மிகு புகழ் பெற்ற ஊர். பரமபதம் - கலங்காப் பெருநகர மாகையாலே கலங்காதிருக்கிறது அங்கு. வடமதுரை - கலங்கம் தேசத்திலே கலங்காதிருப்பதல்லவா இந்த ஊர்? "அங்கு வைத்து இங்குப் பிறந்த" ஊர் அல்லவா?

**மைந்தன் :** மிடுக்கையுடையவன் மைந்து - மிடுக்கு. மைந்தன் என்பதற்கு மிடுக்கன், பிள்ளை, இளமை மிக்கவன், இராஜன் என்ற நான்கு பொருள் உண்டு. "வடமதுரையார் மன்னன்" (நாச்.திரு. 7.3) என்பது ஆண்டாள் வாக்கு. "தந்தைகால் விலங்குஅற, வந்துதோன்றிய தோன்றல்" (பெரி.திரு. 8.5.1) "தந்தை காலில் பெருவிலங்கு தாளவிழ நள்ளிருட் கண் வந்த எந்தை" (மேலது 7.5.1) "தந்தை தளை கழலத் தோன்றி" (பெரி.திரு. 11.5.2) என்ற ஆழ்வார்களின் திருவாக்குப்படி, கண்ணபிரான் தான் பிறக்கும்போதே வசுதேவ தேவகிகளின் காலில் விலங்கு இற்று முறியுமாறு பிறந்த மிடுக்கைக் கூறியவாறு: பருவம் நிரம்புவதற்கு முன்னே கஞ்சனைக் குஞ்சிப் பிடித்துதைத்த மிடுக்கைக் கூறியதாகவும் கொள்ளலாம்.

**தூய பெருநீர் யமுனைத் துறைவனை :** வைகுந்தத்தில் விரஜையாறு போலே, போந்த இடத்திற்கு ஓர் ஆறு உண்டானபடி. தூய: மூன்று வகையாகப் பொருள் கூறலாம். 1. வசுதேவர் குழந்தை கண்ணனை எழுந்தருள்வித்துக் கொண்டு கோகுலம் சென்ற போது யமுனை பாங்காக முழங்கால் மட்டமாக வற்றிக் கொடுத்தமையால் வந்த தூய்மை (பிராட்டி சரணம் புகவும் இராவண பயத்தாலே அஞ்சியிருந்த கோதாவரி போலல்லாமல் கம்சன் மாளிகை நிழற்கீழே வற்றிக் கொடுத்தபடி). 2. கிருட்டிணனும் கோபிகையரும நீர் விளையாட்டில் ஒருவருக்கொருவர் கொப்பளித்ததாலே வந்த தூய்மை (கிருட்டிணன் உதடுகளுக்குப் பவித்திரையை உண்டாக்கும் இடைப்பெண்களுடைய திருப்பவள ஸ்பர்சத்தாரல் இவர்கள் மாறிமாறிக் கொப்பளித்தமையால் வந்த தூய்மை). 3. ஆற்று நீரில் தெளிவால் வந்த தூய்மை.

**பெருநீர்** : கிருட்டிணனும் ஐந்து இலட்சம் குடிக்கோபியரும் நீர் விளையாடுவதற்குப் போதுமான நீர். பெண்களுடைய விரகதாபம் கெடக்குளிக்கப் போதுமான நீர். அன்றியும், நீரினுடைய சிலாக்கியதையைச் சொன்னபடியாம்.

**யமுனைத் துறைவனை** : திருக்குரவை ஆடும் இடமாகையாலே பெண்கள் படும் துறையையுடையவனை. "முத்துப் படுந்துறை, நவமணிபடுந்துறை" என்னுமாப்போலே, கிருட்டிணனுக்குப் பெண்கள் படுந்துறை. நற்சரக்குப் படுவது நீரில் அல்லவா? "அமுதில் வரும் பெண்ணமுது" என்னுமாப்போலே. **துறைவன்**: "கம்ச பயத்துக்கு அஞ்சி ஒளிக்கவந்து சேர்ந்தாரை சொல்லுமாப் போலே சொன்னபடி பாரீர்" என்றார் பட்டர்.

கவி பாடுவார்க்கு ஊர் பேர் ஆறு முதலியன வேண்டுமாகையாலே, "வடமதுரை மைந்தனை" என்று ஊரும், "தாமோதரனை" என்று பேரும், "யமுனைத் துறைவனை" என்று ஆறும் கூறப் பெற்றன என்றும் கொள்வதற்குத் தட்டில்லை.

**ஆயர்குலத்தில் தோன்றும் அணிவிளக்கை** : "**ஆயர்குலத்தில் பிறந்த**" என்னாது **தோன்றும்** என்றதன் கருத்து: பிறவாத பரமபதத்தை விட மதுரையில் பிறப்பும், முலைப்பால் குடித்து அழுதவிடமுமன்றோ பிறந்தவிடம். **தோன்றும்** : கீழைத்திக்கிலே உதிக்கின்ற ஆதித்தியனுக்கு அத்திசையில் உண்டாகில் அன்றோ தேவகியின் வயிற்றில் உதித்த கண்ணபிரானுக்கு அவ்வயிற்றில் பற்று உண்டாவது என்ற கருத்துத் தோன்றக் கூறினான் முனிவன் (விஷ்ணுபுராணம்) என்பர். "கண்ணன் தேவன் நம்பி பிறந்தநினில்" (பெரியாழ். திரு. 1.1.1) "மன்னு நாரணன் வந்து பிறந்தமை" (மேலது 1.1.10), "பிறந்தவாறும்" (திருவாய் 5.10.1) என்று ஆழ்வார் பாசுரங்களில் கூறப் பெற்றுள்ளமைக்குப் பொருத்தம் எங்ஙனே என்னில் சம்சாரிகள் பத்துமாதம் கருப்பவாசம் பண்ணினால் "பன்னிரு திங்கள் வயிற்றில் கொண்ட அப்பாங்கினால்" (பெரியாழ். திரு. 3.2.8) என்று யசோதைப் பிராட்டி கூறியபடி தான் பன்னிரண்டு மாதம் கருப்பவாசம் பண்ணினான். பெற்ற தாய்க்கு முலை சுரந்தது. முலை பெறாவிடில் இவன்தான் நோவுபடுவான். தன்னைக் "கண்ணிநுன் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப் பண்ணுவான்" (கண்ணிநுண் - 1) அடிக்கவும் படுவான். இங்ஙனம் தன்னை எளியனாக்கிக் கொள்வான் என்பன காண்க. இனி, வடமதுரையில் பிறந்த கண்ணபிரானை ஆயர்குலத்தில் பிறந்தவனாகக் கூறப்படுவது ஏன் என்னில் : முலைப்பால் குடித்து அழுதவிடமே பிறந்த இடம்

என்பது பற்றி. அன்றியும், மதுரையில் மறைந்திருந்து ஆய்க்குலத்தில் வெளிப்பட்டமை பற்றியுமாம்.

**அணிவிளக்கு :** பரமபதத்தைவிட இடைச்சேரியில் குணங்கள் மிகவும் பிரகாசமாயிருத்தல். இருட்டிலே விளக்குப் போலே தயை, கிருபை, நீர்மை முதலான குணங்கள் இங்கு அதிகமாகப் பிரகாசிக்கும் என்றபடியாம்.

**தாயைக் குடல் விளக்கம் செய்த தாமோதரனை :** வயிற்றில் கட்டின தழும்பாலே "ஒருத்திக்கு ஒரு பிள் கட்டலாம்படி பவ்வியனாவதே" என்று யசோதைப் பிராட்டியை விளங்கப் பண்ணினவனை. **தாயைக் குடல் விளக்கம் செய்த :** "இவனைப் பெற்ற வயிறுடையாள் என்ன நோன்பு நோற்றாள் கொலோ?" என்று நாட்டார் புகழ்தலாலே பெற்ற வயிற்றுக்குப் பட்டம் கட்டினவனை. இதனால் அவள் குடல் விளக்கம் பெற்றது. **தாமோதரனை :** கண்ணன் கண்ணி நுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்பட்டபடியால், உதரத்தில் (வயிற்றில்) தழும்பு கொண்டிருந்தான். அதனால் யசோதைப் பிராட்டி விளக்கம் பெற்றனள். நம்முடைய பந்தம் நம்மால் அறுக்கவொண்ணாததைப் போலே அவனுடைய பந்தமும் (அநுக்கிரக கார்யமாகையாலே) அவனாலே அறுக்க வொண்ணாது. அந்தப் பந்தத்தை அநுசந்தித்தால் அடைந்தாரின் சம்சார பந்தம் அற்றுப் போகும். "பணைகளிலே தாவினவாறே உடை நழுவத் தழும்பைக் கண்டு இடைச்சிகள் சிரித்தார்கள், அந்தத் தழும்பு தோன்றாமைக்கன்றோ நம்பெருமான் கணைய மேல் சாத்து சாத்துகிறது" என்பர் சீயர்.

**தூயோமாய் வந்து நாம் :** உடலை நீக்கித் தலையையும், தலையை நீக்கி உடலையும் கழுவுபவர்களான ஆய்ச்சிகள் "தூயோமாய்" என்கிறார்களே, இவர்கட்குத் தூய்மையாவது என் என்னில் : எம்பெருமானிடத்தில் சம்பந்தவுணர்ச்சிக்கு மேற்பட்ட வேறொரு தூய்மையும் ஆன்மாவுக்கு இல்லையாதலால் அத்தூய்மை கூறப்பெறுகின்றது. பிரபத்திக்கு நீராடல் முதலியன வேண்டப்படுபவை அல்ல. ஆகையால் யோக்கியரோ அயோக்கியரோ என்று பாராது இருந்தபடியே வருவதே தூய்மை. வீடணன் கடலிலே ஒரு முழுக்கிட்டன்றிதானே வந்தான்? பார்த்தன் பாரதப் போரில் தீர்த்தமாடாமல் தானே சரமசுலோகம் கேட்டது? மாதவிலக்காக இருந்த போதல்லவா திரௌபதி பிரபத்தி பண்ணியது? ஆகையால் பிரபத்திக்கு தூய்மையும் தேட வேண்டா. தூய்மையின்மையும் தேட வேண்டா. நின்ற நிலையிலே அதிகாரம்

அமையும். "வந்துன்னதடியேன் மனம் புகுந்தாய்" என்று அவன் வரவை நாம் செய்யக் கடவோம் என்று அமைந்திருப்பதே முறை.

**தூமலர்** : "மிக்க சீர்த் தொண்டரிட்ட பூந்துளவம்" என்றும், "சூட்டு நன்மாலைகள் தூயன ஏந்தி" (திருவிருத். 21) என்றும் ஒரு பயனையும் கருதாமல் எம்பெருமானுக்கு அர்ப்பணம் செய்யப் பெறும் மலர்கள். "கள்ளார் துழாயும் கண வலரும் கூவிளையும், முள்ளார் முளரியும் ஆம்பலும் முன் கண்டக்கால்" (பெரி.திரு. 11.7.6) என்று இறைவனுக்கே உரிய திருத்துழாயோடு அதற்கு வேறுபட்ட பொருள் ஒக்கும். மலர் : யோக்கியமென்றும் அயோக்கியமென்றும் பாராமல் கண்ணுக்குத் தோன்றின மலர் என்றுமாம். **தூய்** என்ற சொற்போக்கால், எம்பெருமானது திருவடிகளில் மலர்களை மிக்க ஆதரத்துடன் சமர்ப்பிக்க வேண்டும் என்ற ஒரு நியதி இல்லை. அடைவு கெடத் தூவினாலும் அமையும். பயன் கருதாதவர் தொட்டது ஏதேனுமாம். இவன் ஏதேனும் முடியிலும் கொள்ளுகைக்குத் தன்னை அமைத்தபடி. வராக கல்பத்திலே முத்தக்காசை (கோரைக் கிழங்கை) அமுது செய்விக்கச் சொல்லிற்று. இடுவிக்கும் பொருளின் தாரதம்யம் பார்ப்பதில்லை. இடுகிறவன் நெஞ்சின் ஈரமே பார்ப்பது.

**தொழுது** : அவனுக்குப் பொறுக்கவொண்ணாதபடி அஞ்சலியை பண்ணி. விரோதிகள் கண்டால் முறை தப்பாமைக்கு : கைபடைத்த பயன் பெறுகை. பித்ராதிகளுக்கு அடைவு கேடென்று தோற்றாதபடி அஞ்சலி பண்ணுகிறார்கள் என்றுமாம். "தொலைவில் வசிக்கிற என்னைக் குறித்து "கோவிந்தா" என்று திரௌபதி அழுதது வட்டிக்கு வட்டியாகப் பெருகின கடன் போல என் இதயத்தை விட்டு நீங்கவில்லை" என்று சஞ்சயனிடத்தில் கண்ணன் சொல்லியதை ஈண்டு நினைப்பது (பாரதம் - **உத்தியோகபர்வம் 17.9)**

**வாயினால்பாடி** : வாய் படைத்த பயன் பெற்றோம் என்று திருநாமத்தைச் சொல்லி உரத்த குரலில் வார்த்தையும் சொல்லுவதே என்று அவனை நோவுபடுத்துதல்.

**மனத்தினால் சிந்திக்க** : மனத்தினைப் படைத்த பயன் பெற்றோம் என்று. தொழுது - தியானம் செய்து. "ஒருவன் மனத்தினால் அறிவதை வாக்கினால் சொல்லுகின்றான். மனத்தினால் தியானிப்பதை காயத்தினால் செய்கின்றான்" (தைத்திரீய உபநிடதம்). "வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க" என்பதால் தனித்தனியே கரணங்கள் மேல் விழுந்தபடி சொல்லுகிறது. **தொழுது, பாடி, சிந்திக்க** என்று மனம், மொழி, மெய்களாகிற முக்கரணங்களின் செயல்கள் கூறப் பெறுகின்றன என்று கொள்க. மனத்திற்கே முன்னே தொழுகையும் பாடுகையும் முற்படுகையாலே ஆற்றாமையின் மிகுதி

சொல்லியபடியாம். ஆற்றாமையால் இவை நிலை குலைந்தன என்பதை உணர்த்திற்கு. இச்செயல்களினால் பெறும் பேறு கூறுவன இறுதி இரண்டடிகள்.

**போயபிழைகள் புகுதருவான் நின்றனவும் :** உத்தர பூர்வாகங்கள். பால் குடித்து நோய் நீங்குமாப் போலே இனியது அநுபவிக்க இன்னாதது குலையும். போய பிழை - ஞானம் பிறப்பதற்கு முன்பு புத்திப் பூர்வமாகப் பண்ணின பாபங்கள்[22] அநாதி காலம் புத்திப்பூர்வமாகப் பண்ணிப் போந்தவை. புகுதருவான் நின்றன. பகவத் சமாச்ரணயத்திற்குப் பின்பு பிரகிருதி வாசனையாலே அபுத்தி பூர்வகமாகச் செய்த உத்தராகங்கள்.

**தீயினில் தூசாகும் :** தூசு - பஞ்சு. பாலும் கற்கண்டும் அருந்தப் பித்தம் தானே போகிறது போலே, பகவதநுபவம் பண்ண, நெருப்பிலிட்ட பஞ்சுக்குவைபோல உருமாய்ந்து ஒழிந்து போகும். **செப்பு :** ஆகையால் எம்பெருமானுடைய திருநாமங்களைச் சொல்லி பகவதநுபவம் பெறுவோமாக.

**உள்ளுறையில்** ஆயர் குலம் சாதனம் முதலியவை இல்லாத குலம். பயன் கருதாதவர்களாய்ப் பகவானையே உபாயமாகப் பற்றிய நாம் உபேயத்தினிடத்திலுள்ள விருப்பத்தின் மிகுதியால் இருந்த இடத்தைவிட்டுப் போகக் கூடாதென்ற முறைமையையும் தவிர்ந்து போகுமாறு நேர்ந்தது என்பார் **"நாம் வந்து"** என்று கூறினர்.

22. பூர்வம் + அகம் – பூர்வாகம். அகம் – பாவம். எம்பெருமானைக் கிட்டுவதற்கு முன்னே புத்திப் பூர்வமாகச் செய்த பாவங்கள்.

# 6. நோன்பின் இனிமையை அறியாதாளாய் இருப்பாள் ஒருத்தியை எழுப்புவது

## ஆறாம் பாசுர விளக்கம்

### "புள்ளும் சிலம்பின காண்"

**புள்ளும் சிலம்பினகாண், புள்ளரையன் கோயிலில்**
**வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ?**
**பிள்ளாய் எழுந்திராய், பேய்முலை நஞ்சுண்டு**
**கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி**
**வெள்ளத் தரவில் துயிலமர்ந்த வித்தினை**
**உள்ளத்துக் கொண்டு முனிவர்களும் யோகிகளும்**
**மெல்ல எழுந்து அரியென்ற பேரரவம்**
**உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோர் எம்பாவாய்**[23]

(சொ-பொ) பிள்ளாய் - (பகவத்விஷய ரசம் அறியப் பெறாத) சிறுமியே; புள்ளும் சிலம்பின காண் - பறவைகளும் (இரை தேடுவதற்காக எழுந்து) ஆரவாரங்கள் செய்கின்றன காண்; (எழுந்திராய் என்ன); (நீங்கள் அவற்றை உறங்கவொட்டாமல் கிளப்பியிருக்க வேண்டும்; வேறு அடையாளம் உண்டாகில் சொல்லுங்கள் என்ன, அவர்கள் சொல்லுகின்றார்கள்); புள் அரையன் - பறைத் தலைவனான பெரிய திருவடிக்கு; கோ - நிர்வாககனான சர்வேசுவரனுடைய; இல்லில் - சந்நிதியில்; வெள்ளை - வெண்மை நிறமுடையதும்; விளி - (அனைவரையும்) அழைத்து நிற்பதுமான; சங்கின் - சங்கினுடைய; பேர்அரவம் - பேரொலியை; கேட்டிலையோ - கேட்கவில்லையோ; பேய் முலை நஞ்சு - பூதனையின் முலையில் (தடவிக் கிடந்த) விடத்தை; உண்டு - (அவளுயிரோடும்) அமுது செய்து; கள்ளம் - வஞ்சனை பொருந்திய; சகடம் - அசுர ஆவேசமான சக்கரமானது; கலக்கு அழிய - கட்டுக்குலையும்படியாக; காலஓச்சி - காலினால் உதைத்து; வெள்ளத்து - திருப்பாற்கடலில்; அரவில் - திருவனந்தான்மீது; துயில்அமர்ந்த - திருக்கண் வளர்ந்தருளின; வித்தினை - அவதாரத்திற்குக் காரணமான எம்பெருமானை; முனிவர்களும் - தியானம் செய்யும் தன்மையரானவரும்; யோகிகளும் - யோகப்

23. இப்பாசுரம் முதல் 'எல்லே இளங்கிளியே' (15) என்ற பாசுரம் வரையிலும் ஒருவரையொருவர் எழுப்பும் திருப்பள்ளியெழுச்சிப் பாசுரங்களாகும்.

பயிற்சியில் ஊன்றினவர்களும்; உள்ளத்து கொண்டு - மனத்தில் தியானித்து; மெல்ல எழுந்து - (இதயத்திலுள்ள அவ்வெம்பெருமான் சிறிதும் அசையாதபடி) மெதுவாக எழுந்திருந்து; அரி என்ற பேர் அரவம் - "அரி அரி" என்ற பேரொலியானது; உள்ளம் புகுந்து - எங்கள் நெஞ்சில் புகுவதனால்; குளிர்ந்து - மனம் குளிர; எழுந்திராய் - (சடக்கென) எழுந்திருப்பாயாக.

(க-து) : பகவத் விஷயத்தில் புதியளாய் இந்த நோன்பின் இனிமையை அறியாதவளாய் இருப்பாள் ஒருத்தியை எழுப்புகின்றார்கள் - இத்திருப்பாசுரத்தால்.[24]

கிருட்டிணாநுபவத்திற்கு முக்கிய உறுப்பான காதலும், தனிமையான காலமும், கோவலக் கிழவர்களின் இசையும் ஐந்து இலட்சம் குடியிற் பெண்களுக்கும் ஒருங்கே வாய்த்திருக்கையால் அவரவர் தனித்தனியே அநுபவிக்க, ஒருவரையொருவர் சென்று எழுப்புவான் என் என்னில்: பெருக்காற்றில் இழிவார்க்குத் துணை தேட்டுமாறு போன்று, "காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" (பெரி.திருவந்.34) என்றும், "செஞ்சொற்கவிகாள் உயிர் காத்தாட் செய்ம்மின்" (திருவாய் 10.7.1) என்றும், "ஆழியொடும் பொன்னார் சார்ங்கமுடைய அடிகளை இன்னார் என்று அறியேன்" என்றும் அருளிச் செய்தபடி இழிந்தாரைக் குமிழ் நீருட்டவல்ல "ஆழியான் என்னும் ஆழமேடாழையுள்" இழிகின்றவர்கள் துணையின்றி இழிய அஞ்சி துணைகூட்டிக் கொள்வதற்காக ஒருவரையொருவர் எழுப்புகின்றார்கள். "அடியார்கள் குழாங்களை உடன் கூடுவதென்று கொலோ என்று அருளிச் செய்தபடியே பரத்துவ நிலையில் புருடோத்தமனை அநுபவிக்கும்போதும் நித்தியசூரிகளுக்கும் துணை தேட்டமாகா நிற்க, "இமையோர் தமக்கும்... செவ்வே, நெஞ்சால் நினைப்பரிதால் - வெண்ணெயூணென்னும் ஈனச் சொல்" (திருவிருத் - 98) என்று அந்த நித்திய சூரிகளுக்கும் அநுபவிக்க வொண்ணாதபடி நீர்மைக்கும் மேன்மைக்கும் அழகுக்கும் நிரவதிகசாகரமான கண்ணனை அநுபவிக்கும் இடத்தில், இடக்கையும் வலக்கையும் அறியாத இடைச்சிமாருக்குத் துணை தேட்டம் என்னும் இடம் சொல்ல வேண்டுமோ? ஆகவே துணைக்காக எழுப்புகின்றார்கள். "இன்கனி தனி அருந்தான்" என்றபடி சுவைமிதக்க பொருள் தனியே புசிக்கத் தக்கதல்லாமையால் எல்லையற்ற இனியனான கண்ணனை தோழிமார்களுடன் அநுபவிக்கப் பாரித்து எழுப்புகின்றார்கள். அதற்குமேல் கண்ணபிரானை அநுபவித்தற்கு ருசியுடையாராயிருக்குமவர்கள் இழக்க வொண்ணாதென்றும் நினைவாலும் எழுப்புகின்றார்கள். அதற்கு மேலே பகவானை அநுபவிக்கும்போது

24. இப்பாசுரம் முதல் பத்துப் பாசுரங்கள் முதலாழ்வார்கள் பதின்மரை உணர்த்துவதென உள்ளுறை கூறுவர் வானமாமலை சீயர்.

அடியார்களை முன்னிட்டல்லது அநுபவிக்க மாட்டார்களாகையாலும் எழுப்புகின்றார்கள். ஆக விஷயம் தனியே அநுபவிக்க அரிய விஷயமாகையாலும், தனியே அநுபவிக்கும் தன்மையரல்ல ராகையாலும், ருசியுடையார் இழந்தால் கூடாது என்றிருப்பவர்க ளாதலாலும் அடியார்களையொழிய அநுபவிக்கமாட்டாதவர்களா கையாலும் முன்பு உணர்ந்தவர்கள் உறங்குகின்றவர்களை எழுப்புகின்றார்கள். பரத்துவம் என்னும் ஒரு திருக்குணம் மாத்திரமே விளங்கும் இடமான பரமபத நாதனை அநுபவிக்கப் பல கோடி நூறாயிரவர் திரளும்போது எல்லா திருக்குணங்களும் ஒருங்கே திகழும் இடத்தில் அநுபவிப்பவர்கள் அதனிலும் விஞ்சி இருக்க வேண்டாவோ? என்கின்ற அவாவும் உள்ளது. "வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து" (திருவாய் 4.6.8) என்று ஆழ்வார் அருளிச் செய்தபடி வேதவித்துக்களான ஸ்ரீவைஷ்ணவர்களைப் புருஷகாரமாகக் கொண்டு பெருமாள் திருவடிகளைப் பணிய வேண்டுமாதலால், அதனை அனுட்டித்துக் காட்டுவதற்காக எழுப்புகின்றார்கள்.

இனி, அனைவர்க்கும் கிருட்டிணாநுபவத்தில் அவா ஒத்திருக்குமாகில் சிலர் எழுப்பச் சிலர் உறங்குதல் அவாவிற்குக் குறையன்றோ எனில் அன்று. அநுபவிக்கப்படுகின்ற கண்ணபிரானது திவ்விய சேஷ்டிதங்களும் அநந்த கல்யாண குணங்களும் இராம சரங்கள் போலே சிலரை நஞ்சுண்டாரைப் போல் மயங்கப் பண்ணும். உள்ளே கிடப்பவர்கள் மயங்கினவர்களைச் சேர்ந்தவர்கள். வெளியே எழுப்புவர்கள் துடிப்பவர்களைச் சேர்ந்தவர்கள். ஆகையால் சிலரைச் சிலர் எழுப்புவதால் குறை இல்லை என்க.

**விளக்கம் : புள்ளும் சிலம்பின காண் :** முந்துற உணர்ந்த சில பெண்பிள்ளைகள் பொழுது விடிந்தமையையும் அறியாமல் கிடந்துறங்குகின்றாள் ஒருத்தியின் மாளிகையின் வாசலில் சென்று சேர்ந்து "பிள்ளாய் விடிந்த பின்பும் இவ்வாறு கிடந்து உறங்கலாகுமோ?" என்று அறிவுரை கூற, அதனைக் கேட்ட அவள், "பொழுது விடிந்தாலன்றோ எழுந்திருக்க வேண்டும்? பொழுது விடிந்தமைக்கு அடையாளம் ஏதேனும் உண்டோ?" என்று கேட்கின்றாள். அதற்கு இவர்கள், "நாங்கள் எழுந்து வந்ததே இதற்கு அடையாளமாகாதோ?" என்று மறுமாற்றம் தருகின்றார்கள். இதற்கு அவள், "உறங்கினார் உணரிலன்றோ விடிவுக்கு அடையளமாவது? "கண்ணாரக்கண்டு, கழிவதோர் காதலுற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதலே" (திருவிருத். 97) என்று ஆழ்வார் அருளியவாறு உங்களுக்கு உறக்கம்தான் இல்லையே. ஆகவே நீங்கள் உணர்ந்து

வந்தது விடிதலுக்கு அடையாளமாகமாட்டாது. வேறு அடையாளம் உண்டாகில் சொல்லுங்கள் என்கின்றாள். இவர்கள் பறவைகளும் கூட எழுந்திருந்து கூவுகின்றன காண். "இது விடிவுக்கு அடையாளமாகாதோ?' என்று இவர்கள் கூறுகின்றார்கள். இதற்கு அவள் "நீங்கள் இருந்த ஊரில் பறவைகள் சிலம்புதலும் விடிந்ததற்குக் காரணம் அன்று. நீங்கள் அவற்றை உறங்கவொட்டாமல் கிளப்பினதால் அவை கிளம்பினவே அன்றி விடிந்ததற்கு அடையாளமோ?" என்கின்றாள். இவ்விடத்தில் "பிள்ளைப் பிளையாழ்வான்[25] பகவத் சமாச்ரணயத்திற்கு அநுகூலமான காலத்தை சூசிப்பிக்கின்ற பறவையொல் அல்லது இவ்வான்மாவுக்கு உத்தேச்யமில்லை என்று பணிக்கும்" என்று அருளிச் செய்வார். நீங்கள் பிறந்த ஊரில் பறவைகளுக்கு உறக்கமுண்டோ? "ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போல்" (திருவாய் 6.7.1) என்று "காலை எழுந்திருந்து கரிய குருவிக் கணங்கள்"[26] என்றல்லவா இருப்பது. வேறு அடையாளம் உண்டாகில் சொல்லுங்கள் என்று கிடக்கின்றாள்.

**புள்ளரையன் கோயில் :** புள் என்பது பறவை. அதனால் பெரிய திருவடியைக் குறித்தது. அவனுடைய நிர்வாககன் சர்வேசுவரன். அவனுடைய இல் - கோயில். அயோத்தியில் பெருமாள் பிராட்டியுடன் வழிபடும் பெரிய பெருமாள் திருக்கோயில் போலே, திருவாய்ப்பாடியிலும் ஒரு திருமுற்றம் உண்டு போலும். இளைய பெருமாளைக் கொண்டு பெருமாளை நிரூபிக்குமாபோலே, திருவடியை நிரூபகமாக உடையவன் எம்பெருமான். அவர்களைக் கொண்டு தன்னை நிரூபிக்க வேண்டும்படியாக அல்லவா இவர்களுக்கு வைத்துக் கொடுத்த தரம். பகவத் விஷயத்தில் வழியே இழியுமவர்களாகையாலே பெரிய திருவடியை முன்னிடுகிறார்கள். தாங்கள் இருந்தவிடத்தே எம்பெருமானைக் கொண்டு வருபவனாகையாலே "புள்ளரையன்" என பட்டான். "புள்ளின் பின் போன தனி நெஞ்சே" என்று இருப்பவர்கள் அல்லவா இவர்கள்?

**வெள்ளை விளி சங்கு :** சங்கினுடைய வெளுப்பு பொழுது விடிவுக்கு அடையாளம் அல்லாமையாலே, இது வியர்த்த விசேஷனம். **விளிசங்கு :** சாமங்கள் தோறும் பணிக்கு முறையுடையாரை அழைப்பதற்கு உறுப்பாகையாலே, அது பொழுது

25. இவர் அனந்தாழ்வான் திருவடி சம்பந்தி. கூரத்தாழ்வானின் சீடர். எழுபத்து நான்கு சிம்மாசனாதிபதிகளுள் ஒருவர். கூரத்தாழ்வான் திருநாட்டிற்கு எழுந்தருளினபோது இவர் மடியிலே திருமுடியையும் திருவடிகளையும் வைத்துக்கொண்டு திருநாட்டிற்கு எழுந்தருளினார் என்பர்.

26. கிருட்டிணன் வடிவை நினைவுபடுத்துபவை.

விடிவதற்கு அடையாளம் அல்ல என்கின்றாள். **விளிசங்கு :** விளிக்கை - அழைக்கை. "கைவிளிக்கின்றதும் கண்டே நின்றேன்" என்பதல்லவா வழக்கு? கையாலே அழைக்கை என்றபடி. **பேரரவம் கேட்டிலையோ:** "புள்ளரையன் கோயிலில் திருப்பள்ளி எழுச்சிக்கு உதுகின்ற வெள்ளை விளி சங்கினது பெரிய ஒலியும் செவியிற்பட்டதில்லையா? இந்தத் தொனி பாஞ்ச சன்னிய ஒலியிலும் மிக்கன்றோ இருப்பது? இந்தத் தொனி நீயும் உணர்தற்குப் போதுமே" என்கின்றார்கள். **கேட்டிலையோ :** இப்படிப்பட்ட பேரொலியும் நின் செவியில் படாதபடி நீ உள்ளே செய்யும் செல் என்னோ? என்கின்றார்கள். இவ்வளவையும் கேட்டு அவள் வாளா கிடக்கின்றாள்.

**பிள்ளாய் எழுந்திராய் :** பேதைமையுடையவளே எழுந்திருப்பாயாக. இதில் "பிள்ளாய்" என்பது கருத்துடைய விளி. இவள் பகவத் விஷயத்தில் புதியவள். பாகவதர்களின் கூட்டுறவின் பெருமையை அறியாதவள். "பாகவதர் கூட்டுறவு பிறக்கும் அளவும் உண்டானால் அல்லது பகவத் விஷய பெருமை முழுமைக்குப் பரிபூர்த்தி இல்லை. நீ அப்படியின்றி கிருட்டிணன் உறவிலேயே நின்று பாகவத கூட்டுறவில் விருப்பமற்றிருப்பது பேதைமையின் பணியன்றோ? என்றவாறு. "நாங்கள் உன்னைக் காண ஆசைப்பட்டாற் போல, நீயும் எங்களைக் காண ஆசைப்படவேண்டாவோ?" என்கின்றார்கள்.

"பிள்ளாய்" என்பதற்கு மற்றொரு பொருளும் உரைக்கலாம். "கள்ளவிழ் சோலைக் கணபுரம் கைதொழும், பிள்ளையைப் பிள்ளையென்று எண்ணப் பெறுவரே? (பெரி.திரு. 8.2.9) என்று ஆழ்வார் அருளிச் செய்திருக்கின்றார் அல்லவா?" சிறு பிள்ளைகட்குப் பொய் சொல்லத் தெரியாது. கள்ளம் கவடு தெரியாது. ஆகவேதான் நீதிமன்றங்களிலும், காவலர் விசாரணையிலும் சிறுவர்களின் சான்றுகட்கு மதிப்பு தருகின்றார்கள். இப்படிப்பட்ட குணத்தின் பெருமையை நினைந்து "பிள்ளாய்" என்று விளிக்கப் பெறுகின்றது. செய்திகளை மனத்தில் வாங்கிக் கொள்வதிலும், அவற்றை மனத்தில் நிலை நிறுவதிலும், மேன்மேலும் வளர்ப்பதிலும் சாபமர்த்தியமுடைய அதிகாரிகளே இங்கு பிள்ளாய் என்பதாகக் கொள்ளுவதற்குத் தட்டில்லை. ஆசாரிய சிகாமணிகள் நம்பிள்ளை, பெரியவாச்சான் பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை, திருவாய்மொழிப்பிள்ளை... என்றிப்படிப் பிள்ளைகளாக அன்றோ திகழ்கின்றனர்? இது நிற்க.

வெளியே இருப்பவர்கள் இங்ஙனம் சொல்லக் கேட்ட அவள் "நானோ கிருட்டிணாநுபவத்தில் திளைத்துக் கொண்டுள்ளேன். உங்களுடைய சுவையுள்ள இனிய பேச்சுகளைக் கேட்டு உளங்களித்

திருக்கின்ற என்னைப் "பிள்ளாய்" என்கின்ற நீங்களன்றோ பிள்ளைகள்?" என்று மறுமாற்றம் உரைக்கின்றாள். அதற்கு இவர்கள் "வெறுமனே பேச்சுக் கேட்டுக் கிடக்க அமையுமோ?" அடியார்கள் தம் ஈட்டங்கண்டிடக் கூடுமேல்" என்றும், "அடியார்கள் குழாங்களை உடன் கூடுவது என்று கொலோ?" என்றும், "பேராளர் பேரோதும் பெரியோரை ஒருகாலும் பிரிகிலேன்" என்றும் என்பதன்றோ ஆழ்வார் பெருமக்களின் திருவாக்குகள்? அங்ஙனமே உன் வடிவை நாங்கள் கண்டு எங்கள் வடிவை நீ கண்டு அநுபவிக்க விரும்பாமல் எங்கள் சொற்களுக்குக் கண்ணழிவும் சொல்லுகின்ற நீ அன்றோ பிள்ளை. இதற்கு "அடி உன் பால்யமல்லவா?" என்கின்றார்கள். இவ்விடத்தில் பட்டர் "திருவாய்ப்பாடியில் உள்ளாரில் அனைவருமே கிருட்டிணன் கூட்டுறவில் புதியார் இல்லை" என்று அருளிச் செய்வர். வெளியிலுள்ளாரின் பேச்சைக் கேட்டு உள்ளிருப்பவள் "நீங்கள் சொல்லுகிறபடியே நான் பிள்ளையாகின்றேன். காதுக்கு இனிமை நல்கும் பேச்சுகளைச் சொல்லுங்கள்" என்ன, இவர்கள் சொல்லுகின்றார்கள்.

**பேய்முலை நஞ்சுண்டு :** கண்ணனைப் பெற்ற தாயான தேவகியின் உடன்பிறந்தவன் கம்சன். அவன் தன்னைக் கொல்லப் பிறந்த தேவகி மகன் ஆயர்பாடியில் ஒளித்து வளர்வதை அறிந்தான். அறிந்தவன் அக்குழந்தையைக் கொல்லும் பொருட்டு பல அசுரர்களை ஏவினான். அவர்களில் ஒருத்தி பூதனை என்னும் அரக்கி. அவள் அழகிய பெண்ணுருவத்துடன் இரவில் திருவாய்ப்பாடிக்கு வருகின்றாள். உறங்கிக் கொண்டிருந்த கண்ணனாகிய குழந்தையை எடுத்துத் தனது நஞ்சு தீற்றிய முலையைக் கொடுத்துக் கொல்ல முயன்றாள். கண்ணனாகிய குழந்தை அவ்வரக்கியின் முலைகளை கைகளால் இறுகப் பிடித்துப் பால் பருகும் பாவனையில் அவள் உயிரையும் உறிஞ்சி அவளைக் கொன்றான். அவளும் பேரிரைச்சலுடன் கதறி உடம்பு நரம்புகளின் கட்டெல்லாம் நீங்கி விழுந்து இறந்தாள் என்பது வரலாறு.

**கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி :** கிருத்திரிமச் சகடம். காலோச்சி - கட்டழிந்து சிதறும்படியாத் திருவடிகளை நிமிர்த்து. நந்தகோபன் திருமாளிகையில் ஒரு வண்டியின் கீழ்ப்புறத்தில் தொட்டிலில் திருக்கண் வளர்கின்றான் கண்ணன். அச்சமயம் கம்சனால் ஏவப்பெற்ற அசுரன் ஒருவன் வந்து அந்த வண்டியில் ஆவேசித்து அக்குழந்தை மேலே விழுந்து அவனைக் கொல்ல முயன்றான். இதனை அறிந்த அக்குழந்தை பாலுக்காக அழுகின்ற பாவனையில் தன் சிறிய திருவடிகளை மேலே தூக்கி அவ்வண்டியை

உதைத்தருளினான். அந்த உதைபட்ட மாத்திரத்தில் அந்த வண்டி திருப்பப் பெற்றுக் கீழே விழுந்து அசுரன் உட்பட அழிந்தொழிந்தான் என்பது வரலாறு.

இந்த இரண்டு வரலாறுகளையும் இங்கு எடுத்துக் கூறியதன் கருத்து யாதெனில் உள்ளே உறங்குபவள் இந்த அபாயங்கள் கேட்டு அஞ்சிக் கடுக எழுந்தோடி வருவாள் என்பதற்காக. எம்பெருமானாலே தத்தம் இடர்களைக் களைந்து கொள்ளக் கருதுவார் அல்லாதார். பெரியாழ்வாரோடு சம்பந்தமுடையார். அவ்வாறு அல்லாமல் "எம்பெருமானுக்கு என்ன கேடு விளைகின்றதோ?" என்று வயிறு பிடிப்பவர்கள் வருந்துபவர்கள். அவள் பயநிவர்த்தி அளவும் அநுசந்தித்து பயங்கெட்டுக் கிடக்கின்றாள். ஆதலால் பூதனை வரலாற்றையும் சகடாசுரனுடைய வரலாற்றையும் குறிப்பிட்டால் "கண்ணபிரானுக்கு இங்ஙனம் சில தீமைகள் நேர்ந்தனவே" என்று நெஞ்சு பொறுக்க முடியாமல் துணுக்குற்று எழுந்திருக்கக்கூடும் என்பது வாசற்புறத்திலிருந்து கூவும் ஆய்ச்சிகளின் கருத்து எனக் கொள்ளலாம். இராமபிரான் மீது எல்லையற்ற அன்பு கொண்டுள்ள குலசேகரப் பெருமாள் வரலாற்றிலும் இத்தகைய நிகழ்ச்சிகளை நினைந்து மகிழலாம்.

**வெள்ளத் தரவில் துயிலமர்ந்த வித்தினை** : திருப்பாற் கடலில் அனந்தாழ்வான் மீது அறிதுயில் கொண்டுள்ள எம்பெருமானை என்பது இதன் நேர் பொருள். எந்தவித அபாயமும் இல்லாத இடத்தில் திருவனந்தாழ்வான் மீது சாயப் பெற்றிருப்பதை நினைந்து மகிழ்கின்றார்கள். **வெள்ளம்** : சௌகுமார்யத்துக்குப் பொருந்துமாறு குளிர்ச்சியுண்டானபடியை நினைக்கின்றார்கள். **அரவில்** : நீருறுத்தாதபடி அமைந்த படுக்கை. மென்மை, குளிர்ச்சி, நாற்றம் முதலான தன்மைகளையுடைய திருவனந்தாழ்வான் மேலே, இவன் மூச்சுப்பட்டு மதுகைடவர்கள் பொடிபட்டுப் போகையாலே பயப்படவும் வேண்டா எனல். **துயில்** : உலகங்களைப் பாதுகாப்பதான சிந்தை. "பனிக் கடலிற் பள்ளிக்கோளைப் பழக விட்டு ஓடி வந்தென், மனக்கடலில் வாழவல்ல மாயமணாள நம்பி" (பெரியாழ். திரு. 5.4.9) என்று - ஓர் ஆச்ரிதருடைய இதயத்தைக் கணிசித்துக் கிடக்குபவன் என்னவுமாம். **அமர்ந்த** : பிராட்டிமார் திருமலைத் தடத்தால் நெருக்கி எழுப்பினாலும் கிளம்பாதபடி இருத்தல். **வித்தினை:** திருவவதாரத்திற்கு நாற்றங்கால் : மூலக் கிழங்கு. பிறந்த பிறவிகள் நினையாதிருக்கையும், பிறந்ததெல்லாம் கிடக்க இன்னமும் பிறப்பதற்கு அடியாயிருக்கையும். இவ்வருகு உண்டான கார்யவர்க்கத்திற்கெல்லாம் காரணமாக இருக்கின்றவனை.

உழவர்கள் விதையை நீரிலே சேர்ப்பது போல, உலகங்கட்கெல்லாம் விதை போன்ற தான நீரிலே சேர்ந்தான் என்பது சுவைஉக்தி. "தனிமாப் புகழே எஞ்ஞான்றும் நிற்கும்படியாத் தான் தோன்றி, முனிமாப்பிரம முதல் வித்தாய் உலகம் மூன்றும் முளைப்பித்த, தனிமாத் தெய்வம்" (திருவாய் 8.10.7) என்று ஆழ்வார் அருளிச் செயலை ஈண்டு நினைப்பது.

**உள்ளத்துக் கொண்டு :** திருப்பாற்கடலில் திருவனந்தாழ்வான் மீது அவதார கந்தமாய் அநிருத்தன் ரூபியாய் கண்வளர்ந்தருளு கின்றவனை. "அரவத்து அமளியினோடும் அழகிய பாற்கடலோடும், அரவிந்தப் பாவையும் தானும் அகம்படி வந்து புகந்து" (பெரியாழ். திரு. 5.2.10) என்று **பெரியாழ்வார்** உரைத்தபடியே திருப்பாற் கடலோடும் திருவனந்தாழ்வானோடும் கூத்தன் நெஞ்சாகிய நாடுகளில் குடியேறும்படி செய்து, **முனிவர்களும் யோகிகளும் :** யோகப்பியாசம் பண்ணுகின்றவர்களும் மனன சீலர்களும். அவர்களாவர் விருத்நிஷ்டரும் குணநிஷ்டரும். **மெல்ல எழுந்து :** சூல் கொண்ட மகளிர் குழந்தைகளுக்கு நோவுவராமல் எழுந்திருக்குமாபோலே பிரகலாதாழ்வான் மலையிலிருந்து தள்ளப்பெற்ற பொழுது விழுகின்ற நிலையில் 'பார்த்தருள், பார்த்தருள்' என்று எம்பெருமானைப் பிடித்துக்கொண்டது போலவும், இதயகமலத்தில இருக்கும் எம்பெருமான் தழும்பாதபடியும் எழுந்திருந்து என்றுமாம். திருவாய்ப்பாடியில்... முனிவர்கள் - மனனசீலர்கள் யாதொரு செயலிலும் ஈடுபடாமல் இறைவனது குணங்களில் மட்டும் ஆழங்கால் பட்டு அநுபவிப்பவர்கள். யோகிகள் - தொண்டில் ஈடுபடுவார், பரதாழ்வானையும் இளையபெருமாளையும் போன்றவர்கள். இங்கு உறங்குகின்றவர்களையும் எழுப்புகின்றவர் களையும் போலே இருப்பவர்கள். திருவாய்ப்பாடியில் முனிவர்களும் யோகிகளும் உண்டோ என்னில் கண்ணபிரான் வந்து அவதரித்த பின்னர் இடையருடைய பசுக் கொட்டில்களிலே வந்து அவர்கள் படுகாடு கிடப்பார்கள். **அரி என்ற :** அரி என்கையாவது - பதவதநுப பிரோதிகளைப் போக்கியருள வேண்டும் என்னுதல். கிருஷ்ணனுக்கு அசுரர்களாலே வருந்தீங்கை அவனே போக்கித் தந்தருள வேண்டும் என்று மங்களாசாசனம் பண்ணுதல். அவனாலே பயங்கெட்டால் திருப்பல்லாண்டு பாடுதலேவழி. பகவதநுபவஞானம் பிறப்பதற்கு முன்பு இழவு பேறுகள் தன்னளவிலேயிருக்கும். சம்பந்த ஞானம் பிறந்த பின்பு, இழவு பேறுகள் அவனளவிலேயாம் இருக்கக் கடவதல்லவா? **பேரரவம் :** விடியற்காலத்தில் எழுந்திருக்கும்போது 'அரி அரி' என்று உச்சரிக்க வேண்டும் என்பது விதி. அதன்படி

திருவாய்ப்பாடியில் ஐந்து இலட்சம் குடியிலுள்ளோரும் திரண்டு அநுசந்தித்த அரிநாமத்தின் பேரொலி ஆயர்பாடி எங்கும் பரவிச் சென்றது. **உள்ளம் புகுந்து :** அந்தப் பேரரவம் படுக்கைக்குக் கீழே வெள்ளங் கோத்தாற் போலே செவிவழியே புகுந்து கிருஷ்ண விரகத்தாலே கமர் பிளந்து கிடந்த இதயமானது ஒரு நீர்ப்பாய்ச்சினாற் போலே பதஞ் செய்து, **குளிர்ந்து:** மறுநீர்ப்பாய்ச்சினாற் போலே குளிர்ந்து : அதனாலே நாங்களும் எழுந்து வந்தோம். ஆகையாலே "பிள்ளாய் எழுந்திராய்" என்கின்றார்கள்.

**உள்ளுறை :** "பாகவதர்கள் பகவத் கைங்கர்யமாகத் தம் தமது சாதிக்குத் தகுதியாகச் சந்தியாவந்தனம் முதலிய கடன்களைச் செய்யப் போவதையும், பகவானை உள்ளபடி அறிவிக்கின்ற விரணவத்தின் பொருள் எங்கும் முழங்குவதையும், யோகியரும் முனிவரும் பிரகிருதி சம்பந்தத்தால் வருகின்ற 'யான், எனது' என்ற முனைப்புகளைப் போக்கிக் காமம் குரோதம் முதலிய குற்றங்களையும் அடியவர்க்குத் தவிர்த்து உலகக் காப்பைச் சிந்தை செய்கின்ற ஆதிகாரணத்தைத் தியானித்து அவன் திருநாமங்களைச் சொல்லுவதையும் செவி குளிரக் கேள். இவற்றால் மனம் தெளிவாயாக" என்று பகவத் விஷயத்தில் புதிதாக ருசி உண்டாகிய சீடனுக்கு ஓர் ஆசிரியன் உபதேசிப்பதாகக் கொள்வது இப்பாசுரத்தின் உள்ளுறை. ஞானம் அநுட்டானம் இவற்றைக் கொண்டு பகவானுடன் சேர்ப்பிக்கவல்ல ஆசாரியரைப் பட்சிகளாகக் கூறுவது தகும் என்பது (ஆசாரிய இருதயம்).

**மேலும் ஓர் உள்ளுறை : இப்பாசுரம் பெரியாழ்வாரைத் திருப்பள்ளி உணர்த்தும் பாசுரம். "பிள்ளாய்!" என்பது இதில் விளி.** அறியாதவனைப் பிள்ளை என்பது. எம்பெருமானுடைய "இரட்சகத்துவம்" முதலிய திருக்குணங்களை மறந்தே இவ்வாழ்வார் மங்களாசாசனத்தில் ஒருப்பட்டவராதலால் "பிள்ளை" எனத் தகுதியுள்ளவராயினர். 'ஞானவிபாக காரியமான அஞ்ஞானத்திலே வருபவை எல்லாம் அடிகழைஞ்சு பெறும்' (சூத்திரம் 9)[27] என்ற ஸ்ரீவசனபூஷண திவ்யசூக்தியும் மங்களாசாசனத்திற்கு

27. ஞானவிபாகம் என்றது பக்தியை. ஞானமானது பரிபக்குவத்தை அடைந்த நிலை. அஞ்ஞானம் என்றது அந்தப் பக்தி காரணமாக வருகின்ற அறிவின்மை. வருமவை – செய்யப் பெறுகின்ற செயல்கள். அடிக்கழஞ்சு – ஈண்டு அடி என்றது அடி அளவு கொண்ட நிலம். கழஞ்சு என்றது கழஞ்சு என்னும் நிறையளவு கொண்ட பொன். இத்தொடர் மொழி அடியளவு கொண்ட ஒரு நிலம் கழஞ்சு என்னும் நிறையளவு கொண்ட பொன்னை விலையாகக் கொள்ளும் தகுதியுடையது என்று அந்நிலத்தின் உயர்வு குறிக்கப் பெறுகின்றது. 'அடிக்கழஞ்சு பெறும்' என்ற இந்த உவமையால் பக்தியின் காரியமான அஞ்ஞானத்தால் செய்யப்பெறும் செயல்கள் எல்லாம் போற்றத்தக்கவையாம் என்பதைத் தெரிவித்தவாறு.

அஞ்ஞானத்தையே மூலமாகக் காட்டிற்று. இந்த ஆழ்வார் பெரும்பாலும் நந்தவனத்திலேயே பொழுதுபோக்குபவராதலால் அவ்விடத்து அடையாளமாகிய 'புட்களின் சிலம்புதல்' முன்னதாகக் கூறப்பெற்று. **புள்ளரையன்** அம்சமாகத் திருவவதரித்தவர் இந்த ஆழ்வார் என்று குருபரம்பராப்பிரபாவத்தில் கூறியுள்ள விஷயத்தை நினைவூட்டுகின்றது.

**'வெள்ளை விளிசங்கு'** என்ற சொற்றொடர் முதன்முதலாகப் பெரியாழ்வார் திருவாக்கில் (4.1.7) தோன்றியது. அதனை ஈண்டு அநுவதித்துக் காட்டலாம். **'பேய் முலை நஞ்சுண்டு'** பெரியாழ்வார் திருமொழியில் **(சீதக் கடலுள் 1.3)** கண்ணபிரானது வரலாறுகள் பேய் முலை நஞ்சுண்டகதை முதன்முதலாக அநுசந்திக்கப்பட்டது. 'பிறங்கிய பேய்ச்சி முலை சுவைத்து உண்டிட்டு' (பாசுரம் - 5) என்றது காண்க. மீண்டும் அந்த நிகழ்ச்சியை அநுசந்திக்கையில் சகடாசுர பங்கத்தையும் சேர்த்து அநுசந்தித்தார். "நாள்களோர் நாலைந்து திங்கள் அளவிலே, தாளை நிமிர்த்துச் சகடத்தைச் சாடிப்போய், வாள்கொள் வளையெயிற்று ஆருயிர் வவ்வினான்" (பாசுரம் - 11) என்றது காண்க. அதற்குப் பொருந்த இங்கு "பேயிமுலை நஞ்சுண்டு கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி" என்றது. "வெள்ளத் தரவில்" என்று தொடங்கிப் பெரியாழ்வார்க்குள்ள 'விஷ்ணு சித்தர்' என்ற திருநாமமும் அதற்கு விவரணமும் 'அரவத்தமளியினோடும்' (5.2.10) 'பனிக்கடலில் பள்ளிக்கோளை' (5.4.9) என்ற பாசுரங்களின் தாற்பரியமும் நன்கு சூசிதம் என்பது அறியப்படும்.[28]

28. திருப்பாவை பாசுரம் 6 முதல் 15 முடிய ஆழ்வார்களை எழுப்புவதாகக் கூறப்பெறும் உள்ளுறை காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய சுவாமிகள் கூறும் உள்ளுறையாகும். வானமாமலை ஜீயர் அருளிச்செய்த உள்ளுறை பின்னிணைப்பு – 2 இல் காட்டப் பெற்றுள்ளது.

## 7. பகவத் விஷயத்தின் இனிமை அறிந்தே மறந்து கிடப்பாள் ஒருத்தியை எழுப்புவது

### ஏழாம் பாசுர விளக்கம்

"கீசுகீசென்று"

**கீசுகீசென்று எங்கும் ஆனைச்சாத் தன்கலந்து**
**பேசின பேச்சரவம் கேட்டிலையோ? பேய்ப்பெண்ணே**
**காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து**
**வாச நறுங்குழல் ஆய்ச்சியர் மத்தினால்**
**ஓசை படுத்த தயிரரவம் கேட்டிலையோ?**
**நாயகப் பெண்பிள்ளாய் நாரா யணன்மூர்த்தி**
**கேசவனைப் பாடவும்நீ கேட்டே கிடத்தியோ?**
**தேச முடையாய் திறவேலோர் எம்பாவாய்**

(சொ.பொ) பேய்ப்பெண்ணே - அறியாமை குணத்தையுடைய பெண்ணே; ஆனைச்சாத்தன் - வலியன் என்னும் பரத்வாஜபட்சிகள்; எங்கும் - எல்லாவிடத்தும்; கலந்து - (பேடையுடன்) சேர்ந்து; கீசுகீசென்று பேசின - கீச்சுகீச்சென்று ஒலிக்கின்ற; பேச்சரவம் - பேச்சினுடைய ஆரவாரத்தை (குரலின் ஒலியை); கேட்டிலையோ - கேட்கவில்லையோ; நறுவாசம் - நறுமணமுள்ள பொருள்களினால்; குழல் ஆய்ச்சியர் - கூந்தலையுடைய இடைப் பெண்கள்; காசும் பிறப்பும் கலகலப்ப - (கழுத்தில் அணிந்துள்ள) அச்சுத்தாலியும் ஆமைத்தாலியும்; கலகலவென்று ஒலிக்கும்படியாக; கைபேர்த்து - கைகளை முன்பின்னாக மாறிமாறி; மத்தினால் - தயிர்கடையும் மத்து என்னும் கருவியினால்; ஓசைப்படுத்த - ஒலியை உண்டாக்கின; தயிர் அரவம் - தயிர் கடைகின்ற ஓசையை; கேட்டிலையோ - கேட்கவில்லையோ; நாயகப் பெண் பிள்ளாய் - பெண்களுக்குக் கெல்லாம் தலைமையாக இருப்பவளே; நாராயணன் - நாராயணன் என்கின்ற திருநாமத்தையுடையவனும்; மூர்த்தி - (பல யுகங்களிலும்) திருமேனியைக் கொண்டு அவதரிப்பவனுமான; கேசவனை - கேசி என்னும் அசுரனை நிரசித்த கண்ணனை; பாடவும் - (நாங்கள்) பாடா நிற்கவும்; நீ - நீ; கேட்டே - கேட்டுக்கொண்டே; கிடத்தியோ - படுத்துக் கொண்டு உறங்குவாயோ; தேசம் உடையாய் - மிக்க ஒளியை உடையாய்; திற - (நாங்கள் உன் அழகைக் காணும்படி கதவைத்) திறப்பாயாக.

(க-து) : சிலரை உணர்த்திக் கூட்டிக்கொண்டு கண்ணபிரான் பக்கல் போகின்றவர்களன்றோ இவர்கள்? தம்மைப் போலவே அனைவரும் நன்மைபெற வேண்டும் என்னும் கருத்துடையவர் களன்றோ இவர்கள்? பகவத் சம்பந்தம் மெய்யே உண்டாகில் தன் வயிற்றிற் பிறந்த குழந்தையின் நன்மைக்கு உகக்குமாறு போன்று அனைவருடைய நன்மைக்கும் உகக்க வேண்டுமன்றோ? "அடியார்கள் குழாங்களை உடன் கூடுவதென்று கொலோ?" என்றும் "அந்தமில் பேரின்பத்து அடியரோடிருந்தமை" என்றும் சொல்லுகிறபடியே இக்குழாத்தில் இனிமை உண்டானால் அல்லவா அங்கும் இனிமை உண்டாவது?

**ஆட்கொண்ட வில்லிஜீயர்** என்பார் எழுந்தருளுகின்றார். நஞ்சீயர் அவரைத் தெண்டனிட்டு நிற்கும்போது, ஆட்கொண்ட வில்லிஜீயர் "பகவத் விஷயத்தில் ருசி நமக்கு மெய்யே பிறந்ததில்லை காணும்" என்று அருளிச்செய்ய, நஞ்சீயர் அவரிடம் "உம்மைப்போல ஆசாரியர்கள் ஆரேனும் உளரோ? நீர் இங்ஙனம் அருளிச் செய்வான் என்?" என்று கேட்க, "பாகவதர்களின் நன்மையைக் கண்டு மிகவும் உகப்பதல்லவா பகவத் விஷயத்தில மெய்யே ருசி பிறத்தல். அஃது இல்லாமையைப் பற்றிச் சொன்னேன் காணும்" என்று ஆட்கொண்ட வில்லிஜீயர் அருளிச் செய்தார். இந்த ஐதிகம் ஈண்டு நினைக்கத்தக்கது.

இங்ஙனம் எல்லார்க்கும் ஒக்க இந்நன்மை உண்டாக வேண்டும் என்ற பாரிப்புடன் எல்லோரையும் திரட்டிக்கொண்டு மற்றொருத்தியின் மாளிகை வாசலில் சென்ற ஆய்ச்சியர், "பெண்ணே பொழுது விடிந்தது காண், எழுந்திராய்" என்று கூற, அவள் விடிந்தமைக்கு அடையாளம் என்?" என்று கேட்க, இவர்கள் "ஆனைச்சாத்தன் கலந்து பேசின பேச்சரவம் முதலியன அடையாளமல்லவோ?" என்கின்றார்கள்.

**விளக்கம் : கீசுகீசு :** ஒலிக்குறிப்பு. "கிருஷ்ண, கிருஷ்ண" என்று இதற்குப் பொருளுரைப்பர் பக்தர்கள். **என்று எங்கும் ஆனைச்சாத்தன் பேசின பேச்சரவம்.** ஆனைச்சாத்தனுடைய ஒலி விடிவுக்கு அடையாளம் அன்றோ? என்கின்றார்கள் வெளியிலிருப்பவர்கள். "ஓர் ஆனைச் சாத்தன் தொனி விடிவுக்கு அடையாளம் ஆகப்போதுமா?" என்று உள்ள இருப்பவள் கேட்க, இவர்கள், "எங்கும் இந்த ஒலி கேட்கின்றதே" என்று கூறுகின்றார்கள். உள்ளே இருப்பவள், "எங்கும் நீங்கள்தான் இருக்கின்றீர்களே அவற்றை எழுப்புவதற்கு" என்று சொல்ல இவர்கள், "நாங்கள் அவற்றை எழுப்பவில்லை. அவை கலந்து பேசின பேச்சுக் காண்"

என்கின்றார்கள். உள்ளே இருப்பவள், "இரவெல்லாம் உறங்கிப் பொழுது விடியும் போதோ கலப்பது?" என்று சொல்ல, இவர்கள், "மரக்கலம் (கப்பல்) ஏறிச் சென்றவன் மீண்டு வருமளவும் ஜீவனம் ஏற்றிக் கொண்டு போவது போல, இவையும் பிரிவுக் காலமாகிய விடியற்காலத்தில் கலந்து பகல் முப்பது நாழிகைக்கும் விளைநீர் அடைத்துக்கொண்டு அந்தோ பிரிவு வருகின்றதே என்று தளர்ச்சி தோற்றப் பேசுகின்ற பேச்சு விடிவுக்கு அடையாளமன்றோ? என்கின்றார்கள். **கேட்டிலையோ** : இந்தப் பேச்சரவம் கேட்காமல் அங்கு என்ன செய்து கொண்டுள்ளாய்? இவற்றின் ஒலியைக் கேட்டால் கடுகக் கண்ணன் பக்கலிலே சென்று நிற்க வேண்டாவோ? என்று மேலும் கூறுகின்றார்கள்.

இங்ஙனம் ஆய்ச்சியர் கூட்டம் கூறக் கேட்டு உள்ளிருப்பவள், "மாளிகையில் துதிபாடுபவர்கள் வம்சாவளி சொல்லக் கேட்டு துயில் உணர்ந்து எழுந்திருப்பவர்கள் பறவைகளின் பேச்சுக் கேட்டு எழுந்திருக்கும்படியான நிலை ஏற்பட்டுவிட்டதே. இதென்ன விபரீத காலம்" என்று வெறுத்துப் போர்வையை இழுத்துப் போத்திக் கொண்டு வெறுத்துவார் கிடக்கின்றாள். வெளியிலிருப்பவர்கள் **பேய்ப்பெண்ணே** என்று நிந்திக்கின்றார்கள். "உன்னுடைய அஞ்ஞானம் இருந்தபடி என்? பாகவதர்களோடு கூடுவதற்கு விரைந்து ஓடி வராமல் தாமதித்து இருத்தல் பேய்த்தனம் இல்லையோ?" என்கின்றார்கள். உள்ளே இருப்பவள், "நள்ளிரவுக் கண் வந்து பொழுது விடிந்ததாகப் பிதற்றுகின்ற நீங்களன்றோ பேய்ப் பெண்கள்" என்று மறுமாற்றம் உரைக்க, இவர்கள் "பொழுது விடிந்த பின்பும் பொழுது விடிந்ததில்லை என்கின்ற நீதான் பேய்ப்பெண்" என்று கூறுகின்றார்கள்.

உள்ளே இருப்பவள் "நீங்கள் சொன்ன அடையாளம் போதாது, வேறு அடையாளம் இருப்பின் சொல்லுங்கள்" என்று கேட்க, இவர்கள் "இவ்வூரில் ஆய்ச்சியர்கள் அனைவரும் துயில் உணர்ந்து எழுந்து தயிர் கடைகின்ற ஓசை கூட நின் செவிப்படவில்லையா? அஃது அடையாளமாகவில்லையா?" என்கின்றார்கள். **காசும் பிறப்பும்**: மாதர் அணியும் ஆபரணவிசேடம். **காசு** - அச்சுத்தாலி. பொன்னை அச்சிலேயிட்டு அடித்துச் செய்யப் பெற்ற உருக்கள் கோத்தமாலை. காசுமாலை. மேகலையுமாம். **பிறப்பு** - முளைத்தாலி. முளைமுளையாகச் செய்து கோவையாக அணியும் ஆபரணம். **கலகலப்ப** : கடைகின்ற போது உண்டாகின்ற ஆபரணத் தொனி. **கை பேர்த்து** : தயிரின் பெருமையாலும் இவர்கள் சௌகுமார்யத்தாலும் மலை பேர்த்தாற்போலே கைபேர்க்கப்

போகாதபடி. கிருட்டிணன் சந்நிதி இல்லாமையாலே கை சோர்ந்தது என்னவுமாம். அல்லது அவன் தானே நேரே நின்று 'தயிரை மோராக்க வொட்டேன்' என்று கையைப் பற்றி இழுக்கையாலே கடைதலில் உண்டான அருமையைச் சொன்னவாறாம். "மோர் ஆர் குடம் உருட்டி" (சிறிய திருமடல்) என்பதல்லவா ஆழ்வார் திருவாக்கு? **வாசநறுங்குழல்** : கடைகிற போது ஏற்படுகின்ற சிரமத்தாலே ஆய்ச்சியின் மயிர் முடிகட்கு நெகிழ்ந்து முடை நாற்றத்தை மறைக்கும்படி நறுமணம் வெள்ளமிட்டு ஓடுகிறதைச் சொல்லுகின்றது. "தெருவெல்லாம் காவிகமழ் திருக்காட்கரை" (திருவாய் 9.6.1) என்பதல்லவா ஆழ்வார் வாக்கு? **ஆய்ச்சியர்** : ஒருத்தியன்றோ என்று சொல்லவொண்ணாதபடி இருந்ததே குடியாக என்றபடி. **மத்தினால் ஓசைப்படுத்த தயிரரவம்** : மந்தர மலையாலே திருப்பாற் கடலைக் கலக்கினாப் போலே இந்தப் பேரொலியும் நின் செவியிற்பட்ட தில்லையோ? கண்ணனுடைய கண்ணழகுக்குத் தோற்றுப் பாடுகின்ற ஆயர்மாதருடைய பாட்டின் ஒலி தயிர் கடைகின்ற ஒலியோடே கலந்து பரமபதத்திலே சென்று ஒலித்தது. அப்போது கிருட்டிணனுடைய குணங்கள் பூமியிலே நடையாடா நிற்க, மலையிலே இருப்பாரைப் போலே உயர இருந்ததே என்று அவர்களை வசைபாடினாற் போலே இருந்தது என்று புராண நூல் கூறும். இவர்கள் மத்தினால் ஓசைப்படுத்துவதாவது - 'மறைப்பாற் கடலைத் திருநாவின் மந்தரத்தாற் கடைந்து'[29] என்று **பிள்ளைப் பெருமாள் அய்யங்கார்** பணித்தபடியே நாவசைத்துப் பரம கம்பிரமான தொனியை உண்டாக்குதலாம். முரனைக் கொன்ற கிருட்டிணனது வீரத்திலே தோற்று கிருட்டிணன் பக்கலிலே பக்தி மீதூர்ந்து நின்ற ஆய்ப் பெண் ஒருத்தியை மீட்கும் விரகு ஏதோ என்று ஓர்ந்த அவருடைய அன்னையார் பால், தயிர், நெய் இவற்றைத் தந்து விற்று வருமாறு அனுப்புகின்றாள். இந்தப் பெண்ணும் அங்ஙனமே சென்று விற்று வரும்போது நினைவு கண்ணபிரானின் பக்கல் இருந்தபடியால் 'கோவிந்தன் வாங்கலையோ கோவிந்தன். கிருஷ்ணன் வாங்கலையோ கிருஷ்ணன். மாதவன் வாங்கலேயோ மாதவன்' என்று கண்ணனின் திருநாமங்களைக் கூறிக் கொண்டு திரிந்தாள் என்ற வரலாறு ஒன்று உண்டு. இப்படி ஒருத்தி இருக்கும்போது, தயிர் கடையும்போது கண்ணபிரானைப் பாடுவார்கள் என்பது ஆய மங்கையரின் இயல்பேயன்றன்றோ?[30]

29. திருவரங். கலம்ப. நம்மாழ்வார் துதி.

30. பெரி. திரு. 2.7:5 இல் 'ஓதிலும் உன்பேர் அன்றி மற்றோதாள்' என்ற அடிக்கு உரை கூறும் ஆசாரியர்கள் இந்த ஐதிகத்தைக் காட்டுவர்.

இந்த அடையாளம் சொல்லக் கேட்ட உள்ளிருப்பவள், "பெண்காள் இப்போது இந்த ஆயர்பாடி பண்டு போலவா இருப்பது? கிருட்டிணன் பிறந்த பின்னர் 'வாங்க குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள்' (திருப். 3) எங்கும் இருப்பதனால் அறுபது நாழிகையும் கறப்பது, காய்ச்சுவது, கடைவது என்ற நிலைகள் இயல்பாக உள்ளவை அன்றோ? இதனால் இதுவும் விடிந்ததற்கு அடையாளமாகாது என்று மறுமாற்றத்திற்கு இடம் இல்லாதபடி அவர்கட்கு கூறுகின்றாள். வெளியிலிருப்பவர்கள், வேறு விடை கூற வல்லமையற்றவர்களாகின்றனர். **நாயகப் பெண் பிள்ளாய் :** இப்பெண்களுக்கெல்லாம் நிர்வாகம் பண்ணுபவளாய் இருந்தவாறு இதுவோ?' என்கின்றார்கள். 'நாங்கள் சொல்லுவதற்கெல்லாம் மறுமாற்றம் சொல்லுவது உன்னுடைய் ஐசுவரியச் செருக்கு அல்லவா?' என்று கூறியபடியாம்.

இப்பாசுரத்தில் ஒரு சமயம் **'பேய்ப் பெண்ணே!'** என்பது, மற்றொரு சமயம் 'நாயகப் பெண் பிள்ளாய்' என்று சொல்லுகிறபடி நோக்கத்தக்கது. "ஒரு மிதுனமாய் பரிமாறா நின்றால் தாழச் சொன்ன போதும் உயரச் சொன்ன போதுமாயல்லவா இருப்பது" என்பர் **அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் (ஆறாயிரப்படி).** "பேய்ப் பெண்ணே" என்றதோடு "நாயகப் பெண்பிள்ளாய்" என்றதோடு வாசி (வேற்றுமை) இல்லை அல்லவா? அகவாயில்லாவினை ஒன்றாகையாலே" என்பர் **பெரியவாச்சான் பிள்ளை (மூவாயிரப்படி).** சேஷியாகிய நாகப் பெண் பிள்ளையைப் பேய்ப்பெண்ணே என்று கூறுவதில் தவறில்லை. **நாயகப் பெண் பிள்ளாய் :** இக்கூட்டத்திற்கெல்லாம் நீ தலைவியானபடி இதுவோ? எல்லோரையும் திரட்டிக்கொண்டு சென்று உத்தேசியத்தைப் (அடைய வேண்டிய பொருளைப்) பெறுவதல்லவா தலைவியின் செயல்? என்று ஏசியவாறு. இஃது கூர்ந்து நோக்கத்தக்கது.

இவ்வாறு ஏசக் கேட்ட அவள் 'என்னை நீங்கள் தலைவி என்று சொல்லலாமோ? உங்களுக்கு நான் அடிமைப்பட்டவளன்றோ? இதோ வந்து திறக்கின்றேன் என்கின்றாள். "அதுவரையில் எம்பெருமானுடைய வரலாறுகளைப் பாடிக் கொண்டிருப்போம்" என்று இவர்கள் கேசியின் வரலாற்றைப் பாடுகின்றார்கள். **பெரியாழ்வார் பெண்பிள்ளையாகையாலே** துணுக்கென உணர்வாள் என்று இதனைப் பாடுகின்றார்கள்.[31]

31. கேசியின் வரலாறு : கம்சனால் ஏவப்பெற்ற அசுரர்களில் கேசி என்பவன் குதிரையின் வடிவத்தோடு ஆயர்கள் அஞ்சி நடுங்கும்படி கனைத்துத் தூத்திக் கொண்டு கண்ணபிரான் மீது பாய்ந்து வருகின்றான். அப்பெருமான் தன் திருக்கையை நன்றாகப் பெருக்கி அதன் வாயில் கொடுத்துத் தாக்கிப் பற்களை உதிர்த்து உதட்டைப் பிளந்து அதன் உடலையும் இருபிளவாக வகிர்ந்து தள்ளிக் கொன்றான் என்பதாம்.

**நாராயண மூர்த்தி கேசவனைப் பாடவும் :** நீ எழுந்திருப்பாய் என்று நாங்கள் பாடினோம். கண்ணுக்குத் தோற்றாமல் நின்று நம்மை இரட்சிக்கும் சர்வேசுவரன் தன்னுடைய சௌசீல்யத்தாலே, ஆச்ரிதவத்சன்னனாய் இங்கே வந்து பிறந்து ஆச்ரிதநிரசனத்தைப் பேசின விடத்திலும், பின்னரும் இவர்கள் பேச்சையே தனக்குத் தாரகமாகக் கொண்டு கிடந்தாள். **நீ கேட்டே கிடத்தியோ :** அழகாக உன்னை எழுப்புவதற்காக வழி கண்டோம். நாங்கள் பாடின பாட்டு உன் உறக்கத்திற்குத் துடை குத்தினவாறாயிற்றுப் போலும் என்கின்றார்கள். உள்ளே அவள் எம்பெருமானுடைய வெற்றியையே தாரகமாக அநுசந்தித்துக் கொண்டு கிடப்பதை இவர்கள் சாலக வாசல் வழியாக நோக்கிக் கண்டனர். எம்பெருமானுடைய வெற்றி அநுசந்தானத்தினால் அவள் வடிவில் தோன்றியுள்ள புகரைக் காண்கின்றார்கள். "கருவதத்தின் அன்று பிராட்டி பெருமாளை அணைந்தாற்போலே கேசிவதத்தைக் கேட்டவுடன் நீ எழுந்திருந்து கண்ணனை அணைக்கப்பாராய்" என்கின்றார்கள். **தேசமுடையாய் திற :** உன்னைக் காணப்பெறாதே அந்தகாரமாய்க் கிடக்கின்ற எங்களுக்குக் கதவைத் திறந்து புறப்பட்டு உன்னுடைய நிரவதிகதேசாலே வெளிச்செறிப்பிக்கைக்காகவும், உன்னுடைய அழகைக் காண்பதற்காகவும் நீயே வந்து திறவாய் என்கின்றார்கள். "கிருஷ்ண வெற்றி அநுசந்தானப் பிரீதியாலே நின்ற வடிவிற் பிறந்த தேசு வெள்ளந்தை (கிண்ணகத்தை) கதவை மூடி வைத்துத் தடைசெய்யாதே கதவைத் திறந்து வெள்ளம் செல்லுவதற்கு வழிவிடு" என்கின்றார்கள் என்னவுமாம்.

**உள்ளுறை :** பாகவதர்கள் ஒருவரையொருவர் பிரியும்போது பிரிவுத்துயர் தோன்றப் பேசுவதையும், இரகசியத் திரயங்களை வாயினால் சொல்லுகின்றவர்களான சொரூப, உபாய, புருஷார்த்தங்களை அறிந்த ஸ்ரீ வைணவர்களின் சீர்திருந்திய சம்சாரிகளின் திவ்வியப் பிரபந்த அநுசந்தானத்தையும் கேட்டிலையோ? பாகவத விஷயத்தின் மேன்மையை அறிந்த நீ பகவதநுபவத்தினால் செருக்குற்றிராமல் பாகவதர்கள் உனது பகவதநுபவத்தை உணரும்படியாக வந்து நீ உன் ஞானத்தைப் பிரகாசிப்பிக்க வேண்டும் என்பதாம்.

**மேலும் ஓர் உள்ளுறை :** இது பெரியாழ்வாருக்கு அடுத்த முந்தினவரான குலசேகரப் பெருமாளை உணர்த்தும் பாசுரம். 'பேய்ப்பெண்ணே', 'நாயகப் பெண் பிள்ளாய்', 'தேசமுடையாய்' என்ற மூன்று விளிகளும் குலசேகராழ்வாரை வற்புறுத்துவன. பெருமாள் திருமொழியில் **'மெய்யில் வாழ்க்கையை'** (3), என்ற

ஒரு பதிகத்தினால் தம்மைப் பெரும் பேயனாகச் சொல்லிக் கொண்டவர் இவ்வாழ்வார். **'ஏர்மலர்ப்பூங்குழல்'** (6), **'ஆலை நீள் கரும்பு'** (7) **'மன்னு புகழ்க் கௌசலை'** (8) என்ற பதிகங்களில் பல பெண்களின் தன்மையை அடைந்து பேசினாரும் இவர். 'கொல்லி காவலன், கூடல் நாயகன்' (2.10) என்று அரசரான தன்மை தோற்றப் பேசினராதலால் 'நாயகப் பெண்பிள்ளாய்' என்றது பொருந்துகின்றது. அன்றியும் ஒரு மாலையில் நட்ட நடுவே உள்ள மணியை 'நாயகக் கல்' என்று சொல்லுவதுண்டு. குரு பரம்பரையில் எம்பெருமானான (இராமாநுசரை) நடுநாயகம் என்று **'யதிராஜ சப்ததியில்'** சுவாமி தேசிகன் கூறினார். அதுபோலவே, ஆழ்வார்களுள் குலசேகரர் நடு நாயகமாயுள்ளவர். பொய்கையார், பூதத்தார், பேயார், மழிசையார், மாறன் என முன்னே ஐவர். பட்டநாதன், கோதை, தொண்டரடிப் பொடிகள், பாண்பெருமாள், கலியன் எனப் பின்னே ஐவர். நடுவே குலசேகரர் ஆகவே, இது பற்றியும் 'நாயகப் பெண் பிள்ளாய்' என்ற விளி நன்கு பொருந்தும்.

**தேசமுடையாய்:** பகவத் கீதையில் (18.43) தேஜசை க்ஷத்திரிய தர்மமாகச் சொல்லப்பட்டதற்கிணங்க இந்த விளி இந்த ஆழ்வாருடைய க்ஷத்திரியத்வத்தை தெரிவிக்கும். அன்றியும், **"ஆசாரிய ஹ்ருதயத்தில்"** தேசத்துவம் நிந்தையானவனுக்கு (81) என்ற சூத்திரத்தின்படியும், அதற்கு மூலமான "ஆழி அம் கைப்பேர் ஆயர்க்கு ஆளாம் பிறப்பு - உள்நாட்டு தேசு அன்றே" (பெரி.திருவந். 79) என்ற பெரிய திருவந்தாதிப் பாசுரத்தின்படியும் பகவத் சேஷத்துவத்துக்கு அநுகூலமான பிறப்பே 'தேசு' என்று அறுதியிடப் பெறுகின்றது. அப்படிப்பட்ட பிறப்பை **'ஊனேறு செல்வத்து'** (4) என்ற பதிகத்தில் பாசுரந்தோறும் ஒரே விதமாக விரும்பினவர் இவ்வாழ்வாரேயாதலால் 'தேசமுடையார்' இவரேயாகத் தகும். இப்பாசுரத்தில் **'ஆனைச்சாத்தன்'** என்ற சொல்லாட்சி கவனிக்கத் தக்கது. இச்சொல் மலையாள மொழியிலிருந்து திசைச் சொல்லாகத் தமிழில் வழங்குவதாகச் சொல்வர். 'அனசாதம்' என்று மலைநாடார் வலியன் என்னும் பறவையை வழங்குவராம். இவ்வாழ்வார் மலைநாட்டில் திருவவதரித்தவராதலால் அத்திசைச் சொல் இங்கு பருவமாகவே அமைந்தது போலும். **'காசும் பிறப்பும்'** என்று ஆபரணவிசேடத்தைப் பற்றிக் குறிப்பிட்டிருப்பது இவ்வாழ் வாருடைய சரிதையில் ஆபரணம் பற்றிக் குறிப்பிட்டிருப்பதை ஒருவாறு நினைப்பூட்டும். "ஆரங் கெடப்பரன் அன்பர் கொள்ளாரென்று அவர்களுக்கே, வாரங் கொடுகுடப் பாம்பிற்கை யிட்டவன்"[32] என்று தனியனை நினைப்பது. "வாச நறுங்குழல்

32. தனியன் – மணக்கால் நம்பி.

ஆய்ச்சியர் மத்தினால் ஓசைபடுத்த தயிரரவம்" என்றது. 'பெருமாள் திருமொழியில்' "கெண்டையொண் கண்மட வாளொருத்தி கீழையகத்துத் தயிர் கடைய, கண்டு ஒல்லை நானும் கடைவன் என்று கள்ள விழியை விழித்துப்பக்கு, வண்டமர் பூங்குழல் தாழ்ந்துலாவ வாண்முகம் வேர்ப்பச் செவ்வாய் துடிப்ப, தண்தயிர் நீ கடைந்திட்ட வண்ணம் தாமோதரா மெய் அறிவன்நானே" (6.2) என்ற பாசுரத்துச் சொற்களை நன்கு நினைப்பூட்டும். **நாராயண மூர்த்தி கேசவனைப் பாடவும் :** கிருட்டிணாவதாரத்தில் குதிரை வடிவாக வந்த கேசி என்னும் அசுரனை வதம் செய்ததனால் கேசவன் என்றது. இந்த ஆழ்வார் தமது திருமொழியில் முதன்முதலாக இந்த வரலாற்றையே பேசி அநுபவித்தார், "மாவினைவாய் பிளந்துகந்த மாலை" (1.4) என்ற பல சுருதி பாடலில் "நலந்திகழ் நாரணன் அடிக்கீழ் நண்ணுவாரே" (1.11) என்று நாராயணனைப் பாடித் தலைக்கட்டினார். **கேட்டே கிடத்தியோ :** இந்த ஆழ்வார் நாடோறும் அந்தணர்களைக் கொண்டு இராமாயண பாராயணம் செய்வித்துத் தாம் கேட்டவர். கேட்டு இருந்தவிடத்தில் இராமல் படையெடுத்தும் சென்றவர். அது இவருடைய சரிதையில் தெளிவு.

## 8. கிருட்டிணனால் வேண்டப்படுபவள் ஒருத்தியை எழுப்புவதாகக் கூறுவது

### எட்டாம் பாசுர விளக்கம்

"கீழ்வானம் வெள்ளென்று"

**கீழ்வானம் வெள்ளென்று எருமை சிறுவீடு**
**மேய்வான் பரந்தனகாண் மிக்குள்ள பிள்ளைகளும்**
**போவான்போ கின்றாரைப் போகாமல் காத்துஉன்னைக்**
**கூவுவான் வந்துநின்றோம் கோது கலமுடைய**
**பாவாய் எழுந்திராய் பாடிப் பறைகொண்டு**
**மாவாய்ப் பிளந்தானைமல்லரை மாட்டிய**
**தேவாதி தேவனைச் சென்று நாம் சேவித்தால்**
**ஆவாவென் றாராய்ந் தருளேலோர் எம்பாவாய்**

(சொ-பொ) : கோதுகலம் உடைய பாவாய் - கண்ணனால் மிகவும் விரும்பத்தக்க பதுமை போன்றவளே; கீழ்வானம் - கீழ்த்திசையில் உள்ள ஆகாயம்; வெள்ளென்று - வெளுத்தது; (அன்றியும்) எருமை - எருமைகள்; சிறுவீடு - சிறிது நேரம் மேய்வதற்காக விடும் போதிலே; மேய்வான் - (பனிப்புல்) மேய்வதற்காக; பரந்தன காண் - (நான்கு பக்கத்திலும்) பரவின; போவான் போகின்றார் - (திருவேங்கட யாத்திரை போலே) போவதையே பயனாகக் கொண்டு செல்லுகின்ற; மிக்குள்ள பிள்ளைகளும் - மற்றுமுள்ள எல்லாப் பிள்ளைகளையும்; போகாமல் காத்து - போக வொட்டாமல் தடுத்து; உன்னைக் கூவுவான் - உன்னை அழைத்தற் பொருட்டு; வந்து நின்றோம் - (நாங்கள்) உன் மாளிகை வாசலில் வந்து நிற்கின்றோம்; எழுந்திராய் - (எங்களுடன் கூடுவதற்காக) எழுந்திருப்பாயாக; பாடி பறை கொண்டு - (கண்ணபிரானுடைய குணங்களைப்) பாடுகையாகின்ற புருஷார்த்தத்தைப் பெற்று; மாவாய் பிளந்தானை - (கேசி என்ற) குதிரை வடிவமான அசுரனுடைய வாயைப் பிளந்தெறிந்தவனும்; மல்லரை மாட்டிய - மல்லர்களை மாளச் செய்தவனும்; தேவாதி தேவனும் - தேவாதி தேவனுமான பெருமானை; சென்று - (நாம்) அவனை அணுகி; சேவித்தால் - அடிபணிந்தால்; அப்பிரான் நம் விருப்பத்தை முடிப்பன்; ஆதலால்; ஆ ஆ என்று - ஐயய்யோ என்று அலறிக்கொண்டு (விரைவாக) ஆராய்ந்து அருள் - (நாங்கள் சொல்லுவதை) ஆராய்ந்து புறப்படுவாயாக.

(க-து) : எல்லாரும் வந்து அழைக்கும்படி கிருட்டிணனாலே வேண்டற்பாடுடையாள் ஒருத்தியை எழுப்பும் பாசுரம் இது.

**விளக்கம் : கீழ்வானம் வெள்ளென்று :** 'கிழக்கு வெளுத்தது காண் எழுந்திராய்' என்கின்றார்கள். "அஞ்சுடர் வெய்யோன் அணிநெடுந்தேர் தோன்றாதால்" என்று 'பொழுது புகுந்த போதேயிருந்து கீழைத்திக்கை நோக்கிக் கொண்டிருக்கின்றீர்கள். திங்கள் திருமுகத்துச் சேயிழையாரான உங்களுடைய முகத்தில் ஒளி பிரதிபலிக்கையாலே கிழக்கு வெளுத்தது போல தோற்றுகின்றது. உண்மையில் கிழக்கு வெளுத்ததன்று. இஃது உங்கள் விபரீத ஞானம். இது தவிர விடிவுக்கு வேறு அடையாளம் உண்டாகில் சொல்லுங்கள்' என்று உள்ளே இருப்பவள் கேட்க

**எருமை சிறு வீடு மேய்வான் பரந்தன :** எருமைகள் பனிப்புல் மேய்வதற்காக வயலெங்கும் பரந்தன. நந்தகோபர்க்கு ஆடுகள், மாடுகள், எருமைகள் ஆகிய முத்திறமும் உண்டே, அவற்றின் பின்னே கண்ணன் போவான். பின்னை யாரைக் காண்பது? எழுந்திராய் என்று வெளியிலிருப்பவர்கள் சொல்ல, உள்ளே இருப்பவள், "உங்கள் முகத்தின் ஒளியைக் கண்டு இருள் திரண்டு போகின்றது. இவை எருமைகள் அன்று. இதுவும் விபரீத ஞானம் இருந்தபடியாகும். அருணோதயத்திற்கு அஞ்சி இருள் சிதறிப் போகின்றது என்னவுமாம் - "மேட்டிள மேதிகள் தளைவிடும் ஆயர்கள்" (திருப்பள்ளியெழுச்சி - 4) என்று இவள் தமப்பன்மாரில் ஒருவன் (தொண்டரடிப் பொடிகள்) பெரிய பெருமாளை எழுப்பினார். இவனை இவர்கள் எழுப்புகின்றார்கள். இது ஆழ்வார்கட்கும் இவளுக்கும் வாசி.

**சிறு வீடு :** சிறு வீடு மேய்கையாவது : ஊர்ப் பசுக்களுடன் சென்று வெளி வயல்களில் மேய்வதற்கு முன்னே (பால் கறப்பதற்கு முன்) அவரவர்கள் சொந்தமாக அமைத்த நல்ல பசும்புல் நிறைந்த சிறு தோட்டங்களில் மேய்தல். நன்றாகப் பால் தருவதற்காக இப்படிச் சிறு வீடு மேய விடுதல் ஆயர் வழக்கம்.

வெளியிலிருப்பவர்கள், "மேற்சொன்னவை எங்களுடைய விபரீத ஞானமாக இருக்கட்டும். விடிந்ததில்லை என்பதற்கு அடையாளம் நீ சொல்லாய்" என்று கேட்க, உள்ளே இருப்பவள், "இந்தத் திருவாய்ப்பாடியில் அஞ்சு லட்சம் குடியிலுள்ள பெண்கள் உண்டு. இப்போது இங்கு வந்துள்ள பெண்கள் ஆயிரத்திற்கு மேற்பட்டிரார். மற்றவர்கள் எழுந்துவர வேண்டாவோ? அவர்கள் உணர்ந்து எழுந்துவாராமை விடியாமைக்கு அடையாளமாகும்" என்கின்றாள்.

அதுகேட்ட இவர்கள் "இவ்வளவுதானா நீ உணர்ந்தது? உன்னையொழிந்த அனைவரும் உணர்ந்தெழுந்து புறப்பட்டுப் பாவைகளும் நோக்கிச் சென்றார்கள். **மிக்குள்ள பிள்ளைகளும் :** 'உன்னை யொழிந்தரெல்லாம் ஆற்றாமையாலே போனார்கள். நீயோ எழுப்பக் கிடந்தாய்' என்கின்றார்கள். உள்ளிருப்பவள், 'அவர்கள் என்னை அழையாதே போனார்களே' என்று கூற, இவர்கள், 'பெருந்திரளாகையாலே, நீ அவர்களோடு போந்ததில்லை என்று அறியக் கூடாமையாலும், போகின்றவர்கள் கூடப் போதலே பயனுள்ளதாகையாலும், போனார்களேயன்றி, உன்னை ஆராயாமல் போனார்கள் அல்லர்' என்கின்றார்கள். உள்ளே இருப்பவள் 'என்ன காரியத்துக்குத்தான் அவர்கள் போனார்கள்?' என்று கேட்க, **போவான் போகின்றாரை** 'வழிபோகையே உத்தேச்யமாகப் போனார்கள். தேசத்தை அடைவதிலும் அர்ச்சிராதிகதி, அக்ரூரயானம், திருவேங்கட யாத்திரை போலே, போவதையே பயனாகக் கொண்டு போனார்கள். அர்ச்சிராதி மார்க்கமே போக ரூபமாக இருக்கக் கடவதன்றோ?' என்கின்றார்கள் வெளியிலுளார். உள்ளே இரப்பவள், 'கை காயப் போனர்களாகில் நான் இனி எங்கே போவது?' என்று வினவ, இவர்கள், 'அது செய்தபடி கேட்டிலையோ? நீவாராமை அறிந்தவாறே 'இன்னாள் வந்திலள்' என்று ஒரு வார்த்தை சொல்லும் முன்னர் அவர்கள் திடுக்கிட்டாரைப்போல் கால்நடை நின்றுவிட்டார்கள்' என்கின்றார்கள். **போகாமல் காத்து :** "செய்யாதன செய்வோம்" (2) என்று அடியில் நம்முடைய விவஸ்தையை உணர்த்தி நிவந்திலையே என்று அவர்கள் போகாதபடி தடுத்து. **உன்னைக் கூவுவான் :** உன் வாசலில் வந்து எழுப்பினோம் என்னும் அதிசயம் பெறுவதற்கு. **வந்து நின்றோம் :** "உன்னை அழைப்பதற்காக உன் திருமாளிகையின் திருவாசற் கடையிலே வந்து படுகாடு கிடவா நின்றோம்" என்கின்றார்கள். இராவணபவனத்தை விட்டுப் பெருமான் எல்லையிலே புகுந்தபின் அன்றோ வீடணன் தரித்து நின்றது? 'நீ போந்திலை' என்றபோதே துணுக்குத் தீர உன் வாசலிலே வந்து நல்தரிக்கப் பெற்றோம்' என்கின்றார்கள்.

உள்ளிருப்பவள், "அப்பெண்கள் வட்டம் கிடக்கட்டும். நீங்கள் என் வாசலிலே வந்து நிற்பதற்கு ஏற்றம் என்ன? நீங்கள் என்னை விட்டுத் திரியாதிருக்கின்றீர்கள். நான் உங்கட்கு முகம் காட்டாதிருந்தமைக்கு நீங்கள் என்னை வெறுக்கின்றீர்களோ?" **கோதுகலமுடைய பாவாய்:**[33] கிருட்டிணனுடைய ஆசையைப்

33. கோதுகலம் – 'கௌதூஹலம்' என்ற வடசொல் விகாரம்; ஆசை என்பது அதன் பொருள்; கண்ணபிரானுடைய ஆசையைத் தன்னிடத்துப் பெற்றுள்ள – இவ்வாறு கூறுவர் காஞ்சி அண்ணாசாமி. 'கோதுகலமுடைக் குட்டனேயோ?' என்ற பெரியாழ்வார் வாக்கையும் காண்க.

பெற்றிருப்பவள் நீ. கிருட்டிணன் பக்கல் முகம் பெறலாம் படியன்றேலா நின் மதிப்பு உள்ளது? எங்களுக்கு நின்மீது வெறுப்பொன்றும் இல்லை. உன் பேரைச் சொல்லி அழைப்பதற்கு மேற்பட ஏற்றமுண்டோ எங்களுக்கு? அவனால் சிரசாகவகிக்கப் படுபவளாய், எங்களுக்கு உன்னையொழியச் செல்லாதபடியிருப்பவள், எங்கட்குக் கண்ணன் பக்கல் இட்டுச் செல்ல புருஷகார பூதையாக இருப்பாள் ஒருத்தி நீயன்றோ?" என்கின்றார்கள். **பாவாய் :** ஒரு காரணமும் பற்றாத பெண் தன்மையுடையவளாக இருக்கின்ற உனக்கு எங்கள் ஆற்றாமை தெரியாதிருக்குமா? பெண்ணின் வருத்தமறியாக் கண்ணனைப் போலவா நீயும்?" என்பது குறிப்பு. "முலை எழுந்தாரின் தன்மை மோவாய் எழுந்தார்க்குத் தெரியாதன்றோ?" என்றார் பட்டர். ஒரு பிறவி பிறந்தறிய வேண்டுமன்றோ அதற்கு **எழுந்திராய்:** 'நீ புறப்பட்டு வந்து எங்கள் திரளிலே கலக்க வேண்டா. நாங்கள் உன் வாசலிலே வந்து எழுப்ப, நீ எழுந்திராய் என்னும் ஏற்றம் எங்கட்குத்தாராய்' என்கின்றார்கள்.

உள்ளே இருப்பவள் 'எழுந்திருந்து நாம் எல்லாம் கூடிப் பெறப்போகின்ற பயன்தான் என்ன?' என்று வினவ, இவர்கள், **பாடிப்பறை கொண்டு :** இதற்கு முன்பு நாம் பெற்ற ஐசுவரியம் போலேயோ இப்போது நாம் பெறப்போகும் ஐசுவரியம்? முன்பு நாட்டார்க்குத் தெரியாதபடி நெஞ்சாலே கிருட்டிணனை அநுபவித்து அவ்வநுபவத்தால் பிறந்த பிரீதி புறம் பொசியாதபடி அடங்கிப் போந்தோம். அசுரப் பிரகிருதிகளான இரண்யாதிகள் படை வீடுகள் போலே அவன் திருநாமம் சொல்லுவதற்கும் பொறாமலிருந்தனர். இப்போது நாட்டார் இசைவு தந்தமையாலே வாய்க்கால் வெட்டி நெஞ்சிலே கங்கும் (அணை) கரையும் (இருகரை) அறப் பெருகுகின்ற கிருட்டிண குண அநுபவப் போக்கு அணை வெட்டிவிட்டு கிருட்டிணன் திருநாமங்களை வாயார நினைத்தபடி பாடக் கடவோம். பறை கொள்ளுகையாவது - நாட்டார்க்கு நோன்பு தங்களுக்குச் சேவிக்கையே பயன் என்கின்றார்கள். "உன்றன்னோடு உற்றோமேயாவோம். உனக்கே நாம் ஆட்செய்வோம்" (29) என்னக் கடவர்களல்லவா?

உள்ளிருப்பவள், "எதனைப் பாடுவது?" என்று வினவ, **மாவாய் பிளந்தானை மல்லரைமாட்டிய:** கண்ணனுடைய வீர சரித்திரங்களைப் பாடி: **மாவாய்ப் பிளந்தானை:** நமக்காகக் கேசியைக் கொன்று, நம்மையும் தன்னையும் உண்டாக்கித் தந்தவனை தன்னை நாம் கிட்டி அநுபவிப்பதற்கு ஈடாக, திருவாய்ப்பாடியிலும் பிருந்தா வனத்திலும் உண்டான வன்னியம் அறத்து, பெண்ணும் பேதையும்

சகடச் சாத்தாகப் போம்படி பண்ணினவன் நம் காரியம் செய்யானோ? செய்வான். அவனைப் பாடக்கடவோம். **மல்லரைமாட்டிய :** அங்கு, போயும் நம் போன்ற பெண்கள் காரியமன்றோ செய்தது. அது தங்கட்கு உதவிற்றென்றிருக்கும்படி. **தேவாதிதேவனை :** அயர்வறும் அமரர்கள் அதிபதியாயிருக்கின்றவனை அப்படிப் பெருமை யுடையவன். வடமதுரையிலே போய் குவலயா பீடம், சாணூர முஷ்டிகரை அழியச் செய்து, படை வீட்டில் பெண்களோடு பழகத்தாலே பெரிய சமர்த்தனானவன் இடக்கையும் வலக்கையும் அறியாத அபலைகளான நம்பக்கலில் வரக்கூடுமோ?' என்று உள்ளிருப்பவள் கேட்க, இவர்கள், 'அது நம் பேறன்றோ? அவன் இருந்தபடியே உத்தேச்யனன்றோ நமக்கு? நாம் போய் சேவிக்கின்றோம். **சென்று :** விரகந் தின்ற குறைகொள்ளியான நம் சரீரத்தை அவன் கண்டு நெஞ்சிலே புண்படும்படி அவன் இருந்த இடத்தே செல்லக்கடவோம். **சென்று நாம் சேவித்தால் :** அத்தலை இத்தலையாய், அவன் வருகையும் சேவிக்கையும் தவிர்ந்தால், நாம் சென்று சேவித்தலாவது நடைபெறும் அன்றோ? அப்படி சேவித்தால் நம் காரியம் செய்யாதொழியுமோ? செய்திலனாகில் பரதாழ்வான் பட்டது படுகின்றோம். **சென்று :** அவன் வர பிராப்தமாயிருக்க நாம் சென்று. அதாவது சர்வசேயான எம்பெருமான் சேஷபுதர் இருக்கும் இடத்தே வந்து அருள் புரியக் கடமையுடையவனாயிருந்தும், அங்ஙனம் அவன் செய்யாதொழியில் நம் சொருபத்தைக் குலைத்துக் கொண்டாகிலும் அவன் இருக்கும் இடத்தேறச் சென்று சேவித்தால், மேற்சொன்னவையெல்லாம் நமக்கு இல்லையாகிலும் ஆர்த்தி கண்டால் காகத்திற்கு இரங்கினவன் நமக்கு இரங்கானோ? **ஆஆ என்று ஆராய்ந்தருள் :** 'உகவாதார் பெறுவது உகந்தார்க்குக் கிடையாதோ? முறைகெட்நாம் சென்று சேவித்தால், வந்தேறியான பிரணயித்வம் அன்றோ போகலாவது? ஆர்த்தர் பக்கம் பண்ணும் கிருபையும் போமோ? தான் உளனானால் உண்டானது போமோ? பாடிப்பறை கொள்ளுகின்றோம். அவனுக்குப் பிரியமான கைங்கரியம் பண்ணுகின்றோம். இவ்வகைகளினாலே அவனை உகப்பிப்பதல்லவா நம் சொரூபம்? ஆகவே, அவனருளுக்குக் காரணபூதையான நீ எழுந்திராய். ஆஆ என்று அவன் ஆராய்ந்தருள்வான். நிச்சயம் கிருபை பண்ணுவான்' என்கின்றார்கள்.

**உள்ளுறை :** பாகவதரிடத்திலே மிக்க அன்புடைமையாலே பகவானுக்கு மிகவும் விருப்பமானவரான முக்தர்போல் இருக்கின்ற பாகவதர் ஒருவரை முன்னிட்டுக் கொண்டு பகவானைக் கிட்டுவதற்கு ஏற்ற காலம் வந்ததென்று சொல்ல எழுப்புதல் இப்பாசுரத்திற்கு

உள்ளுறைப் பொருள். முதல் இரண்டடிகள் சத்துவ குணம் தலை எடுக்கத் தமோகுணம் விலகிப் போவதைக் குறிப்பிக்கும்.

**மேலும் ஓர் உள்ளுறை :** குலசேகராழ்வாருக்கு முந்தியவரான நம்மாழ்வாரை[34] **உணர்த்தும்** பாசுரம் இது. பட்டர் நம்மாழ்வாரைப் பற்றிப் பேசும்போது கிருஷ்ண குதூகலமே நம்மாழ்வாராக வடிவெடுத்தது என்றார். அவர் **'கிருஷ்ண கிருஷ்ண'** என்றதும் 'கிருஷ்ணனிடத்தில் திருஷ்ணை', 'கிருஷ்ணனுடைய திருஷ்ணை' என இருவகையாகவும் விரியும். இதனால் **தேறின** பொருளை "கைம்மாதுதுன் பொழிந்தாயென்று கைதலை பூசலிட்டே, **மெய்ம்மாலாயொழிந்தேன் எம்பிரானுமென் மேலானே"** என்ற பாசுரத்தினால் நம்மாழ்வார் தாமே வெளியிட்டருளினார். "நானும் எம்பெருமானிடத்துக் குதூகலங்கொண்டேன், அவனும் என்னிடத்துக் குதூகலம் கொண்டான்" என்று அருளிச் செய்தவர் நம்மாழ்வார். **'பாவாய்!'** என்ற விளியும் இவருக்குப் பொருந்தும். **'பாலனாய்'** (4.2) திருவாய்மொழியில் "சூழ்வினையாட்டியேன் பாவையே" என்றும் **"உண்ணும் சோறு"** (6.7) என்பதில் "என்பாவை போயினித் தண் பானத்திருக்கோளூர்க்கே" (3) என்றும் பலவிடங்களில் தம்மைப் பாவையாகச் சொல்லிக் கொண்டவர் இவ்வாழ்வார். **'எழுந்திராய்'** நன்கு நோக்கத்தக்கது. உட்கார்ந்திருப்பவரையன்றோ 'எழுந்திராய்' என்பது? மற்றையாழ்வார்கள் எல்லோரும் அர்ச்சையில் நின்ற திருக்கோலமாகவேயுள்ளனர். நம்மாழ்வார் ஒருவரே வீற்றிருந்த திருக்கோலம்.

**கீழ்வானம் வெள்ளென்று :** ஆதவன் உதய காலத்தில் கிழக்கு வெளுக்கும். இங்கும் வகுள பூஷண பாஸ்கரோதய மாதலாலும், அது கலியுகத்தின் உதய காலத்திலாதலாலும் கிழக்கு வெளுத்தாகச் சொல்லப்பெற்றது. கீழ்வானம் என்ற போதே மேல் வானம் நினைவிற்கு வரும். மேல் வானம் என்பது நித்திய விபூதி. லீலாவிபூதியானது நம்மாழ்வாரின் திருவாய்மொழியவதாரத்திலே "ஓராயிரத்துள் இப்பத்தும் உரைக்க வல்லார்க்கு வைகுந்தமாகும் தம்மூர் எல்லாம்" (5.3.11), "வையம் மன்னி வீற்றிருந்து விண்ணும் ஆள்வர் மண்ணூடே" (4.3.11) "இவை பத்தும், சோரார், விடார் கண்டீர் வைகுந்தம் திண்ணனவே" (2.1.11), "இப்பத்தும், கூறுதல் வல்லார் உளரேல் கூடுவர் வைகுந்தமே" (2.5.11), "இப்பத்தும், தழுவப் பாடி ஆட வல்லார் வைகுந்தம் ஏறுவரே" (4.7.11), "இப்பத்தால், வயிரம் சேர் பிறப்பறுத்து வைகுந்தம் நண்ணுவரே" (4.8.11ஸ்ரீ, "இப்பத்தும் வல்லார், மீட்சியின்றி வைகுந்த மாநகர் மற்றது

34. வரலாற்றாசிரியர்கள் இவரை ஐந்தாவது ஆழ்வாராக ஒப்புக் கொள்வதில்லை.

கைதுவே" (4.10.11) இவை போன்றவற்றின்படியே பரமபதமாயிற்று. ஆகவே, கீழ்வானமான இவ்விபூதி வெள்ளென்றது.

**எருமை சிறு வீடு மேய்வான்** : வீடு என்பது மோட்சம். சிறு வீடு என்பது கைவல்ய மோட்சம். இந்த சங்கதேமிட்டருளினவர் நம்மாழ்வார். திருவாய்மொழியில், "குறுக மிக உணர்வத்தொடு நோக்கி" (திருவாய். 4.1.10) என்ற பாசுரத்தின் பொருள் கொண்டு இஃது அறியத்தக்கது. பகவதநுபவமாகிற மோட்சம் விகாச மோட்சம் என்றும், ஆன்மா நுபவமாகிற மோட்சம் சங்கோசமோட்சம் என்றும் வழங்கப்பெறும். ஆன்மாநுபவத்தையே மோட்சமாக நினைத்திருக்கும் பகவானை உபாயமாகப் பற்றுதல் இல்லையாகில் சிறிய பேறுகளை நினைப்பதற்குக் காரணமான ஒரு பற்று உண்டாகும். அதற்குமேல் அம்மோட்சமும் இல்லை, ஆனபின், ஒருவித குற்றமும் இல்லாத இறைவனை அடைந்து, அகலா தொழிவானேயானால், அதுவே பரம புருஷார்த்தமான மோட்சமாகும் - இதுவே இப்பாசுரத்தின் கருத்தாகும். எருமை என்பது தாமசபிரகிருதிகளே. நம்மாழ்வார் திருவவதாரம் செய்தருள்வதற்கு முன்பு பலரும் தாமசப்பிரகிருதிகளாய் நல்வீடு செலலாது சிறு வீடு முதலியவற்றில் சென்று பாழாயினர் என்பது இங்கு குறிப்பு.

**மிக்குள்ள பிள்ளைகளும்... முதலியவை** : மற்றைய பிள்ளைகளையும் போகவொட்டாமல் தடுத்து இப்பிள்ளை வாசலில் வந்து தவள்வதனால் இவருக்குண்டான விலட்சணமான ஏற்றம் தோற்றுவது போல், மற்றைய ஆழ்வார்களை விட நம்மாழ்வாருக்கு உண்டான பிரபந்நஜன கூட ஸ்தராகிற ஏற்றம் தோற்றுவிக்கப் பெற்றது. **'போவான் போகின்றாரை'** என்ற பிரயோகம் மிகவும் ஆச்சரியமானது. 'போவதற்காகப் போகின்றவர்கள்' என்று சொல்லுவதுண்டோ? இல்லை. அப்படியிருக்க ஏன் சொல்லப்பட்டது? போவதுதானே சுயம் பயன் என்று காட்டுவதற்காகவே இவ்வாறு சொல்லப்பட்டது. இத்தகைய பிரயோகம் முதன்முதலாக நம்மாழ்வார் திருவாக்கில்தான் எழுந்துள்ளது. திருவிருத்தத்திடல் போவான் வழிக் கொண்ட மேகங்களே (31) என்ற ஆட்சியைக் காண்மின்.

**உன்னைக் கூவுவான் வந்து நின்றோம்** : 'கூவிக் கொள்ளும் காலம் இன்னங்குறுகாதோ?' (திருவாய் 6.9.9) 'என்னைக் கூவியருளாய் கண்ணனே?' (மேலது 5.1.4) "கூவிக் கொள்ளாய் வந்தந்தோ? (மேலது 10.10.3) 'கூவியும் காணப் பெற்றேன் உனகோலமே' (4.7.3) என்று பலகாலும் ஆழ்வார் விரும்பினபடியே 'கூவுவான் வந்து நின்றோம்' என்கின்றாள்.

**மாவாய்ப் பிளந்ததேவாதி தேவனை :** இப்போது ஆண்டாள் நோற்ற நோன்புபோல் நம்மாழ்வாரும் நோன்பு நோற்றார் என்பதை ஒரு திருவாய்மொழியில் காண்கின்றோம். **'வீற்றிருந்து ஏழ் உலகும்'** (4.5.1) என்ற திருவாய்மொழியில் 'சொல்மாலைகள் ஏற்ற நோற்றேற்கு' (10) என்ற இறுதிப் பாசுரத்திலும் குறிப்பிடுவதைக் கண்டு மகிழலாம். அங்ஙனம் நோற்றதாகக் கூறும் திருவாய்மொழியில் தேவாதிதேவனை அநுபவிப்பதாகக் கூறும் ஆழ்வார் 'மாவாய்ப் பிளந்தான்' என்ற விசேஷணத்தையே முதற் பாசுரத்திலேயே 'வெம்மா பிளந்தான் தன்னை' என்று குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

திருவிருத்தத்தின் முதற் பாசுரத்தில் 'இமையோர் தலைவா' என்றும் திருவாய்மொழியின் முதற்பாசுரத்தில் 'அயர்வறும் அமரர்கள் அதிபதி' என்றும் முந்துற முன்னம் எம்பெருமானைச் சேவித்தார் ஆழ்வார். **சென்று நாம் சேவித்தால் :** "வான நாயகனே அடியேன் தொழ வந்தருளே" என்று தேவாதி தேவனை நீர் உம்மிடம் வருமாறு அழைத்தீர். அங்ஙனமல்லாமல் அவனிடம் நாம் சென்று சேவிக்கலாம் வாரும் என்று ஆண்டாள் அழைக்கின்றாள் போலும்! **"ஆஆ என்று:"** "ஆவாவென இரங்கார் அந்தோ வலிதே கொல், மாவாய்ப் பிளந்தார் மனம்" என்றும், "அடியேற்கு ஆவா வென்னாயே" என்றும், "நீர் விரும்பினபடியே மாவாய்ப் பிளந்த பெருமான் உமக்கு 'ஆவா வென்பன்' என்று காட்டுகிறபடி. **ஆராய்ந்து :** "ஆரென்னை ஆராய்வார்" என்ற உம்முடைய குறையும் தீரும் என்று காட்டியபடி.

## 9. கிருட்டிணனை அநாதரித்துக் கிடப்பாள் ஒருத்தியை எழுப்புவதைக் கூறுவது

ஒன்பதாம் பாசுர விளக்கம்

"தூமணி மாடத்து"

**தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரியத்**
**தூபம் கமுதாத் துயிலணைமேல் கண்வளரும்**
**மாமான் மகளே மணிக்கதவம் தாள்திறவாய்**
**மாமீர் அவளை எழுப்பீரோ? உன்மகள்தான்**
**ஊமையோ? அன்றிச் செவிடோ? அனந்தலோ?**
**ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ?**
**மாமாயன் மாதவன் வைகுந்தன் என்றென்று**
**நாமம் பலவும் நவின்றேலோர் எம்பாவாய்**

(சொ-பொ): தூமணிமாடத்து - குற்றமற்ற மணிகள் அழுத்திச் செய்யப்பெற்ற மாளிகையிலே; சுற்றும் - படுக்கையைச் சுற்றிலும்; விளக்கு எரிய - விளக்குகள் எரிந்து கொண்டிருக்கவும்; தூமம் கமழ - (அகில் முதலியவற்றின்) புகைகள் மணம் வீசவும்; துயில் அணைமேல் - உறங்குவதற்கு உரிய படுக்கையின்மீது; கண்வளரும் - கண் உறங்குகின்ற; மாமான் மகளே - அம்மான் பெண்ணே; மணிக்கதவம் - மாணிக்கக் கதவினுடைய; தாள் - தாழ்ப்பாளை; திறவாய் - திறந்திடுவாயாக; மாமீர் - மாமிமார்களே; உன்மகள்தான் - உன்மகளானவள்; ஊமையோ - வாய்ப்புலன் இல்லாதவளோ; அன்றி - அல்லாமல் போனால்; செவிடோ - செவிப்புலன் இல்லாதவளோ; அனந்தலோ - படுக்கையில் சாய்ந்தது இப்போதோ; (எழுந்திராதபடி) ஏமப்பட்டாளோ - காவலிடப்பட்டாளோ; பெருந்துயில் - நெடும்போது உறங்கும்படி; மந்திரப்பட்டாளோ - மந்திரவாதத்தினால கட்டுப்படுத்தப் பெற்றாளா என்று தாயாரைக் கேட்க; (அவள் என் மகள் உணரும்படி எம்பெருமான் திருநாமங்களைச் சொல்லுங்கள் என்ன); மாமாயன் - மிகவும் ஆச்சரியச் செயல்களையுடையவனே; மாதவன் - திருமகள் கேள்வனே; வைகுந்தன் - வைகுந்த நாதனே; என்று என்று - என்று பலகால சொல்லி; நாமம் பலவும் - திருநாமங்கள் பலவற்றையும் (அவனுடைய திருநாமங்களையும்) நவின்று - சொன்னோம்; (உள்ளே உறங்குகின்ற) அவளை - உன் மகளை; எழுப்பீரோ - எழுப்பமாட்டீரோ?

(க-து) : கிருட்டிணன் வரும்போது வருகின்றான் என்று அவனிடம் சேர்தலை அநாதரித்துக் கிடக்கும் மைத்துமை உறவுடையாள் ஒருத்தியை எழுப்பும் பாசுரம் இது.

**விளக்கம் : தூமணிமாடத்து** : நம்மாழ்வார் திருவாய்மொழியில் "துவளில் மாமணிமாடம் ஓங்கும் தொலைவில்லிமங்கலம் தொழும்" (6.5.1) என்றார். இங்கு அங்ஙனமின்றித் 'தூமணிமாடம்' எனப்படுகின்றது. இரண்டிற்குமுள்ள வேற்றுமை என்ன? எனில் : 'துவல்இல்' என்ற அடைமொழியினால் தொலைவில்லி மங்கலத்து மாடங்களின் மணிகள் முதலில் துவளுற்றிருந்து பின்னர் துவளற்றனவாயின என்பது தோற்றுவிக்கப்பெறும். (துவள்இல் - என்பதற்கும் 'குற்றமற்ற' என்பதுதான் பொருள்). இங்கு, தூ என்ற அடைமொழியினால் - இங்குள்ள மணிமாடங்கள் பிறப்பே தொடங்கிப் பரம பாவநங்களாய் எஞ்ஞான்றும் துவளின் (குற்றத்தின்) சம்பந்தப் பெறாதன என்பது தோற்றுவிக்கப் பெறும். (தவள் - கற்றம், தோஷம்). இங்கு முக்தர் தன்மையையும் நெஞ்சில் கொள்ளவேண்டும். முக்தர் - சில நாள்வரை சம்சார சாகரத்தில் அழுந்திக் கிடந்து, பின்பு அப்பற்று நீங்கப் பெற்றோர் (இது துவளில் என்ற தன்மைக்கு ஒக்கும்). நித்தியர் - ஒரு நாளும் சம்சார சம்பந்தமே இல்லாதவராய் விஷ்வக் சேனர்கள் போல்வார் (இது தூ என்ற தன்மைக்கு ஒக்கும்).

**சுற்றும் விளக்கெரிய** : மாணிக்கத்தின் ஒளியாலே பகல் விளக்குப் பட்டிருக்கச் செய்து மங்களார்த்தமாக விளக்கு எரிகின்றது. கிருட்டிணன் வந்தால் தன் கையைப் பிடித்து உலாவும் இடம் உட்படக் கடுக்கையும் விளக்கு வைத்தபடி. புறம்பே நின்று துவள்கின்ற எங்கள் நெஞ்சு இருண்டு புகையாநிற்க உள்ளே சுற்றும் விளக்கு எரியும்படியாகப் பெற்ற பாக்கியமே பாக்கியம் என்னும் வயிற்றெரிச்சல் தோற்றுமாறு பெறப்படும். வெளியில் நின்று மணிக்கதவம் தாள் திறவாய் என்கின்றவர்கட்கு உள்ளே விளக்கெரிந்தது தெரிவது எங்ஙனே என்னில் : மாணிக்கக் குப்பியிலே அகவாயிலுள்ளது நிழலிற்றுத் தோற்றுமாறு போலே, தூமணி மாடமாகையாலே உள்ளே எரிகின்ற விளக்கு தோற்றமல்லவா? என்பர் **அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் (ஆறாயிரப்படியில்).**

**தூபம் கமழ** : இங்கு சொல் நயத்தால் கண்ணுக்குப் புகை தோற்றாமல் வெறும் பரிமளம் வெள்ளமிட்டுத் தோன்றுவதைக் குறிப்பிடுகின்றது. **கமழ - கண்வளரும்:** பரிமளம் சிறிது குறையினும் கண்ணுறங்கா நிலை தோன்றும். **துயிலணை மேல் கண் வளரும் :** துயிலணை - படுத்துக் கொண்டவுடனே உறக்கத்துக்குப்

பரவசமாக்கவல்ல படுக்கை மெத்தை. விரகத்தால் துன்புறு பவர்களையும் உறங்க வைக்கக்கூடிய படுக்கை. இதனால் அப்படுக்கையின் மென்மை, குளிர்ச்சி முதலிய குணங்கள் விளங்கும். "மென் மலர்ப்பள்ளி வெம்பள்ளியாலோ" என்றவாறு நாங்கள் பள்ளியில் சாயப் பெறாதே இருக்க, துயிலணையில் கண் வளர்வது நமது நட்புக்கு நன்றாகப் பொருந்துமம்மா. இளைய பெருமாளைப் போலே உறங்காமைக்கு நாங்களும், உறங்குவதற்கு நீயுமாய் விட்டோமன்றோ? அபிமத இலாபம் அவனால் ஆகக்கூடியது என்றிருந்தால் இவர்கள் பதறுவானேன் என்றிருந்தாள் உள்ளே இருப்பவள். அவனே உபேயமாகில் இவள் கிடந்து உறங்குவது ஏன்? என்றிருந்தார்கள் இவர்கள் என வெளியிலுள்ளார் வெறுத்துக் கூறுகின்ற சொற்போக்கு இதனால் புலனாகின்றது 'துயிலணைமேல் உறங்கும்' என்னாது 'கண்வளரும்' என்றது - பகவத் விஷயத்தில் மூழ்கினவர்கள் கௌரவிக்கத்தக்கவரென்ற கருத்தைப் புலப்படுத்துவதற்காக என்பது அறியப்படும். ஊடே வெறுத்துக் கூறுவனவெல்லாம் தங்களது ஆற்றாமையின் செயல் என்பது நினைவில் இருத்தத்தக்கது.

**மாமான் மகளே** : சுவாமினியாயும் தோழியாயும் அநுபவித்த தொழிய, பிரகிருதி சம்பந்தத்தாலும் ஆண்டாள் அநுபவிக்கின்றாள், மாமான் மகளே என்று. வார்த்தையிட்டு வார்த்தை சொல்லுவதற்கு விடவொண்ணாத உறவு கொள்ளுகின்றாள். இவள், திருவாய்ப்பாடியிலே ஒரு பிராக்ருத சம்பந்தம் தனக்கு உஜ்ஜீவனம் என்றிருக்கின்றாள். பகவத் சம்பந்திகளுக்கெல்லாம் அடிக்கழஞ்சு (சிலாக்கியம்) பெற்றிருக்கின்றபடி. **மணிக்கதவம் தாள் திறவாய்** 'மாட மாளிகையாகையாலும் மணிக்கதவாகையாலும் சுவருக்கும் கதவுக்கும் வேற்றுமை தெரிகிறதில்லை. தேசிகரே திறக்க வேண்டும், நீயே திறவாய்' என்கின்றார்கள். **மணிக்கதவம் தாள் திறவாய் :** துரியோதனன் நீருக்கும் படிகத்திற்கும் வேற்றுமை அறியாமல் தடுமாற, திரௌபதி சிரித்தாற்போலே, மைத்தனமை கொண்டாடிச் சிரிக்கவொண்ணாது. ஏனென்றால், புறம்புள்ளாருக்கு உள்உள்ளவை தெளிவாகத் தெரிவன போலே, உள் உள்ளார்க்கும் புறம்புள்ளாரின் ஆர்த்தி தெரியாதல்லவா?

இவர்கள் ஆர்த்தைகளாய் புறம்பே நின்று துவள்வதை உள்ளே இருப்பவளின் திருத்தாயர் அறிந்து, இதயத்தின் இரக்கம் முகத்தில் தோற்றும்படியாய், மகளை நோக்கி, "அவர்கள் அழைக்கின்றார்களே, நீ சுயநலங்கொண்டு வாய் பேசாது கிடந்து உறங்குகின்றாயே இஃது ஏன்?" என்று கேட்கின்றாள். இதனை வெளியிலிருந்தவர்கள் அறிந்து

'மாமீர்' என்கின்றார்கள். அவள் திருத்தாயார் என்று சம்பந்தி சம்பந்திகளும் இவர்களுக்கு உத்தேச்யராய் இருக்கிறபடி. 'தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன்' (திருவாய் 8.9.11) என்றும் "அடிகள் அடியே நினையும் அடியவர்கள் தம் அடியான்" என்றும் ஆழ்வார் சொன்னபடியே "அன்னையும் அத்தனும் என்றல்லவா இவள் இருப்பது? **அவளை எழுப்பீரோ** எங்கள் ஆர்த்திக்கு உணராதவள் உங்கள் இரப்பிக்கோ உணரப்புகுகின்றது? இவ்வளவினும் உணரக் காணாமையாலே சீக்கிரமாகச் சீற்ற முண்டாய் **'உன்மகள்'** என்கின்றார்கள். **உன் மகள்தான் ஊமையோ:** உன் மகளுக்குப் பேசத் தெரியாதோ? ஆர்த்தரை ஐயோ என்ன வொண்ணாதபடியோ இருப்பது? **அன்றிச் செவிடோ:** ஊமையும் கேட்டுவந்து திறக்கலாம். அதுக்குமேலே செவியில் துளை இல்லையோ? ஆர்த்தைகளான உன் மகள் உள்ளே செய்யும் காரியம் என்னோ? **அனந்தலோ:** கிருட்டிணனுக்கு நெடும்போது ஆடல் கொடுத்துப் படுக்கையில் சாய்ந்தது இப்போதுதானோ? **ஏமப் பெருந்துயில் :** ஏமம் என்பது - காவல். எங்களை உறங்காதபடி பண்ணினாப்போலே, இவளையும் உணராதபடி காவலிட்டாருண்டோ? **மந்திரப்பட்டாளோ :** நெடும்போது உறங்கும்படி மந்திரவாதம் பண்ணினார் உண்டோ? "மையல் ஏற்றி மயக்க உன்முகம் மாயமந்திரந்தான் கொலோ?" (நாச்.திரு. 2.4) என்று அம்மான் பொடி[35] தூவினார் உண்டோ? எனல்.

இவர்கள் இவ்வாறு வினவக்கேட்ட திருத்தாயார், "பெண்டீர்காள் நீங்கள் இவளது பிரகிருதியை உணர்ந்திருந்து இவளை உணர்த்த வேண்டும் முறையை உணரவில்லையே. இவ்வாறு எழுப்பினால் இவள் எழாள். தென்றலும் சிறுதுளியும் பட்டாற்போல இவள் உகக்கும் எம்பெருமானின் திருநாமங்களை வாயார அநுசந்தித்தீர்களாகில் சடக்கென்று எழுந்து வருவாள் என்று சொல்ல, இவர்கள், "நாங்கள் சொன்ன திருநாமங்கள் அநேகம் அன்றோ?" என்கின்றார்கள். "அவைதாம் எவை?" என்று திருத்தாயார் கேட்க, இவர்கள் அவற்றைப் பாசுரத்தின் இறுதி இரண்டு அடிகளால் சொல்லுகின்றார்கள்.

**மாமாயன் :** அபலைகளான பெண்களைத் தன் வசப்படுத்திக் கொள்ளுதற்கேற்ற ஆச்சரிய குண சேஷ்டிதங்களையுடையவன்.

35. அம்மான் பொடி – அம்மான் அம்மான் என்று சொல்லிக்கொண்டு பின் தொடரும்படி செய்யும் சொக்குப்பொடி. முற்காலத்தில் பிள்ளைகளை மயக்கிக் கவர்ந்து செல்லும் கள்வர்கள் இருந்தனர். அவர்கள் குழந்தைகளைத் தம் வசப்படுத்துவதற்காக அவர்கள் மீது ஒருவித பொடியைத் தூவுவர். அந்தப் பொடி பிள்ளைகள் மீது பட்டதும், அவர்கள் அம்மான், அம்மான் என்று சொல்லிக்கொண்டு செல்வர் – என்பது.

**மாதவன்** : இடக்கை வலக்கை அறியாத இடைச்சிகளை மட்டிலும் வசப்படுத்திக் கொண்டவன் அல்லன், அவன். 'வேரிமாறாத பூமேலிருப்பவளை' (திருவாய் 4.5.11) இறையும் அகலவொண்ணாத படி மார்பில் அழுத்திக் கொண்டுள்ளவன். **வைகுந்தன**: இங்ஙனம் பெண்களை மாத்திரம் தோற்பிக்குமவனல்லன். கண்கள் அஞ்சாமலேயே கண்டபடி நிற்கும் நித்திய சூரிகளை ஒரு நாடாக உடையவன். அப்பெரிய மேன்மையையுடையவனானவன் தான் திருமகள் கேள்வன். இவன்தான் பெண்களுக்கு எளியவனாக இருக்கின்றான். **என்றென்று நாமம் பலவும் நவின்று** : "இங்ஙனம் மேன்மைக்கு அடியான திருநாமங்களும், நீர்மைக்கு அடியான திருநாமங்களும், இரண்டுக்கும் நிதானமான ஸ்ரிய பதத்துவத்துக்கு வாசகமான திருநாமங்களுமாக ஓராயிரத்திற்குப் போதும்படியான - ஒரு சகஸ்ர நாமத்திற்குப் போதும்படியான திருநாமங்கள் ஒருக்கால் இருக்காலோ சொன்னோம். பலகாலும் சொன்னோம். ஏன்? சகஸ்ர நாமம் உட்படச் சொன்னோம். மாமீர் அவரை எழுப்பிவிடுங்கள்" என்கின்றார்கள்.

**உள்ளுறை** : 'குற்றமற்ற திருமேனியிலே ஞானம் பிரகாசிக்கவும், அநுட்டானங்கள் குறைவின்றி இருக்கவும், பகவானையே உபாயமாக உறுதியாக நம்பி அப்பரமனுக்குப் புத்திர நிலையிலுள்ள பாகவதரே உம்மையநுபவிக்க விரோதியான எங்கள் தேகாத்மாபிமானங்களைப் போக்குவீர்' என்னவும், அப்படிப்பட்ட ஞானாதிக்கியம் அவருக்கு உண்டாவதற்குக் காரணமான **அநந்யோபாயத்துவம்** (எம்பெருமானைத் தவிர வேறொன்றை உபாயமாகப் பற்றாமை) ஆகிற சொரூப ஞானம் 'சிலர் இப்படியழைக்க வாளா இருப்பானேன்?' என்ற ஞானத்தை அவர்க்கு உண்டாக்க, அந்த ஞானத்தை நோக்கி, 'உன் மகள் தான் ஊமையோ?' முதலிய வாசகங்கள் சொல்லுகிறது. ஏமப் பெருந்துயில் மந்திரப்பட்டாளோ - நமஸ்ஸால் ஸ்வப்பிரவிருத்தி (தான் ஒரு காரியத்துப் புகுகை)யினின்றும் மீட்கப்பட்டாளோ? என்றபடியாம்.

**மற்றுமோர் உள்ளுறை** : நம்மாழ்வாருக்கு அடுத்து முந்தினவரான **திருமழிசையாழ்வாரை உணர்த்தும்** பாசுரம் இது. இப்பாசுரத்திலுள்ள **மாமான்மகளே!** என்ற விளி ஒருவகையான உடல் சம்பந்தத்தில் நோக்குடையது. ஆண்டாளுக்கும் திருமாசையாழ்வாருக்கும் ஒருவகையான உடல் சம்பந்தம் உண்டு. **வேதாந்த தேசிகர்** 'கோதாஸ்துதி'யில் அருளிச் செய்துள்ளபடி ஆண்டாள் மகாலட்சுமி ஆவள். வடமொழி அமர கோசத்தின்படியும் இதிகாச புராண வரலாற்றின்படியும் ஆண்டாள் பிருகு குலத்தில் தோன்றியவள். திருமழிசைபிரானும் பிருகு குலத்தில் தோன்றியவர் என்பது வரலாறு.

இத்தகைய சமான குல சம்பந்தம் ஈண்டு நோக்கத்தக்கது. இருடி குலத்தில் பிறந்த பக்திசாரர் பிரலம்பன் குடியினரானார். பார்ப்பனர் குலத்தில் பிறந்த ஆண்டாள் கோபாலர் குலத்தினள் ஆனாள். இதுவும் ஓர் ஒற்றுமை நயம்.

**தூமணிமாடத்து** : சிறந்த மாணிக்கக் குப்பியிலேயுள்ளது வெளியில் நிழலிட்டுத் தோன்றும். திருமழிசைபிரான் "உட்கிடந்து வண்ணமே புறம் பொசிந்து காட்டிடே" என்று வேண்டிக் கொண்டபடி அந்தர்மியாக இருந்த திருமால் அப்படியே வெளியில் பொசிந்து காட்சி தந்தமையால் இவர் 'தூமணி மாடம்' எனத் தகுதியுடையார்.[36]

**சுற்றும் விளக்கெரிய** : விளக்காவது ஞானவொளி. "சாக்கியம் கற்றோம் சமண்கற்றோம் சங்கரனார் ஆக்கிய ஆகம நூல் ஆராய்ந்தோம்"[37] என்றபடி இவ்வாழ்வார் பல சமயங்களிலும் புகுந்து பலமுகமான ஞானவிளக்கம் பெற்றவராதலால் 'சுற்றும் விளக்கெரிதல்' இவருக்கு அசாதாரணம். "வானவர்தம் மெய்ப்பொருளை அப்பில், அருபொருளை யான் அறிந்தவாறு - ஆர்அறிவார்" (நான்.திருவந்.3) என்றும் "உன்னைப் பிறர் அறியார் என்மதிக்கு, விண் எல்லாம் உண்டோவிலை?" (மேலது 51) என்றும் இவர்தம் நான்முகன் திருவந்தாதிப் பாசுரங்களினால் இ∴து அறியப்படும்.

**தூபம் கமழ** : சிறந்த ஞானம் இருந்தால் மட்டும் பயன்படாது. அது நன்கு பரிமளிக்க வேண்டும். எம்பெருமானையன்றி வேறொரு தெய்வத்தைத் தொழாதிருத்தலே ஞானத்திற்குப் பரிமளம். "திருவடிதன் நாமம், மறந்தும் புறந்தொழ மாந்தர்" (நான்.திருவந். 68) என்றும், "மாமேனிமாயவனை, அல்லாது ஒன்று ஏத்தாது என்நா (மேலது 74) என்றும் வரும் இவர்தம் பாசுரங்களினால் இதனைத் தெளியலாம்.

**துயிலணைமேல் கண்வளரும்** : இவ்வாழ்வாருடைய திருக்கண் சுழல்வது சயனத்திருக் கோலமான எம்பெருமான்களின் மீதுதான். கச்சிவெ∴காவிலும் (சொன்னவண்ணம் செய்த பெருமாள் சந்நிதி) திருக்குடந்தையிலுமே (சார்ங்கபாணிப் பெருமாள் சந்நிதி) தம் காலத்தை அதிகமாகக் காலம் கழித்தது. எம்பெருமான் சயனத்திருக் கோலமாகக் கிடக்கும் திருப்பதிகளையே ஒரு கோவையாக எடுத்துப் பாசுரம் பாடினவர் இவ்வாழ்வார் ஒருவரேயாவர்.

**நாகத்தணைக் குடந்தை வெஃகா திருஎவ்வுள்**
**நாகத்தணை அரங்கம் பேர்அன்பில் – நாகத்து**
**அணைப்பாற் கடல்கிடக்கும் ஆதி நெடுமால்**
**அணைப்பார் கருத்தன் ஆவான் (நான்.திருவந். 36)**

36. திருமழிசையார் வரலாறு.
37. தனிப்பாடல்

என்ற பாசுரத்தில் இஃது அறியப்படும்.

**துயிலணைமேல் கண்வளரும் மாமான் மகளே :** மகள் என்றதனால் விதேயத்துவன் சொன்னபடியாகும். மகள் சொற்படி தந்தை கேட்பதும் தந்தை சொற்படி மகள் கேட்பதும் உலக வழக்கம். மாமான் என்றது **மகாமகான்** என்றபடி. துயிலணைமேல கண்வளரும் மாமான் சொன்னவண்ணம் செய்த பெருமாள். அப்பெருமாள் இந்த ஆழ்வார் சொற்படி கேட்டவர். கணிகண்ணன் போகின்றான் - நீயும், உன்றன் பைந்நாகப் பாய் சுருட்டிக் கொள் - என்றபோது அப்படியே சுருட்டிக் கொண்டு புறப்பட்டார். 'கணிகண்ணன் போக்கொழிந்தான் - உன்றன் பைந்நாகப் பாய் விரித்துக்கொள்' என்றபோதும் அப்படியே செய்தார். இனி, துயிலணைமேல் கண் வளரும் மாமான் குடந்தை ஆராஅமுதன், அப்பெருமானும் எழுந்திருந்து பேசு. வாழி கேசனே - என்ற இவரது வேண்டுகோளின்படி எழுந்திருந்து இன்றும் உத்தானசாயியாக எழுந்தருளியிருப்பது மிகு புகழ் வாய்ந்தது.

**உன் மகள்தான் ஊமையோ :** வாய் திறவாமல் கைகளினாலேயே கை அசைவு, முகச் சுளிவு முதலியவற்றால் கருத்துக்களைத் தெரிவிப்பது ஊமையரின் பணி. இந்த ஆழ்வாரும் தலப் பயணத்தின்போது பெரும்புலியூர் என்னும் சிற்றூரில் ஒரு வேதியர் வீட்டு வாசல் திண்ணையில் சிறிதுபொழுது ஓய்வாக எழுந்தருளியிருக்க, அங்கு வேதம் ஓதிக் கொண்டிருந்த பார்ப்பனர்கள் நீறுபூத்த நெருப்புப் போலுள்ள ஆழ்வாருடைய மகிமையைத் தெரிந்து கொள்ளாமல் அவரைக் கீழ்ச்சாதியராக எண்ணி வேதம் ஓதும் ஒலி அவர் செவியில் படலாகாது என்று கருதி ஓது தலைத் தவிர்த்திருந்தனர். இக்குறிப்பை அறிந்த ஆழ்வார் அவ்விடத்தினின்றும் நீங்கி தொலைவிலுள்ள வேறோர் இல்லத்து மேடையில் வீற்றிருந்தார். பார்ப்பனர்களும் மீண்டும் மறையோதத் தொடங்கி நிற்க, ஆழ்வார் அது கண்டு கற்பு நெறிகளைக் கை நகத்தாலே வகிர்ந்து போட, அப்பொருளுள்ள வேதத்தொடர் அவர்கட்குப் புலனாயிற்று. உடனே அந்தப் பார்ப்பனர்கள் இவரை வலம் வந்து தண்டம் சமர்ப்பித்து உபசரித்து நன்றி தெரிவித்தனர் என்பது வரலாறு. இங்ஙனமாக வாய் திறவாமலே இங்கிதத்தினால் காட்டியது பற்றி **ஊமையோ** என்றது பொருந்துகின்றது.

**செவிடோ :** சொன்ன சொற்களைச் செவி ஏற்காத நிலையிலுள்ளவர் செவிடர். அந்தச் செவிடும் இவர்தம் சரிதையில் மிகுபுகழ்வாய்ந்தது. முன்னர்க் குறிப்பிட்ட பெரும் புலியூரில் பார்ப்பனர்கள் வேள்வி இயற்றிக்கொண்ட இடத்தில் இந்த ஆழ்வாரை எழுந்தருளவித்துக்கொண்டு போய் சில மகான்கள் அவருக்கு அக்கிரம

பூசை செய்வித்தனர். அப்பொழுது அங்கிருந்த சிசுபாலாதிகள் எண்ணிறந்த வசைமாரிகளைப் பொழிவிக்க, அவற்றை இந்த ஆழ்வார் செவி ஏற்காதிருந்தனர் என்ற வரலாறும் அறியப்படும்.

அனந்தலோ : உறக்கமோ என்றபடி. பரமைகாந்திகட்கு உறக்கமாவது பாஹ்ய விஷயங்களில் சிறிதும் நெஞ்சு செல்லாதிருக்கப் பெறுதலேயாகும்.

**– உன்னைத் தெரிந்தெழுதி**
**வாசித்தும் கேட்டும் வணங்க வழிபட்டும்**
**பூசித்தும் போக்கினேன் போது. (நான்.திருவந். 63)**

என்றும்,

**தொழில் எனக்குத் தொல்லைமால் தன்நாமம் ஏத்தப்**
**பொழுதெனக்கு மற்றதுவே போதும் (மேலது 85)**

என்றும் அருளிச் செய்யும் இந்த ஆழ்வாருக்கு இந்த நிலைமையே அனந்தலாகும்.

**ஏமத்துயில் மந்திரப்பட்டாளோ** : மற்றையாழ்வார்களைக் காட்டிலும் இவ்வாழ்வாருடைய பரமை காந்தத்துவம் மிக விலட்சணம் என்பது இங்கு அறியத்தக்கது. பிதிரம் மனம் இலேன் பிஞ்ஞகன் தன்னோடு, எதிர்வன். அவன் எனக்கு நேரான் (மேலது. 84) என்னும்படியான திருநாவீறு இவருக்கே ஆசாதரணமன்றோ? இதுதான் பெருந்துயில். எம்பெருமான் ஒழிந்த மற்றையோரைக் கண்கொண்டு பாராமையிற் பெருமை. இவர் மந்திரப்பட்டது பேயாழ்வார் பக்கலில்.

**மாமாயன்** : மாயம் என்ன மாயமே? (திருச்சந். விரு. 34) என்றும், மாயமாயம் ஆக்கினாய், உன் மாயம் முற்றும் மாயமே (மேலது 41) என்றும் பலகாலும் எம்பெருமானது மாமாயங்களைப் பேசுகின்றவர் இவ்வாழ்வார், **'மாதவன் :'** மாதவனை ஏத்தாதார் ஈனவரே (நான்.திருவந்.6) என்றவரும் இவ்வாழ்வாரே. 'திருவில்லாத், தேவரைத் தேறேன்மின் தேவு.' (மேலது - 53) என்றதும் காணலாம். **வைகுந்தன்** : வைகுந்தச் செல்வனார் சேவடிமேல் பாட்டு, (நான்.திருவந் 75) என்றவர் இவ்வாழ்வரே. வைகுந்த சேவடிமேல் தாம்பாசுரம் பாடினவராகச் சொல்லிக்கொண்டார். ஆகவே, மாமாயன், மாதவன், வைகுந்தன் என்ற திருநாமங்கள் இந்த ஆழ்வாருக்குப் பரமபோகியங்கள் என்பது குறிப்பாகும்.

# 10. கிருட்டிணாநுபவத்தில் மூழ்கிப் பரவசப்பட்டுக் கிடப்பாள் ஒருத்தியை எழுப்புவதைக் கூறுவது

## பத்தாம் பாசுர விளக்கம்

"நோற்றுச் சுவர்க்கம்"

**நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்**
**மாற்றமும் தாராரோ? வாசல் திறவாதார்?**
**நாற்றத் துழாய்முடி நாரா யணன்நம்மால்**
**போற்றப் பறைதரும் புண்ணியனால் பண்டுஒருநாள்**
**கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்ப கருணனும்**
**தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ?**
**ஆற்ற அனந்தல் உடையாய் அருங்கலமே**
**தேற்றமாய் வந்து திறவேலோர் எம்பாவாய்**

(சொ.பொ) : நோற்று - (கிருஷ்ணனை அநுபவிக்க முற்பிறப்பில்) தவம் செய்து சுவர்க்கம் புகுகின்ற - (இப்போது) சுகத்தை அநுபவிக்கின்ற; அம்மனாய் - தலைவியே; வாசல் திறவாதார் - வாசல் கதவைத் திறவாதிருப்பவர்கள்; மாற்றமும் தாராரோ - (ஒரு) மறுமொழியாவது சொல்லார்களோ; நாற்றம் துழாய் முடி - நறுமணமுள்ள திருத்துழாய் மாலையை அணிந்துள்ள திருமுடியையுடைய; நாராயணன் - எம்பெருமான்; நம்மால் போற்ற - நம்மால் தோத்திரம் செய்யப் பெற்று; பறைதரும் - புருஷார்த்தங்களைத் தந்தருள்பவனும்; புண்ணியனும் - அறமே வடிவு கொண்டு வந்தாற் போன்றவனுமான இராமபிரானால்; பண்டு ஒரு நாள் - முன்னொரு காலத்தில்; கூற்றத்தின் வாய் வீழ்ந்த - (யமன்) வாயில் (இரையாக) விழுந்தொழிந்த; கும்பகரணனும் - கும்பகருணனும்; தோற்று - (உனக்கு) தோற்றுப்போய்; பெருந்துயில் - (தனது) பெரிய உறக்கத்தை; தந்தானோ - கொடுத்தானோ; ஆற்ற அனந்தல் உடையாய் - மிகவும் உறக்கமுடையவளே; அருங்கலமே - (கிடைத்தற்)கரிய ஆபரணம் போன்றவளே; தேற்றம் ஆய்வந்து - தடுமாறாமல் தெளிவுடன் வந்து; திற - (கதவைத்) திறவாயாக.

**(க-து)** : பெண்கள் எல்லாரும் கிருட்டிணன் என்றால் படும்பாட்டை அவன்தான் பட்டுத் தண்ணீர், தண்ணீர் என்னும்படி வீறுடையாள் ஒருத்தியை அதாவது கிருட்டிணாநுபவத்தில மூழ்கிப் பரவசையாய் இருப்பாள் ஒருத்தியை எழுப்புகின்றார்கள் இப்பாசுரத்தால்.

**விளக்கம் : நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்** : இந்த அடிக்கு **மூன்று** வகையாகக் கருத்து உரைக்கலாம் : "1. கண்ணபிரானுடைய திருமாளிகைக்கு அடுத்த திருமாளிகையாய் இடைச்சுவர் அற்றிருப்பதனால் கண்ணபிரானோடு இடையீடின்றிச் சுகாநுபவம் பண்ணும்படி நீ நோற்ற நோன்பு என் கொல்? முற்பிறப்பில் நோற்ற நோன்பின் பயனாக இப்போது கிருட்டிணாநுபவசுகம் பெற்று நிற்கின்றாய். 2. "பொழுது விடிந்த பின்னரும் உணர்ந்தெழுந்து வராமையினால், அம்மே இங்ஙனம் கிடந்து உறங்கா நின்ற நீயோ நோன்பு நோற்றுச் சுகாநுபவம் பண்ணப் போகின்றாய்? நின்னுடைய நினைவுக்கும் செயலுக்கும் பொருத்தம் அழகிய தாயிருந்தது" என்று ஏசியவாறாகக் கொள்ளுதல் 3. "எல்லாரும் ஒக்கக் கூடி நோன்பு நோற்றுக் கிருட்டிணாநுபவ சுகம் பெறுவோம்" என்று ஒப்புக்கொண்டு, நீ தனியே நோன்பு நோற்றுச் சுகாநுபவம் பெறுவது அறமா, என்ன?" என வெறுப்பதாகக் கொள்ளுதல். இவள் நோற்ற நோன்பாவது சித்தசாதன சுவீகாரம் என்றும் கொள்ளலாம்.

நோற்று - எல்லாரும் உடன் கூடிக் குளிக்கக்கடவோம்; உடன் கூடி நோற்கக் கடவோம்; உடன் கூடி கிருஷ்ணநுபவம் பண்ணக் கடவோம் என்று சொல்லி நோன்பின் பலம் கை புகுந்து கிருஷ்ணா நுபவம் பண்ணிக் கிடப்பவள். நோன்பு - சித்தாசாதன சுவீகாரம். **நோற்று** சித்தசாதனமாகையால் உபாயம் சத்தில் கவலையற்றிருந்தாள். அவனது இரட்சகத்தை உணர்ந்தால்தான் முயற்சி செய்யப் பிராப்தி இல்லை. தன் சேஷத்துவத்தை உணர்ந்தாலும் பிராப்தி இல்லையல்லவா? விரோதி பிராபல்யத்தை உணர்ந்தாலும் ஒன்றும் செய்யப்பேறு இல்லை. இதர உபாயங்களுக்கும் அவன் பிரசாதம் வேண்டியிருக்கையாலே ஒன்றும் செய்யப் பிராப்தி இல்லை. ஆன பின்பு "நாராயணனே" என்று - அவனுடைய உபாய பாவனையை அநுசந்தித்து நின்று விடியற்காலத்தே எழுந்திருந்த குளிக்கக் கடவதோ என்றிருக்கின்றாள். புறம்பு நின்று எழுப்புகின்றவர்களுக்கும் இதுவன்றோ சொரூபம்? என்னில் : சித்தோபாயத்தைக் கடைப்பிடிப்பவர்கட்குக் காலதாமதத்திற்கு ஏது இல்லாமையாலே பிராப்பியத்தில் அவசரப்பட்டுப் பதறுகின்றார்கள். சித்தோபாயத்தைக்

கடைப்பிடிப்பவர்கட்கும் கர்ம ஞான பக்திகளுண்டு. இவர்களுடைய செயல் கைங்கரியத்தில் அந்விதம். பக்தி பிராப்யரசியிலே பகும். ஆனபின் பிராப்பியத்திலே அவசரம் - பதற்றம் - இல்லையாகில் அசித்தோடொக்கும் என்கின்றார்கள். **சுவர்க்கம் புகுகின்ற** : சுகத்தை இடைவிடாமல் அநுபவிக்கின்ற. "சுவர்க்கம்" என்னும் சொல் ஈண்டு சுகத்தைக் குறிப்பிடுகின்றது. இவர்கட்குக் கிருட்டிணாநுபவம் அல்லவா சுகம்? இராமன் வனவாசத்திற்குத் தயாராகும்போது பிராட்டி உன்னுடன் சுகம்? இராமன் வனவாசத்திற்குத் தயாராகும்போது பிராட்டி 'உன்னுடன் கூடியிருத்தல் - சுவர்க்கம். உன்னைப் பிரிந்திருத்தல் - நரகம்' என்று மொழிந்தது ஈண்டு நினைக்கத்தக்கது. **புகுகின்ற** : அநுபவத்தில் இடையீடின்மையைக் குறிப்பிடுகின்றது. **அம்மனாய்** : இரட்சகையானவளே. அம்மனாய் - அம்மனை என்பதன் ஈறு திரிந்த விளி, "தாயே" என்று பொருள். "இத்திரளுக்கு நீ இரட்சகையானது அழகே அழகு. நீ இங்ஙனம் தனியே சுகாநுபவம் பண்ணுவது உன் பெருமைக்குப் பொருந்தலாம் தோழமைக்குத் தகாதன்றோ?" என்பது போதரும். "எங்களைக் கிருட்டிணனோடே அநுபவிப்பித்து, அவ்வநுபவம் உன் முலையோடும் தோளோடும் அணைத்தாற்போலே இருக்க வேண்டாவோ?" என்பதும் தொனிக்கும்.

**மாற்றமும் தாராரோ? வாசல் திறவாதார்** : முதலடியில் அம்மனாய் என்று முன்னிலைப்படுத்தி விளித்தமைக்கு ஏற்ப, "மாற்றமும் **தாராயோ? வாசல் திறவாதாய்?**" என முன்னிலையாக வன்றோ கூற வேண்டும்? படர்க்கையாகக் கூறியுள்ளது எங்ஙனம் பொருந்தும்? எனில்: "ஓரிடம் பிறவிடம் தழுவலும் உளவே" என்பது இலக்கணம். ஆகவே பொருந்தும்.

அசோகவனத்தில் சிறிய திருவடியின் சொற்களைக் கேட்டுக் களிப்பின் மிகுதியால் ஒன்றும் பேசாமல் திடுக்கிட்டுக் கிடந்தாற் போல, இவளும் இவர்களது மதுரமான வாய்மொழியைக் கேட்டுப் பரமானந்தத்திற்குப் பரவசப்பட்டிருந்தமையாலும், இவர்கட்கு அடிச்சியாகிய தன்னை. இவர்கள் தாயே என்று விளித்துப் பழியிடுவதைப் பொறுக்காத வெதுப்பினாலும், "நாம் கிருஷ்ணாநுபவம் பண்ணுவதாக இவர்கள் பழியிடா நின்றார்கள். இத்தருணத்தில் நாம் இவர்கட்கு மறுமொழி கூறினால், இவர்கள் சொன்னதற்கு இசைந்து, மறுக்காமல் மறுமொழி சொன்னதாக அமையும். ஆகவே மறுமொழி கூறுதல்தகாது என்று பேசாமல் வாளா கிடந்தாள். அவள் கருத்தை அறியாத இவர்கள், தாங்கள் வெளியே நின்று தவள்கின்ற நிலையைப் பொறுக்கமாட்டாமல், "மாற்றமும் தாராரோ? வாசல்

திறவாதார்?'' என்கின்றார்கள். "நீ வாயைத் திறவாதொழியினும் கதவையாகிலும் திறக்கலாகாதோ?'' என்றவாறு. இன்னும், "கண்ணனைப் பட்டினி கொள்ளச் செய்தாய், செவியையும் பட்டினி கொள்ளச் செய்ய வேண்டுமோ? செல்வம் வீசினால் உறவினர்கள் ஆர்த்தர்களானால் ஏன் என்னலாகாதோ? படுகுலையடித்தால் தண்ணீர் வார்த்தல் ஆகாதோ? போகத்தைத் தடுத்ததால் எங்கள் சத்தையை அழிக்க வேண்டுமோ? என்கின்றார்கள். **மாற்றமும் தாராரோ** : "உன் உடம்பைக் கிருட்டிணனுக்குக் கொடுத்தால் எங்களுக்குப் பேச்சாகிலும் தரலாகாதோ? உன்னுடைய கிருட்டிணனைத் தாராவிட்டாலும் எங்களுடைய உன்னைத் தரலாகாதோ?'' என்கின்றார்கள். **மாற்றமும்:** சீதாப் பிராட்டியின் அழகும் மதுரச் சொல்லும் இராமனுக்கு இனிமையாக இருந்தாற்போல, இவள் பேச்சுக்கு கண்ணனும் தோற்றல்லவா இருப்பது?

இவர்கள் இங்ஙனம் பழியிட்டுக் கூறுகின்றதை உணர்ந்த அவள் "ஐயோ நம்மீது இவர்கள் வீண்பழி சுமத்துகின்றனரே. இவர்கட்கு ஒரு மறுமொழி சொல்லியாகிலும் பிழைப்போம்'' என்றெண்ணி, "தோழிகாள் நீங்கள் நெடும் போதாக இவ்வாறு பழியிடுவது தகாது. கண்ணபிரான் இங்கு இல்லையே'' என்று சொல்ல, **நாற்றம் துழாய் முடி** : 'அம்மா நன்று சொன்னாய். நீயும் மறைத்து உன் களவுக்கு அவனும் துணை நின்றால் கோயில் சாந்தை - ஒப்பற்ற கலவைச் சாந்தை - மறைக்க முடியுமோ?'' அன்றி மற்றோர் உபாயமென் என்னும்படி மாளிகைச் சாந்தை ஒளிக்க முடியுமா? அன்றி, நீ மறைத்தாயாகிலும், திருத்துழாய் மணம் அவனது இருப்பைக் கோட்சொல்லிவிட்டதே. அதனை நீ மறைக்கவில்லையே'' என்று இவர்கள் சொல்ல, இதற்கு அவள், "அந்தோ அநியாயம் அவன் இப்போது இங்குக் கிடந்தால்தான் மாளிகை மணமும் திருத்துழாய் மணமும் நாறும் என்று நீங்கள் கருதுகின்றீர்களோ? ஒருகால் அவன் அணைத்துவிட்டால், அந்த நாற்றம் நூறுகுளிக்கு நிற்கும் என்பதை நீங்கள் அறிவீரோ. அன்றியும், நான் உங்களைப் பிரிந்து வந்து படுக்கையில் சாய்ந்தபொழுது தொடங்கிய (அந்தியம் போது முதல்) நீங்கள் வாசலைப் பற்றிக் கொண்டு நிற்கின்றீர்கள். கட்டும் காவலுமான வாசலிலே அவன் எங்ஙனம் புகவல்லன்? இவற்றை எண்ணி பாராமல் "நீங்கள் என்மீது வீண் பழி சுமத்தவது அறமன்று' என்று அவள் சொல்ல'' அதற்கு இவர்கள், **நாராயணன்** : "எங்களைப் போல கதவு திறக்கும் வரையில் காத்திருக்க வேண்டுமோ அவனுக்கு? அவனுக்கு உன்பக்கல் புகுந்தால் புறப்பட அன்றோ வழியரிது? **நாராயணன்** : அவன் நாராயணன் என்பதை நாங்கள்

அறியோமோ? நீதான் அறியாயோ? அவன் வியாபகனாய் இருப்பதனால், வேண்டியவிடத்து அவன் வந்து தோன்றுவான் அன்றோ? அப்படி அவன் செய்யானாகில் அவன் வியாப்திக்குப் பயன்தான் என்ன? **“நாற்றத்துழாய் முடி நாராயணன்”** : ‘உகவாதாரையும் விடாதவன் உகந்த உன்னை விடுவானோ? ஆசைப்பட்டாரை இரட்சிப்பதற்குத் தோள் மாலை இட்டிருக்கின்றவனன்றோ?’ என்று இவர்கள் சொல்ல, இதற்கு அவள் மாற்று சொல்ல வல்லமையற்று வாய்திறவாதே கிடந்து உறங்குபவள் போல பாவனை செய்தாள். குறட்டையும் விட்டாள்.

**நம்மால் போற்றப் பறைதரும் புண்ணியன்** : ஒன்றும் செய்யாமையாக உபாயமாக இடைச்சிகளும் சென்று ஆச்ரயிக்கலாம்படி இருக்கும் தார்மிகன். இவர்களுடைய ஆச்ரயணமும் உபாயமன்று. ருசியாலே, சாதன தர்மம் என்று சொல்லப்படும் கிருட்டிணன் இவர்கட்கு சித்தோபாயமானவனன்றோ? **போற்ற** - இவர்கள் குடிப்பிருக்கும்படி. ‘பல்லாண்டு’ என்று இருக்குமவர்களன்றோ? **பறைதரும்** - ஊக்கமும் தட்டொளியும். **புண்ணியனால்** : தண்ணீர் குடிக்கக் கல்லன ஏரியில் வீழ்ந்து சாவாரைப் போலே. **புண்ணியனாலே** : வெறுப்பில்லாமை மாத்திரம் உடையார்க்குத் தன்னைப் பெறுகைக்கு சுக்ருதமும், ருசி உண்டாக்குபவனும், உபாயமும் பிராப்யமுமாய் இருக்கிறவனாலே.

**பண்டொருநாள்** : முன்பு உன்னைப் போலே உணராமல் படுத்திருந்தான் ஒருவன் உண்டு காண் எனல். **ஒருநாள்** : உணர்ந்திலன் என்று ஒரு காலத்தில் கேட்டிருந்தோம். இன்று அநுபவியாநின்றோம். **கூற்றத்தின் வாய் வீழ்ந்த**: தண்ணீர் அருந்தக் கல்லின ஏரியிலே அமிழ்ந்திச் சாவாரைப் போலே விரோதிகள் பாலும் வாத்சல்யம் மிக்க பெருமாள் பக்கலிலே தப்புச் செய்த தன்னால் சிறையிட்டு வைக்கப்பெற்ற யமனுடைய வாயில் வீழ்ந்த பொருள்கள் தெரிவதற்காக ஏற்றப்பட விளக்கிலே விட்டில் புகுந்து மடிந்தாற் போலே, இவனுடைய திருவுள்ளத்தால் அவனது அநர்த்தத்துக்கு முடிவில்லை எனல். **கும்பகரணனும் தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ** : உறக்கத்தில் தலையானவனும் உனக்குத் தோற்றுத் தன் உறக்கத்தையும் தானே உனக்குத் தந்து போனானோ? அவன் ஒருத்தியையல்லவா பிரிந்தது? நீ ஊராகப் பிரிந்து உறங்க நின்றாயே. கும்பகருணன் இவளுக்குத் தோற்றுத்துயில் தருவது என்? எனில் : “நீயும் அவனும் கூடி, நாம் இருவரும் உறங்குவோம், உறக்கத்தில் தோல்வி அடைந்தோர் உறக்கத்தை விட்டிட “அவன் உறக்கத்தை நீ கைப்பற்றிக் கொள்ள

நேர்ந்ததோ?'' என்கின்றார்கள். பரசுராமாழ்வானை வென்று பெருமாள் அவன் கையிலிருந்த வில்லை வாங்கினாற்போலே, நீயும் கும்பகருணனை வென்று உறக்கத்தைக் கை கொண்டனையோ? **பெருந்துயில் :** அவனது துயிலைப் போன்றதோ நினது துயில்? அவனுடையதோ துயில் உன்னுடையதோ பெருந்துயில்? அவன் ஆறு திங்கள் உறங்குவதும், ஆறு திங்களுக்கு ஒருநாள் விழித்திருத்தலும் என்ற வழக்கம் உண்டல்லவா? அங்ஙனம் ஒன்றில்லையோ உனக்கு? நீ கால தத்துவம் உள்ளவரையும் உறங்குகின்றாய் அன்றோ? அவள் அரைக்கணம் புறப்படாதொழிய, இவர்கட்கு அச்சிறிய காலம் நெடுங்காலமாகத் தோற்றுகின்றது. அவன் ஒருத்தியுடைய பிரிவுக்கு காரண பூதனனாய் இருந்தான் அன்றோ? நீயோ ஒருராகப் பிரிவதற்குக் காரண பூதையாய் உறங்குகின்றாய் அன்றோ?'' என்கின்றார்கள்.

**ஆற்ற அனந்தலுடையாய் :** 'குற்றம் புரிவர்களில் தலைவனான இராக்கதப் பயலோடொக்க நம்மைச் சேர்க்கின்றனரே இவர்கள். இஃது என்ன கொடுமை. இனி வெளியில் சென்று முகம் காட்டுவோம்' என்று எண்ணி, 'கிருஷ்ண கிருஷ்ண' என்று சொல்லிக் கொண்டு சோம்பல் முறித்தாள். அதனை உணர்ந்த இவர்கள், "ஓ உறக்கம் இருந்தபடி என்' என வியந்து "ஆற்ற அனந்தல் உடையாய்" என விளிக்கின்றார்கள். 'ஆற்ற அனந்தல்' என்பது மிகுந்திருக்கின்ற உறக்கம். பிறகு அவர்கள் சாலக வாயிலாலே அவள் உணர்ந்தபடியை உற்று நோக்கினார்கள். தங்கள் கூட்டத்திற்கு நவரத்தின மாலையில் நாயக இரத்தினம் அழுத்தினாற்போலே இருந்தாள். **அருங்கலமே :** 'எங்களுக்குப் பெறுதற்கரியவள் அல்லையோ நீ' என்கின்றார்கள். நாயகமணி இல்லாத மாலை போல் இக்கூட்டம் இருள் மூடிக் கிடக்கின்றது. இதனை நீ விளக்குவாராய் என விளித்தவாறாம். அவள் புறப்பட, அவனும் ஒக்கப் புறப்பட்டுத் தங்களைத் தலைமேல் கொள்ளுவான் என்று கருதியிருக்கின்றார்கள்.

இவர்களுடைய ஆர்த்தியைக் கேட்டு அவள் துணுக்கென்று வரப்புக்காள். **தேற்றமாய் வந்து திற:** அதனை அறிந்த இவர்கள் "இரண்டாம் நிலத்திலே (மேல்மாடியிலே) நின்று தடுமாறாமல் தெளிந்து வந்து இழிந்து திற" என்கின்றார்கள்.

இதற்கு மற்றொரு வகையாகவும் கருத்துரைக்கலாம். பஞ்ச வடியில் பிராட்டியைப் பிரிந்த இராமபிரான் கிட்கிந்தையில் புகுந்து அங்கு மகராஜரை (சுக்கிரீவன்) நண்பராகக் கொண்டு வாலியை வதம் செய்து மாலயவத பர்வதத்தில கார்காலத்தைக் கழித்தவுடன், "மகராஜர் வாக்குத் தந்தபடி, அன்றுகாறும் படைதிரட்டிக் கொண்டு

போருக்குப் புறப்படவில்லை" என்ற அளவற்ற சீற்றத்தினால் இளைய பெருமாளை நியமித்து அருள, அவரும் அந்தக் கட்டளையை தலை மேற்கொண்டு மகராஜரின் பள்ளியறை வாசலில் போந்து காண்டிபத்தின் நாணொலியைக் கிளப்பிவிட "அவர்தம் சீற்றத்தைத் தணிக்கக் கருதிய தாரை வெளிவரும்போது சம்போக இலட்சணங்களை மறைத்திடாது அரைகுலையத் தலைகுலைய வந்தாற்போல்[38] வாராதே. இத்திரளில் உன்னை நியமிக்கக் கடமைப்பட்ட குருகுல மாதரும் உளராதலால் உறக்கச் சின்னங்களை நன்கு மறைத்து பெரிய அவையில் வருவதற்குரிய கோலத்துடன் வந்து திறவாயாக" என்கின்றார்கள் என்றுமாம். "ஊராகத் திரண்டு கிடக்கின்றது. அவர்களிலே உன்னையும் நியமிக்க வல்லாருண்டு. அவர்கள் முன்னே படுக்கையில் சாய்ந்தபடியே வாராதே உன்னைப் பேணிக்காத்துக் கொண்டு ஸதஸ்யங் வந்து திற" என்பது ஆறாயிரப்படி (அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்).

**உள்ளுறை :** சித்த சாதன ஸ்வீகாரம் பண்ணி பகவானையே உபாயமாகப் பற்றியிருக்கும் பாகவதர் ஒருவரை ஊர்த்துதலாகும். பாகவதருக்கு உறக்கம் - இதர விஷயங்கள் ஒன்றையும் கவனியாதிருத்தல்.

**மற்றுமோர் உள்ளுறை :** திருமழிசையாழ்வாருக்கு அடுத்த முந்தினவரான **பேயாழ்வாரை எழுப்பும் பாசுரம் இது.**

ஓடித் திரியும் யோகியராய் ஒருவரோடு ஒருவர் சேராமல் சஞ்சரித்துக் கொண்டிருந்த முதலாழ்வார்கள் எனப்படும் பொய்கையார், பூதத்தார், பேயார் என்ற மூவரையும் ஒரு பெரு மழை பெய்து கொண்டிருந்த நந்நாளில் திருக்கோவலூர் இடைகழியில் நெருக்கி அநுபவித்தான் என்பது வரலாறு. இப்பேயாழ்வாரைப் பற்றி திருவரங்கத்தமுதனார்,

**மன்னிய பேரிருள் மாண்டபின் கோவலுள் மாமலராள்**
**தன்னொடும் ஆயனைக் கண்டமை காட்டும் தமிழ்த்தலைவன்**
**– இராம. நூற். 10**

என்றார். பொய்கையாழ்வாரும் பூதத்தாழ்வாரும் விளக்கேற்றி இருளை அகற்ற, இவ்வாழ்வார் **'திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்'** என்று தொடங்கிப் பலாநுபவம் செய்தருளினார் என்பர் ஆன்றோர். அந்தப் பொருளே **'நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்'** என்ற முதலடியில் பொலியும். **நோற்று** - மற்றை இரண்டு

38. இது வான்மீகத்தில் கண்டது. இதனைக் கம்பன் தமிழ்நாட்டுப் பண்பாட்டையொட்டி வேறுவகையாகக் காட்டுவான் (கம்பரா. கிட்கிந்தாண். கிட்கிந்தைப் படலம், செ. 45, 46, 51, 52 காண்க.)

ஆழ்வார்களும் விளக்கேற்றுகையாகின்ற உபாயாநுட்டானம் செய்யவே என்றபடி. சுவர்க்கமாவது ஆனந்தாநுபவம். 'வாசல் திறவாதார்' என்றது பேயாழ்வாருக்கு மிகவும் பொருத்தமான விளக்கம். திருக்கோவல் இடைகழியில் பொய்கையார் முன்னே புகுந்து தாளிட்டுக் கொண்டார். பிறகு பூதத்தார் வந்தபோது அவருக்குப் பொய்கையார் வாசல் திறந்தார். இரண்டாவதாக வந்த பேயாருக்குப் பூதத்தார் வாசல் திறந்தார். இந்தப் பேயார்க்குப் பிறகு ஒருவரும் வந்து புகாமையால் வாசல் திறக்கும் வாய்ப்பு நேரிடவில்லை. ஆதலால் 'வாசல் திறவாதார்' என்றது பேயாழ்வாருக்கு மிகப் பொருத்தமாக அமைந்த குறிப்பு.

'திருக்கண்டேன்' என்பதற்கு அடுத்த பாசுரத்தில் 'பொன்தோய்' மார்பில் 'பூந்துழாய்' என்று வருகின்றது. இந்த மூன்றாவது திருவந்தாதி இறுதிப் பாசுரத்திலும் 'தேன்துழாய்த் தார்வாழ் வரைமார்பன்' என்ற தொடர் வருகின்றது. இடையிலும் பல பாசுரங்களில் இதுபோன்ற தொடர்கள் வருகின்றன. எட்டாவது பாசுரத்தின் 'நாமம் பல சொல்லி' என்பதால் நாராயணனையும் திருத்துழாயையும் கண்ணனையும் சேர்த்துப் பாடினார் பேயார் என்பது தெளிவு. இதுவும் இத்திருப்பாவைப் பாசுரத்தின் 'நாற்றத்துழாய் முடி நாராயணன்' என்ற தொடருடன் பொருந்துகின்றது.

'கண் காணெனை விரும்பும் கண்கள்' என்று ஒரு நொடிப் பொழுதும் கண்மூடியிருக்கமாட்டாமையைச் சொல்லிக் கொண்ட நீர், 'கும்பகருணனுக்கும் மேலாக இன்னமும் துயில் கொள்ளல் தகுதியோ?' என்கின்றாள் 'பண்டொருநாள்' என்று தொடங்கி திருப்பாவையான இப்பாசுரத்தின் நட்டநடுவில் சக்கரவர்த்தித் திருமகனுடைய திவ்விய நிகழ்ச்சியொன்றை ஆண்டாள் அமைத்தது பேயாழ்வாரின் திருவந்தாதியின் நட்டநடுவில் 'அவனே... இலங்காபுரம் எரித்தான்' *(51)* என்றும் 'எய்தான் மராமரம்... தென்னிலங்கைக்கோன் வீழ' *(52)* என்றும் அருளிச் செய்தமைக்கு நன்கு பொருத்தமாகின்றது.

திருமழிசையாரை எழுப்பிய கீழ்ப்பாசுரத்தில் *(9)* **அனந்தலோ** என்று அடைமொழி இல்லாத 'வெறும் அனந்தலே' சொல்லப்பட்டது. இப்பாசுரத்தில் '**ஆற்றல் அனந்தல் உடையாய்!**' என்று சொல்லப்பெறுகின்றது. மழிசையர் கோனுக்கும் இவ்வாழ்வார் ஆசாரியராதலால் 'அனந்தல்' என்று கீழான உறக்கம் என்று சொல்லப்பெறுகின்றது. 'அனந்தல் அதினமாயிறு' என்று பகவத்

சாத்திரங்களில் கொண்டாடப்பட்ட 'அனந்தல்' பரமைகாந்தித்வ ஸ்ᵒமாபுமியைக் காட்டவதாகும்.

**அருங்கலமே!** எம்பெருமானுடைய திருவருளை மிக அருமையாகப் பெற்ற நல்ல பாத்திரமே என்றபடி. பாசுரம் தொடங்கும் போதே 'திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்' என்று ஆனந்தமாகத் தொடங்கப் பெற்ற பகவத் பரம கிரபா பாத்திர பூதர் மற்றொர் ஆழ்வார் இலரே

**தேற்றமாய் வந்து திற:** உம்முடைய திருநாமமோ பேயார்; பேய்த்தனமாக வராமல் தேறிவந்து திறவாய் என்கின்றாள் போலும்.

# 11. குலத்தாலும் உருவத்தாலும் குணத்தாலும் மேம்பட்டவளாய் இருப்பாள் ஒருத்தியை எழுப்புவதைக் கூறுவது

## பதினோராம் பாசுர விளக்கம்

‘கற்றுக் கறவை’

**கற்றுக் கறவைக் கணங்கள் பலகறந்து**
**செற்றார் திறலாயச் சென்ற செருச்செய்யும்**
**கற்றமொன் றில்லாத கோவலர்தம் பொற்கொடியே**
**புற்றர வலகுல் புனமயிலே போதராய்**
**சுற்றத்துத் தோழிமார் எல்லாரும் வந்துநின்**
**முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர்பாடச்**
**சிற்றாதே பேசாதே செல்வப்பெண் டாட்டிநீ**
**எற்றுக்கு உறங்கும் பொருளேலோர் எம்பாவாய்**

(சொ.பொ) கன்று கறவை - கன்றுகளை ஈன்ற கறவைப் பசுக்களினுடைய; பல கணங்கள் - பல திரள்களை; கறந்து - கறப்பவர்களுடைய; திறல - வலிமை; அழிய - கெடும்படி; சென்று - தாமே படை எடுத்துச் சென்ற; செருசெய்யும் - போர் பிரிகின்றவர்களும்; குற்றம் ஒன்று இல்லா - ஒருவகைக் குற்றங்களும் இல்லாத; கோவலர்தம் - இடையர்களுடைய; பொன்கொடியே - அழகிய கொடி போன்றவளே; புற்று அரவு அல்குல் - புற்றிலிருக்கின்ற பாம்பின் படம் போன்ற நிதம்பத்தையும்; புனமயிலே - காட்டில் விருப்பப்படி திரிகின்ற மயில் போன்ற சாயலையுமுடையவளே; போதரராய் - எழுந்து வருவாய்; செல்வம் - செல்வத்தையுடைய; பெண் ஆட்டி - பெண் தன்மையை ஆள்பவளே; நின் முற்றம் - நின்னுடைய முன் வாசலிலே; சுற்றத்து தோழிமார் எல்லாரும் - உறவு முறையுடைய தோழிகள் யாவரும்; வந்து புகுந்து - (திரண்டு) வந்து சேர்ந்து; முகில்வண்ணன் பேர் - மேகம் போன்ற நிறத்தையுடைய கண்ணனது திருநாமத்தை; பாட - வாயினாற் பாடவும்; நீ - பேருறக்கமுடைய நீ; சிற்றாது - (உடம்பு) அசையாமலும்; பேசாது - மறுமொழி சொல்லாமலும்; உறங்கும் பொருள் - உறங்கும் செயல்; எற்றுக்கு - என்ன பயனைக் கருதி.

**(க-து) :** கிருட்டிணன் உருக்காக ஒரு பிள்ளையாய் எல்லாராலும் கொண்டாட வளர்ந்தது போல, உருக்காக ஒரு பெண் பிள்ளையாக, பரவத்தையுடையவளாய் 'அவனைப் பெறுவதற்கு நோற்பது நானோ? வேண்டுமானால் அவன்தான் நோற்றுவாட்டுமே' என்று கிடக்கின்றாள் ஒருத்தியை எழுப்பும் பாசுரம்.

**விளக்கம் :** கற்றுக் கறவை- கன்றுக் கறவை - கன்றுகளை ஈன்ற கறவைப் பசுக்கள் (கற்று என்ற வன்றொடர் கன்று என்ற மென்றொடர் ஆயிற்று) எல்லாம் கறக்கும் பருவமாயிருப்பினும் அவை யாவும் தலை நாகுகளாக இருக்கின்றன. கன்றுகளான பசுக்கள் என்ற போது இளமை வெளிப்படை. பரமபத்திலுள்ளோர் பகவத் மர்சத்தாலே இருபத்தைந்து வயதுடையவர்களாக இருப்பது போல, இப்பசுக்கள் கிருஷ்ண ஸபர்சத்தால் எல்லாம் தலை நாகுகளாக ஆகிவிடுகின்றன. முக்தர்கட்கு வயது கீழ் நோக்கித் திரும்புமாப்போலே, இப்பசுக்களும் இளமைத் தன்மை பெறுகின்றன. அவர்கள் பரத்துவாநுசத்தாலே பயனடைந்தனர். இவை மனுஷ்யத்வேபரனான கிருஷ்ணனுடைய ஸபர்சத்தாலே பயனடைந்தன. இராஜகுமாரன் முலை சரிந்த பெண்டிரைப் பாராதவாறு போலங்க கண்ணன் கன்றுகளையன்றிக் கன்றுகளையீன்ற பசுக்களைப் பாரான். இவன் தன் கைகளால் தொடுவதால் பசுக்களையும் கன்றுகளாக்கியருள்வன். 'கன்று மேய்த்து இனிது உகந்த காளாய்' (திருநெடுந். 16) 'திவத்திலும் பசுநிரை மேய்த்து உவத்தி' என்று - கண்ணன் பசுக்களை மேய்த்து இனிது உகப்பான் என்பதைக் காணலாம். இரட்சகவர்க்கத்திலே தன் கைகால் நீட்ட மாட்டாதவர்களையல்லவா உகப்பது? கன்றுகளை மேய்த்தல் கண்ணனுக்கு ஒருதலையானால் பசுக்களும் நித்திய சூரிகளின் ஸ்தானத்தைப் பெற்றுவிடும். **காளாய் :** அவற்றையும் இளமைத் தன்மை பெறும்படி செய்து, அவற்றின் சம்பந்தத்தாலே தானும் இளமைத் தன்மை பெற்றுத் திகழ்வான். **கற்றுக் கறவை :** சக்கரவர்த்தி இளகினாப்போலே இவனுக்குக் கண்ணளிக்கலாம்படி புக்கவிடத்தே புக்குப் புறப்பட்ட விடத்தே புறப்பட்ட இவனுக்கு முன்னோட்டுக் கொடுக்கவற்றாய். இவனுக்கு ஒதுங்குவதற்கு நிழலாயல்லவாயிருப்பது. "இட்டமான பசுக்களை இனிது மறித்து நீருட்டி விட்டுக் கொண்டு விளையாட" (நாச்.திரு. 14.1) என்பது காண்க.

**கணங்கள் பல :** தனித்தனியே எண் முடியாதவாறு போல, கணங்களும் (கூட்டங்களும்) எண்ணி முடியா "பற்பலாயிரம் உயிர்" என்றும் - ஆன்மாக்களுக்கு எண்ணிக்கை இருந்தாலும் "எண்ணில்

பலகுணங்கள்" என்று சொல்லுகின்ற பகவத் குணங்களுக்கு எல்லை உண்டாகிலும் இப்பசுக்களின் எண்ணிக்கை இல்லை. **கறந்து** : பலர் செய்யக்கூடிய சடங்கை அதில் கூர்மையுடைய ஒருவன் செய்யுமாப் போலவும், பிராமணர் வேதத்தை அதிகரிக்குமாப் போலவும், க்ஷத்திரியன் பருவம் நிரம்புவதற்கு முன்பே போரிலே வல்லவன் ஆகுமாப் போலவும், ஈசுவரன் ஒருவனே சர்வ ஆன்மாக்களுக்கும் நியமாதிகளைப் பண்ணுமாப் போலவும், இடைச்சாதியின் சுவாபத்தாலே பசுக்கள் பலவாயினும் ஒருவனே அடங்கக் கறக்கவல்ல சாமர்த்தியம். அரியது செய்யவல்ல குடியிலே பிறந்தோம் என்னாமல், உன்னை அன்றி அறியாத எங்களுக்கு அரியையாக இருக்க வொண்ணாதுகாண்.

**செற்றார்** : எம்பெருமானது மேன்மையைப் பெறாதார் எம்பெருமான் அடியார்க்குப் பகைவர். எம்பெருமான் அடியாரின் மேன்மையைப் பெறாதார். எம்பெருமானுக்குப் பகைவர். இந்த இருவகைப் பகைமையும் என்பது, "தீயபுந்திக் கஞ்சன் உன்மேல் சினமுடையன்" (பெரியாழ்.திரு. 2.2.5) 'சாதுசனத்தை நலியும் கஞ்சனைச் சாதிப்பதற்கு, ஆதியம் சோதி உருவை அங்க வைத்து இங்குப் பிறந்த, வேத முதல்வன்' (திருவாய் 3.5.5) என்ற ஆழ்வார்களின் பாசுரங்களால் விளங்கும். "பாண்டவர்களுக்குச் சத்துருக்கள் நமக்குச் சத்துருக்கள்" என்றான் கண்ணன். ஆண்டாள் "மாயன் இராவணன்" என்று - செவ்வைப்போர் அறியாத பையல் என்றருளிச் செய்தாள்.

**செற்றார் திறல் அறிய** : "தேவர்களும் எனக்கு எதிர்" என்றிருக்கும் கம்சன் முதலியோருக்கும் புகரவொண்ணா மிடுக்கையுடையவர்கள். அதாவது திருநீறு தாரியான உருத்திரன், பிரம்மாப் போலே ஓத்துச் சொல்லித் திரியும் பிரமன், அப்சரப் பெண்களை எண்ணிக் கொண்டிருக்கும் இந்திரன், அந்யபரனாய்க் கிடந்து உறங்கும் ஈசுவரன் இவர்களடங்கலும் நமக்கு எதிரோ என்றிருக்கும் கம்சனுடைய மிடுக்கு அழிய. **சென்று செருச் செய்யும்:** எதிரிகள் வந்தால் போரிடுதல் அல்லாமல், அவர்கள் வருகை நோக்கியிராமல், அவர்கள் இருந்தவிடம் ஏறச் சென்று பொருதல். சக்கரவர்த்தி திருமகனது வீரத்தைப் போலே இவர்களது வீரம்.

**குற்றமொன்றில்லாத** : எடுத்துவரப் பார்த்திருக்கும் குறை இல்லை. எதிரிகள் கையில் ஆயுதம் இல்லாத நிலையில் கொன்றார்கள் என்னும் குறை இல்லை. அழியச் செய்ய நின்றார்கள் என்று கிருஷ்ணனுக்கு முறைப்பட்டால், "செய்தாரேல் நன்று செய்தார்" (பெரியாழ்.திரு. 4.9.2) என்னும்படி பிறந்தவர்கள்.

**கோவலர்தம் பொற்கொடியே:** ஜனகன் திருமகள் ஜனககுலத்திற்குப் புகழ் படைத்தாற்போல, இவள் கோவலர் குடியை விளக்கம் செய்பவள் என்பதும், ஒரு கொள் கொம்போமு அணைந்து அல்லாமல் நிற்கமாட்டாத கொடிபோல் ஒரு கணவனோடு புணர்ந்தன்றித் தரிக்கமாட்டாதவள் என்பதும் போதரும். இவற்றால் "எங்களோடு கூடி, உனக்குக் கொள்கொம்பான கிருட்டிணனைச் சேரப்பாராய்" என்று உணர்த்தியவாறாம்.

**புற்றரவு அல்குல் :** புறம்பே புறப்பட்டு புழுதியடைந்த உடம்போடு அல்லாமல் தன் நிலத்திலே தங்கி இருக்கின்ற பாம்பினுடைய பணமும் கழுத்தும் போலே ஒளியையும் அகலத்தையுமுடைய நிதம்பப் பகுதியையுடையவளே. இவர்கள் தாமும் பெண்டிராக இருந்தும் இவளுடைய அல்குலை வருணித்தது - நெஞ்சினால் ஆண்மை பூண்டமையால் என்க. அவன் ஆண்களையும் பெண்ணுடை உடுக்கச் செய்யுமாப் போலே, பெண்களை ஆண்களாக்குகின்றது இவளுடைய அல்குல். "பெண்டிரும் ஆண்மை வெஃகிப் பேதுறு முலையினாள்" (தாடகைவதை-41), "வாராக வாமனே அரங்கா வட்ட நேமிவல, வாராக வாவுன் வடிவுகண்டால் மன்மதனும் வடவாராக வாதரஞ் செய்வன்" (திருவரங். அந். 60) என்பனவாதலால் ஆண் பெண்ணாகும் இடமும் உண்டு. "பெருமாள் ஆண்களையும் பெண்ணுடை உடுக்கப் பண்ணுமாப் போல பெண்களை ஆண்களாக்குகிறது இவளுடைய அல்குல்"[39] (ஆறாயிரப்படி) **புனமயில் :** தன் நிலத்திலே நின்ற மயிலினுடைய தோகை போலிருக்கின்ற அளகபாரத்தையுடையவளே. கிருட்டிணனையும் தங்களையும் பிச்சேற்றவல்ல அளக பாரத்தையுடையவள். "தோகைமாமயிலார்கள்" 'பொற்கொடி' என் கையாலே சமுதாய சோபை (லாவண்யம்) 'புற்றரவல்குல்' என்பது அவயவ சோபையோதராய் "எங்களை அவனோடு கூட்டவேண்டா, எங்களுக்குத் தாரகமாய் நாலடி நடந்து காட்டாய்". **போதராய் :** இராமபிரான் பிரகாசிக்கின்ற தனது தேஜசால் தண்டகாரணியத்தைச் சோபிக்குமவராய் வளரினம் பிறைபோல் காணப்பட்டது போல (இராமாயணம். ஆரணிய. 38.15) நாங்கள் களிக்கும்படி புறப்படாய். இவளை முன்னே போகவிட்டு, இவள் நடையழகு கண்டு பின்னே போகையிலே காணும் ஆசை. நாங்கள் நிற்கும்படி புறப்பட்டு, புனத்தை மயில் சிறப்பிக்குமாப்போலே இந்த ஸ்த்ரீத்வத்தையும் சிறப்பிப்பாய்.

39. அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்

**சுற்றத்துத் தோழிமார்** : இவ்வூரடங்களும் இவளுக்குத் தோழிமார். இவ்வூரடங்க இவளுக்கு உறவு. இவளுடைய சம்பந்தமுடையார், இவளைப் போலவே அநந்யப் பிரயோஜநைகளாய் இருப்பவர்கள். "இன்று வந்து இத்தனையும் அமுது செய்திடப் பெறில்" (நாச்.திரு. 9.7) என்றிருப்பவர்கள். "நாம் புறப்பட எல்லாரும் வந்தார்களோ?" என்று அவள் வினவ. எல்லாரும் வந்து : "உன்னையொழிய ஒரு பயனும் உண்டு என்று இருந்தாலன்றோ இவர்கள் கண்ணுறக்கம் கொள்வது?" என்று மறுமாற்றம் உரைக்கின்றார்கள் இவர்கள். **நின் முற்றம் புகுந்து** : இவளுடைய முற்றம் ஒரு தரிபாத் விபூதியிலும் இடம் உடைத்தாயிருக்கும் இவளது முற்றம். 'எங்களுக்குப் பிராப்பியமான இடத்திலே புகுந்து விட்டோம்' என்று இவர்கள் சொல்லுகின்றார்கள். இவர்கட்குப் பிரரப்பியமானபடி என்? என்னில்: "முற்றம் புகுந்து முறுவல் செய்து நின்றீர்" என்றும், "முற்றத்து ஊடு புகுந்து நின்முகம் காட்டிப் புன்முறுவல் செய்து" (நாச்.திரு. 2.9) என்றும், சேஷியானவனுக்கும் பிராப்பியமான முற்றமாகையாலே சேஷபூதர்களான எங்களுக்குச் சொல்ல வேண்டுமோ? என்பதாகும். உள்ளிருப்பவள், 'புகுந்து கொள்ளப் போகின்ற காரியம் என்? என்ன, **முகில் வண்ணன் பேர் பாட** : "நீயுகக்கும் அவன் வடிவழகையும் எனக்கே தன்னைத் தந்த ஔதார்யத்தையும் (வள்ளண்மையையும்) ஈடுபட்டு நீ பாட, நாங்கள் உன் பக்கமே நின்று அதனைப் பெறுகைக்காக. நீயுகக்கும் அவன் வடிவழகிலும் ஔதார்யத்திலும் ஈடுபட்டுத் திருநாமத்தைப் பகவர்தை நாங்கள் கேட்டு மகிழ வேண்டும்" என்கின்றார்கள் இவர்கள். **சிற்றாதே பேசாதே**: "முகில் வண்ணன்" என்ற பெயர் கேட்டவுடனே, அவ்வடிவை நினைந்து பேசாதே கிடந்தாள். உள்ளிருப்பவள். **சிற்றாதே** : சிதறாதே, சிற்றுதல் - சிதறுதல். உறக்கம் விட்டெழும்போது செய்பவை. உணர்ந்தமைக்கு அடையாளமான சேஷ்டையைப் பண்ணாதே. இவளுடைய சேஷ்டிதமும் வார்த்தையும் கண்ணுக்கும் செவிக்கும் போக்கியமாகையாலே 'கண்ணையும் செவியையும் பட்டினி போட வேண்டுமோ?' என்று இன்தனாகின்றார்கள். **செல்வப் பெண்டாட்டி நீ** : உன்னை நீ பிடித்து அறியாயே. உன்னோடு கூடுவதே எங்களுக்கெல்லாம் ஐசுவர்யமான நீ. உன்னுடைய உத்தேச்யம் நீ கூடுபூரித்து வைத்தால், எங்களுக்கு உத்தேச்யம் பெற வேண்டாவோ?" என்கின்றார்கள். "இங்கே கூடு பூரித்துக் கிடந்ததோ?" என்று உள்ளிருப்பவர்கள் கேட்க.

**எற்றுக்கு உறங்கும் பொருள்** : கூடு பூரித்ததில்லையாகில்

எங்கள் ஆர்த்தத்தொனி கேட்டால் கண் உறங்குமோ? எங்களிடம் புறப்பட்டு வாராமல் உறங்குவதால் ஒரு பயன் உண்டோ? "அடியார்கள் குழாங்களை - உடன் கூடுவதென்று ஆகொலோ?" என்று திரளோடே அநுபவிக்கும் அநுபவத்தை விட்டு, அவனைத் தனியே அநுபவித்தால் கைவல்ய மோட்சத்தோடொக்குமல்லவா? "தொண்டீர்கள் எல்லாரும் வாரீர்" என்றிருக்க வேண்டாவோ?" என்கின்றார்கள். மேலும் "உன்னுடைய உத்தேச்யத்தைப் பாராமலும், எங்களுடைய ஆற்றாமையைப் பாராமலும், கிருட்டிணனுடைய நிரதிசய போக்கியத்தைப் பாராமலும் ஏதுக்குக் கிடக்கின்றாய்?" என்கின்றார்கள். இன்னும், "அவனை உகப்பிக்கப் பார்த்தாயாகில் அவனுடையாரையும் உகப்பிக்க வேண்டும் காண். சுய பயனான கைங்கர்யத்தைக் காட்டிலும் ஒரு வேற்றுமை கண்டிலோமே - உன்னிடம்? உன்னையும் அவனையும் பொருந்தவிட நாங்கள் வேண்டும். அவனைப் பிரித்த அன்று விழுத்த கீர்த்தனம் பண்ணித் தரிப்பிப்பைக்கு நாங்கள் வேண்டும். நீயும் அவனுமாக நின்றால் எடுத்துக் கை நீட்ட நாங்கள் வேண்டும். ஆனபின்பு எங்களையொழிய உனக்கு உறங்க விரகு உண்டோ?" என்கின்றார்கள்.

**உள்ளுறை :** "எம்பெருமானே உபாயமும் உபேயமும்" என்று இருப்பவர்களின் ஆதாரத்திற்கு விஷயமாம்படி மேன்மை பெற்ற பாகவதோத்தமரை உணர்த்துதல், இப்பாசுரத்திற்கு உள்ளுறை. 'கற்றுக் கறவை... கறந்து' குடிகுடியாக வந்தடைந்த சீடர்களுக்கு ஞானோபதேசம் செய்து. நீ உறங்குவது எற்றுக்கு - எங்களையும் கிருஷ்ணாநுபவத்திற்கு உடன் சேர்த்துக் கொள்ளாமல் அகற்றுகை பயனோ? இன்னும் சம்சாரிகளைத் திருத்துகை பயனோ? 'கற்றுக் கறவை களந்து குற்றமொன்றில்லாத' என்றதனால் சாதிக்குத் தக்க தொழிலைக் கைங்கரியத்திற்காகச் செய்தலே சொருபத்திற்குத் தக்கது என்பது பெறப்படும்.

**மற்றுமோர் உள்ளுறை :** பேயாருக்கு அடுத்து முந்தினவரான **பூதத்தாரை உணர்த்தும் பாசுரமாகும் இது.** இதில் "குற்றமொன்றில்லாத கோவலர்தம் பொற்கொடியே" என்ற விளி பூதத்தாருக்கு நன்கு உடையதான **கோ** என்னும் சொல் கோதா என்றவிடத்திற் போல இங்கு ஸ்ரீ சூக்தியைச் சொல்லுகின்றது. கோவலர் - ஸ்ரீ சூக்திகளை அருளவல்லவர்களான ஆழ்வார்கள். "குற்றம் ஒன்று இல்லாத" என்ற அடைமொழி முதலாழ்வார்கள் வர்க்கே பொருந்தும். மானிட யோனியில் பிறந்த ஒரு குற்றம் மற்ற ஆழ்வார்களுக்கு உண்டு. அக்குற்றம் ஒன்றும் இல்லாத கோவலர் - முதலாழ்வார்கள். அவர்களுள் பொற்கொடியே - "கோல்

தேடியோடும் கொழுந்ததே போன்றதே, மால்தேடி யோடும் மனம்" (இரண்.திருவந்.27) என்கின்ற பாசுரத்தினால் தம்மை ஒரு கொடியாகச் சொல்லிக் கொண்டவர் பூதத்தாழ்வாரேயாவார். "எம்பெருமானாகிற கொளுகொம்பைத் தேடிச் செல்லுகின்ற கொடி போன்றவன் நான்" என்றவர் இவரேயன்றோ? "கற்றுக் கறவைக் கணங்கள் பல கறந்து" என்பது முதலாழ்வார்கள் மூவர்க்கும் பொதுவான வாசகம். கற்றுக் கறவை - கன்றாகிய கறவை ( கறவை என்பதனால் ஸ்ரீ சூக்தி விவட்சிதம்) மற்ற ஆழ்வார்கள் பெரிய பெரிய பாசுரங்களை அருளினார்கள். முதலாழ்வார்கள் அங்ஙனமின்றி வெண்பாவாகிய மிகச் சிறிய பாசுரங்களை அருளினார்கள். பொய்கையாழ்வார் திருவந்தாதி கறவைக் கணம். பூதத்தாழ்வார் திருவந்தாதியும் சேர்ந்து கறவைக் கணங்கள். பேயாழ்வார் திருவந்தாதியும் சேர்ந்து கறவைக் கணங்கள் பலமுறைப்படி ஒருமை, இருமை, பன்மை வசனங்கள் (வடமொழி இலக்கணப்படி) இணங்கி அமைந்த அழகு கண்டு அநுபவிக்கத்தக்கது.

**செற்றார் திறல் அழியச் சென்று செருச் செய்யும்** : நாடெங்கும் திரிந்து பலவகை விரோதிகளை நிரசிக்க வேண்டும் என்கின்ற பொருளை,

**– "எண் திசையும்**
**பேர்த்தகரம் நான்கு உடையான் பேரோதிப் பேதைகாள்**
**தீர்த்தகரர் ஆமின் திரிந்து (இரண்.திருவந். 14)**

என்ற பாசுரத்தால் வெளியிட்டவர் இந்த ஆழ்வார் ஆவர். '**புற்றிற வல்குல்**' என்பது இடையழகை வருணிப்பதாகும். உள்ளுறையில் இடையழகாவது, பக்தியின் பெருமையைக் குறிப்பது. ஞானம், பக்தி, விரக்தி என்ற மூன்றில் பக்தி இடைப்பட்டதாதலால், இடையழகு என்பது பக்தியின் அழகேயாகும். இவ்வாழ்வார் தம்முடைய திருவந்தாதியை முடிக்குமிடத்து "என்தன், அளவு அன்றால் யானுடைய அன்பு" (இரண். திருவந். 100) என்றே முடித்தார். இதனால் அவரது இடையழகு நன்கு வெளிப்பட்டதாயிற்று. அன்பிலே தொடங்கி அன்பிலே தலைக்கட்டினார்.

**புனமயிலே!** என்று விளியும் இவருக்கு நன்கு அழகாகப் பொருந்தும். பொழிலிடத்தே வாழ்வது மயில். இவ்வாழ்வார் தோன்றிய தலமோ திருக்கடல் மல்லை அதனைப் பாடின கலியன், "கடிபொழில சூழ் கடல்மல்லை"[40] என்றே பலமுறையும் பாடியுள்ளார். மயில் முகிலைக் காண்பதில் மிக்க குதூகல முடைத்தாதலால், மேகம் நீர் பருக வரும் இடமான கடற்கரையிலே மயில்கள் மகிழ்ந்து

40. பெரி. திரு. 2.5

நிற்கும். இவ்வாழ்வார் நின்ற இடமும் கடற்கரையில் தானே. **சுற்றத்தின் தோழிமார்...** இவருக்குப் பொய்கையாரும் பேயாரும் சுற்றத்தவர்கள். மற்றை ஆழ்வார்கள் தோழிமார். **முகில்வண்ணன் பேர்பாட :** முந்துற முன்னம் முகில் வண்ணன் பேர்பாடினவர் இவ்வாழ்வாரேயாவர். "உலகேழும், முற்றும் விழுங்கும் முகில்வண்ணன்... ஏத்தும் என் நெஞ்சு" (இரண்.திருவந் 94) என்ற பாசுரம் நினைக்கற்பாலது. புனமயில் முகில் வண்ணனைத் தானே பாடும்? இப்பாசுரத்தில் **கோவலர்** என்று திருக்கோவலூரை சூசிப்பித்தது மிக முக்கியமாகக் கவனிக்கத்தக்கது.

## 12. கிருட்டிணனைப் பிரியாமல் இருப்பான் ஒருவன் தங்கையை எழுப்புவதைக் கூறுவது

### பன்னிரண்டாம் பாசுர விளக்கம்

"கனைத்திளம் கற்றெருமை"

**கனைத்திளம் கற்றெருமை கன்றுக் கிரங்கி**
**நினைத்து முலைவழியே நின்றுபால் சோர**
**நனைத்தில்லம் சேறாக்கும் நற்செல்வன் தங்காய்**
**பனித்தலை வீழநின் வாசற் கடைபற்றிச்**
**சினத்தினால் தென்இலங்கைக் கோமானைச் செற்ற**
**மனத்துக் கினியானைப் பாடவும்நீ வாய்திறவாய்**
**இனித்தான் எழுந்திராய் ஈதென்ன பேருறக்கம்**
**அனைத்தில்லத் தாரும் அறிந்தேலோர் எம்பாவாய்**

(சொ.பொ) இளங்கன்று எருமை - இளங்கன்றையுடையனவான எருமைகள்; கனைத்து - (பால் கறவாமையினால் கதறிக் கொண்டு; கன்று இரங்கி - (தமது) கன்றுகளிடத்திலே மனம் இரங்கி; நினைத்து - (அக்கன்றை) நினைப்பதனால்; முலைவழியே - முலைக்காம்புகளின் வழியாக; நின்றுபால் சோர - இடைவிடாமல்பால் பெருக; (அப்பெருக்கினால்), இல்லம் நனைந்து - வீடு (முழுவதையும்) ஈரமாக்கி; சேறு ஆக்கும் நம் செல்வன் - சேறாகப் பண்ணுகையாகின்ற (பகவதநுவமாகின்ற) நல்ல சம்பத்தையுடையவனுடைய; தங்காய் - தங்கையானவளே; பனி - பனியானது; தலை வீழ - (எங்கள்) தலைமீது விழும்படி; நின்வாசல் கடை பற்றி - உனது மாளிகையின் தலைவசாலைப் பிடித்துக்கொண்டு; சினத்தினால் - (பிராட்டியைப் பிரித்தான் என்கின்ற) சீற்றத்தினால்; தென்இலங்கைக் கோமானை - தென் திசையிலுள்ள இலங்காபுரிக்கு அரசனான இராவணனை; செற் - கொன்று ஒழித்தவனும்; மனத்துக்கு இனியானை - சிந்தனைக்கு இனியவனுமான இராமபிரானை; பாடவும் - பாடும் போதும்; நீ - நீ; வாய் திறவாய் - வாயைத் திறந்து பேசுகின்றாய் இல்லை; இனித்தான் - (எங்கள் ஆற்றாமையை அறிந்த) பின்னும் எழுந்திராய் - எழுந்திருக்கின்றிலை; அனைத்து இல்லத்தாரும் -

மாளிகை வாசலில் திரண்டு நிற்கின்றதை) அறிந்த பின்னரும்; பேருறக்கம் ஈது என்ன - ஓயாத பெருந்துயிலாகிய இஃது என்ன?

(க-து) : நாட்டிலிருந்த போதும் காட்டிலிருந்தபோதும் என்ற வேறுபாடு இன்றி பெருமாளைப் பின்தொடர்ந்து திரிந்த இளைய பெருமாளைப் போன்று, கண்ணபிரானையன்றி மற்றொருவரையும் அறியாமல் அவனையே பின்தொடர்ந்து இருப்பான் ஒருவன் தங்கையாய்ச் சீர்மை பெற்றிருப்பாள் ஓர் ஆயப் பெண்ணை எழுப்பும் பாசுரம் இது.

**விளக்கம் : இதில் முதல் இரண்டரை அடிகளால்** இந்த ஆய நங்கையின் தமையனுடைய செல்வத்தின் சிறப்புக் கூறப்பெறுகின்றது. இவன் நாடோறும் கண்ணபிரானுடன் கூடித் திரிபவனாதால் கறவைகளைக் காலந்தவறாமல் கறப்பதில்லை. அக்கறவைகள் உரிய காலத்தில் கறக்கப் பெறாமையால் முலைகடுத்து 'கன்று என் படுகின்றதோ' என்று வாசலில் நின்று குமுறி, தொலைவில் கட்டப்பெற்றுள்ள தன் கன்றின்மீது பாவனையால் பாசத்தைச் செலுத்தி அந்தப் பாவனையின் அற்றாலே, கன்று தன் முலையில் வாய் வைத்ததாகக் கருதிக் கொண்டு, கை வழியாகவும் அல்லாமல், கன்றின் வாய்வழியாகவும் அல்லாமல், முலை வழியே பால் சொரியா நிற்கும். அந்தப் பால் பெருக்கினால் வீடு முழுவதும் வெள்ளமாகிவிடும். இந்நிலையைச் செல்வம் என்று கூறுகின்றனர். இத்தகைய செல்வமுடையானுக்குத் தங்கையாகப் பிறந்தவளே என்று அவளை விளிக்கின்றனர் ஆயச் சிறுமிகள்.

**கனைத்து :** குமுறி கதறி : கறப்பாரில்லாமையால் முலைகடுத்துக் கதறுதல். இடையீடின்றித் தானம் செய்தலையே தொழிலாகவுடைய வள்ளற் பெருமான்கள் ஒரு கணப்பொழுதில் மனம் தளும்புமாறு போலவும், எம்பெருமான் பிராப்தகாலத்தில அடியார் காரியங்களைச் செவ்வனே செய்யப் பெறாதொழியில் அவன் திருவுள்ளம் தளும்புமாறு போலவும் பசுக்கள் உரிய காலத்தில் கறக்கப்பெறா தொழியில் முலைக்கடுப்புற்றுக் கனைத்தல் இயல்பு. **இளங்கன் றெருமை :** இளங்கன்றான எருமை என்னுதல். இளங்கன்றையுடைய எருமை என்னுதல். இரண்டாலும் கிலேசம் பொறுக்கமாட்டாமை. "கறவா மடநாகு கன்று உள்ளினாற்போல" (பெரி.திரு. 7.1.1) என்ற திருமங்கையாழ்வார் திருவாக்கைக் காண்க. **கன்றுக்கு இரங்கி :** தன் முலைக்கடுப்பு போகட்டும், 'கன்று என்படுகின்றதோ' என்று இரக்கப்பட்டு எம்பெருமான் அடியார் விஷயத்தில் இருப்பது நிதர்சனமன்றோ? இதனால் தெரிவிப்பது என்? என்னில்: இடையன்

படுகின்றோம் என்கின்றார்கள் ஆயமகளிர். "ஏழை ஏதலன் கீழ்மகன் என்னாது, இரங்கி" (பெரி.திரு. 5.8.1) என்று திருவரங்கம் பற்றிய திருமொழியில் திருமங்கையாழ்வார் திருவாக்கைக் காண்க. எருமை கறவாது ஒழிவான் என்? என்னில் : இளைய பெருமாள் க்ஷத்திரிய தர்மமான அக்னி காரியத்திற்கு உறுப்பாம் எனதல்லவா? அது போலல்லவா இவ் எருமைகள் விட்டுக் கறப்பது? அஃது என்? என்னில் : "தேவரீருடைய கைங்கரியத்தையொழிய பரமபதத்தை அடியேன் விரும்பவில்லை. கைவல்யத்தையும் விரும்பவில்லை. மூவுலக ஐசுவரியத்தையும் விரும்பவில்லை"[41] என்னுமாப்போலே. **நினைத்து முலை வழியே:** கன்றை நினைத்து பாவநாபிரகர்ஷத்தாலே முலையிலே வாய் வைத்ததாகக் கருதிக் கொண்டு பால் சொரியும். **முலை வழியே :** கை வழி தவிர அதாவது, கை வழியுமல்லாமல் கன்றின் வாய் வழியுமல்லாமல் முலைவழியே பால் சொரியும். **நின்று பால் சோர :** முகில் மழைபொழிய அனைத்தால் கடலில் புக்குநீரை முகந்துகொண்டு வந்து பின்பு பொழிய வேண்டும். இக்கறவைகட்கு அவ்வருத்தம் இல்லை, நினைவே ஊற்றாகப் பால் சுரக்குமாதலால் அந்நினைவு மாறாமையால் திருமலையில் திருஅருவிகள் போன்று பால் மாறாமல் பெருகிச் செல்லும். "பகவத் விஷயப் பொருள் கூற வேண்டும்" என்று ஒருவன் வேண்டாதிருக்கவும், கற்றுணர்ந்த சுவைஞர் தமது சொல்லாமையாலே, தாமே பகவத் விஷயார்த்தங்களை எடுத்துரைக்குமாறு போலவும், பார்த்தன் வேண்டாதிருக்கப் பரந்தாமன் தானே கீதையைக் கூறத் தொடங்கினாற் போலவும் ஆயிற்று, கறவைகளின் நிலைமை.

அடுத்து நான்காம் அடி முதல் இரண்டரை அடிகளால் இவர்கள் தாங்கள் செய்யும்படியைக் கூறுகின்றனர். **நனைத்து இல்லம் சேறாக்கும் :** பால் வெள்ளம் இருக்கையாலும், எருமைகள் துதிகைக்கையாலும் சேறாய்க் கிடக்கும். **இல்லம் சேறாக்கும் :** எத்தனையேனும் ஏறிப்பாயாத மேடும் பால் வெள்ளத்தாலே சேறான படியைச் சொல்லுகின்றது. சேறாகையாலே புகவொண்ணாதபடியைக் காட்டுகின்றது. கடலை அகழ் செய்து கிடந்தால், ஓடம் ஏறிச் செல்ல வேண்டும். சேற்றுக்கு அளற்றுப் பொடியிட்டுச் செய்ய வேண்டும்படி உள்ளது. **நற்செல்வன் :** கர்மத்தாலேயாதல் தேவதாந்தர பஜனத்தாலேயாதல் வரும் சம்பத்து அழியும் தன்மையுடையதாக இருக்கும். பெருமாளைப் பிரியாத இளைய பெருமாளைப் போலே, கிருஷ்ணனைப் பிரிய முடியாதபடி அவனை நோக்குகின்ற சம்பத்து அல்லவா நிரந்தர சேவை போலே நிலைநின்ற ஐசுவரியம்?

41. இராமாயணம். அயோத். 31.5 பெருமாளிடம் இளைய பெருமாள் சொன்னது.

கைங்கரிய சம்பத்துத்தானே இந்த ஆன்மாவுக்கு நிலைநின்ற சம்பத்து? அதாவது கிருட்டிணன் திருவடிகளிலே நிரந்தர சேவை. "ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போல்" (திருவாய். 6.7.2) என்று ஆழ்வாருடைய கைங்கரிய ஸ்ரீ தன்னுடைய வைணவ ஸ்ரீயாலே நாடெல்லாம் வைணவத்துவம் உண்டாம்படி இருத்தல். **நங்காய் :** குணக்குறைவுக்கு இராவணன் என்னுமாப்போலே குணத்துக்குத் தமையனிலும் தன்னேற்றம் உடையள் எனல். **நற்செல்வன் தங்காய்** "விபீஷணாழ்வானிலும் அவன் மகளான திரிசடை பிராட்டிக்கு அடிமை செய்தாற்போலே, கிருட்டிணனை நோக்க வேண்டாவோ? கிருட்டிணன் இரட்சியமான போதே நாங்களும் அந்தப் பூதைகளன்றோ?" என்கின்றார்கள்.

'ஆழிமலைக்கண்ணா' (4) என்ற பாசுரத்தில் மழைக் கடவுளுக்கு அருளிப் பாடிட்டு மழை பெய்ய நியமித்தார்களாதலால் அக்கட்டளையின்படி அவனால் பெய்விக்கப் பெறும் மழை தலையிலே விழுமாறு இவளது வீட்டு வாசற்கணையத்தை அவலம்பித்துக் கொண்டு நிற்குமாபற்றைச் சொல்லுகின்றது நான்காம் அடி.

**பனித்தலை வீழ நின் வாசல் கடை பற்றி :** "ஆழி மலைக் கண்ணனின் மழைமேலே வெள்ளமிட, கீழே பால் வெள்ளமிட, நடுவிலே மால் வெள்ளமிட நின்ற நிலையிலேயுள்ள ஆயச் சிறுமிகள் தெப்பம் பற்றுவாரைப் போலே நின் வாசற் கடையில் தண்டியத்தைப் பற்றிக் கிடக்கின்றோம். பிராப்பிய பூமியில் ஐசுவரியம் இங்கே கை புகுந்த விடத்தும் அவ்வருகே போகத் தேடுகின்றது எங்கள் அபிநிவேசநியம். இதனை நீ அறிந்திலை" என்கின்றார்கள் ஆயச் சிறுமிகள். "ஈசுவரன் அபிநிவேசம் அறிந்து விளக்கை விள்ளாமை விரும்பி உள்கலந்தார்க்குத் தன்னைக் கொடுக்குமாப்போலே, இவர்கள் அபிநிவேசத்தையும் அலமாப்பையும் காண்போம்" என்று பேசாதே கிடக்கின்றாள் உள்ளிருப்பவள். அவள் நினைவை யறியாமல் தங்கள் செல்லாமையாலே சொல்லுகின்றார்கள்.

**சினத்தினால் :** பெண்களுக்காகில் சேர்க்கைப் பல்லி போலே கிருஷ்ண விருத்தாந்தம் சொல்லுதல் பணியல்லவா? பெண்களைத் தீராமாற்றமாக நெஞ்சாரல் கிடக்கின்றாள். "உண்ணாது உறங்காது ஒலி கடலை ஊடறுத்துப், பெண்ணாக்கை யாப்பிண்டு தாம் உற்றபோது எல்லாம்" (நாச்.திரு,11.7) "பெண்களைப் பிரிந்தால் ஊணும் உறக்கமும் இல்லாமல், பெண் பிறந்தாக்குத் தஞ்சமான சக்கரவர்த்தி திருமகனைச் சொல்லுவோம். "இவள் எழுந்திருக்கைக் காக" என்று இராமனது வரலாற்றைச் சொல்லுகின்றார்கள். விரோதிகளைப் போக்கி நமக்கு உபகரித்தானபாயிருக்கும்

கிருட்டிணனைப் போலல்லாமல், ஆச்ரித விரோதிகளைப் போக்குவதனால் தன் சினம் தீர்ந்தானாக நினைத்திருத்தல். **சினத்தினால் :** தண்ணீர் போலே இருக்கின்ற சக்கரவர்த்தி திருமகனுக்கும் சினம் உண்டோ, என்னில் : அடியார்களின் விரோதிகள் அல்லவா? தன் திருமேனியில் அம்புபட்டபோது ஆறியிருந்தான். திருவடிமேல் அம்புபட்டபோது சீறினானன்றோ? மகராசருக்குச் (சுக்கிரீவன்) சீற்றம் பிறந்து வாலியை எய்தார். அவர் அழுத போது கூட அழுதாரல்லவா? "பகைவரின் உணவு உண்ணற்குரியதன்று. அவருக்கும் உணவு படைக்கக்கூடாது. பாண்டவர்களை நீ வெறுக்கின்றாய். பாண்டவர்கள் எனக்கு உயிர் போன்றவர்கள் (உத்தியோகபர்வம்) என்று கண்ணன் துரியோதனனிடம் சொன்னபடி இருப்பது.

**தென்னிலங்கை :** இராவணப்பயல் செய்த அநீதியை நினைத்து பறைச்சேரிட, பறைச்சேரி என்று சொல்லுவாரைப் போல அத்திக்கும் அஸஹ்யமானபடி சொல்லிற்று. **தென் இலங்கைக் கோமானை :** 'இந்த இராவணனால் செய்யப்பட்ட அதர்மம் பலிக்காமல் போனால், இந்த அரக்கத்தலைவன் இந்திரனோடு கூடிய சுவர்க்கத்துக்கும் இரட்சகனாய் விடுவான்' (இராம.சுந்.49.18) என்ற திருவடி மதித்த ஐசுவரியம் உடையவனை. **செற்ற :** ஓரம்பாலே தலையைத் தள்ளி விடாமல், படையை அழித்து புத்திரர் பேரர்களைத் தலைசாய்த்து, ஆயுதங்களைச் சிதைத்து 'அரக்கர் தங்கள் கோன் போலும்' (பெரி.திரு. 4.4.6) என்ற அபிமானத்தை அழித்து, பட்ட எளிவரவெல்லாம் அறிவிப்பார் இல்லாதபடி தரம்கெடுத்து, நெஞ்சாரல் படுத்திக் கொன்றபடி.

**மனத்துக்கினியானை :** இராமபிரான் இராவணனுடன் போர் புரியும்போது அவன் மிகவும் எளிவரவு பட்டமை கண்டு இரக்கமுற்று "அரக்கர் கோமானே போரில் மிகவும் வருத்தமுற்றாய். ஆதலின் இன்று நின் இருப்பிடம் சென்று சிறிது தேற்றமடைந்து நாளை போருக்கு வா, அப்போது என் வலியைக் காண்பாய்"[42] என்று நியமனம் தந்து தானே போகவிட்டருளினமை முதலிய பல குணங்களினால் ஈடுபடுத்தும் தரம் உடையனாதல் பற்றி, 'மனத்துக் கினியானை' என்று அடைமொழி கொடுத்துப் பேசுகின்றார்கள்.

42. ஆளை யாஉனக்கு அமைந்தன மாருதம் அறைந்த
பூளை யாயின கண்டனை இன்று போய்ப் போர்க்கு
நாளை வாவென நல்கினன்
..............................................................
– கம்பரா. யுத்த. முதற் போர்புரி – 256
என்ற பாடலை நினைப்பது.

கண்ணபிரான் பெண்களைப் படுத்தும்பாடுகளை நினைந்தால் "வெற்றி பெறிதே பெற்றதாய் வேம்பேயாக வளர்த்தாளே" என்னும்படியிருத்தலால் அவன் மனத்துக்கு இனியன் அல்லன் என்று கருதுகின்றனர் போலும். **பாடவும் வாய்திறவாய்** : 'கண்ணன் நாமமே குழறிக் கொன்றீர்' என்று - நம்மை நலியும் கிருஷ்ணனுடைய பேரைக் காற்கடைக் கொண்டு, 'இறந்தோர்கட்கு உயிர் கொடுக்கத்தக்க சஞ்சீவியாகிய இராம வரலாற்றை, இத்திருநாமம் முதல் ஆரம்பிக்கின்றோம்' (சகஸ்ர நாம பாஷ்யம் - 391 ஆம் திருநாமத் தொடக்கம்) என்னும்படியே கிருஷ்ண விரகத்தாலே கவர் பிளந்த நெஞ்சு பதம் செய்யும்படியான சக்கரவர்த்தி திருமகனைப் பாடச் செய்தேயும். போன உயிர் மீளும்படியானவனைப் பாடவாய் திறக்கின்றிலை. "வேம்பாயாக வளர்த்தாள்" என்று - பெற்ற தாயையும் குற்றம் சொல்லும்படியல்லவா இருக்கின்றது இவன் நிலைமை? பெற்றவளையும் கொண்டாடும்படியல்லவா உள்ளது அவன் நிலைமை?

**இனித்தான் எழுந்திராய்** : "எங்களுடைய ஆர்த்தியைக் கண்டு எழுந்திருக்கா தொழியினும் ஒழிக. மனத்துக்கினியானுடைய பாடல்களைக் கேட்பதற்காகிலும் எழுந்திருக்கலாகாதா?" என்கின்றார்கள். **ஈதென்ன பேருறக்கம்** : உறக்கம் இரு வகைப்படும். அவை வைதிகமும் இலௌகிகமும் என்பவை. தமோகுணத்தின் விளைவாக உறங்குகின்ற சம்சாரிகளின் உறக்கம் இலௌகிக உறக்கமாகும். அனைத்துலகங்களின் காவலையும் சிந்தனை செய்து கொண்டு உறங்குவானைப் போல யோகு செய்யும் எம்பெருமானுடைய உறக்கம் வைதிக உறக்கமாகும். 'இந்த இருவகையிலும் சேராத விலட்சண உறக்கமாக உள்ளது உன் உறக்கம்' என்கின்றார்கள் என்பதாம்.

**அனைத்தில்லத்தாரும் அறிந்து** : இதற்கும் இரண்டுவிதமாகக் கருத்து உரைக்கலாம். "நீ பிறருடைய நலனையே பயனாகக் கருதுகின்றவளாகையால், 'இப்பாடியிலுள்ள பெண்களில் ஒருத்தி தப்பாமல் அனைத்தில்லத்தாரும் உணர்ந்து வர வேண்டும்' என நினைத்து கிடக்கின்றாயாகில், அங்ஙனமே அனைத்தில்லத்தாரும் உணர்ந்து வந்தாயிற்று. இனி நீ எழுந்து வா" என்கின்றார்கள். இஃது ஒரு கருத்து. "பாடியிலுள்ள பெண்கள் எல்லாரும் திரண்டு வந்து உன் மாளிகை வாசலில் நின்று கூப்பிட, நீ சிறிதுபொழுது உணராமல் கிடக்க, இதனால் உனக்கு வரும் மதிப்பை அனைவரும் அறிய வேண்டும் என்று கிடக்கின்றாயாகில், அப்படியும் அறிந்தாயிற்று. இனி, உணர்ந்து வா" என்கின்றார்கள். இது மற்றோர் கருத்து.

இவற்றுள் பின்னர் உரைத்த கருத்து சிறக்கின்றது. எம்பெருமானார் திருவவதரித்தாற் போலேயன்றோ இப்பெண்பிள்ளை.

**உள்ளுறை :** பகவதநுபவம் பெற்ற பாகவத நிஷ்டரான பாகவதர் ஒருவரை உணர்த்துகின்றார்கள் என்பது.

**பிறிதோர் உள்ளுறை :** பூதத்தாழ்வாருக்கு அடுத்து முந்தினவரான **பொய்கையாழ்வாரை எழுப்பும் பாசுரமாகும் இது. நங்காய்!** என்ற விளி இவருக்கு நன்கு பொருந்தும். உலகில் தங்கை என்று மகாலட்சுமியையும் தமக்கை என்று மூதேவியையும் வழங்குவார்கள் 'சேட்டைதம்மடியகத்து' *(10)* என்ற திருமாலைப் பாசுரத்தில், தமக்கையைக் குறிக்கும் **ஜியேஷ்டா** என்ற சொல்லால் மூதேவியைக் குறிப்பிட்டிருத்தல் காணலாம். மகாலட்சுமி தாமரை மலரில் பிறந்தவள். "வநசமலர்க் கருவதனில் வந்தமைந்தான் வாழியே" என்று பொய்கையாழ்வாரின் வாழித் திருநாமத்தின்படி (அப்புள்ளார்) பொய்கையாழ்வாரும் தாமரை மலரில் தோன்றியவர். இந்த ஒற்றுமை நயம் பற்றித் தங்காய் என விளிக்கத் தகுதியுடையவர் இவ்வாழ்வார்.

**'நனைத்தில்லம் சேறாகும்'** என்ற விசேடணமும் இவருக்கு வெகு நேர்த்தியாகப் பொருந்தும். இராவணவதம் முடிந்த பின்னர் பெருமாள் மீண்டு திருவயோத்திற்கு வந்தபோது அவரை நோக்கிப் பரத்துவாச முனிவர் பரதாழ்வான் சேறு பூசப் பெற்றிருப்பதாகச் சொன்ன வாசகம் ஒன்று உண்டு. இதன் கருத்து : இரவும் பகலும் நிசலும் அழுதழுது நனைத்தில்லம் சேறாக்கினான் என்றபடி.

**"வண் பொன்னிப்பே**
**ராறுபோல்வரும் கண்ணநீர்கொண்**
**டரங்கன் கோயில் திருமுற்றம்**
**சேறுசெய் தொண்டர்" (2:3)**

என்றார் குலசேகரப் பெருமாள். எம்பெருமான் அரங்கன் திருமுற்றம் அவனது புகழைப் பாடுவதால் அடியார்களின் கண்ணீர்ப் பெருக்கு அவன் சந்நிதி உள் திருமுற்றம் சேறாக்குகின்றது என்கின்றார் ஆழ்வார். "பழுதே பல பகலும் போயின என்று அஞ்சி, அழுதேன்" (முத.திருவந். *16*) என்று தாமே அழுதவராதலால் நனைத்தில்லம் சேறாக்கினர் எனலாம். அன்றியும் இவரது இல்லமான பொய்கையும் சேறாகவே உள்ளது.

**கனைத்து :** 'முதன் முதலாகப் பேசத் தொடங்கும்போது கனைத்தல் இயல்பு. பொய்கையாழ்வாருக்கு முன்னதாகப் பேசினவர்கள் எவரும் இல்லை. இவரே முதன்முதலாகப் பேசத்

பெறும். **இளங்கற்றெருமை :** எருமை என்றால் மஹிஷி. இலட்சித இலட்சணாக்ரமத்தால் தேவதேவ திவ்விய மஹிஷி என்றவாறு. எம்பெருமானுக்குத் திவ்விய மஹிஷியான பிராட்டியை யொப்பவர் இவ்வாழ்வார் என்பது குறிப்பு. 'இளங்கன்றுகளையுடைய' என்று விசேஷணமிட்டதனால், மற்றையாழ்வார்கள் அனைவரும் இவருக்குக் குழந்தைகளின் இடத்தைப் பெற்றவர்களாய், இவர் அன்னை இடத்தைப் பெற்றவராய்க் காட்டினபடி. ஆழ்வார்களுள் இவர்தானே முதல்வராக இருப்பவர்? **கன்றுக்கிரங்கி :** இவர் பாசுரம் அருளிச் செய்யத் தொடங்கினது கன்றுகளான தம் போல்வார் பக்கலிலுள்ள பரமகிருபையால் எனலாம். "வையத்தடியவர்கள் வாழ" என்ற **முதலியாண்டானது** தனியன் காண்க.

**நினைத்து முலைவழியே நின்று பால் சோர :** பகவானின் திவ்விய குணங்கள் இவரது திருவுள்ளத்தில் படிந்தவாறே அந்த நினைவுதானே ஊற்றாகப் பால் போன்ற பாசுரங்கள் பெருகப் புக்கன. **பனித்தலை வீழநின் வாசல் கடை பற்றி :** இவர் பொய்கையில் தோன்றினவராதலால் இவரது வாசற்கடையைப் பற்றுவார்க்குப் பனித்தலை வீழப் பிராப்தமேயாகும் அன்றோ? முதலாழ்வார்கள் மூவரும் பனித்தலைவீழத் திருக்கோவலூர் வாசற்கடை பற்றின வரலாறும் சூசிதமாகின்றது. **சினத்தினால் தென் இலங்கைக் கோமானை :** இது இராம குணகீர்த்தனம். மாமுனிவர்களின் ஞானக் கண்ணுக்கு இலக்காகாத ஓர் இராம வரலாற்று நிகழ்ச்சி இவ்வாழ் வாருடைய அகக் கண்ணுக்கு இலக்கானமை தெரிகின்றது. இது,

**— பூமேய**
**மாதவத்தோன் தாள்பணிந்த வாள்அரக்கன் நீள்முடியை**
**பாதமத்தால் எண்ணினான் பண்பு (45)**

என்ற இவரது பாசுரத்தால் பொலிவுறும். முன்னர் இராவணன் தன் பத்துத் தலைகளையும் மறைத்துக் கொண்டு நான்முகனிடம் சென்று வரம் வேண்டினபோது எம்பெருமான் ஒரு சிறு குழந்தைவடிவாய் அந்த நான்முகன் மடியிலே உறங்குவான் போல் கிடந்து, 'இவன் பத்துத் தலைகளையுடைய இராவணன். தன் சொருபத்தை மறைத்துக் கொண்டு உன்னை வஞ்சித்து வரம் பெறுவதற்காக வந்துள்ளான். இவனுக்கு நீ வரம் அளித்தால் பெரும் தீங்காக முடியும்' என்று தெரிவிப்பவன் போன்று தன் திருவடியால் அவ்விராவணனுடைய பத்துத் தலைகளையும் எண்ணிக் காட்டினான் என்பது வரலாறு". மேற்குறிப்பிட்ட பாசுரத்தில், "நாமே அறிகிற்போம்

**நன்னெஞ்சே!"** என்பதற்குப் பொருந்த **'மனத்துக்கினியானை'** என்றாள். **'இனித் தான் எழுந்திராய்'** 'பழுதே பல பகலும்' *(16)* என்கின்ற பாசுரம் பேசினபிறகுங்கூட உறங்கலாமோ? எனல். முமுட்சுப்படியில் 'பழுதே பல பகலும் போயின என்ற இழந்த நாளைக்குக் கூப்பிடுகிறவனுக்கு உறங்க விரகிலை' *(முமுட்சு. 110)* என்ற சூக்தியும் ஈண்டு அநுசந்திக்கத்தக்கது. **அனைத்தில்லத்தாரும் அறிந்து :** 'அறியும் உலகெல்லாம் யானேயும் அல்லேன்' *(22)* என்ற இவ்வாழ்வார் பாசுரம் நினைப்பூட்டினபடி.

இப்பாசுரத்தோடு ஆண்டாளுக்கு முந்தின ஆழ்வார்களை யெல்லாம் எழுப்பியாயிற்று. "ஆழ்வார்கள் பன்னிருவர்" என்ற சம்பரிதாயப்படி மதுர கவிகளும் ஆண்டாளும் ஆழ்வார் கோஷ்டியில் சேர்ந்தவர்களாதலால், இவ்விருவரையும் எழுப்புவதும் இப்பாசுரத்திலேயே அறியக் கிடக்கின்றது. இதனை விளக்குவேன். 'நற் செல்வன் நங்காய்' என்றது 'நற்செல்வன் நங்கையே' என்று பொருள்படுவதால் நற்செல்வன் தன்னுடைய கையாக இருப்பவரே என்றபடியாகும். இங்கு நற்செல்வன் என்பது **நம்மாழ்வாரை.** அவர் திருவாய்மொழி அருளிச் செய்கையில் மதுரகவிகள் அவருடைய கையில் ஸ்தாநீயராயிருந்து பட்டோலை கொண்டாராதலால் இந்த விளி மதுரகவிகளுக்கும் பொருந்தும்.

இனி, 'நற்செல்வன்' என்று எம்பெருமானரைச் சொல்லுவதாகக் கொண்டு அவருடைய தங்கை என்று ஆண்டாளையும் சொல்லுவதாகக் கொள்வதிலும் குறை இல்லை. "கோதற்ற ஞானத்திருப்பாவை பாடிய பாவை நங்கை" என்றும், "பெரும் பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே" (ஆண்டாள் வாழித் திருநாமம்) என்றும் வந்துள்ளமை காண்க. ஆண்டாள் தன்னைத்தானே எழுப்பிக் கொள்ளுதல் பொருந்துமோ என்று விரசமாக வினவுவார்க்கு "நாம் விடையளிக்க வல்லோம் அல்லோம். சொற்சுவை அமைந்திருக்கும் அழகை அநுபவித்துப் போருகிறோம். அதற்கு மேல் பேச்சுக்கு இடம் இல்லை" என்பர் காஞ்சி அண்ணாசாமி.

## 13. தன் கண்ணழகு காண கண்ணன் வருவன் என்று கிடக்கும் ஒருத்தியை எழுப்புவதைக் கூறுவது

### பதின்மூன்றாம் பாசுர விளக்கம்

"புள்ளின்வாய்"

**புள்ளினவாய் கீண்டானைப் பொல்லா அரக்கனைக்**
**கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்போய்**
**பிள்ளைகள் எல்லாரும் பாவைக்களம் புக்கார்**
**வெள்ளி எழுந்து வியாழம் உறங்கிற்று**
**புள்ளும் சிலம்பினகாண் போதரிக் கண்ணினாய்**
**குள்ளக் குளிரக் குடைந்துநீர் ஆடாதே**
**பள்ளிக் கிடத்தியோ? பாவாய் நீ நன்னாளால்**
**கள்ளந் தவிர்ந்து கலந்தேலோர் எம்பாவாய்**

(சொ. பொ) : புள்ளின்வாய் கீண்டானை - பறவையின் உருவத்தினுடன் வந்த பகாசுரனுடைய வாயைப் பிளந்தவனும்; பொல்லா அரக்கனை - (பிராட்டியைப் பெருமாளோடு இருக்க வொட்டாமல் பிரித்துப்) பெரும் பொல்லாங்கு செய்த இராவணனுடைய (பத்து) தலைகளையும்; கிள்ளிக் களைந்தானை - மிகவும் எளிதாகத் துரும்பு போல் கிள்ளி எறிந்து (உறவினர், நண்பர்களோடு ஒருசேர) அழித்தவனுமான சக்கரவர்த்தி திருமகனுடைய; கீர்த்திமை - வீரசரிதங்களை; பாடிப்போய் - பாடிக் கொண்டு (அதுவே தாரகமாகச்) சென்று; பிள்ளைகள் எல்லாரும் - எல்லாப் பெண் பிள்ளைகளும்; பாவைக்களும் - நோன்பு நோற்பதற்காகக் குறிக்கப்பெற்ற இடத்திற்கு; புக்கார் - சென்று சேர்ந்தார்கள்; வெள்ளி எழுந்து - சுக்கிரன் உதயமாகி; வியாழன் உறங்கியது - பிரகஸ்பதி என்னும் கோளம் மறைந்துவிட்டது; புள்ளும் - பறவைகளும்; சிலம்பினகாண் - (இரைதேடுகின்ற இடங்களில்) ஒலித்தன; போது அரிக்கண்ணினாய் - தாமரை மலரையும் மானையும் ஒத்த கண்களையுடையவளே; பாவாய் - பதுமை போன்றவளே; நீ - நீ; நல்நாள் - நல்ல நாளில் (கிருட்டிணனோடு சேர்ந்திருக்கும் பாக்கியத்தைப் பெறும் நாளில்); கள்ளம் தவிர்ந்து - கிருட்டிணனுடைய சரிதத்தை நினைத்துக்கொண்டு தனியே கிடக்கையாகின்ற) கபடத்தை விட்டு; கலந்து - (எங்களுடன்) கூடி; குள்ளக் குளிர

- உடம்பு வவ்வலிடும்படி; குடைந்து - துளைந்து விளையாடி; நீர் ஆடாதே - குளிக்காமல்; பள்ளிக்கிடத்தியோ - படுக்கையில் கிடப்பாயோ (இவ்வாறு கிடப்பது தகுதியன்று; ஆகையால் எழுந்திருப்பாயாக).

(க-து) : 'நம் கண்ணழகு உண்டாகில் அதற்குத் தோற்று கிருட்டிணன் தானே வரட்டும்' என்ற எண்ணத்தோடு அப்பரமனுடைய வீர சரிதங்களைத் தியானித்தபடிப் படுத்துக் கிடக்கும் ஒருத்தியை எழுப்பும் பாசுரம் இது.

**விளக்கம் : புள்ளின்வாய் கீண்டானை :** "பள்ளத்தில் மேயும் பறவை உருக்கொண்டு, கள்ள அசுரன்" (பெரியாழ். திரு. 2.5.4) "கள்ளச் சகடும் மருதும்" (மேலது 2.8.7) "கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி" (திருப். 6) என்னுமாப்போலே, மேய்கின்ற கொக்கிலே பகாசுரன் என்ற அசுரன் ஆவேசித்து நலியப்புகுந்தான். அவனுடைய வாயைப் பிளந்தபடியைச் சொல்லியவாறாம். **புள்ளின் வாய் கீண்டானை :** இஃது இவர்கட்கு இராவணவதம் பண்ணினபடி. இவர்கட்கு அநுமதியல்லவா வேண்டுவது. விரோதியைப் போக்கித் தன்னைக் கொடுத்தல் அவன் பணியல்லவா? இவனுடைய (கிருட்டிணனுடைய) அநுமதியும் அவனுடைய (சக்கரவர்த்தி திருமகனுடைய) இரட்சகத்துவமும் சொருபத்தில் புகும்; அவ்வளவே. கர்மஞானங்களைத் துணைக் காரணமாகக் கொண்டு பக்தி உபாயம் என்றிருக்கும்வர்கள் அல்லரே இவர்கள். தன்னுடைய அஞ்ஞான சக்திகளையும் அவனுடைய ஞான சக்திகளையும் துணைக் காரணமாகக் கொண்டு அவனே உபாயம் என்றிருக்குமவர்கள் அன்றோ இவர்கள். கீழ்ப்பாசுரத்திலும்[44] (12) இப்பாசுரத்திலும் இராம சரிதத்தைச் சொன்னால் "ஒருக்கால் சொன்னதையே சொல்லா நின்றார்களே என்று நினைக்கக்கூடும்" என்று தங்கட்குகந்த இந்த கிருட்டிண சரிதத்தையும் கூட்டிச் சொல்லுகின்றார்கள். தங்கட்குப் பள்ள மடையான கண்ணன் சரிதம் சொன்ன பிறகு, இராமவரலாறு எற்றுக்கு? என்னில் : தங்களோடு ஒரு கோவையான பிராட்டியின் பிரிவு பொறுக்க முடியாதவருடைய சரிதம் என்று சொல்லுகின்றார்கள் என்க.

**பொல்லா அரக்கனை:**[45] உயிரையும் உடலையும் பிரித்தாற் போலே, தாயையும் தமப்பனையும் ஓரிடத்தில் சேர இருக்க வொட்டாமல் பிரித்த தாழ்ந்த குணத்தாலே வந்த தன்மையை நினைத்து 'பொல்லா' என்ற அடைமொழி அமைந்தது. "சுரிகுழல் கனிவாய்த் திருவினைப் பிரித்த கொடுமையின் கடுவிசை அரக்கன்" (பெரி.திரு.

44. சினத்தினால் தென்னிலங்கை கோமானைச் செற்ற மனத்துக்கினியானை என்றது காண்க.

45. நல்ல அரக்கன் – விபீஷணாழ்வான் என்ற ஒருவன் உண்டு.

5.7.7) என்ற **திருமங்கை மன்னனின்** வாக்கினைக் காண்க. "முன்பொலா விராவணன்" என்னுமத்தனை போக்கி, அவன் கீழ்மைக்குப் பாசுரம் இல்லையல்லவா? திருவினைப் பிரித்த கொடுமையல்லவா? **அரக்கனை** : மாய மிருகத்தைக் காடவார், மாயா சிரசைக் காட்டுவதற்குத் துணையாக இருப்பார், கிருத்ரிமத்தாலே பிரிந்த இடம் அழகியதாய்ச் செய்ததென்பாராய், இராவணனைவிடக் கீழானவர்களை இல்லையல்லவா இச்சாதிக்குள்.

**கிள்ளிக்களைந்தானை** : வீர பத்தினியாகையாலே "கல்லெடுத்துக் கலமாரி காத்தாய் என்னும்" (திருநெடுந். 13) என்னுமாப்போலே "கிள்ளி" என்கின்றார்கள். திருவிளையாடு தோலிலே நோவுபட்ட இடங்களைக் கிள்ளிப் போடுவது போலே, தோணாம்சத்தை வாங்கிப் போட்டபடி.

**கீர்த்திமை** : எதிரிகட்கும் நெஞ்சு நெகிழும்படியான வீரசரிதம். உகவாதார்க்கும் விடவொண்ணாத வீர சரிதம். உகவாதார்க்கும் விடவொண்ணாத வீரம் உகந்த பெண்களுக்குச் சொல்ல வேண்டுமோ? இராவணன் பெருமாள் வீரத்திற்கு இலக்கானான். தங்கை அழகிலே கண்கலங்கினாள். தம்பி சீலத்திற்கு இலக்கானான். **பாடிப்போய்** : விரகத்தாலே அபலைகளான பெண்பிள்ளைகள் பகவத் குண கீர்த்தனத்தை பாதேயமாகக் கொண்டு வழி நடந்தனர் என்றவாறு (பாதேயம் - வழிச்சோறு). கால்நடைக்குத் திருநாமம் தாரகம் அல்லவா? "தன்தாள்பாடி" என்பதல்லவா ஆழ்வார் வாக்கு?

**பிள்ளைகள் எல்லாரும்** : நாங்கள் சென்று எழுப்பிக் கொண்டு போக வேண்டும்படி சிறுவராயிருப்பவர்களும் உணர்ந்து உனக்கு முன்னே புறப்பட்டார்கள். நீ கிடந்து உறங்குவது அழகிது என்ற கருத்து தொனிப்பதைக் காணலாம். **பாவைக்களம்** : கழகமிடும் சங்கேத தலம். மழைக்காக இந்திராணியையும் கலவிக்காக இரதியையும் நோற்பதற்குப் பெண்கள் கூடும் இடம். கண்ணபிரானும் ஆய்ச்சியருமாக நோன்பு நோற்பதற்கென்று குறிப்பிட்டதோர் இடம். பலர் திரளுமிடம் 'களம்' என்று வழங்கப்படும். 'நெற்களம்', 'போர்க்களம்' என்னுமாப் போலே என்க.

"சிறுபிள்ளைகளாகையாலே அவர்கள் காலம் அறியாமல் போகக் கூடும். அதனை நன்கு அறிந்த நாம் அக்காலத்தில் போகக் கூடாதல்லவா? சுக்கிரன் உதித்தானாகில் பாருங்கள்" என்று உள்ளே இருப்பவள் சொல்ல, அது கேட்டு வெளியிலுள்ளவர்கள், **"வெள்ளி எழுந்து வியாழன் உறங்கிற்று"** : 'வெள்ளி உச்சிப்பட்டான், குருவும் மறைந்தனன்' என்கின்றனர். உள்ளே இருப்பவள், "நீங்களும் போகவேண்டுமென்று மிக்க ஆவலுள்ளவர்களாகையாலே, உங்கள்

கண்ணுக்கு சுக்கிரன் உதித்தானாகவும் குரு மறைந்தானாகவும் தோற்றக்கூடும். "நின்ற குன்றத்தினை நோக்கி நெடுமால்" (திருவாய் 4.4.4) என்னமவர்களன்றோ? ஆதலால் நீங்கள் சொல்வது போது விடிவுக்கு அடையாளமன்று. வேறு அடையாளம் இருந்தால் சொல்லுங்கள்" என்கின்றாள்.

இவர்கள், "நாங்கள் இத்தனை பேர் திரண்டு வந்திருப்பது அடையாளமன்றோ?" என்கின்றார்கள். இதற்கு உள்ளிருப்பவள், "பிரிந்தவர்கள் திரண்டால் அத்திரட்சி அடையாளமாகும். ஈட்டங் கண்டிடக்கூடுமேல்" என்றும், "ஒரு காலும் பிரிகிலேன்" என்றும், திரிபவர்களன்றோ நீங்கள்? அன்றியும் 'பேராளன் பேரோதும் பெரியோரை ஒருகாலும் பிரிகிலேனே' என்றும் திரிபவர்களா கையாலே உங்கள் திரட்சி பொழுது விடிவுக்கு அடையாளமாக மாட்டாது. வேறு இருப்பின் சொல்லுங்கள்" என்கின்றாள்.

இவர்கள், **"புள்ளும் சிலம்பின காண்"** என்று பறவைகளின் ஆரவாரங்களை அடையாளமாகக் கூறுகின்றனர். கீழேயும் (பாசுரம் 6) 'புள்ளும் சிலம்பின காண்' என்றது. அங்குக் கூட்டில் நின்றும் சிலம்பினபடி கூறப் பெற்றது. இங்கு அவை இரை தேடும் பொருட்டு வழியே போமிடம் எல்லாம் போய் சிதறினபடி சொல்லப்படுகின்றது. இவர்கள் இவ்வடையாளம் சொல்லகேட்டு உள்ளிப்பவள் 'தீர்யக் பிராணிகளின் நடவடிக்கையைக் கொண்டோ காலத்தை அறுதியிடுவது?' என்று நினைத்துப் பேசாமல் கிடக்கின்றாள்.

இதனை உணர்ந்த இவர்கள், "நாங்கள் சொன்னவற்றிற் கெல்லாம் அலட்சியம் பண்ணிக் கிடப்பதற்குக் காரணம் நின் கண்ணழகைப் பெருக்க மதிப்பதன்றோ?" என்ற கருத்துத் தோன்ற **'போதரிக் கண்ணினாய்'** என்று விளிக்கின்றனர்.

இந்த விளிக்கு நால்வகைப் பொருள்கள் கூற இடம் உண்டு. 1. போது - உலாவுகின்ற. அரிகண்ணினாய் - மானினுடைய கண் போன்ற கண்ணையுடையவளே[46] 2. போது - மலர் (குவளை). குவளைப் பூவையும் மான் கண்ணையும் ஒத்திருக்கும் கண்ணை யுடையவளே 3. அரி - வண்டு. பூவிற் படிந்த வண்டு போன்ற கண்ணையுடையவளே. 4. அரி - சத்துரு. பூவின் அழகிற்குச் சத்துரு வான கண்ணழகு உடையவளே என்று காண்க. எ.டு. "நெடுங்கண் இளமான்".

**குள்ளக் குளிர :** ஆதித்தன் உதித்து அவன் கிரணம்பட்டு நீர் கொதிப்பதற்கு முன்னே. ஆழமமுகினாலும் விரகதாபம் அங்கும்

46. பல பொருள் ஒரு சொல்லாகி 'ஹரி' என்ற வடசொல் 'அரி' எனத் திரிந்ததாகக் கூறுவர் அண்ணாசாமி.

புகுந்து சுடும் என்னும் இடம் அறியார்களே. குடைந்து நீராடாதே - கிருட்டிண விரகம் மாற நீராடப் போகாதே. நமக்குச் சொல்லுகின்ற கிருட்டிண விரகதாபம் சமிக்கைக்கும் இனியொருகால் கிருட்டிணன் பிரிவு பிறவாமைக்காகவும், கிருட்டிண குணங்களிலே மூழ்கி அநுபவிக்கப் போதாமல். **போதரிக் கண்ணினாய் :** உன் கண்ணாலே கிருட்டிணனைத் தோற்பித்து, அவன் கண்ணாலே குமிழ்நீர் உண்ணப்பாராதே. நெடுங்கண் இளமான் இவள். அனைத்துலக முடைய அரவிந்தலோசனன் அவன். இருவர் கண்ணுக்கும் இலக்கானவர்கள் அல்லவா இவர்கள்? உன்னுடைய சௌந்தர்யம் எங்கள் பேற்றுக்கு உடல் என்றிருந்தோம். அங்ஙனமின்றி இழவுக்கு உடலாக நின்றதோ. **பள்ளிக்கிடத்தியோ:** நாமும் அவனுமாய் அவன் முழுக் கூட்ட அவனுடன் ஜலக்ரீடை பண்ணி அவன் மடியிலே சாயக் கடவதாகிய அதனைவிட்டு அவன் ஒருக்கால் கிடந்த படுக்கை என்று அதனை மோந்து கொண்டு கிடக்கின்றாயோ? பார்த்த விடமெங்கும் விளைந்து கிடக்க உதிர்நெல் பொறுக்குகின்றாயோ?

**பாவாய் நீ :** கிருட்டிணனுடைய கண்ணுக்கு இலக்காகும் படியான நிருபாதிக ஸ்த்ரிவத்தையுடைய நீ தனிக்கிடை கிடக்கவல்லையோ? **நன்னாளால் :** கிருட்டிணன் கிடக்கட்டும், பெண்கள் கிடக்கட்டும் என்கின்ற நாட்டாரும் இசைந்து அவனும் நாமுமாய் ஜலக்ரீடை பண்ணி அவன் மடியிலே சாயலாம் காலத்தை பெற்று வைத்தும் படுக்கையை மோந்து கொண்டு கிடப்பதே. **கள்ளம்தவிர்ந்து :** கள்ளமாவது - தனியே கிருட்டிண குண சேஷ்டிதங்களை நினைத்துக் கிடத்தல். அதனைத் தவிர்ந்து எங்களோடே கலந்து எங்களுக்கு உன்னைக் காட்டாமல் மறைக்கை யாகிற ஆன்மாபகாரத்தைத் தவிர்ந்து எங்களோடே கலந்து என்றுமாம். **கள்ளம் தவிர்ந்து :** அவனோடே கலந்து உடம்பு காண உகக்குமவர்களன்றோ நாங்கள்? எங்கட்கு மறைக்கிறதென்? அந்த ஆன்மோபகாரத்தைத் தவிர்ந்து எங்களோடே கலக்கப்பாராய். சேஷத்துவத்தை அபகரித்தால் பொறுத்தோம் என்பார் இல்லை. குற்றம் நின்று அநுபவித்தல் போகும். ஆகவே, எங்களுடைய குற்றம்போல் அன்று காண் அவனோடே கலந்த உடம்பைக் காட்டாத உன்னுடைய குற்றம். கள்ளம் தவிர்ந்து - கலந்து - குள்ளக் குளிரக் குடைந்து நீராடாதே - பாவாய் நீ - நன்னாளால் - பள்ளிக்கிடத்தியோ - என்று முடிக்க.

**உள்ளுறை :** நமக்குச் சொரூப ஞானமுண்டாகில் அவன் தானே வருகிறான் என்று அடையத்தக்க வேகத்தையொழித்துத் தனியே

பகவத் குணாநுசந்தானம் பண்ணும் பாகவதரை 'நீர் எம்முடன் கூடி நெஞ்சு குளிரும்படி பகவதநுபவம் பண்ணாமல் தனிதேய சேஷியைக் கவர்ந்து செல்லலாமோ?' என்று உணர்த்துவது. ஆண்டாளுக்கு அடுத்து தொண்டரடிப் பொடியாழ்வாரை உணர்த்தும் பாசுரம். **போது அரிக்கண்ணினாய்!** மலர்களைப் பறிப்பதிலே பார்வையைச் செலுத்துபவரே என்றபடி. "துளவத் தொண்டாய சொல் சீர் தொண்டரடிப் பொடி" (திருமாலை - 45) "தொடையொத்த துவளமும் கூடையும் பொலிந்து தோன்றிய தோள் தொண்டரடிப் பொடி" (திருப்பள்ளி - *10*) என்ற பாசுர அடிகள் காண்க. **பாவாய்!** என்ற விளியும் இவருக்குப் பொருந்தும். பதிவிரதா சிரோமணியைப் பாவை என்பர். இந்த ஆழ்வார் அரங்கன் ஒருவனுக்கே வாழ்க்கைப்பட்டு வேறொரு திருப்பதி எம்பெருமானை நெஞ்சிலும் நினையாத வராதலால் கற்புச் சிறப்பு குறிக் கொள்ளத்தக்கது. திருவேங்கட முடையான் எதிரே ஒருவர் "பதின்மர்பாடும் பெருமாள்" என்று ஏத்த, அதைக் கேட்ட பெரிய கேள்வி ஜீயர் "சோழியன் கெடுத்தான் காணும், அந்த ஏற்றம். நம் பெருமாளுக்கு இல்லையே. நம் பெருமாள் ஒருவருக்கே" என்றார் என்ற ஐதிகமும் ஈண்டு நினைவுகூரத்தக்கது.

'மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்' என்ற திருவாக்கில் '**நன்னாளால்**' என்று தொடரும் வருகின்றது. தொண்டரடிப் பொடிகள் திருவவதரித்தது மார்கழித் திங்களே யாதலால் 'மார்கழியிற் கேட்டைநாள் வந்துதித்தான் வாழியே' (வாழித்திருநாமம்) 'நன்னாள்' எனத் தட்டுண்டோ, **கள்ளந்தவிர்ந்து.** 'சூதனாய்க் கள்வனாகி' (திருமாலை - *16*) என்றும் 'கள்ளமே காதல் செய்து' (மேலது - *24*) என்றும், 'கள்ளத்தேன் நானும் தொண்டனாய்' (மேலது 34) என்றும் பலகாலும் தமது கள்ளத்தைப் பேசிக் கொண்டார் இவ்வாழ்வார். இவரது சரிதையிலும் பொன் வட்டில் பற்றிய கள்ளம் அடிபட்டுக் கிடக்கின்றது. அது தவிர்ந்து பகவத் பாகவதக் குழுவில் கலந்தபடியை இற்றடி தெரிவிக்கிறது. பெரியாழ்வார் போலவே இவ்வாழ்வாரும் பெரும்பாலும் பூம்பொழில் வாசம் உடையவராதலால் அவ்விடத்து அடையாளமாகப் '**புள்ளும் சிலம்பின காண்**' என்பது இப்பாசுரத்திலும் புகுந்தது.

**குள்ளக்குளிர...** : நீராட்டம் முதலிய நித்திய கர்மா நுஷ்டங்களைத் தவிர்ந்து சில காலம் பள்ளிக் கிடந்தமை இவ்வாழ்வாரது சரிதையில் காணத்தக்கது. 'புள்ளின்வாய் கீண்டானை' என்று தொடங்கி கண்ணபிரான் ராமபிரான் இவர்களது

'சீர்த்திமை' பாடினபடி சொல்லப் பெறுகின்றது. இவ்வாழ்வார் திருமாலையின் இறுதியில் 'வள எழும் தவளமாட மதுரைமா நகரம் தன்னுள், கவளமால் யானை கொன்ற கண்ணனை அரங்கமாலை' (45) என்று கண்ணனுடைய கீர்த்தமையையும், திருப்பள்ளி எழுச்சியில் 'மாமுனி வேள்வியைக் காத்து அவபிரதம், ஆட்டிய அடுதிறல் அயோத்தி எம் அரசே அரங்கதம்மா' (4) என்று இராமபிரானுடைய கீர்த்திமையையும் பாடினமை உணரத்தக்கது. 'பிள்ளைகள் எல்லாரும்' என்றது ஆண்டாள் தமக்கு முந்திய ஆழ்வார்கள் அனைவரையும் சொன்னபடியாகும்.

# 14. எல்லோரையும் எழுப்புவதாகக் கூறி அது செய்யாமல் உறங்கும் ஒருத்தியை எழுப்புவதாகக் கூறுவது

## பதினான்காம் பாசுர விளக்கம்

### "உங்கள் புழைக்கடை"

**உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள்**
**செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல்வாய் கூம்பின்காண்**
**செங்கல் பொடிக்கூறை வெண்பல் தவத்தவர்**
**தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போதந்தார்**
**எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்**
**நங்காய் எழுந்திராய் நாணாதாய் நாவுடையாய்**
**சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்**
**பங்கயக் கண்ணானைப் பாடேலோர் எம்பாவாய்.**

(சொ.பொ) : உங்கள் - உங்களுடைய; புழைக்கடைத் தோட்டத்து - புழைக்கடைத் தோட்டத்திலுள்ள; வாவியுள் - தடாகத்திலுள்ள; செங்கழுநீர் - செங்கழுநீர் மலர்கள்; வாய் நெகிழ்ந்து - மலர்ந்து; ஆம்பல் - ஆம்பல் மலர்கள்; கூம்பின - வாய் குவிந்தன; செங்கல் பொடி கூறை - காவிக்கல் பொடியில் தோய்த்த கல்லாடையும்; வெண்பல் - வெண்ணிறமான பற்களையுடைய; தவத்தவர் - துறவிகள்; தங்கள் திருக்கோயில் - தங்களுடைய கோயிலிலே; சங்கிடுவான் - திருவாராதனம் செய்வதற்காக; போகின்றார் - போகின்றார்கள்; எங்களை - எங்கள் எல்லோரையும்; முன்னம் எழுப்புவான் - முன்னே வந்து எழுப்பும் பொருட்டு; வாய் பேசும் - சொல்லிப் போன; நங்காய் - நங்கையே; நாணாதாய் - நாணம் இல்லாதவளே; நா உடையாய் - இனிமையாக உரையாட வல்ல நாவுடையவளே; சங்கொடு சக்கரம் ஏந்தும் - திருச்சங்கு திருவாழிகளைத் தரித்துக் கொண்டுள்ள; தடக்கையன் - விசாலமான கைகளையுடையவனும்; பங்கயக் கண்ணனை - தாமரை போன்ற திருக்கைகளையுமுடையவனுமான கண்ணபிரானை; பாட-பாடுவதற்கு; எழுந்திராய் - எழுந்திருப்பாயாக; காண் - முன்னிலை அசை.

(க-து) : இவை எல்லாவற்றிற்கும் தானே உரியவளாய், எல்லோரையும் தானே எழுப்புவதாகச் சொல்லிச் சென்றவள்,

அதனைச் செய்யாமல் மறந்து உறங்குவாள் ஒருத்தியை உணர்த்தும் பாசுரம் இது.

**விளக்கம்** : ஆய்ச்சியர் எல்லாருமாகத் திரண்டு இவள் திருமாளிகை வாசலிலே வந்து, "நெடும் போதாக நாங்கள் உன்வாசலில் வந்து நின்று துவளா நிற்கின்றோம். நீயோ எங்களைப் பொருட்படுத்தாது எழுந்திராமல் இருப்பது ஏன்?" என்று வினவுகின்றார்கள். உள்ளிருப்பவள், "பொழுது விடிய வேண்டாவோ எழுந்திருத்தற்கு? பொழுது விடிந்தமைக்கு அடையாளம் என்ன?" என்று கேட்கின்றாள். வெளியிலிருப்பவர்கள். **'செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து கூம்பின காண்'** - "செங்கழுநீர் அலர்ந்து கூம்பினமை அடையாளமன்றோ?" என்று இவர்கள் சொல்லுகின்றார்கள்.

இதற்கு உள்ளிருப்பவள் சிரித்து, "உங்கள் மயக்கம் இருந்த வாறு என்கொல்? நீங்கள் என் வாசலில் வந்த களிப்பின் மிகுதியால் உங்கள் கண்கள் அலர்ந்து, நீங்கள் என் முகம் காணா தொழியவே வெள்கி வெறுத்து உங்கள் வாய் மூடிப் போனமையைச் செங்கழுநீர் மலர்ந்ததாகவும் ஆம்பல் வாய் கூம்பினதாகவும் நினைத்துவிட்டீர்கள். இஃது உங்கள் மயக்கமேயன்றி வேறன்று" என்கின்றாள். அதற்கு வெளியிலிருப்பவர்கள், "போதாய் செங்கழுநீர் அலர்ந்து ஆம்பலவாய் கூம்பினமையைச் சொன்னோம் நாங்கள்" என்கின்றார்கள்.

இதற்கு உள்ளிருப்பவள், "இரவெல்லாம் வயலெங்கும் உலாவி மொக்குகளை அலர்த்தி, மொட்டிப்பனவற்றை மொட்டுவிக்கை யன்றோ உங்களுக்கு இரவெல்லாம் பணி" என்கின்றாள். இதற்கு வெளியிலிருப்பவர்கள், 'உங்கள் தோட்டத்து வாவியில்' - "தடமணி வயல்களிலும் அல்லக் கமலம் முகம் காட்டும் கமனிகளிலும் உள்ளவை அல்ல; கட்டும் காவலும் உள்ள உங்கள் தோட்டத்து வாவியில் இருப்பவற்றைச் சொன்னோம்" என்கின்றார்கள்.

வெளியே நின்று உட்புகுவதற்கு வழி பெறாது துவள்கின்ற இந்த ஆயமகளிர் அவள் வீட்டுப் புழைக்கடையில் செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல்வாய் கூம்பின்படியை அறிந்தது எங்ஙனமே என்னில்: மற்றுமுள்ளவிடங்கள் எங்கும் அவை வாய் நெகிழ்ந்து வாய் கூம்பி இருக்கின்றபடியை இவர்கள் நன்கு அறிந்துள்ளவர் களாதலால், இவள் வீட்டுப் புழைக்கடையிலும் அங்ஙனம் நிகழ்ந்திருப்பதற்குத் தட்டில்லை என அறுதியிட்டுக் கூறுகின்றனர். எனவே, அநுமானம் கொண்டு அறிந்து கூறினவாறாம், வைணவ சித்தாந்தத்தில் அநுமானமும் ஒரு பிரமாணமாகுமன்றோ? இவள் எழுந்திராத இன்னாப்பாலே 'உங்கள் புழைக்கடை' என்று வேறு கூறிட்டுச் சொல்லுகின்றனர்.

"அலரத் தொடங்கின மாத்திரத்தைக் கொண்டு கழிய அலர்ந்த தாகவும், மொட்டிக்கத் தொடங்கின போதே மொட்டித்ததாகவும், உங்கள் அவசரத் துடிப்பாலே முதலில் இப்படியே தோன்றுகின்றது. இஃது உண்மைக்கு அழகன்று. வேறு அடையாளம் இருப்பின் கூறுங்கள்" என்று உள்ளிருப்பவள் கூற, அதற்கு வெளியிலிருப் பவர்கள் **"செங்கல் பொடிக் கூறை... போகின்றார்"** - திருவேங்கடம் முதலான திவ்விய தேசங்களில் சீயர் சுவாமிகள் எழுந்தருளித் திறவுகோல் கொடுத்துத் திருக்காப்பு நீக்குவிக்கின்ற சம்பிரதாயம் உண்டாதலால் இங்ஙனமே சொல்லுகின்றது. அன்றியும், பகவத் விஷயத்தில் சக்தராய், இதர விஷயங்களில் விரக்தராய் கல்லாடை தரித்து போக்கியப் பொருள்களில் விரக்தராய் சாத்விகராய் இருக்கும் சந்நியாசிகள் சந்தியாவந்தனங்களைப் பண்ணி அகங்களிலே திருவாராதனம் பண்ணும் காலம் வந்தது" என்கின்றார்கள்.

இதனை உள்ளே இருப்பவள் கேட்டு "தோழிகாள் - தெரிந்தெழுதி, வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும், பூசித்தும் போக்கினேன் போது" (நான்.திருவந். 63) என்பன போன்ற பிரமாணங்களை மறந்தீர்களோ? பரமை காந்திகளான பாகவதர்கள் ஒரு கால பகவதராதனம் பண்ணி வேறு காலங்களில் கிடந்து உறங்குவார்கள் என்று கருதினீர்களா? எப்போதும் அவர்கள் பகவதாராதனத்திலே ஊன்றியிருப்பவர்களாதலால் அவர்களுடைய பணி விடிதலுக்கு அடையாளமாகாது" என்கின்றாள். அதற்குமேல் உத்தரமாகச் சொல்லப் பெறுகின்றது 'எங்களை' என்று தொடங்கி.

**எங்களை முன்னம் எழுப்புவான் :** "நங்காய் 'நான் எல்லாரிலும் முன்பு உணர்ந்து எழுந்து வந்து தோழிகளை எல்லாரையும் உணர்த்துகின்றேன்' என்று சொல்லிச் சென்ற நீ, இப்போது எழுந்து வந்தவர்களையும் மறுத்துப் பேசுவது சால அழகியதாய் இருந்தது." **வாய் பேசும் :** இதயத்திலில்லாததை வாயாலே பேசலாமோ? சொல்லும் செயலும் சேராதார்க்கு ஒரு பூர்த்தியும் வேண்டுமோ? இரண்டும் சேர்த்தவிடத்திலன்றோ பூர்த்தியுள்ளது. உக்தி மாத்திரமேயாய் அநுட்டானமின்றி இருத்தல் அழகோ? நினைவும் சொல்லும் விபரீதமாயுள்ளதே. கிருட்டிணனுடன் பழகிச் சேர்த்தியாயிருக்கும் உனக்குப் பொய் சொல்லுதல் சிரமமோ? 'ஒருக்காலும் பிரிகிலேன்' என்பதற்குப் பொருள் இதுவோ? **எழுந்திராய் :** எங்கள் குறைதீர்க்க எழுந்திராய்.

**நாணாதாய் :** நீ எழுந்து வாராதொழியினும் ஒழிக: 'சொன்னவாறு செய்திலோமே' என்று நெஞ்சில் சிறிது வெட்கமும் கொண்டிலையே. அம்மா உன்னைப் போல சுணை கெட்டவள்

இவ்வுலகில் வேறொருத்தியும் இலள் என்று குறிப்பிட்டவாறு. பூசணிக்காயின் சுரசுரப்புக்கு சுணை என்று பெயருள்ளபடியால், "சுணையில்லாதவளாகிய நீ இருக்கின்ற ஊரிலே பூசணி காய்க்காதோ?" என்று ஏளனம் செய்கின்றார்கள்.

**நாவுடையாய் :** உடனே ஆய்ச்சியர்கள் 'நாவுடையாய்' என்று அன்புடன் விளிக்க, அது கேட்டு அவள், 'தோழிகாள் நீங்கள் எனக்காக மிக வருந்தினீர்கள். இதோ எழுந்து வருகின்றேன். நான் செய்யவேண்டிய காரியம் என்ன? சொல்லுங்கள்' என்று வேண்டுகின்றாள்.

**சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன் :** திருச்சங்காழ் வாரையும் திருவாழியாழ்வாரையும் ஏந்தி அந்த ஊற்றுணர்வால் வந்த வளர்ச்சியையுடைய திருக்கைகளை யுடையவனாய் "கூராழி வெண்சங்கேந்தி" (திருவாய்) "ஆழியொடும் பொன்னார் சார்ங்கமுடைய அடிகளை" ஆசைகெடப் பண்ணுவதும் அறிவுகெடப் பண்ணுவதுமான திவ்வியாயுதங்களின் சேர்த்தியல்லவா? **பங்கயக் கண்ணானை :** "தாமரை போன்ற கண்களையுடையவனான கண்ணபிரானை அழைக்கின்றார்கள். **பங்கயக் கண்ணானை :** முற்படப் பெண்களுக்குத் தன்னை எழுதிக் கொடுத்து எழுத்த "வாங்கப் பண்ணும் கண்கள்", "தூது செய்கண்கள்", "விடவே செய்து விழிக்கும்", "கண்களுக்கு அற்றுத் தீர்ந்தும்" "இளவாய்ச்சியா கண்ணினுள் விடவே செய்து விழிக்கும் பிரான்" என்று உபய விபூதிகளையும் தோற்பிக்கும் கண்ணழகுடையவனை. சந்திராதியத்யர்கள் சேர உதித்தாற்போல இருக்கின்ற இரண்டு திவ்வியாயுதங்களையும் கண்டு "ஆங்கு மலரும் குவியும்" என்கின்ற திருநாபீ கமலம் போலே, திருக் கண்களும் அலருவதும் மொட்டிப்பதுமாக நிற்கும். பாட - இத்தகைய கண்ணனைப் பாடுவதற்கு. **எழுந்திராய் :** எழுந்திருப்பாயாக. அதற்காகவே அழைக்கின்றோம்" என்கின்றார்கள்.

கிருஷ்ணன் கையில் ஆழ்வார்கள் உண்டோ? என்னில் : எப்போதும் உண்டு. அவை பெண்களுக்குத் தோற்றும். ஆண்களுக்குத் தோற்றாது. "நெய்த்தலை நேமியும் சங்கும் நிலாவிய, கைத்தலங்கள் வந்து காணீரே" (பெரியாழ். திரு. *1.2.12*) என்ற யசோதைப் பிராட்டி ஆய்ப்பாடிப் பெண்களை அழைத்துக் காட்டின பாசுரமும் காண்க.

கண்ணபிரான் சிறையில் திருவவதரிக்கும்போது திருவாழியும் திருச்சங்குமாகத் தோன்ற, வசுதேவன், தேவகி இவர்கள் அந்நிலையைக் கண்டஞ்சி, "அப்பனே இவ்வாயுதங்களை மறைத்துக் கொள்க. எழும்பூண்டெல்லாம் அசுரமயமாய் இருக்கப் பெற்ற இருள்

தருமா இந்நிலத்தில் இவை விளங்குவதற்குரியன அல்ல' என்று வேண்ட, அவனும் அவ்வாயுதங்களை உடனே மறைத்துக் கொண்டான் என்று இதிகாச புராணங்கள் இயம்பும்.

உள்ளுறை : பாரத சமுதாயங்கட்கெல்லாம் முக்கியமான வராய்ப் பலர்க்கும் பகவத் சம்பந்தத்தை உண்டாக்கும் ஞானபக்தி முதலியவற்றையுடைய பாகவதரை எழுப்புவது இப்பாசுரத்திற்கு உள்ளுறை.

மற்றுமோர் உள்ளுறை : தொண்டரடிப் பொடிகட்கு அடுத்து திருப்பாணாழ்வாரை எழுப்பும் பாசுரம் இது. இதில் 'நங்காய் நாணாதாய் நாவுடையாய்' என்ற மூன்று விளிகளும் பாண் பெருமாளுக்கு நன்கு பொருந்தும். நங்கை என்பது குணபூர்த்தியைச் சொல்லுகிறது. லோகசாரங்க முனிவர் வந்து, 'என் தோளில் ஏறிக் கொள்ளும்' என வேண்ட, அத்தியந்த பாரதந்திரிய சொரூபத்தை நினைத்து அதற்கு உடன்பட்டமை குணபூர்த்தியைத் தெரிவிக்கும். அங்ஙனம் அந்தணர் தலைவரது தோளின் மீது ஏறியிருக்கும் சிறிதும் செருக்குக் கொள்ளாமல் "அடியார்க்கென்னை ஆட்படுத்தவிமலன்" (அமலனாதி - 1) என்றே பேசினவராதலால் நாணாதவர் (நாண் - அகங்காரம்). "பாண்பெருமாள் அருள் செய்த பாடல் பத்துப் பழ மறையின் பொருள் என்று பரவுகின்றோம்" (தே.பி. 132) என்று சுவாமி தேசிகன் பணித்தபடி சகல வேதப் பொருள்களையும் பத்துப் பாசுரத்திலே அடக்கிப் பேசின பரம சதுரராதலால் நாவுடையார். 'கையினால் சுரி சங்கு ஆழியர்' (அமலனாதி) என்று சங்கொடு சக்கரம் ஏந்தின அழகை அநுபவித்தமை பற்றியும் 'சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன் பங்கயக் கண்ணானைப் பாட' (14) என்றாள். இவ்வாழ்வார் தமது குலநிலைமைக்கு ஏற்ப வாழ்ந்த இடத்தைக் கருதி "உங்கள் புழைக்கடை..." என்று அருளிச் செய்யப்பெற்றது. இவர்தம் சிந்தையில் சம்பந்தப்பட்ட **லோகசாரங்க முனிவர்** தன்மையைக் காட்டுவது போலுள்ளது "செங்கற் பெடிக்கூறை..." முதலியவை. "எங்களை முன்னம் எழுப்புவான் வாய் பேசும் நங்காய்" என்பதில் ஓர் அழகிய பொருள் தொனிக்கும் (அதாவது) எழுப்புவதாவது - தூக்கிக் கொள்வது. 'எங்களை' என்றது பாகவதர்களை என்றபடி. "பாண்பெருமானே உம்முடைய முதற் பாசுரத்தில் 'அடியார்க்கென்னை ஆட்படுத்திய விமலன்' என்ற தொடர் நயத்தை நோக்குங்கால் பாகவதர்களை நீர்தூக்கிக் கொண்டாடுபவர் போலத் தெரிகின்றது. உமது கதையோ அப்படி இல்லை. மகாபாகவதரான லோக சரங்க முனிவரின் தோளின் மேல் ஏறி நீர் சொல்லக் கொண்டது 'வாய்ப் பேச்சு' அளவுதான் போலும் என்று விநோதமாகக் கூறுகிறபடியாகும்.

## 15. எல்லாருடைய திரட்சியையும் காண விரும்பும் ஒருத்தியை எழுப்புவதைக் கூறுவது

### பதினைந்தாம் பாசுர விளக்கம்

"எல்லே இளங்கிளியே"

**எல்லே இளங்கிளியே இன்னம் உறங்குதியோ?**
**சில்லென் றழையேன்மின், நங்கையீர் போதர்கின்றேன்**
**வல்லைஉன் கட்டுரைகள் பண்டேஉன் வாயறிதும்**
**வல்லீர்கள் நீங்களே நானேதான் ஆயிடுக**
**ஒல்லைநீ போதாய் உனக்கென்ன வேறுடையை?**
**எல்லாரும் போந்தாரோ? போந்தார்போந் தெண்ணிக்கொள்**
**வல்லானை கொன்றானை மாற்றாரை மாற்றழிக்க**
**வல்லானை மாயனைப் பாடலோர் எம்பாவாய்**

(சொ.பொ) : இளங்கிளியே - இளமை தங்கிய கிளிபோன்ற சொல்லையுடையவளே; எல்லே - உன் பேச்சில் இனிமை இருந்தபடி என்னே; இன்னம் - இத்தனை பெண்கள் திரண்டு வந்த பின்பும்; உறங்குதியோ - தூங்குகின்றனையோ (என்று உணர்த்தவந்தவர்கள் கேட்க); நங்கைமீர் - பெண்காள்; போதர்கின்றேன் - புறப்பட்டு வருகின்றேன்; சில் என்று அழையேன் மின் - சிலுசிலு கென்று அழையாதேயுங்கள்; (என்று உறங்குகின்றவள் விடை சொல்ல); வல்லை - பேசுவதில் சமர்த்தையானவள் (என்பது நன்கு விளங்குகின்றது); உன் கட்டுரைகள் - உன்னுடைய கடுமையான மொழியையும்; உன்வாய் - உன் வாயையும்; பண்டே - நெடுநாளாகவே; அறிதும் - நாங்கள் அறிவோம்; (என்று உணர்த்த வந்த ஆய்ச்சிமார் சொல்ல); நீங்களே வல்லீர்கள் - நீங்கள்தாம் சாமர்த்தியசாலிகள்; நானேதான் ஆயிடுக - (அன்றேல், நீங்கள் சொல்லுகின்றபடி) நான் சமர்த்தையாக இருந்தாலும் இருக்கட்டும்; (உங்கட்கு நான் செய்ய வேண்டுவதென்? என்று உள்ளுறங்குபவள் கேட்க); நீ - நீ; ஒல்லை - சீக்கிரமாக; போதாய் - எழுந்து வருக; உனக்கு - (தனியே) உனக்கு மட்டிலும்; வேறுஎன்ன உடையை - வேறுபாடு (தனியே) கொண்டுள்ளாய்; (என்று உணர்த்த வந்தவர்கள் கேட்க); எல்லாரும் - (வர வேண்டியவர்கள்) யாவரும்; போந்தாரோ - வந்தனரோ? (என்று உறங்குபவள் வினவ); போந்தார் - எல்லாருமே வந்துவிட்டனர்; போந்து எண்ணிக் கொள் - (நீ) எழுந்து வந்து எண்ணிப் பார்த்துக் கொள்க (என்று உணர்த்த வந்தவர்கள் கூற);

என்னை எதற்காக வரச் சொல்லுகின்றீர்கள்? என்று உறங்குபவள் வினவ; வல்ஆனை - (குவலயாபீடம் என்ற) வலிய யானையை; கொன்றானை - கொன்றொழித்தவனும்; மாற்றாரை - விரோதிகளான கம்சன் முதலியோரை; மாற்று அழிக்க வல்லானை - மிடுக்கு அழிந்தவர்களாகச் செய்ய வல்லவனும்; மாயனை - அற்புதனுமான கண்ணபிரானை; பாட - பாடுகைக்காக (ஒல்லை நீ போதாய் என்று அழைக்கின்றார்கள்).

**(க-து) :** எல்லாப் பெண்களின் திரட்சியையும் காணக் கருதிக் கிடப்பாள் ஒருத்தியை எழுப்பும் பாசுரம் இது.

**விளக்கம் :** மேலே குறிப்பிட்ட பத்துப் பாசுரங்களிலும் நிகழ்ந்த உரையாடல்கள் இப்பாசுரத்தில் வெளிப்படையாகக் காணப்பெறும் "புள்ளும் சிலம்பின காண்" (6) என்ற பாசுரம் தொடங்கி மேற்பாசுரம் அளவுமுள்ள ஒன்பது பாசுரங்களிலும் உணர்த்துபவர்களுடைய பாசுரம் மட்டிலுமேயன்றி உறங்குபவளுடைய ஆட்சேபருபமான பாசுரம் ஒன்றும் வெளிப்படையாகக் காணப் பெறவில்லை. அது, சொற்றொடை நோக்கி முன்னுரையாக எடுத்துரைக்கப்பெற்றது.

இப்பாசுரத்தில்,

முதலடி - உணர்த்துபவர்களின் பாசுரம்

இரண்டாமடி - உறங்குபவளின் பாசுரம்

மூன்றாமடி - உணர்த்துபவர்களின் பாசுரம்

நான்காமடி - உறங்குபவளின் பாசுரம்

ஐந்தாமடி - உணர்த்துபவர்களின் பாசுரம்

ஆறாமடியில் - முற்கூறு உறங்குபவள் பாசுரம்

மேல்முழுவதும் - உணர்த்துபவர்களின் பாசுரம்

இவ்விடத்தில் இப்பாசுரத்தின் இன்சுவைமிக்க **ஆறாயிரப்படி** அருளிச் செயலின் சூக்தி அநுபவிக்கத்தக்கது : "திருப்பாவை யாகிறது இப்பாட்டிறே. பகவத் விஷயத்திலிருக்கும்படியெல்லாம் 'சிற்றஞ்சிறுகாலை'யில் (29) சொல்லுகிறது. பாகவத விஷயத்திலிருக்கும்படியெல்லாம் இப்பாசுரத்தில் சொல்லுகிறது.

**எல்லே இளங்கிளியே :** "சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன் பங்கயக் கண்ணானைப் பாட" (14) என்று அயலகத்துப் பெண்பிள்ளையை எழுப்புகின்ற பாசுரத்தைக் கேட்ட, இவள் அந்தப் பாசுரத்தைத் தன்மிடற்று ஒலியிட்டு நுண்ணிதான குரலின் மென்மையைச் செவியுற்று எழுப்புகின்றவர்கள் அந்தத் தொனிவழியே கேட்டுச் சென்று இவள் பேச்சின் இனிமையாலே 'எல்லே இளங்கிளியே' என்கின்றார்கள். பேச்சின் இனிமை "எல்லே" என்று ஆச்சரியப்படும்படி செய்கின்றது. 'எல்லே' என்பது விளியுமாம்.

'இளங்கிளியே' என்று - பசுமைக்கும் பேச்சுக்கும் கிளி ஒப்பாம். பருவத்திற்கு ஒப்பன்று. இவர்கள் கிளி. தான் இளங்கிளி. "மென் மொழி போல் மிக மிழற்றும்" "அணி மழலைக் கிளி மொழியாள்" என்பவை ஆழ்வார்கள் கூற்றுகளல்லவா?

"நாணாதாய் நாவுடையாய்" என்று முன்பாசுரத்தில் அவளையுட்பட வெறுத்தவர்கள் நம்மை நோக்கி 'இளங்கிளியே' என்றால் இதனை நாம் மெய்யாக புகழ்ச்சியாகக் கருதலாகாது. உறக்கத்தில் அவளிலும் மேம்பட்டவளாயிருக்கின்ற நாம் நிந்தைக்கு உரியோமேயன்றிப் புகழ்ச்சிக்கு உரியோம் அல்லோம். எனவே, இப்போது இவர்கள் புகழ்ச்சி தோன்ற விளித்தமைக்குக் கருத்து வேறாக இருக்க வேண்டும். "மாசுடையும் பொடுதலையுலறி வாய்ப்புறம் வெளுத்து" என்னும்படி எங்களுடம்பு பசலை நிறம் அடைத்து வாயும் வெளுத்திருக்க, "உன் உடம்பு கிருஷ்ணன் சேர்க்கையால் பசுகுபசுகென்று, வாயும் சிவந்து நாம் குறியழியாமல் கிடக்கின்ற நிலை வெகு அழகியதாயுள்ளது" என்ற கருத்துப்பட 'இளங்கிளியே' என்ற பேச்சினால் நிந்திக்கின்றனரேயன்றி வேறில்லை. இவ்வளவில் இவர்களுக்கு நாம் ஒரு மறுமாற்றம் தந்தால் வெறுப்பாம் என்று பேசாதே கிடந்தாள். கிடக்க, எழுப்புகின்றவள் 'இன்னம் உறங்குதியோ' என்கின்றார்கள். "நாங்கள் வருவதற்கு முன்பு உறக்கத்தைப் பொறுத்தோமாகிலும் நாங்கள் வந்த பின்னரும் உறங்குவது அறமாகுமோ?" என்று கூறுபவர்கள் 'இன்னம் உறங்குதியோ?' என்கின்றனர். "கிருஷ்ண விரகத்தாலும் உன் கடைக்கண் நோக்குக்கு இலக்காகாமையாலும், எங்களது ஆர்த்தி தோற்றும் குரல் செவிப்பட்ட பின்னரும் நீ கண்ணுறங் களாமோ?" என்றனர். **இன்னம் உறங்குதியோ** "உத்தேச்யம் கைபுகுந்தால் உறங்குவாருண்டோ? கிருஷ்ணாநுபவத்திற்கு தனிமை பெற்றாலும் உறங்கக்கடவதோ?"

அவள்தான் உள்ளே உறங்குகின்றாளல்லளே பங்கயக் கண்ணானை அநுசந்தித்துக் கொண்டல்லவா கிடக்கின்றாள்? அவ்வநுசந்தானத்திற்கு 'இளங்கிளியே', 'இன்னம் உறங்குதியோ?' என்ற இவர்களின் பேச்சுக்கள் இடையூறாயிருந்தமையால் **'சில்லென்றழையேன்மின்'** என்கின்றாள். சில்லென்று அழைத்தல் 'சில்' என்பது ஓர் அநுகாரக் குறிப்பிடைச் சொல்.

அவள் அங்ஙனம் சொல்லக் கேட்ட எழுப்புகின்றவர்கள், 'எங்களைப் பிரிந்து ஒரு கணப் பொழுதும் தரிக்கமாட்டாதிருந்த உனக்கு இன்று எங்கள் காட்சியும் பேச்சும் வெறுப்புக்கு உறுப்பாம் படி உனக்கு வந்த பூர்த்தி என் கொல்லம்மா' என்று கூற, அதற்கு

உள்ளேயிருப்பவள், 'என் தன்மையை அறியாமல் என்னிடத்து விபரீதமானதொரு கருத்துக்கொண்டு 'இளங்கிளியே' என்று என்னை விளிக்கின்ற நீங்களன்றோ பூர்த்தியுள்ளவர்கள்? "வாய்திறக்க வல்லீராகில் 'நான் புறப்படுகின்றேன்' என்பாள் - "நங்கைமீர் போதர்கின்றேன்" என்கின்றாள்.

உள்ளிருப்பவள் இங்ஙனம் சொல்லக்கேட்ட வெளியிலுள்ள ஆய்ச்சியர் 'ஆ ஆ நங்கைமீர்' என்ற உறவற்ற சொல்லாலே எம்மை நீ சொல்லவல்லை என்பதை நாங்கள் இன்றுதானோ அறிகின்றோம்? 'சில்' என்று அழையேன் மின் என்பது 'நங்கைமீர்' என்பதாய் இப்படிக் கடுமையாகக் கூறவல்லை என்பதை யாம் நெடுநாளாகவே அறிகின்றோம் அம்மா' என்கின்றார்கள். **'வல்லையுன் கட்டுரைகள் பண்டேயுன்வாயறிதும்'** என்ற மூன்றாம் அடியால்.

வெளியிலிருப்பவர்கள் இங்ஙனம் சொல்லக்கேட்டு உள்ளிருப்பவள், "நீங்கள் உங்கள் குற்றத்தைப் பிறர் தலைமீது சுமத்தா நின்றீர்கள். வன் சொற்கள் கூறும் திறமை உங்கள் பக்கல் உள்ள தொன்றேயன்றி யான் ஒரு வன்சொல்லும் சொல்லவல்லேன் அல்லேன்" என்று சொன்னவள் அடுத்த கணத்தில் வைணவ லட்சணம் பற்றிய சிந்தனை அவள் சித்தத்தில் உதித்தது. பாகவதர் ஒரு வைணவனை நோக்கி ஒரு குற்றம் சாட்டினாராகில், அவன் உண்மையில் அக்குற்றமற்றவன் அல்லனேலும் பாகவதருடைய பேச்சின் கௌரவத்தின் நிமித்தமாக, அவர் கூறிய குற்றத்திற்குத் தான் இசைந்து நிற்றல் சொரூபம் என்று புராண இதிகாசங்கள் புலப்படுத்தி நிற்பதை உணர்ந்து, "வல்லீர்காள் நீங்களே" என்று மறுத்துப் பேசுவது அபசாரத்திலும் கொடியதாகவே கருதி, மீண்டு **"நானேதான் ஆயிடுக"** என்கின்றாள். இவ்விடத்தில் பரதாழ்வான் பிறர் குற்றத்தையும் தன் குற்றமாகக் கருதிக் கொண்டதை நினைவு கூரலாம்.

இங்ஙனம் வெளியிலிருப்பவர்கள் சுமத்திய குற்றத்திற்கு இசைந்து உள்ளிருப்பவள், 'இங்ஙனம் குற்றவாளியாகிய அடியேன் உங்கள் திறத்துச் செய்ய வேண்டியதென்?' என்று வினவ, உணர்த்த வந்தவர்கள், "நின் குற்றத்திற்கு நீ இசைந்த பின்னர் காலதாமதமின்றி இத்திரளில் வந்து பொறுப்பிக்கவன்றோ வேண்டுவது?" என்பவர்கள், **"ஒல்லை நீ போதாய்"** என்கின்றனர். அவள் இதனைச் செவிமடுத்தும் "இதோ வருகின்றேன்" என்று புறப்பட்டு வரத் தொடங்கினாள். அடுத்த கணத்தில் அவள் தம் திரளில் புகாமையால், "நாம் **'போதாய்'** என்றவுடனே அவள் அரைகுலையத் தலைகுலைய ஓடிவராமல் தாழ்த்துவதற்கு அடிஎன்? நாம் படும்பாடு இவள் படாதொழிவது

ஏன்?" என்று உள் வெதும்பி, **"உனக்கென்ன வேறுடையை"** என்கின்றார்கள். "ஐந்து லட்சம் குடிப் பெண்களுக்கும் இல்லாதே உனக்கென்று வேறாக நீ என்ன அதிசயத்தை உடையளாயிரா நின்றாய் எங்களுடன் வந்து கூடாமைக்கு?" என்பது கருத்து.

**எல்லாரும் போந்தாரோ** : வெளியிலுள்ளவர்கள் 'உனக்கென்ன வேறுடையை' என்று உரைத்தமை கேட்கலுற்று பொறுக்கமாட்டாமல் உள்ளே இருப்பவள், "தோழிகாள் உங்களோடு கூடுவதைவிட அடியேனுக்கு வேறொரு காரியம் உண்டோ? வரவேண்டிய பெண்கள் சிறு பெண்களும் உட்பட அனைவரும் வந்த பின் புறப்படலாம் என்று கிடக்கின்றேன். எல்லோரும் வந்து கூடினரா என்பதைக் கண்டு கூறுமின்" என்கின்றாள். **போந்தார் போந்து எண்ணிக் கொள்.** இதனைக் கேட்டு வெளியிலிருப்பவர்கள், "கிருஷ்ண விரகத்தால் துவண்ட பெண்கள் அனைவரும் உன்னைக் காண்பதற்காக உன் திருமாளிகை வாசலேறப் போந்து படுகாடு கிடக்கின்றனர். ஆயினும், இன்னும் ஓரிருவர் வாராதிருக்கக்கூடும் என்று நீ கருதுவாயானால் நீயே வந்து கணக்கிட்டுக் கொள்" என்கின்றனர். கணக்கிட்டுக் கொள்ள விரும்புவதற்குப் பல கருத்துக்கள் கூறலாம். ஒவ்வொரு பெண்ணும் அவளால் தனித்தனியே காணப் பெறுதல், பொய் சொல்லப் பெறுதல், விரல் தொட்டு எண்ணப் பெறுதல், ஊற்றுணர்வு சுகம் நுகரப் பெறுதல், பஞ்ச லட்சம் குடிப் பெண்களாகையாலே எண்ணி முடிக்குமளவும் அவளைப் பிரியாமல் அநுபவிக்கப் பெறுதல் முதலிய பல பேறுகளைக் கருதினர் வெளியிலுள்ளவர்கள்.

வெளியிலுள்ளவர்கள் இங்ஙனம் கூறக்கேட்ட உள்ளிருப்பவள், "நாம் அனைவரும் கூடிச் செய்ய வேண்டிய காரியம் எது?" என்று வினவ, "கண்ணபிரானது கீர்த்திமைகளைப் பாட வேண்டும்" என்கின்றார்கள்.

**வல்ஆனைக் கொன்றானை** : குவலயாபீடம் என்ற வலிய யானையைக் கொன்று நம் ஜீவனமான தன்னை நோக்கித் தந்தவனை காவிமலர் நெடுங்கண்ணார்கை தொழ வீதி வந்து நம் போன்ற பெண்களை வாழ்வித்தவனை. "கவள யானைக் கொம்பொசித்த கண்ணன்" என்றல்லவா பெண்கள் வாய் வெருவுவது? "கவளமால் யானை கொன்ற கண்ணன்" என்று ஆண்களை எழுதி முடிக்கப் பண்ணினது, பெண்களை எழுத்து வாங்குவிக்கச் சொல்ல வேண்டுமோ? "வெஞ்சின வேழமருப் பொசித்த வேந்தர் கொல்? ஏந்திழையார் மனத்தை, தஞ்சுடையாளர் கொல்" என்னக்கடவர் அல்லவா? "வாரணத்தை மருப்பொசித்த பிரான் என் மாதவனே"

"பாரணங்காளான் வாரணம் தொலைத்த காரணன்" "பின்னை மணாளனாகிக் கருந்தாள்களில் ஒன்றொசித்தான்" என்று முக்கிய துணைவியர் மூவரும் இந்த வீரச் செயல்களுக்கன்றோ தோற்றுக் கிடப்பது? கஜேந்திராழ்வானை இரட்சித்தலைவிட இதனை குணமாக, "ஓரானைக் காத்து ஓரானைக் கொன்று" என்று ஆழ்வார் அருளிச் செய்தாரல்லவா?

**மாற்றரை மாற்றழிக்க வல்லானை** : பகைவரைக் கண்டால் சக்கரவர்த்தி திருமகனைப் போல 'இன்று போய் நாளை வா' ஒரு பேச்சு பேசான் கண்ணபிரான் 'வெட்டு ஒன்று துண்டு இரண்டு' என்று ஆக்கி முடித்திடுவான். குவலாயா பீடத்தின் கொம்பைப் பிடுங்கி மன்னர் அரங்கத்தில் உட்புகுந்து சாணூரன் முஷ்டிகன் தொடக்கமான மல்லர்களை முடித்த உயர்ந்த மஞ்சத்திலே இருந்த கஞ்சனைக் குஞ்சிப் பிடித்து இழுத்துத் தள்ளி வதைத்து இப்படியாக அவன் செய்த சிறு சேவகங்கள் பலவற்றை நினைத்து மகிழலாம். இப்படி எதிரிகளைப் படாதபாடு படுத்தக்கூடியவன் ஆய்ச்சிகள் பக்கல் வந்தால் அவர்கட்குக் குழைச்சரக்காகிக் கட்டவும் அடிக்கவும் இசைந்து நிற்பானாதலால் **மாயனை** - அற்புதமான கண்ணபிரானை என்கின்றனர். பாட - பாடுகைக்கு. நம்முடைய வெற்றியும் அவனுடைய தோல்வியும் தோற்றுப்பாட. "ஏத்துகின்றோம் நாத்தழும்ப" (பெரி.திரு. 10.3.1) என்று தோற்றவர்கள் பாடுமாப்போலே, "வாயினால் பாடி" (திருப். 5) என்று அவதாரமுறை பாடினபடி சொல்லப்பட்டது. "கேசவனைப் பாட" (திருப். 7) என்றும், "பாடிப்பறை கொண்டு" (திருப்.8) என்றும், "கீர்த்திமை பாடி" (திருப். 13) என்றும் - விரோதிகளைப் போக்கினபடியைப் பாடினதைச் சொல்லிற்று. "முகில்வண்ணன் பேர்பாட" (திருப். 11) என்று வடிவழகிற்குத் தோற்றப்பாடினபடி "சங்கொடு சக்கரம் ஏந்தும்" (திருப். 14) என்று வெறுங்கையோடே நின்று வென்றபடிக்கும் தங்கட்குத் தோற்றபடியையும் பாடுகின்றனர்.

மணிவாசகப் பெருமானின் "ஒண்ணித்தில நகையாய்" (திருவெம். 4) என்ற திருவெம்பாவைப் பாடல் இப்பாசுரத்தின் சாயலாக அமைந்திருப்பதை ஈண்டு நினைவு கூர்ந்து மகிழலாம்.

இனி, இப்பாசுரத்தின் நயத்தையும் சிறப்பையும் நோக்குவோம். 'எல்லே இளங்கிளியே' என்பதால் - பகவத் விஷயத்தில் ருசியுடையார் பேச்சுடம் உத்தேச்யம் என்கின்றது. 'இன்னம் உறங்குதியோ' என்பதால் - பாகவத உறவு சித்தித்தால் புறம்பு அந்யபரதை பண்ணுமிடம் தப்பென்கிறது. 'சில்லென்றழையேன்மின்' என்றதால் - ருசியுடையார்க்கு எல்லாம் சொன்னாலும் பொறுக்க

வேண்டும் என்னுமிடம் சொல்லுகிறது. 'நங்கைமீர் போதர்கின்றேன்' என்கிறதால் சாப பலத்தாலே சில பிறந்தாலும் பகவத் விஷயத்தில் மூழ்கினவர்களை சாப பலத்தால் பிறந்தவற்றை நினையாமல் கௌரவம் தோற்றச் சொல்ல வேண்டும் என்கின்றது. "வல்லையுன் கட்டுரைகள்" என்றதால் - "சில்லென்றழையேன்மின்" என்றது - இவர்கட்கு உத்தேசமானதும் உன் வெட்டிமை அறிந்ததும் அவளுக்கு உத்தேச்யமாகக் கடவதென்கின்றது. "வல்லீர்கள் நீங்களே நானேதான் ஆயிடுக" என்று இதனால் பிறரது குற்றத்தையும் தன் குற்றமாக்கிக் கொள்ளவும், கௌரவத்தை அதி நிர்ப்பந்தம் பண்ணக் கடவதல்ல என்னும் இடத்தையும் சொல்லுகின்றது. "ஒல்லை நீ போதாய்" என்கின்ற இதனால் பாகவத சேர்க்கை சத்தா சித்தி என்கின்றது. "உனக்கென்ன வேறுடையை" என்கின்ற இதனால் சிரேஷ்டர் வர்த்திக்கிறபடி வர்த்தியாதொழிகை தப்பென்கின்றது. "எல்லாரும் போந்தாரோ" என்கின்றதனால் சிரீ வைணவர்கள் எல்லாரும் உத்தேச்யர் என்கின்றது. "போந்தெண்ணிக் கொள்" என்கின்ற இதனால் ஒருவர் குறைந்தாலும் பகவதநுபவத்திற்குக் குறை என்கின்றது. "வல்லானை கொன்றானை" என்று தொடங்கி திரண்ட பாகவதர்களுக்கு உய்யும் வழி "உண்ணும் சோறு" (திருவாய் 6.7.1) என்கின்றபடியே பகவத் விஷயாநுபவம் என்கின்றது.

**உள்ளுறை** : பகவத் விஷயத்தில் நடந்துகொள்ள வேண்டிய நியதி இன்னதென்பதை அறிந்திருப்பார் ஒருவரை, சுயமுயற்சியால் போக்க அறியவாய்ப் பிராயச்சித்தத்தாலும் போக்க அரியனவான அகங்காரத்திற்கும் காமம் குரோதம் முதலியவற்றிற்கும் நிவர்த்திகனைப் பாடுமாறு எழுப்புவது இப்பாசுரத்திற்கு உள்ளுறை.

**மற்றுமோர் உள்ளுறை** : பாண்பெருமாளுக்கு அடுத்தவரும் எல்லா வகையிலும் நிஷ்டருமான **திருமங்கையாழ்வாரை எழுப்பும் பாசுரம் இது**. இந்த ஆழ்வார் இரண்டு ஆய்ச்சிகளுக்கு ஒருவருக் கொருவர் சம்வாதமாக "மானமரு மென்னோக்கி" (பெரி.திரு.11.5) என்றொரு பதிகம் அருளிச் செய்தவராதலால் இவரை உணர்த்தும் பாசுரம் ஒருவருக்கொருவர் சம்வாதரூபமாகவே அமைக்கப்பெற்றது. "கிளிபோல மிழற்றி நடந்து" "மென்கிளி போல் மிகமிழற்றும் என்பதையே" என்று பல பாசுரங்களில் இவர் தம்மைக் கிளியாகச் சொல்லிக் கொண்டவராதலால் '**கிளியோ!**' என்ற விளி இவருக்குப் பொருந்தும். அன்றியும், சொன்னவற்றையே சொல்லுவது கிளியின் இயல்பு. அதுபோல இவர் "மாறன் பணித்தமறைக்கு மங்கையர்கோன் ஆறங்கம்கூற" (உ.ர.மா-9) என்றபடி நம்மாழ்வார் சூக்திகளை அநுசரித்தே அருளிச் செய்தவராதலாலும் 'கிளி' என்றது

இரண்டாம் அடி திருமங்கையாழ்வாருடைய விடையளிப்பு. **'வல்லையுன் கட்டுரைகள் பண்டே உன் வாயறிதும்'** - இது கலியனை நோக்கி ஆண்டாள் கூறுவது. "வாசிவல்லீர் இந்தளூரீர் வாழ்ந்தே போம் நீரே" (பெரி.திரு. 4.9.4) என்று மிகக் கடினமாகப் பேசவல்லீர் என்பது எனக்கு, (பண்டே - நீர் அவதரித்துப் பாசுரம் பேசுவதற்கு முன்னமே) தெரியுங்கணும் என்றாள். அது கேட்ட கலியன் **'வல்லீர்காள் நீங்களே'** : 'கொள்ளும் பயனொன்றில்லாத கொங்கை தன்னைக் கிழங்கோடும், அள்ளிப் பறித்திட்டு அவன் மார்பில் எறிந்து என் அழலைத் தீர்வேனே' (நாச்.திரு. 13.8) என்று அற வெட்டிதாகச் சொன்ன உன் பேச்சு கடினமோ? நீயே பார்க்கலாம் என்றார். என்றவுடனே, "நண்ணாத வாளவுணர்" (பெரி.திரு.2.6.1) "கண்சோர வெங்குருதி" (பெரி.திரு. 7.4.1) முதலிய திருமொழிகளில் தாம் அநுசந்தித்த பாகவதசேஷத்துவ காணடையை நினைத்து **"நானேதான் ஆயிடுக"** என்றார். **"உனக்கென்ன வேறுடையை"** என்றது - திருமங்கையாழ்வாருக்கு அசாதாரணமான திருமடல் திவ்வியப் பிரபந்த வக்ருத்வத்தை உளப்படுத்தியதாகும். **"எல்லாரும் போந்தாரோ..."** கலியனுக்கு முன்னமே மற்றுமுள்ள ஆழ்வார்கள் அவதரித்து பன்னிருவர் என்ற எண்ணிக்கை இவரோடு நிரம்பிற்றன்றோ?

**வல் ஆனை கொன்றானை - மாயனைப் பாட** : ஆனையைக் கொன்ற விஷயத்தை ஓர் ஆச்சரியமானதாக எடுத்துப் பேசினவர் கலியன், "அவரிவை செய்தறிவர் அஞ்சனமாமலை போல" (பெரி.திரு.3.37) என்ற பாசுரம் காணத்தக்கது. அடிக்கடி கலியன் வாய் வெருவுவதும் வல்லானைக் கொன்ற வரலாற்றையே "கவளயானை கொம்பொசித்த கண்ணனென்றும்" (பெரி.திரு.4.8.1) என்பன போன்ற பாசுரங்கள் நினைவுகூரத்தக்கவை. **"மாற்றாரை மாற்றழிக்க வல்லானை"** மாயனைப் பாட : எம்பெருமான் திறத்தில் மாறு செய்பவர்களது செருக்கை வெகு ஆச்சரியமாக அடக்குபவன் என்பதைக் காட்டுகின்ற சரிதைகளுள் கோவர்த்த நோத்தாரணகதை மிகச் சிறந்தது. மாறு செய்த இந்திரனுக்கு ஒரு தீங்கும் இழைக்காமலே கண்ணன் அவனது கொழுப்பை அடக்கினானன்றோ? இக்கதையில் கலியன் மிக்க ஊற்றமுடையவர். பெரிய திருமொழியை முடிக்கும்போது "குன்றம் எடுத்து ஆநிரை காத்தவன் தன்னை" (பெரி.திரு. 11.8.10) என்றார். சரமப் பிரபந்தமாகிய திருநெடுந்தாண்டகத்தை முடிக்கும்போதும் "குன்றெடுத்த தோளினானை" (திருநெடுந். 29) என்றே தலைக்கட்டினார். 'மாற்றாரை மாற்றழிக்க வல்லார்' என்பது பரகாலரான இவர்க்கும் பொருந்தும்.

# 16. எல்லாரும் கூடிவந்து நந்தகோபர் திருமாளிகையில் சென்று கோயில் காப்பானையும் வாசல் காப்பானையும் எழுப்புதல்

## பதினாறாம் பாசுர விளக்கம்

"நாயகனாய் நின்ற"

**நாயக னாய்நின்ற நந்தகோ பனுடைய**
**கோயில்காப் பானே கொடித்தோன்றும் தோரண**
**வாயில்காப் பானே மணிக்கதவம் தாள்திறவாய்**
**ஆயர் சிறுமிய ரோமுக்கு அறைபறை**
**மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்**
**தூயோமாய் வந்தோம் துயிலெழப் பாடுவான்**
**வாயால்முன் னம்முன்னம் மாற்றாதே அம்மாநீ**
**நேய நிலைக்கதவம் நீக்கேலோ ரெம்பாவாய்**

(சொ.பொ) நாயகனாய் நின்ற - தலைவராக இருக்கின்ற; கோயில் - அரண்மனை; கொடிதோன்றும் - கொடிகள் காணப்படுகின்ற; தோரணம் - தோரணங்களையுடைய; ஆயர்சிறுமியர் - இடைச்சிறுமியர்; மணிக்கதவம் - மணிகள் கட்டின கதவம்; தாள் - தாழ்ப்பாள்; மாயன் - கண்ணன்; மணிவண்ணன் - நீலமணி போன்ற நிறத்தையுடையவன்; அறைபறை - ஒலிக்கின்ற பறை; நென்னல் - நேற்று; வாய் நேர்ந்தான் - வாக்குக் கொடுத்தான்; துயில் எழ - உறக்கத்தினின்றும் நீங்க; பாடுவான் - பாடம் பொருட்டு; தூயோமாய் - பரிசுத்தர்களாய்; அம்மா - சுவாமி; முன்னம் முன்னம் - முதன் முதலில்; மாற்றாதே - தடுக்காதே; நேயம் நிலை - ஒன்றோடொன்று சேர்ந்ததான தன்மையுடைய; கதவம் - கதவு; நீக்கு - திறப்பாயாக.

**(க-து) :** மேல் பத்துப் பாசுரங்களாலும் (5-15) முற்பட விழித்தெழுந்தவர்கள் உறங்குகின்றவர்களை எழுப்பினார்கள். இப்பாசுரம் முதல் ஏழு பாசுரங்கள் ஆயச் சிறுமியர் எல்லாரும் கூடி வந்து நந்தகோபருடைய திருமாளிகையிலே சென்று கோயில்

காப்பான், திருவாசல் காப்பான், நந்தகோபன் கிருட்டிணன், பலதேவன் நப்பின்னை முதலியோரை எழுப்புவதைக் காட்டும்.

இந்தப் பாசுரத்தில் கோயில் காப்பானையும் தோரணவாயில் காப்பானையும் எழுப்புகின்றனர். ததீயரை முன்னிட்டுப் பற்றுகை யாகின்ற முன்னோர் முறையை அநுட்டான பரியந்தம் ஆக்குகின்றனர். **'செய்யாதன செய்யோம்'** (2) என்பது அவர்தம் சூளுரையல்லவா? அடியார்களை முன்னிட்டுப் பற்றாத அன்று முறைதப்பின சூர்ப்பணகைபட்டது இவர்களும் படக்கூடும் என்பதை நினைந்து **'வல்லபரிசு வருவிப்பரேல் அது காண்டும்'** (நாச்.திரு. 10.10) என்னும் பெரியாழ்வார் திருமகளார் அன்றோ இவர்? இங்கு ஆண்டாள் கோபியர் பாவனையில் செயற்படுகின்றனர்.

**விளக்கம் :** ஆயச் சிறுமிகளால் பெறக்கூடிய கண்ணன் அன்றோ இவர்கட்கு நாயகன்? அப்படியிருக்க, **'நாயகனாய் நின்ற நந்தகோபன்'** என்று நந்தகோபனை நாயகனாகக் குறிப்பிடுவது ஏன்? என்ற வினா எழுகின்றது. **"நாயகன் முழுவேழுலகுக்குமாய்"** என்றும் **"தொல்லை வானவர்தம் நாயகன்"** என்றும் சொல்லப்பெறுவதால் சகல லோகங்களுக்கும் சகல தேவதைகட்கும் நாயகனான சர்வேசுரன் நம்முடைய நாயகன் என்று யசோதைப் பிராட்டி உட்பட **"உந்தம் அடிகள் முனிவர்"** என்று பிரசித்தமாம்படி சுவாமிகளாய் நியமிக்கின்றார் நந்தகோபர். ஆகையால் உபய விபூதி நாயகனான கிருட்டிணனுக்கும் நாயராகையாலே நந்தகோபரை **"நாயகனாய் நின்ற நந்தகோபன்"** என்கின்றார்கள். கிருட்டிணன் உகப்பது பாரதந்திரியமாகையாலே வைகுண்டத்தில் நித்தியசூரிகட்கும் முக்தர்கட்கும் தலைவனாய் நின்ற இழவுதீர நந்தகோபருக்குப் பிள்ளையாய்ப் பிறந்து **"நந்தகோபன் மகன்"** என்று சொல்லும்படி தான் பாரதந்திரியனாய் இருக்கும் நிலையில் மனநிறைவு கொள்ளுகின்றான். இதற்காகத்தானே கிருட்டிணன் கோகுலத்தில் அவதரித்தது? பரமபதமும் **'அடியார் நிலாகின்ற வைகுந்தம்'** என்று அடியாருடைய அதீனமாகவே இருக்கும் என்பது ஈண்டு நினைக்கத்தக்கது. இந்த நிலையை எல்லோரும் அறிவதற்காகவே கிருட்டிணனது கோயில் என்னாமல் **"நந்தகோபனுடைய கோயில்"** என்கின்றார்கள் ஆயச் சிறுமிகள் என்றும் கொள்ளலாம்.

நாயகத்தவம் கோயில் காப்பவன் திருவாசல் காப்பவன் என்ற முதலிகட்கும் அடைமொழியாக்கிச் சொல்லலாம். கோயில் காப்பானை நாயகன் என்றது இவன் தமக்கு உபகாரகனாகையாலே என்பது தோற்றுகைக்காக. பிரதான சேஷியைக் காட்டிலும் அவனுக்கு வழிகாட்டிகளே இவர்களுக்குச் சிறந்த சேஷிகள்

ஆயினர். அலுவல் நிமித்தம் பெரிய அதிகாரிகளைப் பார்க்கச் செல்வோருக்கு வாயில் காக்கும் துவார சேஷியின் பெருமை நன்கு தெரியும். ததீயரை முன்னிட்டே பகவானைப் பற்ற வேண்டும் என்ற சாத்திரப் பொருள் இங்கு தெளிவாகின்றது.

இன்னும் வல சித்தி ஆசாரியனால் என்னுமாப் போல, உபகாரகனாகிய வாயில் காப்பானை **"நாயகன்"** என்கின்றார்கள். யார் தடையாக இருப்பார்களோ என்று அஞ்சி எல்லோர் கால்களிலும் விழுகின்றார்கள். சிறு பெண்களாகையாலே தையல்காரரே, வண்டியோட்டுபவரே என்று தொழிலையிட்டுச் சொல்வது போலே, கோயில் காப்பானே வாயில் காப்பானே என்று அழைக்கின்றார்கள். தோத்திரம் பண்ண வேண்டும் என்று புகுந்து, ஆசாரிய தோத்திரத்திலே இழிந்தார்கள். ஒருவன் மற்றொருவனுக்கு இரத்தினத்தைக் கொடுத்தால், மற்றவன் அதன் விலையை அறிய கொடுத்தவன் பக்கலிலே விருப்பம் பிறக்குமாப் போலே, ஆளவந்தார் பரமாசாரியரான பெரிய முதலியார் எனப்படும் நாதமுனிகளைப் பற்றினார். சாத்திரங்களையெல்லாம் ஆராய்ந்து பார்க்குமிடத்து உபாயமாகத் தோற்றுகின்ற கர்மஞான பக்திகள் பேற்றுக்குச் சாதனமாகமாட்டா, பகவத் சம்பந்திகளை முன்னிட்டுக் கொண்டு அவனையே உபாயகமாகப் பற்றுவது பேற்றுக்கு உடலென்று பரமாச்சாரியாதரை முதலிலும் முடிவிலும் பற்றினார் என்பது ஈண்டு நினைவு கூறத்தக்கது.

**'கோயில் காப்பானே'** என்பதால் எம்பெருமான் தன்னுடைய இரட்சகத்வத்தை இவர்கள் தலையிலே வைத்துத்தான் உறங்குகின்றானோ என்ற தொனியும் தெரிகின்றது. இன்னும் அவர்கள் **"உன்னைக் காவலாக வைத்தது உகவாதார் நுழையாதிருப்பதற்கும் உகப்பாரைப் புகவிடுகைக்குமன்றோ? ஆகையால் அவனை ஆசைப்பட்ட எங்களுடைய ஆர்த்தியை ஆராய்ந்து எங்களைப் புக விடுவது முறையல்லவா?"** என்ற தொனிப்பொருளும் தோற்றுகின்றது.

கோயில் காப்பானும் கண்ணாலே **'நீங்கள் செல்லலாம்'** என்று சைகை காட்ட, ஆயச் சிறுமிகள் திருவாசல் காக்கும் முதலியை எழுப்புகின்றார்கள். **'வாசல் காப்பானே'** என்று. எல்லா மாளிகைகளும் ஒன்று போலிருப்பதால், பெண்கள் நள்ளிரவில் வந்தால் தடுமாறாமல் வரவேண்டும், பிற மாளிகைகளினின்றும் தம் மாளிகை வேற்றுமை தெரிய வேண்டும் என்று கொடியும் தோரணமும் நந்தகோபர் கட்டி வைத்தார் என்ற செயல் **'கொடியும் தோரணமும்'** என்ற தொடரால் பெறப்படுகின்றது. தண்ணீர்ப் பந்தல் தடாகங்கள் சமைக்கின்றவர்கள் தொலைவிலே வருகின்றவர்

களுக்குத் தெரியுமாறு அடையாளமாகக் கொடியும் தோரணமும் கட்டி வைப்பது போல நந்தகோபரும் நள்ளிரவில் வரும் பெண்கட்கு அடையாளம் தெரிவதற்காக நந்தகோபரும் கட்டி வைத்தார் போலும். இன்னும் **'வாசல் காப்பானே'** என்பதால், "கொடியும் தோரணமும் அசேதனப் பொருள்கள் எங்களை உள்ளே புகவைக்கவும் அறியா. நீ சேதநானாகையால் நீ அறிவாய். இதனால்தான் அர்ச்சுனன் சுபத்திரையைக் கொண்டு போவதற்காகக் கண்ணன் வாசல் காக்கும் முதலிகளை அநுமதி பண்ணுவதற்காக வைத்தாற் போலே உன்னை வைத்திருக்கின்றான்" என்று கூறி உள்ளே புக அநுமதி வேண்டுகின்றனர்.

**'மணிக்கதவம்'** என்பதால் 'மாமான் மகளே மணிக்கதவம் தாள் திறவாய்' (9) என்று தோழியர்களை எழுப்பியபோது சொன்னது நினைவிற்கு வருகின்றது. பெண்கள் மாளிகையெல்லாம் மணிக்கதவமாம்படி அருளி கிருட்டிணனின் மாளிகை வாசல் மணிக்கதவமாகச் சொல்லுதல் அரிதோ? பூவியல் பொழிலும் தடாகமும் அவன் கோயிலும் கண்டு புறவாயிலின் போக்கியதை வாசலில் வரவொட்டாது காரியத்தின் வசத்தால் வருந்தி வாசலிலே வந்தவர்களை திருவாசல் தன் அழகாலே காற்கட்டும். அவன், உள்ளுப் புகுந்தாரைப் புறப்படாதபடி தன் அழகாலே காலைக் கட்டுவான். உள்ளே புகும்போது ஒரு வண்ணம் சென்று புக வேண்டும். அப்படி உள்ளுக்குப் புகுந்தாலும் 'மற்றொன்றினைக் காணாவே' (அமலனாதி - 10) என்று பண்ணிவிடும். கதவின் போக்கியதையில் நெஞ்சும் கண்ணும் பிணிப் புண்ணாமல் திறந்து விடுகின்றாய் இல்லையே என்பது 'தாள் திறவாய்' என்பதன் தொனிப்பொருளாக அமைகின்றது.

வாயில் காப்போன், "பயம்மிக்க தேசத்திலே நள்ளிரவில் வந்து கதவைத் திறக்குமாறு கூறும் தாங்கள் யார்?" என்று வினவ, அதற்கு இவர்கள் "பயத்தையெல்லாம் போக்குகின்றவன் இருக்கின்ற இடத்தில் பயம் என்?" என்று வினவ, அதற்கு வாயிலோன், "காலம் திரேதாயுகமாய், தமப்பன் சம்பராந்தகனுமாய், பிள்ளைகள் ஆண் புலிகளாய், மந்திரிகள் வசிட்டாதிகளாய், ஊரும் திருவயோத்தியாய் இருந்தால் பாலிலே உண்டு பனியிலே கிடக்கலாம். ஆனால் காலம் கலிக்குத் நீண்டியான துவாபரயுகம். தமப்பனார் சாதுக்கிழவர் நந்தபோகர். இவர்கள் சிறுபிள்ளைகள். அதற்கு மேலே தீம்பர்கள். ஊர் இடைச்சேரி. கம்சன் சந்துரு, எழும்பூண்டுகள் எல்லாம் அசுரப்பூண்டுகள். ஆதலின் பயம் கெட்டோ இருக்கின்றது?" என்கின்றான். ஆயச் சிறுமிகள், "நாங்கள் பெண் பிள்ளைகள், எங்கட்குப் பயப்பட ..வேண்டுமா?" என்ன: "சூர்ப்பணகை பெண்

அன்றோ? 'அஞ்சுபவன் வெஞ்சொல் நங்காய்' என்று பிற்பாடரும் கூட அஞ்சும்படியாக அவள் நலிந்தது, ஒரு திருமாளிகையும் வாசல் காப்பாரும் இல்லையாலன்றோ?'' என்கின்றான். ஆயச் சிறுமிகள் ''சூர்ப்பணகை அரக்கி, நாங்கள் இடைப் பெண்கள்'' என்று சொல்ல : அதற்கு அவன் ''பூதனை இடைச்சியன்றோ? இடைச்சிகளுக்கன்றோ மிகவும் அஞ்ச வேண்டியுள்ளது'' என்கின்றான். அதற்கு இவர்கள், ''இவனுக்கு என் வருகின்றதோ? என்று வயிறு பிடிக்கும் இடையர்க்குப் பிறந்த கிருத்தரிமம் அறியாத கன்னிகைகள் நாங்கள். எட்டும் இரண்டும் அறியாத எங்கள் பருவத்தைப் பாராய், நாங்கள் பூதனையைப் போல தனித்து வரவில்லை. அஞ்சு லட்சம் குடியில் உள்ள பெண்கள் எல்லாரும் கூடியன்றோ வந்துள்ளோம்?'' என்று கருத்துப்பட **'ஆயர் சிறுமியரோம்'** என்கின்றனர்.

வாயில் காப்பான் ''பாலைகள் என்று கருதவொண்ணுமோ? கன்றன்றோ வந்து நலியப் பார்த்தது? பருவங்கண்டு அறுதியிட முடியாது. உங்கள் சொற்களினால் அறியலாம். வந்த காரியம் என்ன? சொல்லுங்கள்'' என்கின்றான். உடனே சிறுமிகள், ''நான்புக்குப் பறை வேண்டி வந்தோம்'' என்று சொல்ல, அவன் ''அதுவாகில் திருப்பள்ளி யுணர்ந்த பிறகு விண்ணப்பம் செய்து தருகின்றோம். ''அதுகாறும் நில்லுங்கள்'' என்கின்றான். அதற்குச் சிறுமியர், ''நீ இன்று அறிவிக்க வேண்டாதபடி நேற்றே தருவதாக அருளிச் செய்தான்'' என்று கருத்துப்பட **'நென்னலே வாய் நேர்ந்தான்'** என்கின்றனர். வாயில் காப்பானை ஆயர் சிறுமியர் தாழ நின்று கையைக் காலைப் பிடித்துப் பரிமாறுகின்றனர்.

ஆயச் சிறுமிகளைக் கிடந்தவிடத்தில் கிடக்கவொட்டாதபடி படுத்துகிற வடிவழகு **'மணிவண்ணன்'** என்ற தொடரால் பெறப்படுகின்றது. பதுமராகத்தின் வர்ணம் போன்ற சிவப்பான அதரங்களையுடையவன் என்பது குறிப்பு 'சொன்னான்' என்னாமல் 'வாய் நேர்ந்தான்' என்பதால் கௌரவம் தோற்ற திருவோகலத்தில் சொன்னதாகத் தாற்பரியம். வாயில் காப்பான், ''ஓலக்கத்திலே ஒரு வார்த்தை அருளிச் செய்தானாகில் அதனை மெய் என்று நிரூபிக்க அந்தரங்கமாகச் சொல்ல வேண்டாவோ?'' என்கின்றான். அதற்குச் சிறுமிகள், ''சொல்லாதொழிந்தவன் செய்யலாவதில்லை. இத்தனை சொன்ன பின்பு அவன் வார்த்தையில் பழுதுண்டோ? செய்ய நினைத்திலனாகில் சொல்லான், சொன்னாகில் தப்பாது'' என்கின்றனர்.

வாயில் காப்போன், ''உங்கள் காரியம் செய்கின்றோ மென்றாலும், எங்களை ஈண்டு வைத்ததற்குப் பயன் வேண்டாவோ? சிலவற்றையேனும் நாங்கள் மறுக்க வேண்டும். அவன் எங்கள்

தலைவன். ஆராயவிருக்கின்ற எனக்கு உங்களை அறிய வேண்டும், ஆராய வேண்டும்" என்று கூற, அதற்கு இவர்கள் "நாங்கள் சிறிதும் வஞ்சகம் இல்லாத ஆயச் சிறுமியர். எங்களுக்கு மனத்தில் களங்கம் இல்லை. நாங்கள் ஆராய வேண்டும்படி வந்தவர்களல்லோம். நீ பயப்பட வேண்டும்படி பாவதோஷம் இல்லை. எங்கள் தலையிலேயும் ஒன்று கிடக்க வந்தோமும் அல்லோம். அவனுடைய இரட்சையும் அவனுடைய பயனுமாக வந்தவர்களேயன்றி, சொந்த முயற்சியாதல், சுயநலமாதல் பற்ற வந்தோம் அல்லோம். வேறு வழிகளால் பெறுவார்களும் அல்லோம். வேறு பயன்களைக் கொண்டு அகல்வாரும் அல்லோம்" என்கின்றார்கள்.

மேலும் தொடர்ந்து, "தூய்மையாவது, தான் சிலவற்றை ஏறிட்டுக் கொள்ளாமல் நம்முடைய இரட்சை அவனாலே என்றிருக்கை. இராவணபவனத்தை விட்டுப் போந்த வீடணன் வழியிலே ஒரு முழுக்குப் போட்டு வரவில்லையே. தூசி ஏறின படை நடுவே நின்று தானே பார்த்தன் பரமரகஸ்யம் கேட்டது" என்கின்றார்கள். சிறிய திருவடி திருவாழி மோதிரமும் தன் வடிவும் காட்டாமல் மிடற்றோசையைக் காட்டித் தன்னை அன்புக்குரியவனாகக் காட்டிக்கொண்டதைப் போலலே, இவர்களும் தங்கள் ஆர்த்த தொனியைக் காட்டுகின்றனர். இன்னும், "எங்கள் வரவினாலேயே தெரியாதோ பாவசுத்தி? இங்கு நிரந்தரமாக இருக்கும் அடைவு தெரியாமை இல்லையே. அவன் செய்யக் கடவதை நாங்கள் செய்தோம். எங்களொத்த ஆர்த்தியுடையார் இருந்தவிடத்தில் அவன் சென்று காரியம் செய்ய வேண்டியிருக்க நாங்களல்லவோ வந்து நிற்கின்றோம்" என்று **'தூயோமாய் வந்தோம்'** என்பதை நிலைநாட்டுகின்றனர்.

வாயில் காப்பானும், "உங்கள் தூய்மை நாடறியும்படி நீங்கள் பயன் கருதி வந்தவர்கள் அல்லர் என்பதற்கு அடையாளம் சொல்லுங்கள். உங்கள் ஆற்றாமை காட்டியது பறையின் அளவல்ல" என்கின்றான். இதற்கு அந்தச் சிறுமிகள், "அவன் உணர்ந்தருளும் போது புலப்படும் அழகுக்கு மங்களாசாசனம் பண்ண அன்றோ நாங்கள் வந்தது? பயன் கருதி வந்தவர்கள் தாமே திருவோலக்கத்தில புகுவார்? பயன் கருதாமல் வந்தவர்கள் தாமே கண் கவர்ந்தருள்கின்ற இடத்தில் புக நேர்வார்" என்று கூறி தாங்கள் **'துயில் எழப்பாடுவான்'** வந்தாகத் தெரிவிக்கின்றார்கள். பெருமான் கண் வளர்கின்ற நிலைகண்டு உகந்தார் பெரிய பிராட்டியார். இவர்கள் அவன் துயிலெழுவதைக் காண ஆசைப்படுகின்றனர்.

'பெண்களாகிய நீங்கள் இரவெல்லாம் வந்து இப்படித் தொல்லை தருகின்றீர்களே அப்பாற் செல்லுங்கள்' என்று சொல்லுவான் போல் வாயில் காப்பான் இருந்ததனால் **'வாயால் முன்னம் முன்னம் மாற்றாமே அம்மா'** என்கின்றார்கள் ஆயச் சிறுமிகள். "அப்பனே, மனத்திலே நெருப்பைச் சொரிந்தாற்போல சிலவற்றை நீ நினைத்தாலும், வாயாலே அவற்றைச் சொல்லாதொழிய வேண்டும். சேஷிபூதராய் இருப்பாரை முட்டத் தொடரலாமோ? பிரானே (அம்மா)" என்கின்றார்கள். தொடர்ந்து, "பிரதான சேஷிகளை நாங்கள் அறிந்தோமாகிலும், துவார சேஷிகளன்றோ எங்களுக்குக் கடவார்கள்? அவன் வாய் நேர்ந்தாலும் காரியம் தலைக்கட்டித் தருவது நீயன்றோ? நீ எங்களை உள்ளே புகவிட்டால்தானே அவன் எங்களை உகப்பான்?' என்கின்றார்கள்.

வாயில் காப்பான் இவர்களின் ஆர்த்தித்வத்தையும் பாவசுத்தியையும் ஒருவாறு உணர்ந்ததும், அவர்கள் மீது கருணை கொண்டு "சிறுமிகளே, நான் உங்களைத் தடுக்கவில்லை. கதவை நீங்களே தாளையுருவிக் கதவைத் தள்ளித் திறந்து கொண்டு செல்லலாம்" என்று குறிப்பு காட்டுகின்றான். அதற்கு இந்தச் சிறுமிகள், "இந்தக் கதவு உன்னைக் காட்டிலும் எம்பெருமான் பக்கல் மிகவும் அன்பு கொண்டு அழுத்தமாக உள்ளது. அபகலைகளான எங்களால் இதனைத் திறக்க முடியாது. நீயே திறப்பாய்" என்கின்றார்கள்.

எல்லாப் பாகவதர்களும் திரண்டு, ஆசாரியனைக் கிட்டச் சென்று ஆசாரிய சம்பந்தத்தை உண்டாக்கப் புருஷகாரமாயிருப் பவர்களையுணர்த்தல், இப்பாசுரத்திற்கு **உள்ளுறை.** ஆசாரியனைத் தொழுவதற்கு முன் அவனிடத்துத் தம்மைச் சேர்த்தாரையும் பணிவது பெரியோர் செயல் என்பது இங்கு விளங்கும். கோயில் காப்பான் - திருமந்திரத்தை அதிகாரிகளல்லாதார் காதிற்படாதபடி பாதுகாப்பவன்.

## 17. நந்தகோபர் தொடக்கமானாரை எழுப்புதல்

### பதினேழாம் பாசுர விளக்கம்

"அம்பரமே தண்ணீரே"

**அம்பரமே தண்ணீரே சோறே அறஞ்செய்யும்**
**எம்பெருமான் நந்தகோ பாலா எழுந்திராய்**
**கொம்பனார்க் கெல்லாம் கொழுந்தே குலவிளக்கே**
**எம்பெரு மாட்டி யசோதாய் அறிவுறாய்**
**அம்பரம் ஊடறுத்து ஓங்கி உலகளந்த**
**உம்பர்கோ மானே உறங்காது எழுந்திராய்**
**செம்பொற் கழலடிச் செல்வா பலதேவா**
**உம்பியும் நீயும் உறங்கேலோ ரெம்பாவாய்**

(சொ.பொ) : அம்பரம் - ஆடை; சோறு - அன்னம்; எம்பெருமான் - தலைவன்; கொம்பு அனார்க்கு - வஞ்சிக் கொம்பை யொத்த (இளைத்த); கொழுந்து - கொழுந்து போன்றவள்; குலவிளக்கு - புக்க குலத்திற்கு மங்கள தீபம்; எம்பெருமாட்டி - தலைவி; அறிவாறாய் - எழுந்திருப்பாயாக; அம்பரம் - ஆகாயம்; ஊடறுத்து - இடைவெளியாக்கிக் கொண்டு; ஓங்கி - வளர்ந்து; உம்பர் - தேவர்; கோமான் - அரசன்; உறங்காது - கண் வளர்ந்தருளாமல்; எழுந்திராய் - எழுந்திருக்க வேண்டும்; செம்பொன்கழல் - சிவந்த பொன்னாலான வீரக்கழல்; அடி - திருவடிகள் விளங்கப்பிறந்த; செல்வன் - சீமான்; பலதேவன் - நம்பி மூத்தபிரான்; உம்பி - உன் தம்பி; உறங்கேல் - உறங்கற்க.

**(க-து) :** வாயில் காப்பான் திருக்காப்பு நீக்கி ஆயச் சிறுமியரை உள்ளே புகவிட, அவர்கள் நந்தகோபன், யசோதைப் பிராட்டி, கிருட்டிணன், நம்பிமூத்தபிரான் என்ற இவர்களை எழுப்புகின்றனர். பெண்கள் கிருட்டிணனைக் களவு காண்கின்றனரா என்று கருதி நந்தகோபன் புறக்கட்டிலே கிடக்கின்றான். அவனை முதலில் எழுப்புகின்றனர். தொடர்ந்து யசோதை, கிருட்டிணன் பலதேவன் இவர்களை எழுப்புகின்றனர்.

**விளக்கம் :** திருவாயில் காப்பான் தாளை உருவி 'நேச நிலைக் கதவைத்' திறந்து ஆயச் சிறுமிகளை உள்ளே புக அனுமதிக்கின்றான்.

முன்னர் ஒருவரையொருவர் எழுப்புகின்றபோது அங்குத் தனித்தனியே பட்டதை இங்கு எல்லாரும் சேர்ந்து படுகின்றார்கள். பெறுகைக்குப் படுகின்ற திரள் பெற்றநுபவிக்கின்ற நந்தகோபர் தொடக்கமானவரை எழுப்புகின்றார்கள். கிருட்டிணனைப் பெண்கள் களவு காண்பார்கள் என்று நோக்கி முதற்கட்டில் பிள்ளைக்குக் காவலாகக் கிடக்கின்றார் நந்தகோபர். தமக்கு வைத்தமாநிதியுமாய் தாம் பெற்றெடுத்த பேராளனுமாய் உள்ளே கிடக்கின்ற கிருட்டிணனைப் பெண்கள் பெற்றால் விடார்கள் என்று நோக்கிக் கொண்டு 'கூர்வேல் கொடுந்தொழிலன்' என்னும்படி உருவிப்பிடித்த வாளும் தாமுமாய்ப் படியாய்க் கிடக்கின்றார். அப்படிக் கிடக்கின்ற வரை முதலில் எழுப்புகின்றார்கள் ஆயச் சிறுமியர். நந்தகோபர் அறஞ்செய்யும் பண்பாளர். ஈத்துவக்கும் இன்பம் கண்டவர். வந்தவர்க்கெல்லாம் ஆடையையும் தண்ணீரையும் சோற்றையும் வாரி வழங்குகின்ற வராதலால் **'அம்பரமே தண்ணீரே சோறே அறம் செய்யும் எம்பெருமான்'** என்று விளிக்கின்றார்கள். "ஒரு பலனையும் எதிர்பாராமல் வேண்டுவார்க்கு வேண்டுகின்றவற்றையெல்லாம் கெடுக்கும் நீர் நீங்கள் வேண்டுகின்றவற்றைத் தர வேண்டாவோ? வந்தவர்க்கெல்லாம் தாரக போனக போக்கியதைகளை வழங்கும் நீர் இவையெல்லாம் ஒன்றாகிக் கிடக்கின்ற பொருளைத் தரலாகாதோ?" என்கின்றார்கள். 'எல்லாம் வாசுதேவன்' என்றிருப்பவர்கள் நாங்கள். 'நந்தகோபன் குமாரன்' என்று உங்கள் பிள்ளையையன்றோ நாங்கள் ஆசைப்பட்டது? "கிருட்டிணனைப் பெற்றுத்தந்த சுவாமியானவனே" என்று தொனிப் பொருள்பட **"எம்பெருமான்"** என்றும் **'நந்தகோபாலா'** என்றும் விளிக்கின்றார்கள் போலும். பிறருக்கு உபகாரம் பண்ணுவதையே தாரகமாகக் கொண்டிருக்கும் 'தாங்கள் உறங்குவது முறையோ?' என்று கூறி **'எழுந்திராய்'** என்று அவரை எழுப்புகின்றார்கள்.

அவர் வாளா இருக்க அநுமதி பெற்றதாகக் கருதி யசோதைப் பிராட்டியிடம் வருகின்றார்கள். பிராட்டியை எழுப்பி அவள் முன்னாக அவன் (எம்பெருமான்) பக்கலில் கார்யம் கொள்ளுமாப்போலே, யசோதைப் பிராட்டியை முன்னர் எழுப்பிப் பின்னர் நந்தகோபரை எழுப்புவது முறையாயிருக்க முற்பட அவரை எழுப்பிப் பிற்பட இவளை எழுப்புவதற்குக் காரணம் என்ன? நந்தகோபர் பிள்ளை பக்கல் உண்டான பாசத்தாலே, பிள்ளைக்கு என்னாகுமோ என்ற அச்சத்தாலே, 'கூர்வேல் கொடுந்தொழிலன்' என்னும்படி உருவிப் பிடித்த வேலும் தாமுமாய் புறக்கட்டிலே கிடப்பவர் நந்தகோபர். இவள் பிள்ளை பக்கல் வாத்சல்யத்தாலும் கணவனது கூட்டாலும் உள்கட்டல் நடவேயல்லவா கிடப்பது? இவர்கள் வலக்கை இடக்கை

அறியாத அபலைகள் ஆகையாலே கண்டதற்கு மேற்பட அடைவறிந்து எழுப்பும் திறம் இல்லாததால் பிற்பட எழுப்புகிறார்கள். பிராட்டி 'அகலகில்லேன் இறையும்' என்று இறைவனையும் விபூதியையும் கைவிடாமல் இருக்குமாப்போலே, யசோதைப் பிராட்டியும் நந்தகோபரின் படுக்கைத் தலையும் விடாள். பிள்ளைகளுடைய தொட்டில் காற்கடையும் விடாள். அவரைத் தன் முலையாலே அணைக்கைக்காகவும், இவர்கட்கு முலைப்பால் கொடுத்து வளர்க்கைக்காகவும் நடுவில் கட்டிலே கிடக்கின்றாள். 'வஞ்சிக் கொடிபோல் இருக்கும் பெண்களுக்கெல்லாம் தலைமையுள்ளவளே, கொழுந்து வாடுவது போல எங்களுக்கு ஒரு குறைவரின் உன் முகம் அன்றோ முதலில் வாடுவது' என்ற கருத்துப்பட **'கொம்பனார்க்கெல்லாம் கொழுந்தே'** என்று விளிக்கின்றார்கள். தன்னை நலிகின்ற அரக்கிமாருக்கு இதம் சொன்னாற்போலே, "ஆர்த்தைகளாக வந்த எங்களையும் 'அஞ்சற்க' என்று சொல்ல வேண்டாவோ?" என்கின்றார்கள்.

'விளக்கு தன்னையும் விளக்கிக் காட்டி, தன் சுற்றுப்புறமுள்ள பொருள்களையும் விளக்கிக் காட்டுமாபோலே, எங்களுக்கும் உன்னுடைய குலத்துக்கும் மங்கள தீபம்போலே பிரகாசமாக இருப்பவளே' என்ற கருத்துப்பட **'குலவிளக்கே'** என்கின்றார்கள். 'ஆயர் கொழுந்தையும் ஆயர் பாடிக்கு அணிவிளக்கையும் நீ கொழுந்தும் விளக்குமானால் அநுபவிக்க வேண்டாவோ?' என்ற கருத்தை விளக்குவதுபோல **'கொழுந்தே குலவிளக்கே'** என விளிக்கின்றார்கள். 'எங்களுக்குக் கிருட்டிணனைப் பிள்ளையாகப் பெற தந்து உபகரித்து எங்களுக்குச் சுவாமியானவளே' என்ற கருத்தை உள்ளடக்கியவாறு **'எம்பெருமாட்டி'** என்கின்றார்கள். 'கண்ணன் எம்பெருமான்' என்று கிருட்டிணனைச் சொல்லும் பாசுரம் 'எம்பெருமான் நந்தகோபலா' என்று நந்தகோபருக்கும் பொருந்தக்கடவதனால் 'எம்பெருமாட்டி' என்பது இவளுக்கும் பொருந்துமல்லவா? கிருட்டிணன் நீளாநாயகனாய் கோபீஜன வல்லபனாய் இருப்பதை 'மண்மகள் கேள்வன் மலர்மங்கை நாயகன்' என்று இடைச்சேரியாகச் சொல்லும்படி பெரிய பிராட்டியாகச் சொல்லும்படி பெரிய பிராட்டி பூமிப்பிராட்டி வல்லபனாகையாலே, முக்கிய பட்டத்தரசிகளும் கும்பிடும்படியன்றோ உன்னுடைய ஏற்றம் இருப்பது?" என்று மேலும் கூறுகின்றார்கள்.

"நீயும் பெண் குலத்தைச் சேர்ந்தவளாகையால், எங்கள் நோயை அறியக் கூடியவளாயும் இருக்கின்றாய். கிருட்டிணனும் பெண்களுமான சேர்த்திக்கு உகக்குமவளாயும் இருக்கின்றாய்.

இதகாமராா நந்தகோபரைப் போலன்றி பிரியாகாமையான நீ 'அஞ்சவுரப்பாளசோதை' என்கின்றபடி பற்றாசகாவன்றோ நாங்கள் வந்தது?'' என்ற கருத்து தொனிக்கும்படி **'யசோதாய்'** என்று விளிக்கின்றார்கள். இவள் பிள்ளையுடைய அருமையினால் ஊர் முழுவதும் திரிந்து அழிவு செய்து மூலையடியே திரிந்தாலும், ஏதேனும் ஒரு யுக்தி செய்து, கண்ணன் சுகமாக இருப்பதே அவசியம் என்று ஒருநாள் ஒழியாது அவன் செய்த தீம்புகட்கெல்லாம் கேடயமாக நின்று காப்பாற்றுவாள். ஊரார் வந்து கிருட்டிணன் மீது பழி சுமத்தும்போது 'அப்படிச் செய்தாயோ' என்றும், 'இப்போது தெரிந்து கொண்டேன். இனி செய்யாது அறிவுறுத்துகின்றேன்' என்றும் அவர்கட்குச் சமாதானம் செய்து அனுப்புவாள். இது தெரிந்தே ஆயச் சிறுமிகள் இவளிடம் வந்தார்கள். 'நீ அறிந்தால் எங்களுக்கு ஒரு குறையும் இல்லை' என்ற கருத்துப்பட **'அறிவுறாய்'** என்கின்றார்கள். 'நந்தகோபரை எழுந்திராய்' என்றும் 'இவளை அறிவுறாய்' என்றும் சொல்வதிலிருந்து இவள் நெஞ்சு தம் நிலையை அறிந்தால்தான் அவனைப் பெறலாம் என்று குறிப்பாக உணர்த்துகிறார்கள்.

யசோதை உடன்பட்டதுபோல் கிடக்க, உள்ளே புகுந்து கிருட்டிணனை எழுப்புகிறார்கள். 'தாய் தந்தையருக்குப் பரதந்திரன் என்று, உனக்கு யாதொரு பழியும் நேரிடாதபடி அவர்கள் அநுமதி பெற்று உள்ளே வந்து புகுந்தோம். நீ உறங்குவது ஏன்?'' என்கின்றார்கள். ''நின் திருக்கையிலே மாபலியின் கமண்டல நீர் விழுந்தவுடன் ஆகாயமெல்லாம் இடம் இல்லாதபடி ஓங்கி வளர்ந்து எல்லார் தலைகளிலும் நின் திருவடிகளை வைத்துப் பூமியை அளந்து கொண்டு பயனையே கருதும் வேதர்களுக்காக 'இருவிசும்பினூடுபோய் எழுந்து, மேலைத் தண்மதியும் கதிரவனும் தவிர ஓடி, தாரகையின் புறந்தடவி' (திருநெடுந் - 5) என்பது போல் மேலுலகையும் அளந்து தேவசாதியினருக்குக் கொடுத்து இந்திரன் முதலியோரை எழுதிக் கொண்டதைக் கூறுவதுபோல் **'அம்பரம் ஊடறுத்து ஓங்கி உலகளந்த உம்பர் கோமானே'** என்று விளிக்கின்றார்கள். எம்பெருமான் நிருபாதிக இரட்சகனா கையாலே இரட்சகத்துவமே விளைநீராக வளர்ந்தபடியைப் பேசுகின்றார்கள். உறங்குகின்ற குழந்தையைத் தழுவிக் கொண்டு கிடக்கும் தாயைப் போலே, இருந்த குடியாக எல்லார் தலையிலும் ஊறெண்ணெய் வார்த்தாற்போலே திருவடிகளைக் குளிர வைத்ததை நினைவு கூர்ந்து மகிழ்கின்றார்கள்.

'இரட்சகராய் இருப்பார்க்கு உறங்குவதற்கு விரகுண்டோ?' என்று குறிப்பிடுவது போல் **'உறங்காது எழுந்திராய்'** என்கின்றார்கள்.

இன்னும், "யான் கருதவாரும் ஆண்களுமாய் இருந்தால்தான் உதவ வேண்டுமோ? அபலைகளாய் பயன் கருதாதவர்களாய் இருந்தால் உதவலாகாதோ? உகப்பாரையும் உகவாதாரையும் வேற்றுமையின்றித் தீண்டுகின்ற நீ ஆர்வத்தோடு வந்திருக்கும் எங்களைத் தீண்டலாகாதோ? நீயே ஆர்த்தியாய்க் காரியம் செய்யக் கடவனாக இருக்கும் உனக்கு நாங்கள் அர்த்திகையாய் வந்திருப்பது குற்றமோ, திறமையுடனுள்ள இந்திராதியர்க்கத்தானோ காரியம் செய்வது? திறனற்ற எம்போலியர்க்குக் காரியம் செய்யலாகாதோ? கழஞ்சு மண்ணை ஆசைப்படாமல் உன்னை ஆசைப்பட்டது இழவுக்குக் காரணமாகக் கூடாதல்லவா? நீ சிறுப்பதும் பருப்பதுமாக வேண்டிய காலத்தில் உதவ வேண்டுமோ? இருந்தபடியே முகங்காட்ட வேண்டுவதனால் முகங்காட்டி உதவலாகாதோ?" என்பன போன்ற உணர்வுப் பிழம்புகள் **'அம்பரமே'** என்று தொடங்கி **'உம்பர் கோமானே'** என்று முடியும் முதல் **ஐந்தடிகளில்** தோன்றும்.

"இமை கொட்டில் மூச்சடங்கும்படியானவர்களைப் படவடித்து, எங்களை உகந்து, எங்களுக்கு முகங்காட்டாமல் உறங்கி எங்களைப் படவடியாமல் எழுந்திராய். இங்கு இருக்கவும் அளக்கவும் வேண்டா. அவ்வடியை அநுபவிக்க அமையும் உலகளந்த இளைப்பாலே உறங்குகின்றாய் என்கின்ற எங்கள் வயிற்றெரிச்சலைத் தீர்க்க அமையும்" என்பன உள்ளக் குமுறுல்கள் **'உறங்காது எழுந்திராய்'** என்பதில் தொனிக்கும். 'நடந்த கால்கள் நொந்தவோ?' (திருச்.விரு.61) 'அன்றி உலகம் அளந்த அசைவேகொல்?' (நான்.திரு.34), 'தாளால் உலகம் அளந்த அசைவே கொல்?' (நான்.திரு.35) என்றல்லவோ இவர்கள் வயிறு எரிவது? இன்னும், 'எல்லிபக்கலென்னா தெப்போதும்' என்றவாறு இராவுறக்கமின் பகலுறக்கமுமின்றிப் பாண்டவர்க்காகக் காரியஞ் செய்து திரிந்து, அதுதலைக்கட்டின பின்பும் நீ உறங்காதவன் அன்றோ? கோவிந்தா என்று சொல் கேட்டும் திரௌபதியின் முன் நிற்கப் பெற்றிலோமே. அவதாரப் பயன் பெற்றிலோம்" என்றிருந்த படிகளையெல்லாம் நாம் அறிந்தோமல்லவா?" என்பனவும் இத்தொடரால் பெறப்படும்.

"அண்ணனை எழுப்பி நம்மை எழுப்பிற்றிலர்கள். முறை தப்பினார்கள், எழுந்திருந்தால் நாமும் கூட்டாகப் பழி சுமக்க வேண்டி வரும்" என்று கண்ணன் பேசாமல் கிடக்கின்றான். நினைவும் பார்வையும் அறியுமவர்களாகையாலே தாம் முறை தப்பினதை ஊகித்து நம்பி மூத்த பிரானை எழுப்புகின்றார்கள். "கிருட்டிணன் பின்னே பிறக்க, முன்னே பொற்கால் இட்டுப் பிறந்த சீமானே இளைய பெருமாள் பின் பிறந்து பெற்ற சம்பத்து முன் பிறந்து

பெற்றவனன்றோ நீ? அவரைப் போலே முன்பிறந்து கைங்கரிய இலட்சுமியைப் படைத்தால் அவரைப் போல் உறங்காதிருக்கவும் வேண்டாவோ? பிராட்டியும் பெருமாளும் கண் வளரும்போது புறம்பே மதிளாய் நின்று நோக்கினாரன்றோ அவர்? கிருட்டிணனையும் பெண்ணையும் சேரவிடும் ஏற்றமுடையவனன்றோ நீ? எங்களையும் அவனையும் பொருந்தவிடுகின்ற உனக்கு உறங்க விரகு உண்டோ?' என்ற கருத்துகள் **'செம்பொற்கழலடி செல்வா பல தேவா!'** என்பதால் பெறப்படுகின்றன. "உனக்குப் பவ்வியனான தம்பியும், அவனுக்குப் பவ்வியனான நீயும் உறங்காதொழிய வேண்டும். அவனும் பிறப்பாலே பாரதந்திரியம் கொண்டாட, நீயும் உன் சொரூபத்தாலே பாரதந்திரியம் கொண்டாட நாங்கள் இத்தனையையும் இழந்தே போனோம் - 'சென்றால் குடையாம்' (முதல்.திருவந்.53) திருவனந்தாழ்வானுக்குச் சொருபமல்லவா?' என்ற கருத்துகள் **'உம்பியும் நீயும் உறங்கேல்'** என்பதால் அறியக் கிடக்கின்றன. இன்னும் 'உம்பியும் நீயும்' என்பதால் "உன்னுடைய உறங்குகின்ற நீயும் அவன் பாரதந்திரியத்தில் கட்டிக் கொண்டு கிடக்கும். இவன் ஆற்றாமையால் கட்டிக் கொண்டு கிடக்கும். 'புல்கும் அணையாம்' (மேலது 53) என்று நாய்ச்சிமாரைப் பிரிந்தால் ஆற்ற முடியாமலல்லவா இருப்பது? பிராட்டியைப் பிரிந்து பெருமாள் நெடுநாள் இருந்தார். இளைய பெருமாளைப் பிரிந்த பின்பு அமுது செய்திலர். 'என் தம்பி வழியே நானும் போயொழிவேன்' 'சோதிக்கு எழுந்திருனார்' என்ற கருத்துகள் 'உம்பியும் நீயும்' என்ற தொடரால் தொனிக்கின்றன.

'உம்பியும் நீயும் உறங்கேல்' என்ற இடத்து "படுக்கையில் உறங்குபவர்கள் உண்டு. உறங்குவாருடன் படுக்கையும் உறங்குமோ?" என்ற இரஸோக்தி பெறப்படும். மேலும் இதனால் அவன் படுக்கையான நீ உணர்ந்து எங்கள் படுக்கையும் உணர்த்தி எங்களுக்குத் தாராய் - 'பாம்பணைப் பள்ளி கொண்ட மாயனார்' என்றவையும் தொனிக்கும். பலதேவன் நாராயணமூர்த்திக்குப் படுக்கையாகிய ஆதிசேடனின் அம்சமாவன் என்பது ஈண்டுக் கருதத்தக்கது. கிருட்டிணனைப் பெற்ற அறு தாயாகி வசுதேவரின் மனைவியாகிய தேவகியின் கருப்பத்தில் ஆறு திங்கள் இருந்து, பின்பு வசுதேவனின் மற்றொரு மனைவியாகிய உரோகிணியின் வயிற்றில் மாயையினால் சேர்க்கப் பெற்று கிருட்டிணனுக்கு முன்னே பிறந்ததனாதலால் பலதேவன் கண்ணனுக்கு அண்ணனாகின்றான். 'நம்பி மூத்தபிரான்' என்ற பெயருடன் திகழ்கின்றான்.

**'செம்பொற் கழலடி இத்யாதிகளால்'** என்பவற்றால் மேலும் "நாங்கள் உன்னைக் காற்கட்டுகிறபோதே எழுந்திராமல், பின்னர்த்

தனித்தனியே காற்கட்டும் போதன்றோ நீ புகுதருகின்றாய். இழவில் "நடலைகளையெல்லாம் நாகணைக்கே சென்னுணர்த்தி" என்பார்கள். ஊடினபோது "தீ முகத்து நாகணை" என்பார்கள். உகந்தபோது "நாகணை மிசை நம்பிரான்" என்பார்கள். குகப்பெருமான், மகராஜர், சிறிய திருவ, விபீஷணாழ்வான் ஆகியோர்க்கெல்லாம் இளைய பெருமாள் தானே புருஷகாரம். "ஆகையால் அவனையும் எழுப்பி நீயும் எழுந்திராய்" என்ற கருத்துக்களும் பெறப்படுகின்றன.

'அம்பரம்' என்பது ஆன்மா பெற வேண்டிய பகவந் முகவிலாசம். 'தண்ணீர்' என்பது பகவந் முகவிலாசத்தை வளர்க்கவல்ல 'நான்போக்தா' என்னும் புத்தி தவிர்கை. 'சோறு' என்பது அதனால் வரும் கைங்கரியம். இம்மூன்றையும் அளிப்பவன் ஆசாரியன். அப்படிப்பட்ட ஆசாரியனைப் பற்றித் திருமந்திரத்தின் பொருளையுணர்ந்து எம்பெருமானுக்கு அந்தரங்கரை முன்னிட்டு எம்பெருமானை உணர்த்துதல் சேதந சொருபம் என்பது, இப்பாசுரத்தின் உள்ளுறையாகும்.

## 18. புருஷகாரமாக இருப்பவளான நப்பின்னைப் பிராட்டியை எழுப்புதல்

### பதினெட்டாம் பாசுர விளக்கம்

"உந்து மதகளிற்றன்"

**உந்து மதகளிற்றன் ஓடாத தோள்வலியன்**
**நந்தகோ பாலன் மருமகளே நப்பின்னாய்**
**கந்தம் கமழும் குழலீ கடைதிறவாய்**
**வந்துஎங்கும் கோழி அழைத்தனகாண் மாதவிப்**
**பந்தல்மேல் பலகால குயிலினங்கள் கூவினகண்**
**பந்தார் விரலிஉன் மைத்துனன் பேர்பாடச்**
**செந்தா மரைக்கையால் சீரார் வளையொலிப்ப**
**வந்து திறவாய் மகிழ்ந்தேலோர் எம்பாவாய்**

(சொ.பொ) மதம் உந்து களிற்றன் - மதநீர் பெருக்குகின்ற யானையை உடையவன்; ஓடாத - போரிலே பின்னிடாத; தோள்வலியன் - புயவலியையுடையவன்; கந்தம் - மணம்; கமழும் - வீசுகின்ற; குழலீ - கூந்தலையுடையவளே; கோழி எங்கும் வந்து அழைத்தன காண் - கோழிகள் எப்புறத்திலும் வந்து கூவின; மாதவிப் பந்தல் மேல் - குருக்கத்திப் பந்தல் மீது; குயில் இனங்கள் - குயில் கூட்டங்கள்; பல்கால் - பலமுறை; பந்தார்விரலி - பந்து பொருந்திய விரல்களையுடையவள்; மைத்துனன் - கண்ணன்; பேர் - திருநாமங்கள்; பாட - வசைபாடும் படிக்கு ஈடாக; சீர்ஆர் - அழகுமிக்குள்ள; வளை - சூடகம் தோள்வளை முதலிய வளைகள்; ஒலிக்க - ஒலிக்கும்படி; வந்து - நடந்து வந்து; செந்தாமரைக்கை - செந்தாமரை மலர்போன்ற கை; மகிழ்ந்து - மகிழ்ச்சியுடையவளாய்; திறவாய் - திறக்க வேண்டும்.

**(க-து) :** இங்ஙனம் எழுப்பினாலும் எழுந்திராமையால் தங்கட்குப் புருஷகாரமாக இருக்கும் நப்பின்னைப் பிராட்டியை எழுப்புகின்றார்கள். காதலால் தூண்டப் பெற்றவர்களாகையாலே முந்துறவே கண்ணன் பக்கத்திலே மேல் விழுகின்றார்கள். அங்குத் தம் காரியம் பலியாமையாலே முறைப்படிப் போக வேண்டும் என்று புருஷகாரத்தில் இழிகின்றார்கள். அவள் புருஷகாரமாக அவனைப் பற்றுவதே

பலனைத் தருவதாகும். பிராட்டியை விரும்பாமல் பெருமாளைப் பற்றின சூர்ப்பணகை கேட்டினை அடைந்தாள். பெருமாளை ஒழியப் பிராட்டியைப் பற்றின இராவணனும் கேட்டினை அடைந்தான். விபீஷணாழ்வானைப் போலே இருவரையும் பற்றினால் அல்லல் தீர்ந்து உய்யலாம். காதல் மிகுதியானவர்களாதலால், மயக்கத்தால் முந்துறவே கிருட்டிணன் பக்கல் மேல் விழுந்தார்கள். அங்கு காரியம் பலியாமையாலே புருஷகாரத்தில் இழிந்தார்கள். அடிமை கொள்ளும் போதல்லவா முறை பார்ப்பது? போக வேளையிலே முறை பார்க்க முடியாதல்லவா?

சரண் புகும்போது இராமாவதாரத்தில் பெரிய பிராட்டியார் ஒருவரையுமே புருஷகாரமாயிருக்கும். வராக அவதாரத்தில் பூமிப் பிராட்டியை முன்னிடுவதாக இருக்கும். கிருட்டிணாவதாரத்துக்குப் பிரதான மகிஷி பின்னைப் பிராட்டியாகையாலே இவளை முன்னிடுகின்றார்கள்.

**விளக்கம்** : வாயில் காப்பான் முதலியோரைப் புருஷகாரமாகக் கொண்டு முன் பாசுரத்தில் எழுப்பினவர்கள், 'பிராட்டியை முன்னிடாமல் பகவானைப் பற்றினால் இராவணனைப் போலவும் சூர்ப்பணகையைப் போலவும் தீமையுடைவார்கள்' என்று நினைத்து, இப்பாசுரத்தால் நப்பின்னைப் பிராட்டியை எழுப்புகின்றார்கள். நம்முடைய கர்ம ஞான உபாயங்களால் எம்பெருமானைப் பெற இருப்பது இளிம்பு. அவற்றை விட்டு அவனுடைய கிருபையாலே பெறுவது சதிர். அந்தக் கிருபைக்கு அடியான பிராட்டியை முன்னிட்டுக் கொண்டு பெறுவது மாசதிர் என்பர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார். "எனக்கே அருள் செய்ய விதி சூழ்ந்ததால்" என்றார் ஆழ்வார். அதுக்கு அடியாக 'மாதவன் என்று என்று, ஓதவல்லீரேல் தீதொன்றும் அடையா' (திருவாய் 10.5.7). 'திருக்கண்டேன்' (மூன்.திருவந்.1) என்று தொடங்கி, 'தேனமரும் பூமேல் திரு - சார்வு நமக்கென்றும்' (மேலது - 100) என்று அருளிச் செய்தார். இவையடியாக இழிந்த எம்பெருமானாரும் கத்தியத்திலே முதலிலே தமக்கு துவய நிஷ்டை உண்டாக வேண்டும் என்று சரணம் புக்கார். ஆயச் சிறுமிகளும் அப்படியே ஒரு பாசுரத்தால் நப்பின்னைப் பிராட்டியைச் சரணம் புக்கு அதன் பின்னர் அந்தப்புரக் கரிகரமாய் நின்று அச்சம் கெட்டு, ஒரு பாசுரத்தால் உபாய சித்திக்கு உடலாக அவனைப் பற்றி, ஒரு பாசுரத்தாலே உபேயசித்திக்கு உடலாக அவனையும் அவளையும் பற்றி ஆக மூன்று பாசுரங்களால் நப்பின்னைப் பிராட்டியை எழுப்பி, அவள் வழியாக எம்பெருமானை எழுப்புகின்றார்கள் (திருப். 18, 19, 20).

"கிருட்டிணனை "நந்தகோபன் குமரன்" என்று ஆதரித்து மொழிவது போலே, இவர்களைப் பற்றுவார்க்கும் இவள் உகப்பது சொல்ல வேண்டுமாதலால் நந்தகோபரைக் குறிப்பிட்டு அவரைச் சிலாகித்துப் பேசுவது இவளுக்கு உடையவன் என்பதைத் தெளிவாக்கும் பொருட்டு" என்பவை **'உந்து மதக் களிற்றன்'** என்ற தொடரால் தெளிவாகின்றது. இன்னும் "நாங்கள் வந்து எழுப்பும்படி வாரணம் பைய நின்று ஊர்வது போல் மகன் செருக்கித் திரிகின்றது இவர் வயிற்றில் பிறந்ததனாலன்றோ? மத்த கஜத்தின் மிடுக்குப் போலே புகழ் கனக்க உண்டாகையாலே, களிற்றைத் தள்ளா நின்றுள்ள மிடுக்கையுடையவன். ஆனைகளோடே பொருது அவற்றைத் தூக்கும்படியான மிடுக்கையுடையவன். கிருட்டிணன் குவலயாபீடம் என்ற யானையைக் கொன்றது சர்வ சக்தித்துவத்தால் அன்று. இவர் மகானாகையால்தான் அங்ஙனம் செய்ய முடிந்தது. மத்த கஜங்களையுடையவன் என்பதும் பொருந்தும்" என்பனவும் **'உந்துமதகளிற்றன்'** என்பதனால் பெறப்படுகின்றன. இவருக்கு ஆனை உண்டோ என்னில் வசுதேவரும் தாமும் ஒரு மிடறாயிருக் கையாலே, அங்குள்ளது இங்கேயாய், இங்குள்ளது இங்கேயாய் ஒன்றாக அமைந்தபடியாலும் தத்த புத்திரனுக்கு இரண்டிலும் பிராப்தியுண்டாகையாலும், ஆனையுண்டாகத் தட்டில்லை. "வாரணமாயிரம் சூழ்" (நாச்.திரு. 6) என்று திருவாய்ப்பாடியின் ஆனைகளும் பசுக்களும் கலந்து திரிகின்றனவன்றோ?

**ஓடாத தோள்வலியன் :** இது நந்தகோபருக்கு அடைமொழி. நாட்டில் எவர்க்கும் அஞ்சிப் பின்னிடாதே தோள் வலியையுடையவன். இப்போது இவனுடைய மிடுக்கு சொல்லிற்று. இவர் வயிற்றில் பிறந்ததனால். கம்சன் மாளிகைக்குக் கீழே பிள்ளை வளர்க்க வலி இல்லை. குடியுடன் படக் கடமை கொண்டிருந்தானாகில் இருக்கின்றான், மிகைத்தானாகில் உழக்கோல் கொண்டு தகர்க்கின்றோம் என்றிருப்பர். கம்சனும் இதனை நன்கு அறிந்து புகுந்து தொல்லை தருதல், விட்டுக் காட்டுதல் ஆகியவற்றைச் செய்யாமல் தான் கண்ணனால் முடியும் வரையிலும் களவு முறையில் நலியப் பார்த்துக் கொண்டிருந்தான். "அங்கோராய்க் குலம்" என்று அஞ்சினான் புகலிடமான ஊர் அல்லவா என்று கருதி. இவ்விடைச் சேரியை நினைந்தவுடனே கம்சனின் படை வீடென்று கருதுவோரின் அச்சம் கெட்டொழிகின்றது.

நப்பின்னை பிறந்தகத்திலிருப்பதைக் காட்டிலும் புகுந்த இடத்தில் இருப்பதில் மிகு மகிழ்ச்சி காட்டி வாழும் உத்தமியாதலால், மாமனார் சம்பந்தத்தைக் குறிப்பிட்டுக் காட்டி **'நந்தகோபாலன்**

**மருமகளே'** என்கின்றார்கள். கிருட்டிணன் பிறந்ததற்குப் பின்னர் கோகுலத்துப் பெண்கள் எல்லோரும் ஒருவகையில் பார்த்தால் மருமகள்மார் ஆவர்களாதலால், 'நமக்கென்ன?' என்று நப்பின்னை பேசாமல் கிடக்க **'நப்பின்னாய்'** என்று பேரைச் சொல்லி அழைக்கின்றார்கள்.

"பரிமளம் தான் நிறம் பெறுவது இவள் திருக்குழலில் சேர்ந்த பிறகு அன்றோ?" என்ற கருத்துப்பட **'கந்தம் கமழும் குழலீ'** என்று அழைக்கின்றார்கள். 'சர்வகந்த்' என்ற பெயருடைய எம்பெருமானுக்கும் நாற்றம் கொடுக்கும்படி பரிமளம் மிக்க திருக்குழலை உடையவள் அல்லவா? "கிருட்டிணனுடைய பரிமளமும் உன்னுடைய பரிமளமுமாகத் தேங்கி நிற்கும் வெள்ளத்தை, கதவைத் திறந்து புறப்படவிட்டு எங்கள் விடாயைத் தீராய். கிண்ணகத்தை அணை செய்தாற்போலே அடைத்துக்கொண்டு கிடவாமல் வெட்டிவிடு" என்ற கருத்துப்பட **கடைதிறவாய்** என்கின்றார்கள்.

'நள்ளிரவில் வந்து எழுப்பி என்னை ஏன் தொந்தரவு செய்கின்றீர்கள்?' என்று பின்னைப் பிராட்டி கேட்க, 'பொழுது விடிந்தது' என்கின்றார்கள். 'அதற்கு அடையாளம் என்ன?' என்று கேட்க, "கோழி அழைத்தன காண்" - கோழி கூவா நின்றது' என்கின்றார்கள். உள்ளிருந்து 'ஒரு கோழி கூவினதால் விடிந்ததாகக் கருதலாமா?' என்ற குரல் வெளிப்படுகின்றது. ஆயச் சிறுமிகள் "வந்தெங்கும் கோழி அழைத்தன காண்' - வாசலைப் பற்றி திறவென்பாரைப் போலவும் கோழிச் சமூகங்களே கூவா நிற்கின்றன' என்கின்றார்கள். 'ஒன்றன் ஒலியைக் கேட்டுப் பலவும் உணர்ந்தன. உணர்ந்தவை எல்லாம் கூட எங்கும் ஒக்கக் கூப்பிட்டு பின்னர் அடங்கிவிடும். ஆகவே, இது அடையாளமாகமாட்டாது. வேறு அடையாளம் இருந்தால் சொல்லுங்கள்" என்கின்ற குரல் வெளிவருகின்றது.

குயில் கூவினதை அடையாளமாகக் காட்டுகின்றார்கள். ஒரு குயில் கூவினது அடையாளமாகாது என்று உள்ளே இருப்பவள் கூற குயினங்கள் திரளாகக் கூவுகின்றன என்கின்றார்கள் ஆயச்சிறுமிகள். உறக்கத்தால் படுக்கையில் பலகால் வாய்வெருவு கின்றதால், விடிந்ததற்கு அது அடையாளமாகமாட்டாது என்று சொல்ல, இவர்கள் "படுக்கை வாய்ப்பாலே கிடந்து உறங்குகின்றவையும் உணரும்போது விடிந்தாக வேண்டாவோ? உன் பேச்சும் நோக்குமே தாரகமாகக் கொண்டுள்ள இசை உன்னைக் காணாமல் கதறி நாக்கு ஒட்டக் காண்புகுகின்றன. மாதவிப் பந்தல்மேல் ஒரு திரள் வா நின்றது. கீழே ஒரு திரள் கூவா நின்றது.

இன்று ஒன்றையும் கேளாமல் நீ உறங்குகின்றாய்" என்கின்றார்கள். இதற்கு அவள், "கண்படை கொள்ளும் இளங்குயிலே" என்று உறங்குகின்ற குயில்களை எழுப்பிக் வலச் சொல்லுகின்றீர்கள். அவற்றைத் துரத்திவிடுங்கள். ஊரிலிருக்கின்றவற்றைக் கூலியாகக் கொண்டு கூப்பிடுமாறு செய்கின்றீர்கள். உண்மையில் விடியவில்லை" என்று கூறி வாளாகிடக்கின்றாள்.

**பந்தார் விரலி** - பந்தும் கையும் பொருந்தியிருக்கும்படி. கிருட்டிணனுடன் பந்தாடி அவனைத் தோற்கடித்து, அவனை ஒரு கையிலும் பந்தை ஒரு கையிலும் அணைத்துக் கொண்டு உறங்கும் நப்பின்னை போகாகரணமான நாராயணன் ஒரு கையில், லீலோப கரணமான பந்து மற்றொரு கையில். பந்து நாரவர்க்கத்துள் ஒரு பொருள். நாராயணன் விபூதிமான். பந்து லீலாவிபூதியில் ஒரு பகுதி.

இதனை அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், "இவளுக்குப் போகோப கரணம் கிருட்டிணன். பந்து லீலோபகரம். அவன் செண்டை ஒரு கையாலும் இவளை ஒரு கையாலும் அணைத்துக்கொண்டு கிடக்குமாப்போலே, அவனுக்கு லீலாயஷ்டி போலே இவளுக்குப் பந்து. ஒரு கையிலே விபூதி, விபூதிமான் ஒரு கையிலே. நாரம் ஒரு கையிலே, அயனம் ஒரு கையிலே, சேஷி ஒரு கையிலே, சேஷம் ஒரு கையிலே, போக்கியம் ஒரு கையிலே, போகஸ்தானம் ஒரு கையிலே" என்று கிருட்டிணன். சேர்த்தியை அநுபவித்துத் தன்னையே மறப்பர். **(ஆறாயிரப்படி)**

பெரியவாச்சான் பிள்ளையும், "அவனை (கிருட்டிணனை) ஒரு கையாலும் பந்தை ஒரு கையாலும் அணைத்துக்கொண்டு கிடக்கை. அவன் இவளுக்கு போகோகரணம், பந்து லீலாபகரணம். ஒரு கையில் நாரமாய்த்து. ஒரு கையில் நாராயணனாய்த்து. ஒரு கையிலே விபூதியாய்த்து, ஒரு கையிலே விபூதிமானாய்த்து" என்று அநுபவிப்பார் **(மூவாயிரப்படி)**. உபய சம்பந்தத்தால் வந்த புருஷகாரம் தோற்றுகிறது.

பின்னைப் பிராட்டியை விளித்து ஆயச் சிறுமிகள் பேசுவது **(பந்தார் விரலி)**: "நாங்களும் அசேதமனமானோமாகில் பந்தோபாதி எங்களையும் பேணி உன் கைக்குள்ளே கிடக்கலாய்த்தே. நீயும் அவனும் கூட இருந்த சேர்த்தியிலே நாங்கள் கிட்டி எங்கள் கையிலிருக்க வேண்டாவோ பந்து. எங்கள் கையிலும் பண்ணி பந்து பிடிக்க வேண்டாவோ உனக்கு. உனக்கு, சேர்த்தியாலே பந்து கையிலே பொருந்திற்று. எங்களுக்குத் தழும்பு கூட மறைந்து போயிற்று". "அவனுக்கு வில் பிடித்த தழும்பு போலே, இவளுக்குப் பந்து பிடித்த தழும்பு" என்கின்றார்கள்.

செருக்காலே உங்களை நினைத்திலேன் என்று சொல்லா நிற்கின்றீர்கள். வந்த காரியம் என்ன? என்று வினவ, '**நின்மைத்துனன் பேர்பாட**' என்கின்றார்கள். **மைத்துனன்** - அத்தை மகன், மாமன் மகளை மணக்கும் முறை பற்றி, நப்பின்னைக்குக் கிருட்டிணனே மைத்துனனாகின்றான். "நீயும் அவனும் மைத்தனமை கொண்டாடி ஒருவர்க்கொருவர் உத்தமம் சொல்லி ஒத்து நில்லாமல், நீ ஒன்றுக்கு ஒன்பது சொல்லும்போது நாங்கள் அவனுடைய தோல்வியும் உன்னுடைய வெற்றியும் தோற்ற, அவனுக்கு வேண்டுவன எல்லாம் சொல்லி உபகரிக்க வந்தோம். இருவரும் ஒன்றாய்ச் செல்லும்போதும் பிரிந்து செல்லும்போதும் தாய் பக்கமன்றோ மக்கள் நிற்பது" என்கின்றார்கள். பெருமாள் தோல்வியைப் பிராட்டி இளைய பெருமாளுக்கு அருளிச் செய்தபோது அவர் பிராட்டி பக்கல் நின்றாற் போலே, 'உன் மைத்துனன்' என்று துவயத்தில் பிரதம பதத்தின்படியே சொல்லுகின்றார்கள். **பேர்பாடி** : நாரண நம்பி நாமம் பலவுடையவனாகையாலே '**பேர்பாடி**' என்கின்றார்கள். இவ்வாறு இவர்கள் சொல்லவே 'திறந்து கொண்டு புகுவீர்களாக. நீங்கள் விடுவீர்கள் என்று யந்திரத்தாலே திறக்கமாறு பண்ணி வைத்திருக்கின்றேன்' என்று பின்னைப் பிராட்டி சொல்ல,

**செந்தாமரைக் கையால் சீரார் வளையொலிப்ப**
**வந்து திறவாய் மகிழ்ந்து**

என்று வேண்டுகின்றார்கள் ஆயச் சிறுமிகள். "எங்களால் பெற இருக்குமவர்கள் அல்லோம் நாங்கள். உன் கையை நோக்கியிருப்பவர்களன்றோ?" என்கின்றார்கள். **செந்தாமரைக் கையால்** : நீங்கள் பண்ணின பாபத்துக்கு அஞ்ச வேண்டா என்கின்றது பெருமாளுடைய 'மாசுச : அஞ்சேல்' என்ற திருக்கை. ஈசுவர சுவாதந்திரியத்திற்கு அஞ்ச வேண்டா என்கின்றது பெரிய பிராட்டியாரின் 'வைத்தஞ்சல்' என்ற கை. அவனும் ஆசைப்படுகை யன்றோ? 'தன் கைமேல் என் கை வைத்து' என்று "அணிமிக தாமரை கைக்குமேலே இருக்கும் கை" என்கின்றார்கள். பந்து பிடித்துச் சிவந்திருக்கின்ற கை என்றும் கொள்ளத் தட்டில்லை.

**சீரார் வளையொலிப்ப** : இவர்கள் எதிர்பார்த்திருந்த வளையோசை செவிப்பட வொண்ணாமல் வளையை ஏற அடுக்கக் கொண்டு திறக்க முயன்றாள். மேகம் முழங்கிப் பொழிகின்றது போலே, வளையைக் கொண்டாடுகின்றார்கள் '**வளையொலிப்ப**' என்று. வளைக்குச் சீர்மையாவது - கையினின்றும் கழலாதிருக்கை. அதாவது, பிரிவுத் துன்பத்தை அநுபவியாத வளை என்றவாறாம். 'சூடகமே தோள்வளையே' (திருப்.27) என்று இவர்கள் பிரார்த்தித்த

படியே அவர்கள் (கண்ணனும் பின்னைப் பிராட்டியும்) கூட்டிப் பூட்டினதாலன்றோ இவர்கள் கையில் வளையுள்ளது. **ஒலிப்ப :** கிருட்டிணனும் ஓசையிலே உணர்ந்து, நாங்களும் இந்த ஓசை கேட்டு வாழும்படியாக வேண்டும் என்கின்றார்கள்.

நப்பின்னை கொங்கைமேல் வைத்துக் கிடந்த மலர் மார்பனாதலால் (திருப். 19) அவன் சேர்க்கைக்கு விரோதமாக வொண்ணாது என்று படுத்துக் கிடந்த இடத்திலிருந்து கொண்டே கதவைத் திறக்க முற்படுகின்றாள் பின்னைப் பிராட்டி. உடனே சிறுமிகள் "எங்களுக்காக நாலடி வந்தாய் என்று பெருமைப்படும்படி **வந்து திறவாய்"** என்கின்றார்கள். "அவனும் நாங்களும் உன் நடையழகு கண்டு வாழும்படி வந்தருள வேண்டும்" என்று வேண்டுகின்றார்கள். **மகிழ்ந்து :** "பெண்கள் ஆர்த்தர்களாய் வந்தார்கள் என்று சாத்திரார்த்தம் கொண்டாட வொண்ணாது. மனம் உகந்து வந்து திறக்க வேண்டும். தர்மத்திற்காகத் திறக்காமல் பேறு உன்னதாக வேண்டும் என்ற நோக்கத்துடன் வந்தருள வேண்டும். அவன் பக்கலில் இருப்பதைக் காட்டிலும் அவனுடையார் பக்கலில் நீ இருக்கும் இருப்பு உன்னுடைய முகவிலாசங்களில் தோற்றும் படியாக வரவேண்டும்" என்கின்றார்கள்.

இன்னும் 'கந்தங் கமழும் குழலி' என்றதனால் **மூக்கும்,** 'பேர்பாட' என்றதலால் **நாக்கும்** 'வளையொலிப்ப' என்தறனால் **செவியும்,** 'வந்து திறவாய்' என்றதனால் **கண்ணும்,** 'செந்தாமரைக் கையால்' என்தறனால் **நொப்புலனும்** - இங்ஙனம் எல்லாப் புலன்கட்கும் இரையிட வேண்டும். இப்படி எல்லாப் புலன்களுக்கும் விடாய் தீர்ந்தது மானசமான உகப்பு உன்னதாக அமைய வேண்டும்" என்று பிரார்த்திக்கின்றார்கள்.

இப்பாசுரம் எம்பெருமானார் சிறப்பாக உகந்தருளினதாகும். எம்பெருமானார் மாதுகரத்திற்காக (பிச்சைக்காக) திருப்பாவை அநுசந்தானத்துடனே பெரிய நம்பியின் திருமாளிகையை எழுந்தருள, இவர் திருப்பாவை அநுசந்திப்பதைக் கேட்டுப் பெரிய நம்பியின் திருமகளாரான அத்துழாய் கதவைத் திருக்காப்பு நீக்கின அளவிலே இப்பாசுரம் வரநேர, அத்துழாயைப் பிராட்டியாகவே அநுசந்தித்து ஈடுபட்டதாக வரலாறு. ஆகவே இப்பாசுரம் அவர் உகந்தருளினதற்கு இலக்காயிற்று.

# 19. நப்பின்னைப் பிராட்டியையும் கிருட்டிணனையும் மாறி மாறி எழுப்புதல்

## பத்தொன்பதாம் பாசுர விளக்கம்

### "குத்து விளக்கெரிய"

**குத்து விளக்கெரியக் கோட்டுக்கால் கட்டில்மேல்**
**மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறி**
**கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்**
**வைத்துக் கிடந்த மலர்மார்பா வாய்திறவாய்**
**மைத்தடங் கண்ணினாய் நீயுன் மணாளனை**
**எத்தனை போதும் துயிலெழ வொட்டாய் காண்**
**எத்தனை யேலும் பிரிவாற்ற கில்லாயால்**
**தத்துவ மன்று, தகவேலோர் எம்பாவாய்.**

(சொ.பொ) : குத்துவிளக்கு - நிலைவிளக்கு; எரிய - (நாற்புறமும்) எரிந்து கொண்டிருக்க; கோட்டுக்கால் கட்டில் - யானைத் தந்தத்தாலான கால்களையுடைய கட்டில்; மெத்தென்ற - மென்மைத் தன்மையுடைய; பஞ்ச சயனம் - அழகு முதலிய ஐந்து குணங்களாலான திருப்பள்ளி; மேல்ஏறி - ஏறியிருந்து; கொத்து அலர் பூங்குழல் - கொத்து கொத்தாக மலர்ந்துள்ள பூக்களை அணிந்த மயிர்முடியையுடைய; நப்பின்னை - நப்பின்னையினது; கொங்கை - முலையை; மேல் - தன்மீது; வைத்த - வைத்துக்கொண்டு; கிடந்த - திருக்கண் வளர்ந்தருள்கின்றவனாக; மலர்மார்பா - அகன்ற திருமார்பையுடையவனே; வாய்திறவாய் - வாய்திறந்து ஒரு சொல்லை அருள்வாய்; மை - மை தீட்டிய; தடம் - அகன்றிருக்கின்ற; கண்ணினாய் - கண்களையுடையவளே; நீ - நீ; உன் மணாளனை - உன்னுடைய கணவனை; எத்தனை போதும் - எவ்வளவு நாழிகையானாலும்; துயில் எழ - உறக்கத்தினின்றும் உணர்ந்து எழுந்திருக்க; ஒட்டாய் காண் - சம்மதியாதிருக்கின்றாய்; எத்தனை ஏலும் - கணநேரமாகினாலும்; பிரிவு - (கண்ணனைப்) பிரிந்திருத்தலை; ஆற்றகில்லாய் - பொறுக்கும் வல்லமையற்றவளாய் உள்ளாய்; (நீ இப்படியிருப்பது); தத்துவம் - உண்மையாக; தகவு அன்று - (உனக்குத்) தகுதியன்று; எம்பாவாய்.

**(க-து)** : நப்பின்னைப் பிராட்டி கதவைத் திறக்க முற்பட, 'நம்முடையார்க்கு இவள் திறக்க ஒண்ணாது' என்று இவளைத்

திறக்க வொட்டாமல் பின்னைப் பிராட்டியைக் கொண்டு கிடக்கின்றான் கண்ணன். ஆதலால் அவனை மீண்டும் எழுப்ப, அங்கு மறுமாற்றம் காணாமையினால், மீளவும் அவனை உணர்த்துகைக்காக அவளை எழுப்புகின்றார்கள் ஆய மங்கையர். இதனால் அடியவர்கட்கு மாறிமாறி அருள் செய்வதற்கு "என்னடியார் அது செய்யார்" (பெரியாழ். திரு. 4.9.2) என்று கண்ணனும், "குற்றம் செய்யாதார் யாவர்?" என்று பின்னைப் பிராட்டியும் ஆக இருவரும் உளர் என்பது. 'நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளும் கொண்டு கோயில் சீய்த்து' (திருவாய் 9.2.1) என்றாரல்லவா நம்மாழ்வார்? இதனால் அடியார்கட்கு தஞ்சமாயிருப்பதொரு மிதுனம் உண்டென்று அறியக் கிடக்கின்றது. இப்படியிருக்கும் மிதுனத்தைத் தனித்தனியே பற்றுகின்றவர்கள் இராவண - சூர்ப்பணகையோ டொப்பார்கள்: பெருமாளைப் பற்றி, சிறிய திருவடி பிராட்டி திருவடிகளிலே செல்ல, அவனைக் கடாட்சித்து, இளைய பெருமாள் அறியாத காகாசுரன் வரலாற்றை அருளிச் செய்தாள். பிராட்டியைப் பற்றி வந்த விபீஷணாழ்வானை 'வீடணற்கு வேறாக நல்லானை' என்னும்படி சிறப்பான நட்பைப் பண்ணியருளினார் பெருமாள்.

**விளக்கம் : குத்துவிளக்கெரிய** : குத்து விளக்குகள் நாற்புறமும் எரிந்து கொண்டுள்ளன. வெளியில் இருக்கும் ஆயச் சிறுமிகள் "அர்த்திகள் வாசலில் நிற்க ஓர் அநுபவம் உண்டோ?" என்கின்றார்கள். "எங்களைப் போல ஊரார் இசைவும் வேண்டாமல் 'கீழ்வானம் வெள்ளென்றது' என்று விடிகின்றது என்கின்ற பயமும் இல்லாமல் 'நல்லிருட்கண் என்னை உய்த்திடுமின்' என்று இருட்டையும் தேட வேண்டாமல் பகலை இரவாக்கவும் வேண்டாமல் விளக்கொளியில் கிருட்டிணன் முகத்தைப் பார்த்துக்கொண்டு படுக்கையிலே கிடக்கப் பெறுவதே இவளொருத்தி. இஃதென்ன ஐசுவர்யம்" என்கின்றார்கள். "இவள் அவனுக்கு பிரகாசமான ஒரு விளக்காக இருக்கும்போது நிலை விளக்கு ஒன்று வேண்டுமோ?" என்ற தொனிப் பொருளும் **'குத்து விளக்கு'** என்ற தொடரால் பெறப்படுகின்றது. மேலும், "நீயும் அவனுமாய்க் கண்வளரும்போது வேண்டும் இடங்களிலே எடுத்து வைத்து அடிமை செய்கைக்கு நாங்களும் வேண்டாவோ?" என்கின்றார்கள். **'எரிய'** என்பதால் "புறம்பே ஒரு விளக்கு புகரழிந்து கிடக்க, ஒரு நிலை விளக்கு உள்ளே பிரகாசியா நின்றது. தன்னையும் காட்டாமல் தன்னைக் கொண்டு காணக் கடவதாகின்ற அவனையும் காட்டாமல் இருப்பதே இவள்" என்ற கருத்துப் பெறப்படுகின்றது. அவனுக்கு விளக்காக இருப்பவள் இவள்தானே. "திகழ்கின்ற திருமார்பில் திருமங்கை தன்னோடும்" (திருவாய் 10.6.9) என்பது ஆழ்வார் வாக்கு அல்லவா?

**கோட்டுக்கால் கட்டில்மேல் :** "குவலயா பீடத்தின் கொம்பைப் பறித்துக்கொண்டு வந்து செய்த கட்டிலல்லவா? வீரபத்தினி யாகையாலே இவளுக்கு இதிலல்லது மற்றையவற்றில் கண்ணு றங்காது. எங்களைப் போலே பிருந்தாவனமும் மணற்குன்றும் தேடிப் போக வேண்டாமல் உள்ளகத்துக் குள்ள கூச்சமின்றிக் கிடக்கப் பெறுவதே. இதென்ன பாக்கிய பலந்தான்" என்கின்றார்கள். **'கட்டில்'** பெருவிலை கொண்டு பொன்னாலும் இரத்தினத்தாலும் சமைக்கப் பெற்ற கட்டிலானாலும் இடையராகையாலே 'கட்டில்' என்பது சாதில் பேச்சு.

**மெத்தென்ற பஞ்ச சயனம் :** மெத்தென்ற பஞ்சாலே செய்த படுக்கை. பஞ்சவிதமான சயனம் என்றலுமாம். அதாவது அழகு, வெண்மை, மென்மை, குளிர்த்தி, நாற்றம் என்ற ஐவகையான தன்மையுடைய சயனம் என்றவாறு. இந்தச் சயனத்தில் மென்மைக் குணம் விஞ்சியிருத்தலால் **'மெத்தென்ற'** அடைமொழியால் தனியே எடுத்துக் கூறியதாகக் கொள்ளல் வேண்டும். அன்றி தளிர், மலர், பஞ்சு, மெல்லிய கம்பளம், பட்டு என்னும் இவ்வைந்து பொருள்களாலும் இயன்ற சயனம் எனினும் பொருந்தும்.

**மேலேறி :** 'படுக்கையிலேறிப் பிராட்டியோடு நீ இருப்பது, எங்களையும் படுக்கையிலேறுமாறு இடங்கொடுத்தாலன்றோ பயன் பெறும்' என்ற கருத்து **'சயனத்தின் மேலேறி'** என்ற தொடரால் பெறப்படுகின்றது. முக்தனாகப் போகின்றவன் ஆதிசேடனாகிய பர்யங்கத்தை (படுக்கையை) மிதித்துக் கொண்டு எம்பெருமானை அநுபவிப்பான் என்று உபநிடதங்கள் கூறுவது ஈண்டு கருதத்தக்கது. 'வெள்ளை வெள்ளத்தின் மேலொரு பாம்பை மெத்தையாக விரித்து' (பெரியாழ். திரு. 5.1.7) உறங்குகின்றவனன்றோ இவன்? இப்படிப்பட்ட படுக்கையிலே துகைக்கு நிசாதம் சொல்லுகின்றார்கள்.

**கொத்தலர் பூங்குழல் நப்பின்னை :** திருக்குழலில் ஸ்பர்சத்தாலே கொத்துக் கொத்தாக அலரா நின்றுள்ள பூவையுடைத்தான நப்பின்னை. **பூங்குழல் நப்பின்னை :** விலட்சணமாய் நிரதிசயமான கூந்தலையுடையவள். கேசவனையும் பிச்சேற்றவல்ல கழலையுடையவள். பூவை காலம் அலர்த்துமாப்போல, இவள் குழலிலேயிருந்து செவ்வி மாறாமல் அலருகின்றது. கொம்பினின்றும் போந்து குழலிலல்லவா அலருகின்றது? ஓர் ஊடற் போரில் (பிரணய கலகத்திலே) எடுப்பும் சாய்ப்புமாக மாபாரதம் நடவாநின்றால் பூ அலராதொழியுமா? இவள் வாசம் செய் பூங்குழலாளன்றோ?

**கொங்கைமேல் வைத்துக் கிடந்த மலர் மார்பா :** நப்பினைப் பிராட்டியினடைய திருமுலைத் தடத்தைத் தன் மேலே வைத்துக்

கிடந்த என்று பொருள் கொள்ளலாம். அல்லது கொங்கைமேல் தன்னை வைத்துக் கிடந்த என்றும் பொருள் கொள்ளலாம். கண்ணன் இந்நிலையில் உறங்கிக் கொண்டுள்ளான் என்பதைத் தெரிவித்தபடி. மலையை அண்டை கொண்டு சீவிப்பாரைப் போலே கிடக்கின்றான். கதவைத் திறக்க எண்ணினவன் நஞ்சுண்டாரைப் போலே மயங்கிக் கிடக்கின்றான் என்றபடி. **மலர் மார்பா :** அவன் அண்டை கொண்ட அரணும் இவள் ஜீவனமும் என்றவாறு. முலையைப் பற்றி அவன் கிடப்பான். மார்பைப் பற்றி இவள் கிடக்கும். இவள் முலைப் பரப்பெல்லாம் ஒரு முலைக்குப் போதாத வண்ணம் அகன்ற மார்பையுடையவனே. பெரியவரை போன்ற மார்பல்லவா அது. 'முற்றாரா வனமுலையாள் பாவைமாயன் மொய்யகலத் துள்ளிருப்பாள்' (திருநெடுந். 19) என்பது கலியன் வாக்கு அல்லவா? இன்னும் இத்தொடரால், "திருமுலைத் தடங்கள் உறுத்தும்படி அணைத்த ஸ்பர்ஸகத்தாலே புலருமாப் போலே விரிந்த மார்பையுடையவனே" என்றாலும் பொருந்தும். யசோதைப் பிராட்டியின் கட்டுக்கு அலரும் மார்பு இவளுடைய முலைக்கட்டுக்கு அலரச் சொல்ல வேண்டுமோ?

**கருங்கண் ஆய்ச்சி**
**முலையிலங்கும் ஒளிமணிப்பூண் வடமும் தேய்ப்ப**
**மூவாத வரைநெடுந்தோள் மூர்த்தி கண்டீர்.** (பெரி.திரு. 4.4.5)

என்பது கலியன் வாக்கன்றோ? இவளோடு அணைந்த பின்பு இந்த விகாசம் பிறவாதாகில் இவர்களுக்குத்தான் என் செய்ய. அவனுக்கு விகாசத்தைப் பண்ணி ஸ்வரூபம் பெற இருக்கின்றவர் களன்றோ?" என்பர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்? (**ஆறாயிரப்படி**). இரப்பவர் வாசலிலே கிடக்க, உள்ளிருந்து நீ அநுபவிப்பது தகுதியன்று என்ற கருத்தும் தோன்றும்.

**வாய் திறவாய் :** அவன் ஊமத்தங்காய் தின்று கிடக்க இவர்கள்தாம் யாரை எழுப்புகிறது? இன்னும் இதனால், "கிடந்த இடத்தே கிடந்து உன் கம்பீரமான மிடற்றோசை கேட்கும்படி ஒரு வார்த்தை சொல்லாகாதோ? உன்னாலல்லது செல்லாதிருக்கின்ற எங்களுக்கு ஒரு வார்த்தை அரிதாம்படி பேசாதிருப்பது ஏன், திறக்கின்றவர்களையும் திறக்கவொட்டாமல் நீயும் முலைக்கீழ் அமுக்குண்டு எழுந்து வர இயலாவிட்டாலும், இருந்தவிடத்தில் இருந்துகொண்டே '**மாசுச:** வருந்த வேண்டா. உமது காரியத்தை முடிப்போம்' என்றாவது சொல்லலாமே. அதுவும் செய்யவில்லையே" என்ற கருத்து தோன்றும். **மலர்மார்பா வாய்திறவாய் :** மார்பை அவளுக்குக் கொடுத்தால் பேச்சை எங்களுக்குத் தரலாகாதோ?

**கொங்கமேல் ... மார்பா :** மார்பது முலையானால் வழியது முத்தோ? வாய்திறவாய் என்றது கேட்டு 'அதிகமாக நொந்து போனார்களே' என்று அவன் மறுமாற்றம் சொல்லப் புக, ஆர்த்தர்கள் விஷயத்தில் நம்மிலும் முற்பாடானாக ஒண்ணாது கண்ணாலே 'வாய் வாய்' என்று கழுத்தைக் கட்டி அமுக்கிக் கொண்டு கிடக்கின்றாள்.

**மைத்தடங் கண்ணினாய் :** இவ்வாறு விளிக்கின்றார்கள். உன்னுடைய கண்ணின் அழகும் பெருமையும் எங்கள் பேற்றுக்கு உடல் என்றிருந்தோம். அஃது இழவுக்கு உடலாவதோ? 'மையிட்டு எழுதோம்' (திருப். 2) என்றிருக்கின்ற எங்களையும் மை இடப் பண்ணினாலன்றோ நீ கண்ணுக்கு மை இடுவது? இரண்டு கண்ணுக்கும் ஒரு மைதானே இடப்பெற வேண்டும்? "அவளை விட்டு ஒரு கணநேரங்கூட உயிர் வாழேன்" என்றல்லவோ இராமனைச் சொல்ல வைத்தது? **தடங்கண் :** அழகாலும் பரப்பாலும் கண்ணிலே அகப்பட்டவன் அக்கடலைக் கரைகண்டாலல்லவா நம்மைப் பார்ப்பது?

**நீ உன் மணாளனை :** அவன் நினைவே நினைவாயிருக் கின்றாய் நீ. உன் நினைவே நினைவாக இருக்கின்றான் அவன். "அவனைப் பெறுவதற்கு அடியான நீ, உன் புருவம் நெறித்தவிடத்திலே கடநீர் வார்க்கும்படி பவ்வியனாக இருக்கின்றவனை விலக்கக் கடவையோ? உன்னுடைய யோக்கியதையிலே, அவன் துவக் குண்டிருந்து உன் விருப்பப்படி நடப்பவனாய் நாங்கள் பெறுகைக்கு உடல் என்றிருந்தோம். இனி, உனக்கே சேஷம் என்றிருக்கின்றோம். 'கோபியரின் வல்லபன்', 'உலக இரட்சகன்' என்று விருதுபிக்கின்ற நாட்டுப் பொதுவைத் தனித்துப் புசிக்கக் கடவையோ? 'கோபியரின் வல்லபன்' என்று விருது பிடிக்கின்ற ஊர்ப் பொதுவை நீ மட்டிலும் உண்டு முடிக்கலாமோ?" என்கின்றார்கள். **உன் மணாளனை :** இவளை இட்டு அல்லவா அவனை இவர்கள் அறிவது? 'என்திரு மகள் சேர்மார்பனே', 'கோலமலர்ப் பாவைக்கு அன்பனே' என்ற ஆழ்வாரின் திருவாக்குப்படி அவனும் அவ்வழியிலல்லவா உகப்பது?" என்கின்றார்கள்.

**எத்தனை போதும் துயிலெழ வொட்டாய்காண் :** "எவ்வளவு நாழிகையானாலும் அவனை உறக்கத்தினின்றும் எழுந்திருக்கச் சம்மதியாதிருக்கின்றாய். புணர்ச்சிக்காகப் பிரியவும் பயப்படுகின்றாய். சம்போகவர்த்தமாகக் கட்டின கை நெகிழ்ந்தாலும் உடம்பு வெளுப்பாகி விடுகின்றது. கலவிக்கு உடலான வியாபாரத்தையும் பிரிவுக்கு உடல் என்று பிழைக்கமாட்டாய். புணர்ச்சிக்காகப்

பிரிந்தாலும் தடுப்பது வளைப்பதாகவுள்ளது. இவர்கள் புகுந்தாலும் போகத்திற்கு வர்த்தகர் என்று அறியாதிருக்கின்றாய்" என்கின்றார்கள்.

**எத்தனை ஏலும் பிரிவாற்றகில்லாயால்** : ஒரு கண நேரம் என்றாலும் கிருட்டிணனைப் பிரிந்திருத்தலைப் பொறுக்கும் வல்லமையற்றிருக்கின்றாய். அஃது உன் குறையோ? அவனைக் கண நேரமும் பிரியமாட்டாத உன்னுடைய பலஹீனத்தின் குறையன்றோ? 'அகலகில்லேன் இறையும்' (திருவாய் 6.10.10) என்று கண நேரப் பிரிவும் பொறுக்கமாட்டாமையாலே அவனுடன் நித்தியமாகச் சேர்ந்திருத்தல் எங்களுடைய இலாபத்திற்கு உடலாதல் ஒழிய விபரீதமாவதன்று. ஒருக்கணம் பிரியில் புறம்பு நிற்கின்ற நாங்கள் பட்டது படாது நின்றாய். நாங்கள் அகலநின்று படுகின்றதெல்லாம் கூடிநின்று படாநின்றாய். நெகிழ்ந்து அணைக்கில் பத்து மாதம் பிரிந்தவள் (சீதாப் பிராட்டி) படா நின்றாய். **ஆற்றகில்லாயால்** : உனக்காகவன்றோ அவன் புறப்படமாட்டா தொழிகின்றது? பிரியில் நீ பிழையாய். உன்னை இழக்கில் ஒன்றாக முடியும். உன்னை இழவாமைக்கு எங்களையும் விட்டு உன்னோடு பணிபோகும் படியாக்குவதே.

**தத்துவம் அன்று** : "இஃது உண்மை சொல்லுகின்றோம். எங்களாற்றாமையாலே கண்ணாஞ்சுழலையிட்டுச் சொல்லுகின்றோ மல்லோம். அன்றியும் உன் சொருபத்திற்கும் போராது. உன் புருஷகாரத்துக்கும் போராது. **தகவு அன்று** : உன்னுடைய சுபாவத்துக்கும் போராது, உன் கிருபைக்கும் போராது" என்கின்றார்கள்.

இப்பாசுரத்தினால் "என் அடியார் அது செய்யார்" என்று எம்பெருமான் பிரிவன். "பிழை செய்யாதார் யாவர்?" என்று பிராட்டி பரிவாள். இவ்வாறு ஒருவரிலும் ஒருவர் முந்திப்பரிகின்ற இருவருடைய சொருபம் ஒருவாறு நன்கு வெளியாகும். நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்பார்பன் - எம்பெருமான் பிராட்டியின் பக்திக்கு வசப்பட்டு அவள் சொல்லியபடி நடக்குமாறு பரதந்திரன் ஆவான் என்றவாறாம். பஞ்சசயனம் - அர்த்தபஞ்சகம்.

## 20. தங்களை நீராட்ட வேண்டும் என்று கிருட்டிணனையும் நப்பின்னைப் பிராட்டியையும் கூட எழுப்புவது

### இருபதாம் பாசுர விளக்கம்

"முப்பது மூவர்"

**முப்பத்து மூவர் அமரர்க்கு முன்சென்று**
**கப்பம் தவிர்க்கும் கலியே துயிலெழாய்**
**செப்ப முடையாய் திறலுடையாய் செற்றார்க்கு**
**வெப்பம் கொடுக்கும் விமலா துயிலெழாய்**
**செப்பன்ன மென்முலைச் செவ்வாய்ச் சிறுமருங்குல்**
**நப்பின்னை நங்காய் திருவே துயிலெழாய்**
**உக்கமும் தட்டொலியும் தந்துன் மணாளனை**
**இப்போதே எம்மைநீ ராட்டேலோர் எம்பாவாய்.**

(சொ.பொ) : முப்பத்து மூவர் - முப்பத்து மூன்று பேரை முக்கியமானவராகவுடைய (முப்பத்து முக்கோடி); அமரர் தேவர்கட்கு; முன் - (ஆபத்து வருவதற்கு) முன்னதாக; சென்று - போய்; கப்பம் (கம்பம்) - அவர்கட்கு வரக்கூடிய நடுக்கத்தை; தவிர்க்கும் - (வரவொட்டாமல்) தடுக்கின்ற; கலியே - மிடுக்கனே; துயில் எழாய் - உறக்கம் நீங்கி விழித்து எழுவாயாக; செப்பம் உடையாய் - பக்தர்களைக் காக்கவல்ல நேர்மையுடையவனே; திறல் உடையாய் - விரோதிகளை அழிக்கும் வல்லமையுடையவனே; செற்றார்க்கு - பகைத்தவர்கட்கு; வெப்பம் கொடுக்கும் - துன்பத்தைத் தரவல்ல; விமலா - குற்றமற்றவனே; துயில் எழாய் - துயிலை ஒழித்து எழுந்திருப்பாயாக; செப்பு அன்ன - பொற்கலசத்தையொத்த; மென் முலையாய் - மென்மையான கொங்கைகளையுடையவளே; செவ்வாய் - செந்நிறமானவாயையும் (திருப்பவழத்தையும்); சிறு மருங்குல் - சிறிய இடையையும் (உடைய); நப்பின்னை - நப்பின்னை என்னும் திருநாமமுடைய; நங்காய் - பெண் தன்மை நிறைந்துள்ளவளே; திருவே - இலக்குமி போன்றவளே; துயில் எழாய் - உறக்கத்தைத் தவிர்த்து எழுந்திருப்பாயாக; (எங்கள் நோன்புக்கு வேண்டிய) உக்கமும் - ஆலவட்டத்தையும் (விசிறியையும்); தட்டொளியும் - கண்ணாடியையும்; உன் மணாளனை(யும்) - உன்னுடைய கணவனையும்; தந்து - (எங்கட்கு) அளித்து;

இப்பொழுதே - உடனே; எம்மை - (விரகத்தால் மெலிந்த உடலையுடைய) எங்களை; நீராட்டு - நீராடச் செய்வாயாக; சேர்த்து வைப்பாயாக. எம்பாவாய்.

**(க-து) :** ஆய மங்கையர் நப்பின்னைப் பிராட்டியைத் தமது வருத்தம் தோன்ற 'தத்துவம் அன்ற தகவு' என்று கூறியதனால் அவள் பேசாமல் கிடக்க, கிருட்டிணனையே எழுப்பிப் பார்ப்போம் என்று அவனது புகழைப் பரப்பச் சொல்லித் துயில் எழுப்ப, அவனும் பேசாமல் கிடந்ததனால், 'நப்பின்னையை வெறுத்துக் கூறியதனால் இந்தக் கிருட்டிணன் ஒருகால் வெறுப்புக்கொண்டு வாளா இருத்தல் கூடும். ஆகவே, அப்பிராட்டியையே புகழ்ந்து சினத்தைத் தணிவித்து அவள் மூலமாகவே நம்முடைய விருப்பம் நிறைவேற்றப் பெறுவோம்' என்று அப்பிராட்டியையே துயிலுணர்த்துகின்றனர், இப்பாசுரத்தில்.

**விளக்கம் :** ஆய மங்கயர் தமது ஆற்றாமை வருத்தம் தோன்ற, "துயில் எழவொட்டாய் காண், தத்துவம் அன்று தகவு" என்று முற்பாசுரத்தில் (19) கூறிய போதிலும் சந்தர்ப்பத்தை அறிந்து பொறுத்துக் கொண்டு திருவுள்ளம் பார்த்து இடம் வாய்க்கும்போது கணவனிடம் விண்ணப்பம் செய்யலாம் என்று பேசாது வாளா கிடக்கின்றாள் நப்பின்னைப் பிராட்டி. இவளைப் பற்றினாலும காரியம் செய்யக்கூடிய அவன் இவளையும் திறக்கவொட்டாமல் இன்பக்கடலில் திளைக்கின்றானோ என்று கருதுகின்றார்கள். எனினும் அவனையே கேட்டுப் பார்க்கலாமென்று அவனது புகழைப் பரப்பச் சொல்லி அவளை எழுப்புகின்றனர். அந்நிலையிலும் அவன் வாய் திறவாது வாளா கிடக்கின்றான். தாம் நப்பின்னையை வெறுத்துக் கூறியதனால் ஒருக்கால் கிருட்டிணன் ரோஷங்கொண்டு வாளா இருத்தல் கூடும் என்று கருதி மீண்டும் நப்பினைப் பிராட்டியையே துயிலுணர்த்துகின்றனர். இவள் மூலமாகவே தம் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம் என்று கருதுகின்றனர். அதனால் அவளுடைய தேக குணங்களையும் ஆன்ம குணங்களையும் சொல்லி ஏத்துகின்றனர். "அவனுக்கும் எங்களுக்கும் கடவையான நீயே எங்கள் விருப்பத்தைத் தலைக்கட்டித் தரவேண்டும்" என்று பின்னைப் பிராட்டியை எழுப்புகின்றனர் இப்பாசுரத்தில்.

இனி பாசுரத்தில் ஆழங்கால்பட்டு அநுபவிப்போம். **முப்பத்து மூவர் :** "நீ இரட்சிக்குமிடத்தில் எண்ணிக்கை என்ற நியதி உண்டா? ஏதாவது கிரமவரிசைதான் உண்டா? அஞ்சு இலட்சுமி குடியிலுள்ளாருமாக நோவுபட்டால் உதவலாகாதோ? ஆண்களிலும், அவர்களிலும் முக்கியமானவர்களாக இருந்தால்தான் இரட்சிக்க முடியுமா? பெண்களாக, அவர்களுள் அபலைகளாக இருந்தால்

இரட்சிக்கலாகாதோ? சுயநலத்துடன் உன்னைப் போற்றுவார்க்குத் தான் உதவுவாயா? உன்னை மட்டிலும் பற்றி வேறு எவரையும் பற்றாதார்க்கு உதவமாட்டாயா? '**எம்பெருமானே**' என்றிருப்பார்க்குத் தான் உதவுவது, '**அடியோம்**' என்றிருப்பார்க்கு உதவலாகாதோ? பயனைக் கருதுவாரைப் போலே பதர் கழித்துக் காரியம் தலைக்கட்டினதும் கவனியாமல் எதிரிடுபவர்களை இரட்சிப்பது, காரியம் செய்யாவிட்டாலும் அகதிகளாய் பயன் கருதாது இருப்பார்க்கு உதவலாகாதோ? 'நீள்நிகர் நீளெரி வைத்தருளாய்' (திருவிருத். 92) என்று உன்னை எழுப்பு அம்புக்கு இலக்காக்குவார் காரியம் செய்வது, உன் திருமேனி அழகு காண ஆசைப்பட்டார் காரியஞ் செய்யலாகாதோ?" என்ற கருத்துக்கள் இத்தொடரால் முகிழ்க்கும்.

**அமரர்** : கொன்றாலும் சாவாதார்க்கு உதவுவது, எவ்விதத்திலும் பிழையாத நாங்கள் இருக்க, உன்னையொழிய வேறொன்று தாரகம் என்று முகத்துதி கொண்டு சேவிப் பார்க்கோ உதவுவது? உன் முகமும் உன் நோக்கும் சிவனமாயிருப்பார்க்கு உதவலாகாதோ? சக்தியுள்ளவர்க்குக் காரியம் செய்வது, சக்தியற்றவர்க்குக் காரியஞ் செய்யலாகாதோ? என்ற கருத்துகள் இச்சொல்லால் முகிழ்க்கும்.

**முன்சென்று** : நோவு வருவதற்கு முன்னே சென்று இரட்சிக்கக் கடவ நீ நோவுபட்டுவந்த எங்களை இரட்சிக்கலாகாதோ? என்ற கருத்துகள் இத்தொடரால் முகிழ்க்கும். **சென்று** : நீ இரந்து சென்று உதவக் கடவ உனக்கு உன் வாசலிலே வந்து எங்களுக்கு உதவலா காதோ? நாங்கள் உன் வாசலிலே வருவது குற்றமென்றி ருக்கின்றாயோ?

**கப்பம் தவிர்க்கும்** : 'கம்பம்' என்பது 'கப்பம்' என்று வந்துள்ளது. அதாவது நடுக்கம். அசுரர்களாலும் அரக்கர்களாலும் குடியிருப்பு உட்பட இழந்து புகலிடமற்றுப்படுகின்ற நடுக்கத்தைத் தவிர்த்தல். நாட்டார் நடுக்கத்தைத் தவிர்க்கக் கடவனாகிய நீ எங்களை நடுங்கப் பண்ணாமல் காப்பாய். அவர்கள் நடுக்கத்திற்கும் எங்கள் நடுக்கத்திற்கும் வேறுபாடு காண வேண்டாவோ? அவர்கள் நடுக்கம் எதிரிகள் நிமித்தமாக. நீ உணரும்படி காணாதொழியப் புகுகிறோமோ? உன்னை அடையாத நிலை ஏற்படுமோ? என்று எங்களுக்கு நடுக்கம். கப்பம் - என்பதற்கு இறைப் பொருளாகவும் கொள்ளலாம். **கலியே** : மிடுக்கையுடையவனே. அபலைகளான எங்களுக்கு உன் மிடுக்கைத் தவிர வேறு உண்டோ? **துயிலெழாய்:** தேவர்கட்குக் குடியிருப்புப் பண்ணித் தர வேண்டா. மார்பிலே அம்பு ஏற்கவும் வேண்டா. நினைக்கும்போது நீ அருகில் இருப்பதே

எங்களுக்குக் குடியிருப்பும் சீவனமும். மேலும் இதனால் முகிழ்ப்பது: நீ உகக்குமவர்களான முப்பத்து மூவராக நினை. ஆண்களாக நினை. பயன் கருதுபவர்களாக நினை. மருந்து தின்று சாகாதவர்களாக நினை. உன்னை இரட்சியமாக நினையாமல் இரட்சகனாக நினைக்கும் பேறாக நினை. எங்களுக்கு நீ உணரும்படியும், நீ நோக்கும்படியும், நீ வார்த்தை சொல்லும்படியும் தொடக்கமானவற்றைக் காண்பதுவே எங்கட்கு வேண்டுவது" என்று ஒரு போடு போடுகிறார்கள்.

**அமரர் முப்பத்து மூவராவார்** - வசுக்கள் எண்பர், உருத்திரர் பதினொருவர், ஆதித்தியர் பன்னிருவர், அசுவினி தேவர் இருவர் என்பவர்களாவார்கள். இவர்கள் தொடக்கமாக நான்முகன் எல்லையாக நடுவுண்டான வேதர் கூட்டம் கிருட்டிணன் திருவவதரித்த போதே தொடங்கி தொட்டில்கள் தொடக்கமான பிள்ளைப் பணிகள் வரவிட்டு மந்திர மாமலர் கொண்டு சில நாள் மறைவதும் சிலநாள் வெளிப்படுவதுமாய்த் திரிந்து, ஆயர்பாடி நிறையப் புகுந்து இடைச்சியர் பின்புறமாக ஒதுங்குவதையும் இவர்கள் காரியங்களைக் கிட்டிணனே செய்து திரிவதையும் இவர்கள் கண்டவர்களாகையால் இந்த வரலாற்றைச் சொல்லுகின்றார்கள்.

இப்படித் தேவர்கட்காகக் காரியஞ் செய்து நின்றால் தனக்கு ஒரு தீங்கு வரும்படியாக இருக்குமோ, என்னில் : **செப்பம் உடையாய் :** 'தனக்கு இரட்சையுண்டாகும்படி பாதுகாப்பையுடையவனே' என்கின்றார்கள். அன்றியும் ஆச்ரிதர்களோடு (அடைந்தார்களோடு) செவ்வை அழியாமல் பரிமாறும் ஆர்ஜவகுணம் (நேர்மை) உடையவனே என்கின்றதாகவும் கொள்ளலாம். **திறலுடையாய் :** அடைந்தவர்களல்லாதார்க்கு அணுகவொண்ணாதிருக்குமவனே என்று மேலும் கூறுகிறார்கள். திறல் என்பதற்கு மிடுக்கு என்றும் பொருள் கொள்ளலாம். 'எங்கள் செவ்வைக் கேட்டை நின் செவ்வையாலே நிரப்ப இருந்தோம். நாங்கள் வரும்போது உறங்கிக் கிடந்ததால் அதனையும் நேரிடாது கெட்டொழித்தாய். ஏதோ ஒரு விரகாலே நீரை மேட்டில் ஏற்றுமாப்போலே, உன் வாத்சல்யம் எங்கள் பக்கல் மேட்டுமடையாக வேண்டாவோ? இச்செவ்வை அடைந்தார்கள் அல்லாதார்க்கும் ஒக்கமாகில் பாதகமாகும் அன்றோ? அது வாராமைக்காவே 'திறலுடையாய்' என்கின்றார்கள். 'செப்பம்' 'திறல்' என்ற இரண்டு சொற்களும் பாண்டவர்கட்கு செவ்வியனாக இருந்ததையும் துரியோதனாதியரை அழிக்கும் நிலையிலிருந் ததையும் நினைக்கச் செய்கின்றன. 'ஆயுதம் எடேன்' என்று வாக்கு கொடுத்து ஆயுதம் எடுத்ததும் பகலை இரவாக்கினமையையும் போன்றவற்றை நினைக்கச் செய்கின்றன. "அநுகூலர்களான எங்கள்

பக்கத்திலா நின் திறலைக் காட்டுவது? அஃது எங்கட்கு அணுக வொண்ணாதபடியாகுமல்லவா?" என்கின்றார்கள்.

**செற்றார்க்கு வெப்பம் கொடுக்கும் விமலா** : இதில் அத்திறலால் பலத்த அம்சம் சொல்லப்படுகின்றது. இங்கு செற்றார் என்பது ஆச்ரித விரோதிகள். தனக்கு விரோதிகள் யாரும் இல்லாதபடியால், ஆத்ரிதருடைய சத்துருக்களே தனக்கும் சத்துருக்களாகின்றார்கள். வெப்பம் கொடுத்தல் - பய சுரத்தைக் கொடுத்தல். பாண்டவர்களுடைய கலக்கமெல்லாம் அவர்களின் எதிரிகளாகிய துரியோதனாதியர் அடையும்படிச் செய்தலே இதுவாகும். "பாண்டவர் தம்முடைய பாஞ்சாலி மறுக்கமெல்லாம்" என்றும், "சந்தமல் குழலாள் அலக்கண் நூற்றுவர் தம் பெண்டிரும் எய்தி" என்ற ஆழ்வார் திருவாக்குகளை ஈண்டு நினைக்கலாம். **கொடுக்கும்** : அருட்கொடையான ஔதார்யத்தைச் சொன்னபடியாகும் இது. **விமலா** : சம்பந்தம் ஒத்திருக்க ஆச்ரிதர்க்காகக் கண்ணற்று (தயையின்றி) முடிக்கையாலே வந்த சுத்தியைச் சொல்லுகிறது. "செய்கும் தாவரும் திமை" போன்ற திருமொழித் தொடர்களை ஈண்டு அநுசந்திக்கலாம். ஆச்ரிதர் (அடைந்தார்) காரியம் செய்தான் என்பது தவிர, தன் பேறாக இருத்தலுமாம். "போழ்ந்த புனிதன்" என்ற திருமொழித் தொடரை நோக்குக. அநாச்ரதர் தொலைய வேண்டியவற்றைச் செய்து ஆச்ரிதர் உய்வதற்கு ஏதுவான தன்னைக் கொடுக்கும் சுத்தியாகும் இது. துரியோனாதியர்க்கு சேனை முதலிய பரிகாரங்களைக் கொடுத்து, பார்த்தனுக்குத் தன்னையே கொடுத்த நிலையை ஈண்டு நினைக்கலாம். **துயிலெழாய்** : பயன் கருதி வந்தவர்க்குக் காரியம் செய்ததால் வந்த புகழும், ஆச்ரிதர்களைக் காத்ததால் வந்த ஏற்றமும் அழியாமல் சடக்கென்று எழுந்திருந்து அவற்றை நிலைநிறுத்திக் கொள்ளாய்' என்று வேண்டுகின்றனர் ஆயச் சிறுமியர்.

இங்ஙனம் முதலிரண்டிகளில் 'வல்லமையுடைய ஆண்களாய்ச் சமயத்தில் வந்து சேர்ந்து தங்கள் காரியம் தீர்ந்த பின்னர் கண்ணெடுத்துப் பாராதாவரைவிட, ஆற்றலற்ற பெண்களாய் - அபலைகளாய் - எப்பொழுதும் உன்னையே நம்பியிருக்கும் எங்களைக் கைவிடலாகாது' என்ற கருத்து தோன்றுவதைக் காணலாம்.

இப்படியெல்லாம் போற்றியும் புகழ்ந்தும் பர்ராட்டியும் கிருட்டிணனை எழுப்பியும் அவன் பக்கல் மறுமாற்றம் பெறாமையாலே புருஷகார பூதையான நப்பின்னைப் பிராட்டியை எழுப்புகின்றார்கள் ஆயச் சிறுமியர். இங்கு அவன் 'அகப்படும் சுழிகள்' நுவலப் பெறுகின்றன.

**செப்பன்ன மென்முலை** : 'பரதந்தரனான இவனைக் கிடந்து நலிகின்றது என்ன நம் ஆர்த்தத் தொனிகேளாதபடி?' என்கின்றார்கள். உள்ளே பொதிந்து கிடக்கின்றவளைக் குறிப்பிடாமல், நீதி இட்டு வைக்கும் செப்புப் போலே அவன் கிடக்கும் இடம். **செப்பன்ன** : செப்புக்குள்ளே பொதிந்து வைக்கப் பெற்ற ஆபரணம் நினைத்தபோது பூணுவதற்குக் கிடையாதாப் போலே, செப்புக் போலே இருந்த சந்நிவேசத்தை உடைத்தான அவன் முலையிலே அழுந்திக் கிடக்கின்றவனை நமக்குக் கிடைக்க முடியாது போயிற்றோ? 'மாகடல் நீருள்ளான் மலரால் தனத்துள்ளான்' என்று சொல்லப்பெறுபவனன்றோ அவன்? பஞ்சகாலத்துக்கு (க்ஷாமகாலத்துக்கு) அஞ்சினார் கடற்கரையைப் பற்றிக் கிடத்தல், மலையைப் பற்றிக் கிடத்தல் செய்யக் கடவது. இவனும் கடலையும் மலையையும் விடான். "திருமாலிருஞ் சோலை மலையே திருப்பாற் கடலே" (திருவாய் 10.7.8) என்ற பாசுரப்பகுதி ஈண்டு அநுசந்திக்கத்தகும். விலட்சணமான பண்டமிட்டு வைக்கும் செப்பி அவன். அவனை அடக்கம் செப்பு முலைகள். "சுடர்வான் கலன் பெய்ததோர் செப்பினைத் திருமங்கை மணாளனை" என்ற பாசுரப் பகுதியை ஈண்டு நினைவு கூரலாம். மென்முலை - மிக மெல்லிய முலை. அவன் உணரவும் வினவுமுள்ள தாமதம் (விளம்பம்) பெறாத முலை.

**செவ்வாய்** : அம்முலையிலே அழுந்திக் கிடப்பார் நுகரும் கனியும் தேனும் "தொண்டையும் செங்கனி வாய்நுகர்ந்தான்" என்கின்றபடி காணலாம். **செவ்வாய்** : கிருட்டிணனையும் தனக்காக்கிக் கொண்ட அதரமும் வாயமிழ்தமும், அந்த முலையிலே இருந்து அநுபவிக்கும் சிவனும். கோவைவாயாள் பொருட்டு, களவேழ் முறுவல் பின்னைக்காய் - இவ்வதரமும் முறுவலும் புசிப்பதற்காகவன்றோ ஏறுகள் பொருதது? **செவ்வாய்** : செம்பவளத் திரள்வாயன் தோற்றவாய் என்று சொல்லப்படும் வாய் என்றாலும் ஒன்று. **சிறுமருங்குல்** : அம்மலையிலேயிருந்து வாய் அமிழ்தத்தைப் புசிக்கும்போது சுகமாய் இருக்கவொண்ணாதபடி "இரக்கிறதோ? முடிகிறதோ?" என்று துணுக்கென்னப் பண்ணும் பயமும் ஐயமும் கொண்டிருத்தல். அதாவது, மேலும் கீழும் கொண்டு நடுவுண்டு என்று அறுதியிடல். "ஒசிந்த நுண்ணிடை மேல் கையை வைத்து" (திருவாய் 6.7.8) என்ற திருவாய்மொழிப் பாசுரப்பகுதியை ஈண்டு நினைக்கலாம். **நப்பின்னை நங்காய்** : சொல்லிச் சொல்லாத அழகுகள் எல்லாவற்றாலும் நிறைந்திருப்பவளே (பூர்ணையானவளே) **நங்காய்** : ஆய்ப்பாடியில் வளர்ந்த நம்பியினுடைய பூர்த்திக்கும் அடியான பூர்த்தியையுடையவளே.

**திருவே** : 'ஒசிந்த ஒண்மலராள்' (திருவாய் 6.7.8) என்னுமாப்போலே புணர்ச்சியில் (சம்ச்லேதத்தாலே வந்ததுவஞ்சி). சம்போக ஸ்ரீயை உடையவளே என்பதுமாம். அழகு அவளாலே, குணங்கள் அவனாலே, மேன்மை அவளாலே, நீர்மை அவனாலே, மெய்ப்பித்தல் அனைத்தும் அவளுடையனவாகவே இருக்கும். "பின்னை நெடும் பணைத்தோள் மகிழ் பீடுடை" 'செம்பன்ன மென்முலை' (திருப் 20) என்று தொடங்கி இச்சுழிகளில் அகப்பட்டவன் தப்பி ஏறிவந்தாலல்லவா நம் காரியம் செய்வது? **திருவே** : சர்வாதிகனானவன் தனக்கும் ஏற்றம் சொல்லும் போது இந்த சப்தம் இட்டதானே சொல்வது? "திருவிக்கும் திருவாகிய" (பெரி.திரு.7.7.1) என்று சொல்லப்பெறுவது ஆழ்வார் வாக்கேயன்றோ? **திருவே** : உன்னால் அவனுக்குப் பெருமை யுண்டாகும்படியான ஏற்றமுடையவளே. **திருவே துயிலெழாய்** : அவள் பேர் படைத்தால் செய்வதும் அவளைப் போல் இருக்க வேண்டாவோ? அவளுடைய பெயரை (வாசக சப்தத்தை) உனக்குச் சொல்லும்போது தேக குணங்களும் ஆன்ம குணங்களும் உண்டானாலும், பத்து மாதம் ஆச்சிரிதர்கட்காக உறங்காதிருந்த அவள் இயல்பு உனக்கும் உண்டாக வேண்டுமன்றோ? **திருவே துயிலெழாய்** : 'பெண்ணின் வருத்தம் அறியாதவனைப் (நாச்.திரு. 13.1) போல் உறங்கலாமோ? எங்களைப் போல் (ஸஜாதீயாய்) பெண்ணாய்ப் பிறந்த நீ. நீ உணர்ந்தெழுந்து எங்களிடம் சத்தையை உண்டாக்குவாயாக.

இவ்வாறு ஆயச் சிறுமிகள் தன்னை முன்னிட்டுப் பேசிக் கொண்டிருந்ததை உள்ளே கேட்டுக் கொண்டிருந்த நப்பின்னை, 'நான் உறங்கவில்லை. உங்கட்குத் தருவமவற்றைச் சிந்தித்துக் கொண்டுதான் இருக்கின்றேன். அவனை விட்டு நீங்கி, எழுந்திருந்து உங்கட்குச் செய்ய வேண்டுவன என்ன? சொல்லுங்கள் என்ன: அவர்கள் சொல்லுகிறார்கள்; **உக்கமும் தட்டொளியும்** : ஆலவட்டமும் (விசிறியும்) கண்ணாடியும்), தட்டொலியும் பறையுமாம். நோன்புக்கு வேண்டும் உபகரணங்கட்கெல்லாம் இவை உபலட்சணம். **உன் மணாளனை** : உன் புருவம் நெறித்தவுடன் காயம் செய்யும்படி பவ்யனாக இருக்கிறவன். 'உக்கம் முதலியவற்றோடு அவனையும் தர வேண்டும்' என்கின்றார்கள். **இப்போதே** : உன் மணாளனை இப்போதே தந்து எம்மை நீர்மலிட்ட வேண்டும் என்கின்றார்கள்' என்றுமாம். **எம்மை** : விரகம் தின்ற உடம்பைக் காட்டுகிறார்கள். வசனம் சொல்ல வேண்டுமோ என்று சொல்லிக்கொண்டே. **எம்மை:** எம்மை என்ற இந்தப் பன்மையாலே 'பேய்ப் பெண்ணே' என்னுதல்,

'பிள்ளாய்' என்னுதல், 'நாயகப் பெண்பிள்ளாய்' என்னுதல். எத்தனை இழி சொற்கள் சொன்னார்களேயாகினும், பல நிலைகளிலும் எல்லாரும் ஒத்திருக்கின்ற நிலையைக் காட்டியவாறு எல்லார்க்கும் உபாயம் ஒன்றானாற்போலே உபாயமும் ஒத்திருத்தலைக் காணலாம். ஒருவனது திருவடிகளைப் பலரும் ஆச்ரயித்தால் அவரவர் பக்தி நிலைகளின் தாரதம்மியத்திற்கேற்பத் தாமதம் உண்டானாலும் பலன் எல்லார்க்கும் ஒத்தே இருப்பதைக் காணலாம்.

**உன் மணாளனை எம்மை நீராட்டு** : எங்களையும் அவனையும் சேர்த்து மழுக் கூட்டவேண்டும். **நீராட்டு** : சீதையின் ஆன்மகுணம், அழகு முதலிய குணங்கள் வசீகரிக்கச் செய்தாலும், ஐயர் செய்து வைத்த திருமணம் என்று சக்கரவர்த்தித் திருமகன் உகக்குமாப் போலே, கிருட்டிணன் பக்கல் பிராப்தியும் போக்கியதையும் இருப்பினும் இவர்கள் உகப்பது இவள் (பின்னைப் பிராட்டி) தந்த கிருட்டிணன் என்று உகப்பார்கள். இன்னும் 'நீராட்டு' என்பதால் 'அப்பன் திருவருள் மூழ்கினள்' (திருவாய் 8.9.5) என்ற திருப்புலியூர் எம்பெருமானிடம் பராங்குச நாயகி கலந்ததை நினைக்கச் செய்கின்றது. 'எங்கள் விடாயும் கெட்டு, எங்களை எல்லாரும் கொண்டாடும்படி பண்ணுவாயாக' என்று வேண்டுதல் இதில் தொனிக்கின்றது. **திருவே - எம்மை நீராட்டு** : எங்களையும் அவனையும் ஒரு துறையில் சேர்க்காவிட்டால் நீ 'திருஆவதற்கு' வழி உண்டோ? **உன் மணாளனை - எம்மை**: உனக்கு ஒருக்கால் எழுதித்தந்து ஒவ்வொரு கணமும் எழுத்து வாங்குகின்றவனை. 'நீராட்ட மமைத்து வைத்தேன்' உனக்கும் அவனுக்கும் கூட குளிக்கச் சமைத்த நீரிலே எங்களையும் சேர்த்து முழுக்கூட்டு என்பது தொனிக்கிறது. **உக்கம் முதலியவை** : எங்கள் முறைகளுக்குத் தேவையான பொருள்களையும் எங்கள் அழகை நாங்கள் கண்டுகழிக்கும் பொருள்களையும் வழங்கி எங்கள் விரகதாபம் மாறும்படி வாசத்தடத்திலே மூழ்கும்படி செய்யவேண்டும். ஞானதர்சனப் பேறுகளையெல்லாம் பண்ணித்தர வேண்டும் என்பதாம்.

**உள்ளுறை** : பிரிவில் ஆற்றமாட்டாத எங்களுக்கு 'யான், எனது' என்ற முனைப்புகளைப் போக்கிட, சொரூப ஞானம் தந்து, உனக்கு அடங்கிய ஈசுவரனை எங்களோடு சேர்த்துவைக்க வேண்டும் என்பது. மிக்க பெருந்திரளான ஞானிகளுக்குப் பிரகிருதி சம்பந்தத்தாலே அஞ்ஞானம் உண்டாவதற்கு முன்னதாகவே அவர்கட்கு அஞ்ஞானத்தை வரவொட்டாது தடுப்பவனே என்பது முதலிரண்டு அடிகளின் தேர்ந்த பொருள்.

## 21. பின்னைப் பிராட்டியும் ஆய மகளிருடன் சேர எல்லாரும் கூடி கிருட்டிணனை எழுப்புதல்

### இருபத்தொன்றாம் பாசுரம்

"ஏற்ற கலங்கள்"

**ஏற்ற கலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப**
**மாற்றாதே பால்சொரியும் வள்ளல் பெரும்பசுக்கள்**
**ஆற்றப் படைத்தான் மகனே அறிவுறாய்**
**ஊற்ற முடையாய் பரியாய் உலகினில்**
**தோற்றமாய் நின்ற சுடரே துயிலெழாய்**
**மாற்றார் உனக்கு வலிதொலைந்து உன்வாசற்கண்**
**ஆற்றாது வந்துன் அடிபணியு மாபோலே**
**போற்றியாம் வந்தோம் புகழ்ந்தேலோர் எம்பாவாய்.**

(சொ.பொ) : ஏற்ற - பாலைக் கொண்ட; கலங்கள் - பாத்திரங்கள்; மீது எதிர் பொங்கி - (நிறைந்து) மேலே எதிராகப் பொங்கி; அளிப்ப - வழியும்படியாக; மாற்றாதே - இடைவிடாமல்; பால் சொரியும் - பாலைச் சுரந்து தருகின்ற; வள்ளல் - உதாரகுணமுடைய; பெரும் பசுக்கள் - பெரிய பசுக்களை; ஆற்ற படைத்தான் - மிகுதியாக உடைய நந்தகோபரின்; மகனே - குமாரனே; அறிவுறாய்- திருப்பள்ளி உணர வேண்டும்; ஊற்றம் உடையாய் - (வேதங்களால்) போற்றப்படுகையாகிற திண்டையுடையவனாய்; பெரியாய் - அந்த வேதங்களாலும் அறியப்படாமையாகின்ற பெருமையுடையவனாய்; உலகினில் - உலகத்தில்; தோற்றமாய் நின்ற - ஆச்ரித பட்சபாதம் விளங்கும்படி திருவவதரித்து நின்ற; சடனரே - பேரொளிமிக்கவனே; துயில் எழாய் - திருப்பள்ளி உணர வேண்டும்; மாற்றார் - பகைவர்கள்; உனக்கு - தேவரீரோடு எதிரிடுவதற்கு; வலி தொலைந்து - வலிமை ஒழிந்து; ஆற்றாது - எதிர்த்து நிற்க முடியாமல்; உன் வாசற்கண் வந்து - தேவரீருடைய - வாசலிலே வந்து; உன் அடி - தேவரீருடைய திருவடிகளை; பணியும் ஆபோல - வணங்கும் விதம் போல; யாம் - தாச பூதர்களான அடியோங்கள்; புகழ்ந்து - கொண்டாடிக் கொண்டு; போற்றி - பல்லாண்டு பாடி; வந்தோம் - வந்து ஆச்ரயித்ததோம் என்கின்றார்கள்.

(க-து) : யோகத்திலே வந்தால் அடியேனும் உங்களில் ஒருத்தி அன்றோ? ஆதலால் நாம் அனைவரும் கூடிச் சென்று கிருட்டிணனை வேண்டுவோம் வாருங்கள்' என்று பின்னைப் பிராட்டி அருளிச் செய்ய, எல்லோரும் கூடிச் சென்று அவன் குணங்களிலே தோற்றார் தோற்றபடிச் சொல்லிக் கிருட்டிணனை எழுப்புகின்றனர். "உகவாதார் உன் வீரத்திற்குத் தோற்றாற் போலே உகந்தவர்கள் உன் நீர்மைக்குத் தோற்றபடி" (ஆறாயிரப்படி - அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்.)

**விளக்கம்** : எல்லாப் பாசுரங்களின் சொற்களைச் சிந்தித்துப் பொருள்களைப் போலவே இந்தப் பாசுரத்தின் சொற்களையும் சிந்தித்துத் தோன்றிய பொருள்களை அநுபவித்து மகிழ்கிறார்கள் வியாக்கியான கர்த்தர்கள். அவற்றை நாமும் அநுபவித்து மகிழ்வோம். **ஏற்ற கலங்கள் எதிர் பொங்கி மீதளிப்ப** : ஏற்ற கலங்களெல்லாம் எதிரே பொங்கி வழியும்படியாக. கலங்கள் இடாதார் குறைவேயன்றி இட்ட கலங்கள் எல்லாம் நிறையும்: ஏலாத கலங்கள் நிறையாதொழிகின்றமை பாலின் குறையன்று அல்லவா, இன்னும் 'ஏற்ற கலங்கள்' என்பதால், கலங்களின் பெருமை சிறுமையில்லை. கடலை மடுக்கிலும் நிறைந்து விடும். இட்ட இட்ட கலங்களெல்லாம் எதிரே நிரம்பி வழியும்படி பால் சொரியக் கடவன வாயிருக்கும் பசுக்கள். **எதிர் பொங்கி மீதளிப்ப** : முலைக் கண்ணின் பெருமையாலே ஒருக்கால் தொட்டுவிட்டாலும் ஒரு பீறிலே கலத்தை நிறைத்து வழிந்து போக நின்றாலும் முலைக்கடுப்பாலே மேலே மேலே சொரிந்த வண்ணமிருக்கும். **மாற்றாதே பால் சொரியும்** : இட்டகலம் நிரம்பிற்று, கலமிடுவார் இல்லை என்று கண் அடையாமல் ஊற்றுமாறாமல் பால் சொரிந்து கொண்டே இருக்கும். **வள்ளல் பெரும் பசுக்கள்** : சிலருக்கு மட்டும் உபகரித்தாக இல்லாமல் தன் காரியம் செய்ததாக உபகரிக்கும்படி உதார சொருபமாக இருக்கும் பசுக்கள், "வேண்டிற்றெல்லாம் தரும் கோதில் என் வள்ளல்" என்கின்ற கிருட்டிணனைப் போலே. இதனை நினைத்து மகிழ வேண்டும். சிலர் அர்த்தியாதிருக்கச் செய்ய வேண்டுமென்றே "வீடுமின் முற்றமும்" (திருவாய் 1.2.1) கன்று உலகிற்கு உபதேசம் செய்தார் சடகோபர். இதனை நினைந்தல்லவா மதுரகவிகளும் "அருள் கண்டீர் இவ்வுலகின் மிக்கதே" (கண்ணிநுண் - 8) என்று அருளிச் செய்தார். இவரைப் போலே அருள் மாரியாகையாலே திருமங்கையாழ்வாரும் "முந்துற உரைக்கேன்" (பெரி.திரு. 9.8.1) "சொல்லுகேன் வம்மின்" (மேலது) "நமரும் உரைமின்" (மேலது) என்று அருளிச் செய்தார். **வள்ளல்** : கிருட்டிணனைப் போலே, பெண்ணுக்கும் பேதைக்கும் அணைக்கலாம்படி தன்னைத்

தாழாவிட்டுக் கொண்டு நிற்கும் பசுக்களின் பவ்யதையைக் குறிப்பிடுகிறது இச்சொல். **பெரும் பசுக்கள்** : கிருட்டிணன் தொட்டு வளர்வதால் அவனோடொப்ப பெருத்திருக்கின்றன. "பெருக்கண்ணன்", "பேரோதும் பெரியோர்" என்றவை நினைக்கத்தக்கவை. **"வள்ளல் பெரும்பசுக்கள்"** : 'சிறு மாமனிசர்' (திருவாய் 8.10.3) என்னுமாப்போலே கொள்ள வேண்டும்.

**ஆற்றப் படைத்தான்** : மிகவும் படைத்தான். "கழியாரும் கன சங்கம் கலந்தெங்கும் நிறைந்த ஏறி, வழியார முத்தீன்று வளங்கொடுக்கும் திருநறையூர்" (பெரி.திரு. 6.9.2) என்றாற்போல, அதாவது நந்தகோபனின் பசுக்கள் தொகையின்றி இருத்தல், பசுக்களின் எண்ணிக்கையைக் கணக்கிட்டுச் சொல்ல முடியாது. என்றபடி. அதாவது திருநறையூரில் திருவீதிகளில் முத்துக்களுக்கு எண்ணுண்டால் எப்படிக் கணக்கிட்டுச் சொல்ல முடியாதோ அங்ஙனமே திருவாய்ப்பாடியில் நந்தகோபனின் பசுக்களைக் கணக்கிட்டுச் சொல்ல முடியாது என்றவாறாம். **ஆற்றப்படைத்தான் மகனே** : நந்தகோபனுக்கு விரும்பி வந்தது, இவன் பிறந்து படைத்த சம்பத்து. இதனால் பரமபத சம்பத்தைக் காட்டிலும் நந்தகோபர் சம்பத்துக்கு இட்டுப் பிறந்ததால் ஏற்றம் உண்டு. பரமபதம் போலவும் நாராயணத்துவம் போலவும்தான் தோன்றியதாகவுள்ள செல்வம் அல்லவா கோபகுலமும் கோபாலத்துவமும். நந்தன் பெற்ற ஆனாயனுக்கல்லது இது சித்தியாதே. இவ்வாறு ஆயச் சிறுமிகள் நந்தகோபர் சேகரித்த ஐசுவரியத்தைச் சொல்லுகிறார்கள்.

**மகனே அறிவுறாய்** : உன் ஐசுவர்யம் இருந்தபடியாலே எங்களை நினைத்தற்கு விரகில்லை. உன் ஐசுவரியச் செருக்காலே எங்கள் அபயக்குரல் (ஆர்த்தத்வனி) உன் செவிப்பட்டதில்லையே யாகிலும் உன் பிறவியைப் புத்தி பண்ணி எங்களுக்காக உணராய். உனக்கும் எங்களுக்கும் உண்டான சம்பந்தத்தாலே பெறும்பேறு என்பதாக,

> **அறிவுஒன்றும் இல்லாத**
> **ஆய்க்குலத்து உன்றன்னைப்**
> **பிறவி பெறுந்தனை**
> **புண்ணியம் யாம்உடையோம்** (திருப். 28)

என்று ஆண்டாள் அருளிச் செய்துள்ளாளல்லவா? **மகனே அறிவுறாய்:** பரமபதத்தில் வந்தோமா? வசிட்டர் முதலியோர் நியமிக்கும் வாசலில் வந்தோமா? **அறிவுறாய்** : இவனுக்கு உணர்ச்சி உண்டானாலும் பலத்தில் விளம்பம் (தாமதம்) இல்லை, மாற்றமும் (வியபிசாரமும்) இல்லையென்றிருக்கிறார்கள். அறிவியாத போதல்லவா எங்களுக்கு

(இத்தலைக்கு) இழவும் விசனமும்? அறிவித்தால் காரியம் செய்யாதபோது இழவும் அவ்வத்தியமும் அவனுடையனவாகு மல்லவா? அறிவுடையார் காரியம் ஒரு பரம சேதநனின் கையிலுள்ளதல்லவா? **அறிவுறாய் :** சர்வஜ்ஞனையும் உணர்த்த வேண்டியல்லவா உள்ளுச் செல்லுகிறது, கைப்பட்ட பெண்களைச் சரக்கிலே வாங்கிக் கைப்படாதவர்களைக் கைப்படுத்துகைக்காக ஒருவகை வழியாலே எழுப்புகிறார்கள். **ஊற்றமுடையாய் :** வேதங்களால் பிரதிபாதிக்கப் பெறுகையாகிற திண்மையுடையவன். 'உளன் சுடர்மமிகு சுருதியுள்' (திருவாய். 1.1:7), 'வேதமுதல்வன்' (நற்.1), 'நான்மறைகள் தேடியோடும் செல்வன்', 'ஏலம் மறைப் பொருளே' (பெரியாழ். திரு. 1.6:9), என்பன காண்க. 'என்னுடைய நாயகனே' என்று யசோதைப் பிராட்டி சீராட்டுகின்ற கிருட்டிணன் அல்லவா? **பெரியாய் :** பிரமாணங்கள் எல்லாம் என்ன சொன்னாலும் தன்னுடைய முடிவு காணாதபடி அவ்வருகுபட்டிருப்பவன். பிரமாணங்களாலும் இவ்வளவென்று அறுதியிட ஒண்ணாதபடி இருப்பவன்.

**உலகினில் தோற்றமாய் நின்ற :** மேன்மைக்கு எல்லை நிலம் காணவொண்ணாதபடி ஓலைப்புறத்திலே போகாமல், மிகவும் கீழான சம்சாரிகளும் காணலாம்படி சாதுக்களைக் காப்பாற்றுவதற்காக வந்து அவதரித்தவன். **சுடரே :** அல்லாதார் கர்மம் காரணமாகப் பிறக்கையாலே பிறக்கப் பிறக்கக் கறை ஏறி நிற்பார்கள் சம்சாரிகள். அவர்கள் போலல்லாமல் இவன் தன் விருப்பத்தால் பிறப்பதால் சாணையிலிட்ட மாணிக்கம் போல ஒளிவிடா நிற்பன், 'பாவு சொல் சீர்க் கண்ணா என் பரஞ்சுடரே' என்றும் 'நிலைவரம்பில் பல பிறப்பாயொளி வரும் முழுநலம்' என்றும் போற்றக் கூடியவனல்லவா?

இன்னொரு விதமாகவும் யோசிக்கலாம். **ஊற்றமுடையாய் :** ஆச்ரிதர் விஷயத்தில் பண்ணின சூளரையை ( பிரதிஜ்யை) மகராஜர் (சுக்கிரீவன்) உள்ளிட்டாரும் விடவேண்டும் என்று வற்புறுத்தினாலும், 'தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல், என்னடியார் அது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார்' (பெரியாழ்.திரு., 4.9:2) என்றும், "பற்றுதல் அன்றியுண்டோ அடைக்கலம் பகர்கிறானை" (வீடணன் அடைக். 108) என்கின்றடிபயே விடாது முடிய நின்று தலைக்கட்டுகைக்கு ஈடான ஆதரத்தோடு ஏற்கும் ஊற்றத்தைச் சொல்லுகிறது. **பெரியோய் :** ஆசரிதர் விஷயத்தில் எல்லாம் செய்தாலும், ஒன்றும் செய்யப் பெற்றிலோம் என்றிருத்தலும் தன் பேறாகக் கொண்டு இருத்தலும், தன் பெருமைக்கீடாக இரட்சிப்பவன் என்று இருத்தலுமாம். **உலகினில் தோற்றமாய் நின்ற :** மேற்குறிப்பிட்ட

ஆச்ரித பட்சபாதம் உலகில் பெரும் புகழாகத் தோன்றும்படி இருத்தல். அதாவது சிசுபால துரியோதனாதிகளுக்கும் பாண்டவர்கள் பக்கம் பட்சபாதம் தோற்ற இருத்தல். களவு கண்டாய், கட்டுண்டாய் என்பது போன்றவற்றைச் சொல்லி இகழ்வது, துடியோதனனைப் பொடிபடுத்தினாய், அர்ச்சுனன் முதலியோரை வாழ்வித்தாய் என்பது போன்ற பழிச்சொல்லும் இழிச்சொல்லும் ஆகியவை பெரும் புகழன்றோ? சுடரே: உலகினில் அவதரிக்கப் பெற்றதாலும் ஆச்ரித பாரதந்திரியத்தாலும் பெற்ற பெரும் புகழ். "இன்னார் தூதன் எனநின்றான்" (பெரி.திரு. 2.2:3) என்பது பெரும் புகழன்றோ? **நின்ற சுடரே** : "ஐவர்க்கு அருள் செய்து நின்று பார்மல்கு சேனை அவித்த பரஞ்சுடர்" என்று சொல்லி மகிழ்வதுண்டல்லவா? **துயிலெழாய்** : நீ இப்போது எழுந்திராமையாலே நீ பிறந்து படைத்த சம்பத்தும் சேர்த்து குணங்களும் மழுங்கிப் போகப் போகிறது. அவை சம்பாதிக்கப்பட்ட அருமை அறிந்து அவை நிறம் பெறும்படித் துயிலுணர வேண்டும்.

'நீங்கள் வந்தது சரி. நாம் எழுந்திருக்கின்றோம். நீங்கள் வந்த வேலை என்ன, சொல்லுங்கள்' என்று கிருட்டிணன் வினவ, அவர்கள் தாங்கள் செயலற்று இருந்த நிலையை எடுத்துக்காட்டுகளின் அடிப்படையில் சொல்லுகின்றார்கள்.

**மாற்றார் உனக்கு** : உனக்குச் சத்துருக்களானவர்கள் உன் மிடுக்குக்குத் தோற்று, போவதற்கு இடமில்லாதபடியாலே உன் திருவடிகளிலே வந்து விழுமாப்போலே ஓரிடத்திலும் புகலற்று பெருமாள் திருவடிகளிலே வந்து விழுந்த காகம் போலே என்னுதல். மாற்றார் தங்கள் வலிமாண்டு வந்து விழுமாப்போலே என்றுமாம். **மாற்றார் உனக்கு** : சத்துருக்களை எடுத்துக்காட்டுகளாகச் சொல்கிறது என்? எனில் : முற்றும் அறிந்தவனானாலும் கூட நோக்கவொண்ணாத படி அனாதிகாலம் கைகழிந்தபடி (சென்றுவிட்டதைச்) சொல்லுகிறது. "யானே என்றனதே என்றிருந்தேன்" (திருவாய் 2.9.9) என்பதை நோக்குக. மாற்றார் - சத்துருக்கள். நாராயணனாகையாலே சம்பந்தம் எல்லோருடனும் ஒத்திருக்கும்படி சேஷமாயிருக்கின்ற ஆன்மாக்களில் இவனுக்குச் சில கருத்துக்கள் உண்டோ, என்னில் : அடியார்களின் விரோதிகள் யாவரும் இவனுக்குச் சத்துருக்களாவர். இதனால் 'அம்புக்குத் தோற்று எதிரிகள் வருமாப் போலே உன் குணங் களுக்குத் தோற்று வந்தோம்' என்பது பெறப்படுகின்றது. **யாம் வந்தோம்** : 'நசை உயிரை முடிய வொட்டாமையால், எங்கள் சொருபத்தைப் பாராமல் உனது குணங்கட்குத் தோற்று, ஆற்றாமை இருந்தவிடத்தே இருக்கவொட்டாது எங்களைப் பிடரிபிடித்துத் தள்ள நாங்கள் வந்தோம்' என்கின்றார்கள். அம்பு நற்கொலையாகக்

கொல்லும். குணம் உயிர்க்கொலையாகக் கொல்லும். "வல்வினை யேனை ஈர்க்கின்ற குணங்கள்" என்ற ஆழ்வார் வாக்கு காண்க.

போற்றி : போற்றுகையாவது, "சேவடி செவ்வித் திருக்காப்பு" (திருக்காப்பு" என்று திருப்பல்லாண்டு பாடுகை. பெரியாழ்வாரைப் போல வந்தோம். அல்லாதார் பாடுவது தம்தம்முடைய பயனுக்காக வன்றோ? புகழ்ந்து : மாற்றார் தங்களைத் தோற்பித்த வீர்யத்தைச் சொல்லிப் புகழ்வார்களன்றோ? எங்களைத் தோற்பித்த கணங்களைச் சொல்லிப் புகழ்ந்து என்றபடியாம். "அழித்தாய் உன் திருவடியால்" "நின்றன்னால் நலிவே படுவோம்" என்ற ஆழ்வார் பாசுரத் தொடர்களில் இதனைக் காணலாம். போற்றி - புகழ்ந்து வந்தோம். பெரியாழ்வாரைப் போலேயும் வந்தோம். அல்லாதாரைப் போலேயும் வந்தோம். நாங்கள் செய்வதெல்லாம் செய்தோம். நீ பெறினும் பெறு. இழக்கினும் இழ" என்று வருத்தம் தோன்றப் பேசுகிறார்கள்.

உள்ளுறை (ஸ்வாபதேசம்) : உபதேசத்துக்குப் பாத்திரர்களாகித் தமது உபதேசத்தாலே பரிபூர்ண ஞானமுடைய வர்களாய் தமக்கு யுக்திகளைச் சொல்லவல்லராய் ஞானத்தை உபதேசித்துக்கொண்டு பகவத் குணாநுபவங்களாலே நிறைந்த சீடர்களை மிகுதியாகப் படைத்த ஆசாரியனுக்கு விதேயமானவனே: அடைந்தாரிடம் பட்சபாதத்தை அவதாரத்தில் வெளியிட்டவனே: சத்துருக்கள் அம்புக்குத் தோற்றுக் காலில் வந்து விழுவதைப் போல நாங்கள் உன் குணங்கட்குத் தோற்றுப் பிறருக்கு அடிமையும் 'யான்' என்ற அகப்பற்றும் 'எனது' என்ற புறப்பற்றும் நீங்க, நீயே அடையத்தக்க பொருளும் அடையும் வழியும் என்று அறுதியிட்டு அடைய வேண்டும் என்ற துடிப்பு வேகத்தாலே உன் வாசலிலே மங்களா சாசனம் பண்ணிக் கொண்டு உன்னை வந்தடைந்தோம். ஆகையால், யோசிக்கும் எண்ணத்தை விட்டு இரட்சகப் பொருளாகிய எங்களை இரட்சிக்க வேண்டும் என்பது இதற்கு உள்ளுறை.

# 22. தாங்கள் அவனுக்கே உரியவர்களாயிருக்கின்ற அநந்யார்ஹ சேஷத்துவத்தைச் சொல்லுதல்

## இருபத்திரண்டாம் பாசுர விளக்கம்

### "அங்கண்மா ஞாலத்து"

**அங்கண்மா ஞாலத் தரசர் அபிமான**
**பங்கமாய் வந்துநின் பள்ளிக்கட் டிற்கீழே**
**சங்கம் இருப்பார்போல வந்து தலைப்பெய்யும்**
**கிங்கிணி வாய்ச்செய்த தாமரைப் பூப்போல**
**செங்கண் சிறுச்சிறிதே யெம்மேல் விழியாவோ?**
**திங்களும் ஆதித் தியனும் எழுந்தாற்போல்**
**அங்கண் இரண்டும்கொண் டெங்கள்மேல் நோக்குதியேல்**
**எங்கள்மேல் சாபம் இழிந்தேலோ ரெம்பாவாய்.**

(சொ.பொ) : அம்கண் - அழகிய இடம் உடையதாய்; மா - விசாலமான; ஞாலத்து - பூமியை ஆட்சி புரிந்த; அரசர் - மன்னர்கள்; அபிமான பங்கமாய் வந்து - (இந்தப் பூமி நம்முடையது என்று கொண்டிருந்த) என்ற மமகாரம் நீங்கப் பெற்று வந்து; நின் - தேவரீருடைய; பள்ளிக் கட்டிற் கீழே - நீ பள்ளிக் கொண்டிருக்கின்ற கட்டிலின் அருகில் (சிம்மாசனத்தின் ஆருகில்); சங்கம் - திரள்திரளாக; இருப்பார் போல் - (ஓலக்கமாக) இருப்பவர்கள் போல; வந்து - (கீழ்ப்பட்ட வருத்தமெல்லாம் தீரும்படி நீ இருக்கும் இடத்திற்கு) வந்து; தலைப்பெய்தோம் - (தேவரீரை) கிட்டப்பெற்றோம்; கிண்கிணி வாய்ச் செய்த - கிண்கிணியைப் போல் சிறிதே மலர்ந்த; தாமரைப் பூப்போல - தாமரை மலைப் போல; செம் கண் - 'வாத்சல்யம் தோன்றும்படி) சிவந்துள்ள தேவரீருடைய திருக்கண்கள்; சிறுச்சிறிதே - சிறிது சிறிதாக, கொஞ்சம் கொஞ்சமாக; எம்மேல் - (தேவரீரை அடைந்த) எங்கள் மீது; விழியாவோ - விழித்தல் ஆகாதோ?; திங்களும் ஆதித்தியனும் - சந்திரனும் சூரியனும்; எழுந்தாற்போல் - (ஒருசேர) உதித்தாற்போல (தண்ணளியையும் சீற்றத்தையும் ஒருங்கே கொண்ட); அம் - அழகிய; கண் இரண்டும் கொண்டு - இரண்டு கண்களாலே; எங்கள்மேல் சாபம் - எங்களிடத்துள்ள பாவம் (பிரிவுத்துன்பம்); இழிந்து - கழிந்துவிடும்படி; எங்கள்மேல் - (ஆச்ரிதராகிய) எங்கள் மீது; நோக்குதி - கடைக்கண் காட்டுவீராக - (பூப்போலே என்பர்).

**(க-து)** : இதற்கு முன்னுள்ள திருப்பாசுரத்தில் தங்கள் அபிமான அற்ற தன்மையைச் சொன்னார்கள். இத்திருப்பாசுரத்தில் அவனுக்கே உரியவர்களாக இருக்கின்ற தங்களுடைய அநந்யார்க சேஷத்துவத்தைச்[47] சொல்லுகிறார்கள்.

**விளக்கம் : அங்கண்** : 'மாற்றாருனுக்கு வலி தொலைந்து' (திருப். 21) என்று போக்கற்றுவந்தபடியல்லவா சொன்னார்கள்? 'இன்னமும் இவர்கள் அகவாய் அறியக் கடவோம்' என்று கிடக்கின்றான் கிருட்டிணன். 'இப்படியா எங்களை நினைத்திருக்கின்றாய்? இப்படி இங்குப் புகலன்றியேயொழிந்தாலும் வேறு போக்கில்லாததால் அநந்யார்கைகளாய் (வேறொருவர்கட்கும் பற்றில்லாதவர்களாய்) எங்கட்கும் பிறர்க்கும் ஆகாதபடியாய் வந்தோம். இனி எங்கள்பால் கடைக்கண் நோக்கு வேண்டும்' என்கின்றார்கள். 'எல்லாம் பெற்றாலும் பாரதந்திரியம் கிடவாதபோது கீழானவற்றைத் தின்று காலங்கழிக்க வேண்டுமோ, என்று கைகழுவி என் அண்ணன் சம்பந்தத்தை அறுத்துக்கொண்டு இங்கு போந்தேன். தேவரீர் அங்கீகாரம் பெற்றிலேனாகிலும் விட்டுவந்த இடத்திற்குத் திரும்பவும் போகாத நிலையில் வந்தேன்' என்று தங்கள் அநந்யார்ஹத்துவம் தோற்ற விண்ணப்பம் செய்கிறார்கள் (இவ்வாறு கூறுவார் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் தமது **ஆறாயிரப்படி** வியாக்கியானத்தில்).

**அங்கண்** : அழகிய இடம். நான்முகனுக்கும் தன் கோபோகரணங்களோடு அநுபவிக்கலாயிருக்கை. பிபீலிகைக்கும் தன்போக உபகரணங்களோடே அநுபவிக்கலாம்படியிருக்கை. **மாஞாலத்தரசர்** : 'ஒரு நாயகமாய் ஓட உலகு உடன் ஆண்டவர்' (திருவாய் 4.1.1) என்று ஆழ்வார் கூறியவாறு 'இப்பரப்பெல்லாம் என்னுடையது' என்று தனித்தனியே அபிமானித்திருத்தல். எல்லாவற்றையும் உடைய ஈசுவரனைப் போல் தம்மை அநுகரித்திருக்கிறார்கள், "யாவையும் எவரும் தானாய், அமைவுடை நாரணன்" (திருவாய் 3.4:10) என்கின்ற பதத்தை, அநுகரித்த பௌண்ட்ரவாசுதேவனைப் போலே. இவன் கண்ணனால் மாண்ட வரலாற்றை நாம் அறிவோம். **அபிமாந பங்கமாய் வந்து** : 'கருநாய் கவர்ந்த காலர்' (திருவாய் 4.1:1) போல் வந்து. எதிரிகளால் அடியுண்டு அரசு முழுவதும் தோற்று எளி வரவுபட்டு வந்து: அதாவது மமகாரமெல்லாம் நீங்கி (அபிமானசூனியராய்) வந்து என்றவாறு. காடுபோய் திரிந்து அலையாமல் உய்வதற்கு ஏதுவான

47. அநந்யார்கசேஷத்துவம் – வேறொருவருக்கும் அல்லாமல் ஈசுவரன் ஒருவனுக்கே அடிமைப்பட்டிருத்தல்.

சரியான இடத்திற்கு வந்து. **நின் பள்ளிக் கட்டிற் கீழே** : அவர்கள் தம்மை வென்ற சத்துருக்களாகிய மாற்றரசர்கள் காலிலே விழலாமே, இங்குப் போந்தது ஏன்? என்னில் : உபேயப்பொருள் இவனல்லது வேறு இல்லை என்ற உண்மையாலும், விபூதிபூதர்க்கு விபூதிமானே புகல் ஆகையாலும் பக்தி அபிமானர் புகும் வாசலாகையாலும், சர்வலோக சரண்யன் வாசலிலே புகல்தான் தமது வழி என்று தமது பூர்வ வாசனையால் அறிந்து சொல்லுகிறார்கள். **நின்** : எங்கேனும் வழிபறியுண்டாலும் 'கோகோ' என்று கூப்பிட்டுக்கொண்டு அரசர் வாசலிலே வந்து விழுவது போலே, அரசர்க்கெல்லாம் அரசன் என்று பிரமாணம் சொல்லப்படுகிற உடையவன் இருக்கிற இடத்திலே வரவேண்டுமல்லவா? 'கோவாகி மாநிலம் காத்து நம் கண்முகப்பே, மா ஆகிச் செல்கின்ற மன்னவரும்' (இரண்.திருவந். 69) என்று பூதத்தாழ்வார் கூறுவதுபோலே, சக்கரவர்த்தி என்று பட்டப்பெயர் பெற்று இந்நிலம் முழுவதையும் அரசாண்டவர்களும் 'பூமேவும் செங்கமல நாபியானைப்' பற்றினதாலல்லவா அரசர்களானார்கள்? அவனுடைய அநுக்ரகத்தினாலல்லவா இவர்கள் அரசபதவி பெற்றது? அந்த அரச பதவிகளைக் கொடுத்துச் 'செல்லுங்கள்' என்றாலும், பழைய எளிவரவை நினைத்து 'அவை வேண்டா' என்று உன் சிம்மாசனத்தின் கீழே வந்து கூடுகிறார்கள். **சங்கம் இருப்பார் போல்** : ஓரிருவ வரவில்லை. திரள் திரளாக வந்து அணுக்கோலக்கமாக வந்து இருக்கிறார்கள். அணுக்கு ஓலக்கம் - அந்தரங்க ஓலக்கம் - அங்கண்மா ஞாலத்தரசர் வருகையின் காரணம் போக்கற்ற நிலை. இவர்கள் வருகை கைங்கரியம் செய்வதற்கும கிருஷ்ணாநுபவம் பெறுவதற்கும் - என்பது ஈண்டு சிந்திக்கத்தக்கது.

**பள்ளிக்கட்டிற்கீழே** : இதற்கு இன்னொரு விதமாகவும் யோசிக்கலாம். வெளியிலே வேளாளராகத் திரியில் தலையில் திருமுடிசூட்டுவார்கள் என்று அஞ்சி அந்தரங்கமாக வந்து சேவிக்கிறார்கள். ஆளற்றவிடத்திலே விவிகித் சேவை பண்ணினால் ஒருவித மன அமைதி கிட்டும். 'மீண்டும் யாரேனும் கிரீடத்தைச் சூட்டி இராச்சியத்தைப் பாதுகாப்பாய் என்று நம்மை நிர்பந்தித்தால் என்ன செய்வது?" என்கிற அச்சம் காரணமாக. பரதாழ்வான் அயோத்தியிலிருந்தால், மக்கள் பல்வேறு காரணங்களால் அடிக்கடி வந்து அலைக்கழிப்பார்கள், அன்றும் தானும் 'அரசன்' என்ற மமகாரமும் தன்னைச் சாரும் என்று கவலையுற்று தன்பக்கல் அபிமான தோஷம் இல்லாமையை வெளியிட வேண்டியிருந்ததன்றோ? இளைய பெருமாள் இராகவனுடைய படுக்கைத்தலை பிரியாமல் இருந்தமையால் அவையொன்றும் கேட்க வேண்டிய நிலை இல்லாமல் போயிற்று.

**போல்வந்து தலைப் பெய்தோம்** : இந்த அரசர்கள் வழி முறைப்படி தாம் அடைந்த அரசு முதலியவற்றையும் தம்முடைய அபிமானங்களையும் துறந்தும் அம்புக்குத் தோற்றும் உன் பள்ளிக் கட்டிலின் கீழே படுகாடாய்க் கிடக்குமாப்போலே, நாங்களும் ஒரு நாயகமாய் உலக முழுவதையும் தம்முடையது என்று அபிமானித்து ஆண்ட அரசர்கள் எதிரிகளால் அடியுண்டு அரசு முழுவதையும் தோற்று மமகாரமெல்லாம் நீங்கித் தம்முடைய செல்வச் செருக்கு (Ego) ஒழிந்ததனால் தத்துவ ஞானம் தலையெடுக்கப்பெற்று 'சீமந் நாராயணனே நமக்குப் புகல்' என்ற உறுதியான எண்ணத்தை அடைந்து ஏகாந்தமாக நீ எழுந்தருளியிருக்கிற இடத்தில் வந்து கிடப்பது போல, நாங்களும் உனது குணங்கட்குத் தோற்று பெண்களுக்குள்ள அச்சம் மடம் நாணம் பயிர்ப்பு போன்ற சம்பத்துக்களையும், உறவினர்களின் நிரோதத்தாலே வீட்டை விட்டுப் புறப்படவொண்ணாத அருமையையும் வேறுண்டான போகங் களையும் விட்டு நின்னிடம் வந்து புகுந்துள்ளோம். அந்த அரசர்களைப் போலே நாங்களும் அநாதிகாலம் பண்ணிப் போந்த தேகாத்மாபி மான்ததைவிட்டு தேகாத்பரனான ஆன்மாவின் பக்கல் சுதந்திரத்தையும் விட்டு ஒரு பயனையும் எதிர்பாராது வந்தோம் என்றலுமாம்.

**வந்து தலைப்பெய்தோம்** : அந்த அரசர்களைப் போலே நாங்களும் அநாதிகாலமாக நடைபெற்று வந்த தேகாபிமானத்தாலே இந்த சம்பவத்தை இழந்து போந்த நாங்கள் ஒரு காரணமும் பற்றாது (நீர் கேதுகமாகக்) கிட்டப் பெற்றோம் என்று - யாத்ருசிக[48] சங்கதியைச் சொல்லிற்றாகவுமாம். சொருப இலாபகமாகக்கடவ சேதநன், அநாதி காமமடியாக அதனை இழந்து அசித்துபோலே தனக்குப் பிரகாரமான உடலைத் தான் (ஆன்மா) என்று கருதி சரீரத்தைப் பற்றிய சுகதுக்கங்களை அநுபவிப்பவனாய், தாவரங்களோடொக்க அசித்துக்குச் சமனாய், ஈசவரனும் வெறுக்கும்படி, கை கழிய அகன்ற இவன், யாத்ருசிகமாகப் பிறப்பதொரு புண்ணியம் காரணமாக (சுக்ருதமடியாக) இறைவனின் கருணைக்கு யோக்கியனாய், உடனே தேகாத்மாக்களுடைய சொருபத்தை விவேகித்து, தேகாபிமானத்தை விட்டு, ஆன்மாவின் பக்கல் உள்ள சுதந்திரத்தையும் விட்டு, தான் ஈசுவரனுக்கு அடிமை என்றும், அந்த ஈசுவரனே தான் அடையத்தக்க பொருள் என்றும், ருசி விளைந்து, அது பெறுகைக்குக் காரணமான உபாயமாகவும், அவனைப் பற்றுவதில் காலதாமதம் பெறாதபடி

48. யாத்ருசிகம் : யாத்ருச்சாயாம்பவம் – யாத்ருச்சிகம் – யாரோ ஒருவருடைய இச்சையால் உண்டாவது.

அவசரம் (த்வரை) விளைந்து, திருவடிகளிலே வந்து கடக்குமளவாய் விட்டதல்லவா? பார்ப்பனக் குழந்தை இளமைக் காலத்தில் ஒரு வேடருடைய இல்லத்தில் அகப்பட்டு அறிவு பழக்கவழக்கங்கள் அவர்களுடையனவாக நடந்து செல்லா நிற்க, யாதோ ஒரு புண்ணிய விசேடத்திலே சொந்த இல்லத்திலே மாதா, பிதாக்கள் முன்னே வந்து நிற்பது போலே என்றலுமாம்.

**வந்து தலைப் பெய்தோம் :** "புல்லாய்ப் பூடாய் பறவையாய்... எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன்" என்று (திருவா. அடி 26-31) மணிவாசகப் பெருமான் கூறுவதுபோல் மாறிமாறி அந்தாதயாகப் பல பிறப்புப் பிறந்து, அதுவே திருவடிகளை அடைவதற்கு ஏதுவாய் ஒரு பயனையும் கருதாதவர்களாய் வந்து சேர்ந்தோம். **வந்து தலைப்பெய்தோம் :** "வந்தெங்கும் தலைப்பெய்வன்" என்கிற இழவுகள் தீர்ந்து எல்லாரையும் எழுப்பிப் பட்ட விசனமெல்லாம் தீர ஒரு படி வந்து கிட்டப்பெறுவதே.

'மகளிர்காள் எல்லாம் சபலமாயிற்றே. இனி ஒரு குறையும் இல்லையே' என்று கிருட்டிணன் சொல்ல, 'அடைய வேண்டிய பலம் பெற வேண்டாவோ?' என்கின்றார்கள் ஆய மகளிர்.

**கிண்கிணி வாய்ச் செய்த :** வாய்ப்புறம் சிறிது திறந்த ஒருவித சதங்கை. அலரவும் மாட்டாமல் மொட்டிக்கவும் மாட்டாமல் திருக்கண்கள் இருக்கும் பாங்கிற்கு எடுத்துக்காட்டு. நன்கு உறங்காமலும் விழிக்காமலும் இருக்கும் நிலையைச் சொல்லுகிறது அறிதுயில் நிலை. **கிண்கிணி வாய்ச் செய்த தாமரைப் பூப்போலே :** ஆதித்தியனைக் கண்டால் அலரக்கடவதாய தாமரைப் பூப்போலே எங்கள் ஆற்றாமைக்கு அலரக் கூடியவையன்றோ இவை என்பது பெரியவாச்சான் பிள்ளை உரை **(மூவாயிரப்படி).** 'சுவாதந்திரம் செம்பிளிப்பியா நின்றது' என்பார் **அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் (ஆறாயிரப்படி).** தொடர்ந்து இவர் கூறுவது : "நப்பின்னைப் பிராட்டியின் உற்றுணர்வு (ஸ்பர்சம்) அலரப்பண்ணா நின்றது. இத்தலை (எங்கள்) அபராதம் மொட்டிக்கப் பண்ணும். அவனுடைய அபராதத்தைப் போக்கும் பாங்கு அலரப் பண்ணும். கர்ம பாரதந்திரியம் மொட்டிக்கப்பண்ணும். ஆச்ரித பாரதந்திரியம் அலரப் பண்ணும். காலத்தின் இளமை மொட்டிக்கப் பண்ணாநின்றது. ஆர்த்தத் தொனி அலரப் பண்ணாநின்றது. ஆதித்தனை கண்டால் அலரக்கடவதாய தாமரைப் பூப்போலே இவர்தம் ஆற்றாமை கண்டால் அலரக்கூடியவையாயிற்று."

**செங்கண் :** வாத்சல்யத்தாலே சிவந்திருத்தல். உபமானம் நேர் நில்லாமையாலே உபமேயத்தைச் சிறப்பிக்கிறது. 'பட்டுரையாய் புற்கென்றே காட்டுமால்' என்றது காண்க. உபமானத்தோடு சொல்ல நினைப்பதாகின்றது அழுக்காக்குகையல்லவா? தாமரைக்கு இவன் கொடுத்த நிறம் சிவப்புக்கு ஒப்பாகுமேயன்றி வாத்சல்யத்தாலே வந்த குதறலில்லையே, அதற்கு. **சிறுச்சிறிதே :** களப்படியிலே கடலை மடுக்க வொண்ணாதல்லவா? பொறுக்கப் பொறுக்கக் கடைக்கண் நோக்கு வேண்டும். **எம்மேல் விழியாவோ :** கோடையோடின பயிரிலே ஒரு பாட்டம் மழை பொழியாதோ என்னுமாப்போலே முழு நோக்கமும் வேண்டுவதில்லை என்ற கருத்து இதில் தொனிக்கும். **எம்மேல் :** சாதகப் பறவை மேகநீரைப் பார்த்திருக்குமாப்போலே, கடைக்கண் நோக்கே தாரகமான எங்கள் மேலே 'விழியாவோ?' என்பது தங்கள் மனோரதம். "இவ்வாய்ச்சியர் கண்ணுள்" என்று விழிப்பது அத்தலையிலேயன்றோ?

அதற்கு வந்ததென்? என்று கண்ணன் கேட்க, அதற்குப் பதிலிறுக்கிறார்கள் ஆயச்சிறுமியர். **திங்களும் ஆதித்தியனும் எழுந்தாற்போல் :** 'கதிர் மதியம் போல் முகத்தான்' (திருப். 1) என்று ஆசைப்பட்டபடி பேறாக வேண்டும்" என்கிறார்கள். அடியவர் பக்கல கருணையும் பகைவர் பக்கல் சீற்றமும் ஒருங்க தோன்றுவதைக் குறிப்பிட்டவாறு. **திங்களும் :** சந்திர சூரியர்களுடைய தண்ணளி யையும் பிரதாபத்தையும் உடைய திருக்கண்கள். பிரதிகூலர்க்கு அணுகவொண்ணாதிருக்கையும் அனுகூலர்க்க அணுகி அநுபவிக்கலாம்படி இருக்கையும் அஞ்ஞான இருள் அகலுகைக்கும் உன்னைப் பெறாதவிடாய் ஆறுகைக்கும் என்றுமாம். **திங்களும் ஆதித்தியனும் :** விரகதாபம் போக்குகைக்கும் 'கிடையாதொழி கிறதோ' என்னும் பயத்தாலே வந்த அஞ்ஞான இருள் போவதற்கும். **அங்கண் :** திருக்கண்களுக்கு அவர்கள் உபமானமாகப் போதாதிருந்தபடி. **அங்கண் இரண்டும் கொண்டு :** சந்திர சூரியர்கள் கோபப் பிரசாரதங்களுக்கு ஒப்பல்லர் எனல், **இரண்டும் கொண்டு :** முழு நோக்குப் பொறுக்கும் அளவானவாறே 'இரண்டும்' என்று சொல்லுகிறார்கள். **எங்கள் மேல் நோக்கதியேல் :** உன் நோக்குப் பெறாத ஒரு நிர்ச்சாவியாய் உறாவின எங்கள் பக்கலிலே. **எங்கள் மேல் :** அவை இரண்டு கண்ணுக்கும் தங்கள் பக்கலிலே விஷயமுண்டு. சேரவொட்டாதார் பக்கலிலே பிரதாபமும் தங்கள் பக்கலிலே தண்ணளியும். **'சீற்றத் தொடருள் பெற்றவன்'** என்பதற்கு இரணியன்மீது சீற்றமும் பிரகலாதன்மீது அநுகூலமும் ஆக

இருந்ததல்லவா? ஒரு பக்கம் சீற்றமும் பிறிதொரு பக்கம் தண்ணளியும் இருந்தபடி. "சிம்மம் ஆனையொடு பொராநின்றாலும் குட்டிக்கு முலை கொடுக்குமாப்போலே" என்று பட்டர் அருளிச் செய்வர். "குழவியிடைக் காலிட்டெதிர்ந்து பொரும்" 'விழியாவோ' என்பது தங்கள் மனோரதம். 'நோக்குதியேல்' என்றவிடம் முன்னிலை. **நோக்குதியேல் :** தங்கள் தலையால் கிட்டுவதொன்றல்லவா? **எங்கள் மேல் சாபம் இழிந்து :** யாதநா சரீரம் போலேயும் சாபம் பெற்றவரைப் போலேயும் உன்னைப் பெறாமல் படுகின்ற துக்கம். விடம்போக்கு கின்றவன் நேரே வந்து பார்க்க விடம் தீருமாபோலே, கிருட்டிணன் நோக்காலே சம்சாரமாகியவிடம் தீரும். ஆகையால் அங்கண் இரண்டுங்கொண்டு எங்கள் மேல் நோக்குதியேல் எங்கள் மேலுள்ள சாபம் இழிந்து ஓடும் என்கின்றார்கள்.

**எங்கள் மேல் சாபம் :** "பிறருடைய சாபம் உன் கடைக்கண் நோக்கினால் தீரும். எங்கள் சாபம் நீ போக்குவதாலே தீரும். அல்லது அநுபவித்தலாலே தீரும்" என்கின்றார்கள். பிரிவினால் ஏற்பட்ட விசனம் அநுபவித்தே தீர வேண்டுமாதலால் 'சாபம்' என்று சாற்றப்படுகிறது. பல சாபங்கள் தீர்ந்ததைப் பற்றி **அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்** அருளிச் செய்வது நம்மை உணர்ச்சியின் கொடுமுடிக்குக் கொண்டு செலுத்தும். "பிரம்ம சாபம் மார்பின் வியர்வையாலே போக்கலாம். துர்வாசருடைய சாபம் 'அகலகில்லேன் இறையும்' என்று" (திருவாய் *6.10:10*) மார்பில் இருக்கும் பெரிய பிராட்டியாரின் கடைக்கண் நோக்கால் போக்கலாம். கௌதம முனிவருடைய சாபம் திருக்கழலின் பொடியாலே போக்கலாம். தக்கனின் சாபம் ஒரு தடாகத்தில் முழுக்கிட்டுப் போக்கலாம். எங்கள் சாபம் போக்குவதற்கு இத்தலையே (நீயே) வேண்டும். வேர்த்து நின்று விளையாடல் காண வேண்டும்; எங்கள்மேல் நோக்க வேண்டும்; பொடிதான் கொணர்ந்து பூச வேண்டும்; இப்போதெம்மை நீராட்ட வேண்டும்" என்கிறார்கள்.

'சாபம் இழிந்து - நோக்குதியேல் - வந்துன்னைத் தலைப்பெய்தோம். எம்மேல் முடியாவோ?' என்பது பாசுரத்தின் போக்கு என்பதைக் கண்டு அநுபவிக்க வேண்டும். இதனால் பக்தியின் கொடுமுடியை எட்ட வேண்டும்.

**உள்ளுறை :** "அநந்யார்க சேஷராகிக் கிட்டின எங்களுடைய தோகாத்தும அபிமானத்தைப் போக்கி, சேஷத்துவத்தை அறிவித்து, அந்ய சேஷடத்துவத்தையும் 'அகம்' மே (எனக்கு நான் சேஷன்)

என்கின்ற ஞானத்தையும், நம்மை நாம் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்கிற எண்ணத்தையும் போக்கி, வேறு வழிகளைக் கைவிட்டு, 'எம்பெருமானாகிய நீயே உபாயம்' என்னும் ஞானத்தை உண்டாக்கி, பாரதந்திர ஞானத்தைப் பிறப்பித்து, அனந்த கல்யாண குணங்கள் அனைத்தும் நிறைந்த உன்னை அநுபவிப்பித்து, அதனால் உன் முக உல்லாசமான கைங்கரியத்தையும் உண்டாக்கி, இப்படி உன் பரம கருணையாலே பரமபக்தியை முறையே உண்டாக்கினா யானால், எங்களுடைய சம்சாரிக துக்கங்களும் உன்னை இழந்திருந்த துயரமும் நீங்கும்" என்பது.

# 23. தாங்கள் வந்த காரியத்தைக் கேட்டருளுமாறு கிருட்டிணனை வேண்டுதல்

## இருபத்து மூன்றாம் பாசுர விளக்கம்

### "மாரிமலை முழைஞ்சில்"

**மாரி மழைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்**
**சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து**
**வேரி மயிர்பொங்க எப்பாடும் பேர்த்துதறி**
**மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்**
**போதருமா போலேநீ பூவைப்பூ வண்ணாவுன்**
**கோயில்நின்று இங்ஙனே போந்தருளிக் கோப்புடைய**
**சீரிய சிங்கா சனத்திருந்து யாம்வந்த**
**காரியம் ஆராய்ந் தருளேலோர் எம்பாவாய்.**

(சொ.பொ) : மாரி மழை முழைஞ்சில் - மழைக் காலத்தில் மலையிலுள்ள குகையில்; மன்னி - பொருந்தி; கிடந்து - படுத்து; உறங்கும் - தூங்கும்; சீரிய சிங்கம் - பெருமையுள்ள சிங்கம்; அறிவுற்று - உறக்கம் தெளிந்து; தீவிழித்து - நெருப்புப் பொறி பறக்க விழித்து; வேரி மயிர் பொங்க - (தனது) மணமுள்ள உளை மயிர்கள் தெறிக்க; பாடும் பேர்ந்து - நான்கு பக்கமும் புடை பெயர்ந்து; உதறி - (உடலை) உதறிக் கொண்டும்; மூரிநிமிர்ந்து - பெருமை தோன்ற (உடம்பு) நிமிர்ந்து கொண்டும்; முழங்கி - கர்ச்சித்து; புறப்பட்டு - குகையிலிருந்து புறப்பட்டு; போதருமாபோலே - வெளிவருவது போல; பூவைப்பூவண்ணா - காயாமலர் போன்ற நிறத்தவனே; நீ - நீ; உன் கோயிலினின்று - உனது இருப்பிடத்திலிருந்து; இங்ஙனே போந்தருளி - (நாங்களிருக்கின்ற) இங்கே அருள் கொண்டு வந்து; கோப்புடைய - பல வேலைப்பாடுகள் பொருந்திய; சீரிய சிங்காதனம் - சிறந்த அரியாசனத்தில்; இருந்து - எழுந்தருளியிருந்து; யாம் - ஒரு பயனையும் கருதாத அடியார்கள்; வந்த காரியம் - வந்திருக்கின்ற காரியத்தை; ஆராய்ந்து அருள் - ஆலோசித்துக் கருணை புரிவாயாக என்று இரக்கிறார்கள் ஆயச் சிறுமிகள்.

**(க-து): நல்ல வார்த்தைகள் சொல்லி[49] சமாதானம் செய்த**

49. பனியும் குளிரும் பாராமல் வீடுதோறும் சென்று எழுப்புதல், திருவாசல் காக்கும் முதலிகளை எழுப்புதல், நந்தகோபர் முதலானோரையும், தன்னையும் நப்பின்னைப் பிராட்டியையும் எழுப்புதல் முதலிய எளிவரவெல்லாம் தான் முற்பாடானாயிருந்து செய்யாமையாலன்றோ நல்ல வார்த்தை சொல்லுதல்.

கிருட்டிணனை நோக்கி 'நாங்கள் வந்த காரியத்தைக் கேட்டருள வேண்டும்' என்கின்றார்கள்.

**விளக்கம் :** மாரிக்காலம் எப்படிப்பட்டது என்பது விவரிக்கப் பெறுகின்றது. மாரி : நாடு முழுவதும் ஒரே நீர்க்கோப்பாக மழை பொழிந்ததால் வைரம் போன்ற உறுதியான சாலைகளும் தூறெழுந்து பயணம் செய்வதற்குத் தகுதியின்றி ஒழிகையாலே, அரசர்களும் தம் தம்முடைய பகைவர்கள் மீது கொண்டிருந்த வெறுப்புக்களையும் மறந்து படை தண்டெடுத்துச் செல்லுதலைத் தவிர்ந்தனர். வீட்டை விட்டு அலுவல் நிமித்தம் வெளியில் சென்றவர்களும் விடாமழையாக இருக்கிறதென்று வீடு திரும்பி நான்கு மாதகாலமும் உகந்த விஷயங்களிலே ஈடுபட்டுக் கூடியிருக்கின்றனர். மகாராஜரும் (சுக்கிரீவனும்) மகளிரின் கொங்கையையே பற்றிக் கிடந்து பெருமானோடு (இராமபிரானோடு) செய்து கொண்ட உறுதிமொழிகளையும் மறந்துவிட்டபடியாலே பெருமாளும் சீறி

**கொம்பும் உண்டுஅக் கூற்றமும் உண்டு உங்கள்**
**அம்பும் உண்டென்று சொல்லு**[50]

அந்த 'அஞ்சில் ஐம்பதில் ஒன்று அறியாதவனிடம்' (5) என்று இளைய பெருமாளுக்கு அருளிச் செய்துவிட, அவரும் குன்றினின்றும் குன்றுக்குத் தாவும் கோளரிபோல் வந்து கிட்கிந்தை வாசலில் சிறு நாண் தெறிக்கின்றார். நிலைமையைச் சமாளிக்கும் வழியைப் பற்றி அங்கதன் அநுமனோடு கலந்து ஆய்ந்து தாரையை அனுப்புகின்றனர். அவளும் சென்று இலக்குவனை நோக்கி 'நின் போகத்திற்குக் காரணம் என்ன? உன் கோபத்துக்கு எதிர் நிற்பாரும் உளரோ?' என்று பொருப்பித்துக் கொள்ளும்படிப் பண்ணும் காலமல்லவா இது? சிங்கமும் மலை முழைஞ்சு விட்டு வெளிவராது. பெருமாளும் மால்யவானில் (மலைப்பகுதி) எழுந்தருளியிருந்தார் சிங்கம் போலே. மாரி : பெண்களோடே மேகம் அறையிடும் காலம். பிரிந்தார் கொடுமை குழறும் காலம். கலந்தார் வரவெதிர் கொள்ளும் காலம், பெண்ணீர்மையீடழிக்கும் காலம். மாரி : சிங்கங்களும் எதிரிகளான யானையின் வாசலிலே நின்று பிளிறும் காலம். அது செவிப்படாமல் தனக்கு ஒரு விரோதி இல்லையென்று அமலைக் குகைகளைப் பற்றி உறங்கும் காலம். இனி இவர்களுக்கு ஊராரும் இசைந்து அவர்கள் ஒரோவிடங்களில் அடங்கவும் பெற்று இவர்களுக்குப் பலம் கொடுக்கிற கிருட்டிணனும் நப்பின்னைப் பிராட்டியின் கட்டிலிலேயுறங்கி, இவர்கள் சென்று எழுப்பும்படியான

50. கம்ப : கிட்கிந்தா – கிட்கிந்தை 4, 5. இந்தப் படலம் முழுவதும் படித்து அநுபவிக்கத்தக்கது.

காலம் அல்லவா? உள்ளே கண்ணன் நப்பின்னைப் பிராட்டியிடம் போகரசம் அநுபவித்துக் கொண்டிருக்க, வாசலிலே நின்று துவள்கின்றார்களே எனல். **மலைமுழைஞ்சில்** : சிங்கம்தான் மலைக்கு ஆபரணமாக அல்லவா இருப்பது. இவனும் நப்பின்னைப் பிராட்டியின் முலைக்குவட்டின் அடியில் முலையாபரணம் போலே தங்குகின்றானல்லவா?

**மன்னிக் கிடந்து** : மிடுக்காலே ஒருவர்க்கும் அஞ்ச வேண்டாமையாலே மலைக்குவடுபோலே பொருந்தி வீசுவில்லிட்டு எழுப்பினாலும் கிளப்பப் போகாதபடி ஒட்டிக் கொண்டு கிடத்தல். அன்றியும், தன் பேடையுடன் ஒரே பொருள் என்னலாம்படி பொருந்திக் கிடக்கும் என்னலுமாம். இங்கு "நப்பின்னைக் கொங்கைமேல் வைத்துக் கிடந்த மலர்மார்பா" (திருப் 19) என்று நப்பின்னைப் பிராட்டிக்கு ஓர் ஆபரணம் என்னலாம்படியல்லவா முலையோடே பொருந்திக் கிடக்கின்றான். **கிடந்துறங்கும்** : ஊற்றுணர்வால் ஏற்படும் சுகத்தினால் மயங்கினபடியால்லாமல் சம்சாரிகள் தமோ குணத்தினால் உறங்குகிறதன்றே இவனுறக்கம். தன்னாலல்லது செல்லாதே வ்யோதிரேகத்தில் ஆற்றாதார் வருமளவும் குறுவிழி கொள்பவனல்லவா? **உறங்கும் சீரிய சிங்கம்** : உறக்கத்திலும் கீழான மிருகங்கள் கண்ட காட்சியிலே மண் உண்ணும்படி வீரலட்சுமியை உடைத்தான சிங்கம். உறங்கிக் கொண்டிருக்கும் நிலையிலும் எதிரிகள் தாக்கும் கிடக்கையாலே உணர்த்திக்கொள்ளும் காரியத்திலும் உறக்கமே நன்றாயிருக்கும் என்னும்படி மடி கொடுத்தார் துடிக்குபடியல்லவா இவனுறக்கம் இருப்பது? **சீரிய சிங்கம்** : 'மிருகேந்திரன்' என்றும் 'மிருகராஜன்' என்றும் ஒருவர் முடிசூட்ட வேண்டாமல் பிறப்பினாலேயே நிரங்குசமான சிறப்பு உண்டாயிருத்தல். **சீரிய சிங்கம்** : நரசிம்மம் போலே கலந்து கட்டியாய்ச் சீர்மை கெட்டிராது சிற்றாயர் சிங்கத்திற்கு.

**அறிவுற்று** : மேலிடவல்லதொன்றில்லை, கிட்டியெழுப்ப வல்லார் இல்லை, காலமுணர்த்த உணர்பவன் அன்றோ? **அறிவுற்று** : அறிவில்லாத ஒரு பொருளுக்கு அறிவு புகுந்த நடையாடினாற்போல இருத்தல். பூவலர்ந்தாற் போல் காலம் உணர்த்த உணர்தல். சம்சாரிகள் காலம் உணர்த்த உணர்வார்கள். இவன் ஆச்ரிதார்த்தமாக உணர்ந்த போதல்லவா இவன் அறிவுடையவன் என்றாவது. **தீவிழித்து** : 'நம் எல்லைக்குள் புகுந்தார் யார்' என்னுமாப் போலே பார்க்கும் பார்வையிலுள்ள வெம்மை. பிரதமகாட்ச சந்நிபாதத்தில் சர்வ காலமும் அணையும் பேடைக்கும் குட்டிகளுக்கும் அணைய

வெண்ணாதிருத்தல். 'பூங்கோதையாள் வெருவ', 'வானோர் கலங்கியோட' என்னும்படி கோபித்து விழித்தால் எரிவட்டக் கண்களாலே ஐச்வரமான தேஜசு பிரவகிக்கும்படி இருக்கும். ஐந்தலைப் பாம்போடு விளையாடுகின்றவன் யார்? பாண்டவ சாரதி கிருட்டிணனால் பிழைக்கின்றவன் யார்? என்று சிவக்கப் பார்த்தால் நான்முகன் உருத்திரன் இவர்களாலும் நோக்கவொண்ணாதபடி யல்லவா இருப்பது? **தீவிழித்து :** இவனைக் கொண்டு வேறொரு பயன் கொள்ளமவர்கள் அல்லாமல் இவன் இருந்தபடியே உத்தேச்யம் என்றிருக்குமவர்களாகையாலும், 'கொண்ட சீற்றம்' என்று ஆச்ரிதார்த்தமான சீற்றத்தை 'நீயுண்டு' என்று நினைத்திருக்குமவர்களாகையாலும் ஏதேனுமாக இவன் செய்கை இவர்களை நைவிக்கையாலும் 'சீரிய சிங்கம்' என்றதோடு, 'அறிவுற்று' என்றதோடு வேற்றுடையின்றி (வாசியற) இவையெல்லாம் போக்கியமாயிருக்கிறபடியைக் காணலாம். "இவையா இவையா" என்று தனித்தனியே ஆகர்ஷிகமல்லவா?

**வேரிமயிர் பொங்க :** வேரி - பரிளமம். பரிளமத்தையுடைத்தான பிடரி மயிர் சிலும்ப. சிங்கத்திற்கு ஒருவிதமான வாசனை உண்டு. எம்பெருமான் 'சர்வகந்த்' என்பவனாகையாலே உபமேயத்தி லுள்ளதெல்லாம் உபமானத்தில் இட்டுச் சொல்லுவது மரபு. அன்றியும், தண்துழாய் விரை நாறக்கடவதல்லவா? **எப்பாடும் பேர்ந்து :** ஒரு காரியப்பாடு இல்லாமையாலே நான்கு பக்கமும் பேருகிறது. **உதறி :** உறங்கும்போது அவயவங்களைச் சேர இட்டுக் கிடக்கையாலே வந்த திமிர்ப்பும் போம்படி அவயவங்களைத் தனித்தனியே உதறுவது சிங்கத்தின் இயல்பு.

**மூரி நிமிர்ந்து :** உடலொன்றாக நிமிர்ந்தபடி. 'உலாவுவதற்கு உடல் விதேயமாகைக்காக அவயவியான உடலை ஒன்றாக நிமிர்வது சிங்கத்தின் இயல்பு. **முழங்கி :** இதர துட்ட மிருகங்கள் கிடந்தவிடத்திலே முழுமையாக அவிந்து கிடக்கும்படி. **முழங்கி :** மேகம் போன்ற கிருட்டிணனுடைய முழக்கம் எதிரிகளை மண் உண்ணும்படி பண்ணி பெண்கள் வந்து எதிர்கொள்ளக் கடவதாயிருக்கும். **புறப்பட்டுப் போதருமாபோலே :** மலைக் குகையினின்றும் இப்படிப்பட்டதொரு சிங்கம் புறப்பட்டுத் தானாகச் சஞ்சாரம் பண்ணுமாப்போலே இங்ஙனமே போதர வேண்டு மென்கிறார்கள். 'பெண்காள் நம்மை சிங்கம் புறப்படுமாப் போலே புறப்படவோ சொல்லுகிறது? இராகவ சிங்கமாய்ப் புறப்படவோ? நரசிம்மமாய்ப் புறப்படவோ?' என்று கிருட்டிணன் கேட்க, 'உன்னுடைய மேன்மை புலப்படும்படியாகவும் இயல்பான

சௌர்யத்துக்கும் காம்பீர்யத்துக்கும் சிங்கத்தை எடுத்துக்காட்டாகச் சொன்னோமேயன்றி வேறு இல்லை. சிங்கம்போலே என்னாமல் இரணிய இராவணாதிகள் முன்னே நிற்குமாப்போலே நிற்கவோ தேடுகிறது? பிரானே' என்கின்றார்கள்.

**நீ பூவைப் பூவண்ணா** : உன்னை நீ அறிய வேண்டாவோ? எதிரிகளான சிசுபாலாதிகள் முன்னே நிற்கிலும் இவ்வழகு குறையாமல் நிற்பவன் அல்லையோ நீ? சிங்கத்தால் உன்னுடைய வடிவழகையும் குளிர்ச்சியையும் சௌகுமார்யத்தையும் ஏறிட்டுக்கொள்ளப் போதுமோ? உன் வடிவுக்குப் பூவைப் பூவை ஓர் ஆதாரத்திற்கு எடுத்துக்காட்டாக மாத்திரம் சொன்னோம். அதுபோல சௌர்யாதிகளுக்கு ஒரு போலிதான் சொன்னோமேயன்றி வேறு இல்லை. பிரிந்தார்க்குப் பிழைக்கவொண்ணாதபடி வடிவு படைத்ததோ அப்பூவைப் பூ? **பூவைப் பூவண்ணா** : வண்டாறாப் பூவை பூதான் கண்ணனின் வடிவுக்கு ஒத்தாக அல்லவா இருப்பது? 'வடிவைக் கொண்டாடவா நிற்கின்றீர்கள்? உங்களுக்கு அநுபவிக்க ஆசையாகில் உள்ளே புகுவீர்களாக' என்கின்றான் கிருட்டிணன்.

**உன் கோயில் நின்று இங்ஙனே** : எங்களை உள்ளே அழையாமல் நீதான் உள்ளிருந்து புறப்பட்டால்தான் என்ன, உன் படுக்கைத் தலை எடுத்துக் கை நீட்டுவித்துக் கொள்ளும் அளவு கூட இல்லை. எங்களை அழகு ஓலக்கத்தே அடிமை கொண்டருள வேண்டும். **பூவைப் பூவண்ணா உன் கோயில் நின்று** இவ்வடிவழகையெல்லாம் இத்தளத்தில் வெள்ளமாக்குகிறதென்னோ?

**உன் கோயில்** : "நந்த கோபாலன் கோயில்" என்றார்கள் முன்னே. இங்கே 'உன் கோயில்' என்கின்றார்கள். வாசபூமி ஒன்றாய், அது இருவர்க்கும் பொதுவாய் வாய்த்திருப்பது. இவன் இருக்கும் கோயிலுக்கு சேஷ - சேஷிகளுடைய பிரதான்யம் கொள்ளக் கடவதன்றோ? பிரணவம் போலவும் - இதய கமலம் போலவும், "திருவரங்கம் நம்மூர்" (திருநெடுந். 23), "எம்பெருமான் கோயில் என்றேற்கு இதுவன்றோ திருவாலி' என்று சொல்லக்கடவன அன்றோ? **இங்ஙனே போந்தருளி** : பெருமாள், திருமாளிகையில் நின்றும் சுமந்திரன் கையைப் பிடித்துக் கொண்டு பிராட்டி பின் தொடரப் புறப்பட்டாற்போலே, ஞாலத்தூடே நடக்கவொண்ணாது. **இங்ஙனே:** எங்கள் முன்னே நடக்க வேண்டும். எங்களுக்குத் தனியே சில நிர்ப்பந்தமுண்டு காண். கண் வளர்ந்தருளினபடி கண்டு வாழ்ந்தோம். இனி நடையழகு கண்டு வாழ வேண்டும். நடைச் சரகவத்துப் பிடிக்கலாம் படியல்லவா இந்நாலடியும் இருப்பது, கிருட்டிணனுடைய லளிதகதியை அநுகரித்துத் தரிக்கத்

தேடுகிறவர்கள் தாங்களுட்பட, 'கண்ணுடையார் அனைவரும் கண்டு வாழுங்கள்' என்னும் படியல்லவா இருப்பது? "கானகம் படியுலாவி உலாவி" என்று கிருட்டிணன் நடக்கும்போது ஆடல் பாடல் மறக்கக் கடவதன்றோ அப்ரசுக்களும் பட ஆடுவது கண்டு? 'கை தொழ வீதி வருவான்' காலும் நடையும் கண்டு கையெடுப்பார் மடல் எடுப்பார்களன்றோ பெண்கள்? **போந்தருளி** : கண்ணனுடை நடை சதுர்க்கதியல்லவா? காளையினுடைய செருக்கும், மத்தகரியினுடைய திமிர்ப்பால் வந்த பிசுகுதலும், சிங்கத்தினுடைய மேனாணிப்பால் வந்த பிராபி பவந சாமர்த்தியமும் புலியினுடைய சிவிட்குடைமையால் வந்த உறட்டுதலும் என்றவையாம் தோற்றியிருக்கும் நான்கு கதிகள். "ஆயர்பாடி கவர்ந்துண்ணும் காரேறு" "வாரணம் பைய நின்றூர்வது போல்" (பெரியாழ். திரு., *1.8:1*) "சிற்றாயர் சிங்கம்" என்கிற கிருட்டிணனுக்குச் சொல்ல வேண்டுமோ, இவையெல்லாம் நாம் நம்பெருமாள் நடையழகில் காணலாம். **இங்ஙனே போந்தருளி** : படுக்கையில் வார்த்தையாய்ப் போகாமல் மணிமண்டபத்தின் வார்த்தையாக வேண்டும்.

'போந்து கேட்கும் காரியத்தையல்லவா நீங்கள் வேண்டுவது?' என்கிறான் கிருட்டிணன். **கோப்புடைய** : உபய விபூதியிலுண்டான சராசர பதார்த்தங்கள் அடங்கலும் தொழிலாக வகுப்புண்டிருத்தல். **சீரிய சிங்காதனம்** : இந்த சிம்மாதனத்திலிருந்து நினைப்பிட்டது என்றால் அறுதியாயிருத்தல். **சீரிய** : பெண்களுக்குப் பொய் குறிக்கும் கிருட்டிணனேயாகிலும் இவ்வாசனகத்திலேயிருந்தால் பொய் சொல்லவொண்ணாது. சொன்னதும் அமோகமாக இருக்கும். **ஆசனத்திற்குச் சீர்மையாவது** - கடற்கரை வெளியிலே வானரர்களிடையே வார்த்தை சொன்னது போலவும், பூசல்களரியில் தேர்த்தட்டிலிருந்து வார்த்தை சொன்னது போலவும், பெண்கள் திரளிலேயே திவ்வியாசனத்திலிருந்து பொய்ந்நம்பியான் கிருட்டிணன் சொன்னதேயாகிலும் ஆசனச் சிறப்பாலே பழுது போகாத படியாயிருக்கும். தர்மசானத்தில் இருந்தால் தோன்றினவாறெல்லாம் சொல்லவொண்ணாதல்லவா? இதுதான் தர்மபீடமாயிற்றே? அரசர்கள் மெய்க்காட்டுக்கு இன்ன மண்டபத்திலே இன்ன ஆசனத்திலேயிருந்து நினைப்பிட்டது என்றால் தப்பாதாற் போலே என்க.

**கோப்புடை சீரிய சிங்காதனத்திருந்து** : இதற்கு வை.கோ. கூறுவது. ஸ்ரீமந் நாராயணன் கிருட்டிணனாக அவதரித்தபோது அந்தப் பரமபதத்தில் அப்பரமனுக்கு உரியனவும் பணி செய்யும்படி இங்குத் தோன்றும் என்ப. அதற்கு ஏற்ப, தர்மம் - அதர்மம், ஞானம் - அஞ்ஞானம், வைராக்கியம் - அவைராக்கியம், ஐசுவரியம் -

அனைசுவரியம் என்கின்ற எட்டுக்கால்களையுடைய தாய்த் திருமாமணி மண்டபத்திலே ஆதிசேடன் மீதிருக்கிற **தர்மாதி பீடம்** என்பதுவே இங்கு கிருட்டிணனுக்குச் சிங்காதனமாக அமைந்துள்ளது என்பதாக.

**உன் கோயில் நின்று ... முதலியவை** : நம் பெருமாள் கோயிலாழ்வாரிலிருந்து புறப்பட்டருளி, பெரிய திருமண்டபத்திலே சேர பாண்டியனிலே நாய்ச்சிமாரோடே கூடவிருந்து நினைப்பிட்டது என்றால் தப்பாதாற் போலே. **சீரிய சிங்காதனம்** : ஓரணு சென்று அடியிலும் கிருட்டிணனோடு சாம்யா பத்தியைக் கொடுக்கும் ஆசனம். "இருந்தால் சிங்காசனமாம்" (முத.திருவந். 53) என்கிற ஆசனத்திலே ஏறுதலன்றோ தங்கட்குக் கணிசம்? கண் வளர்கின்ற போதுள்ள அழகும் உலாவுகின்றபோதுள்ள அழகும் காண வேண்டுமல்லவா? "இருந்தமை காட்டினீர்" என்றல்லவா உத்தேச்யம்?

**தடங்கொள்தா மரைக்கண் விழித்துநீ யெழுந்துன்**
**தாமரை மங்கையும் நீயும்**
**இடங்கொள்மூ உலகும் தொழஇருந் தருளாய்**
**திருப்புளிங் குடிக்கிடந் தானே.** (திருவாய் 9.2:3)

என்ற சடகோபர் வாக்குப்படி கிடந்தமை கண்டாலும் நடந்தமை கண்டாலும் கண்கள் விடாய் கெட்டுக் குளிராது, "கண்ணிணை குளிரப் புதுமலராகத்தைப் பருக இருந்திடாய்" என்னுமாப்போலே உன்னைக் காணவிடாய்த்த கண்களின் விடாய் கெட்டு அநுபவிக்கலாம் என்று சொல்லுகிறார்கள்.

**சீரிய சிங்காதனத்திருந்து** : நாங்கள் நின்னைச் சுற்றிலும் ஓலக்கமிட்டிருக்க நம் சிம்மாசனத்தில் இருந்தாலன்றோ "பல்லாயிரம் பெருந்தேவிமாரோடு - எல்லாரும் சூழச் சிங்கா சிங்காதனத்தே இருந்தானைக் கண்டவர்கள்" (பெரியாழ். திரு. 4.1.6) உண்டு என்ற பெரும் புகழ் உனக்கு எப்போதும் உண்டு. **இருந்து** : நடையழகு போலே இருப்பில் வேறுபாட்டையும் காணவேண்டும் எனல். அல்லது, காவலும் கட்டுமாய் 'நில்' என்பார் இல்லாமல் நினைத்தபடி அநுபவிக்கலாம்படி இருந்த இருப்பல்லவா? எனல்.

**யாம் வந்த காரியம் ஆராய்ந்தருள்** : ஒரு பயனையும் கருதாதவர்களான நாங்கள் வந்த காரியத்தை ஆராய்ந்தரள வேண்டும். தண்டகாரணியத்தில் சக்கரவர்த்தித் திருமகன் முனிவர்களுடைய துக்கத்தைப் போக்குவதற்குத்தான் முன்னரே வந்து செய்யாமைக்கு வெறுத்தது போலே, பெண்கள் நோவுபடப் பார்த்திருத்தல் ஆகாது என்று வெறுத்து அவர்களை அழைத்து 'உங்களுக்குச் செய்ய வேண்டுவதென்ன?' என்று கேட்க, "இங்குச் சொல்லவொண்ணாது.

பேரோலக்கமாக இருந்து கேட்டருள வேண்டும்'' என்கிறார்கள். 'நப்பின்னைப் பிராட்டி அவர்கள் பாலிருக்க 'சங்கமிருப்பார்கள் போல் வந்து தலைப்பெய்தோம்' (திருப். 22) என்று ஒரு பயனையும் கருதாது வந்தவர்களைக் கண்டு அவனால் பொறுக்க முடியவில்லை.

**யாம்வந்த** : எங்களை அறிவாய் அன்றோ? நீ வர இருப்பவர்களன்றோ நாங்கள்? **வந்த** : விரகவேதனையைப் பொறுக்க முடியாமல் நடைதாராத நாங்களன்றோ வந்தோம்? **காரியம்** : சொல்ல வேண்டும் என்று அவசியத்தை நினைத்து சொல்லாது விடுகிறார்கள். அதனைச் 'சிற்றஞ்சிறு காலைக்கு' (திருப். 29) வைக்கிறார்கள். பரதாழ்வான் தன்னோடொத்த ஆர்த்தரனார் எல்லோரையும் திரட்டிக்கொண்டு சென்று திருவடிகளிலே விழுந்தால் இராமபிரான் இரங்குவன் என்று வந்தான். அவன நினைத்து வந்த காரியத்திற்கு அவசியமில்லாமையாலே அணுக வொண்ணாதபடியிருந்து திருவடி நிலைகளைக் கொடுத்து விட்டதனால் அவசியத்தைச் சொல்லக் கடவோம் என்றிருந்ததைப்போல் இவர்கள் நிலை இருந்தது. முதலடியிலே சொல்லிவிட்டால் சுதந்திரனாகிய இவன் மறுத்தாலும் மறுக்கலாம் என்று அஞ்சியே சொல்லவில்லை. **ஆராய்ந்தருள்** : 'நாம் போகும் இடம் தோடிக் காலம் பார்த்து எதிர் சூழல்புக்கு புருஷகாரமாகப் பற்றி, நாம் படுவதெல்லாம் நீங்கள் படுவதே. நீங்கள் வந்த செய்தி என்ன? நீங்கள் பட்டது என்ன?' என்று ஆராய வேண்டும். 'பெண்காள் ஒருவரையொருவர் எழுப்பி எல்லாரும் திரண்டு வந்து நம் சாவால் காக்குமவனை எழுப்பி, ஐயரை (நந்தகோபரை) எழுப்பி, ஆய்ச்சியை எழுப்பி, நம்மை எழுப்பி அண்ணாரை (பலராமரை) எழுப்பி, மீளவும் நம்மை எழுப்பி அதிகமாக விசனப்பட்டுவிட்டீர்கள்' என்று திருவுள்ளம் பற்றி எம்மீது கருணை காட்டியருள வேண்டும்' என்கின்றார்கள்.

**உள்ளுறை** : 'ஈசுரவனே உபாயம்' என்ற சித்தோபாயத்தை அநுட்டிப்பவர்கட்கு 'அடைய வேண்டும்' என்ற வேகம் விஞ்சிய காலத்தில் அவர்கள் விருப்பத்தைத் தலைக்கட்ட ஈசுவரனே முந்தி வருவான் என்ற உள்ளுறைப் பொருள் இப்பாசுரத்தில் தோன்றும்.

# 24. திருப்பள்ளி அறையினின்று திவ்விய சிங்காதனத்தளவும் வருகின்ற நடையழகுக்குத் திருப்பல்லாண்டு பாடுதல்

## இருபத்து நான்காம் பாசுர விளக்கம்

"அன்றிவ்வுலகம்"

**அன்றிவ் வுலகம் அளந்தாய் அடிபோற்றி**
**சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல்போற்றி**
**பொன்றச் சகடம் உதைத்தாய் பழ் போற்றி**
**கன்று குணிலா எறிந்தாய் கழல்போற்றி**
**குன்று கடையா எடுத்தாய் குணம்போற்றி**
**வென்று பகைகெடுக்கும் நினைக்கையலி வேல்போற்றி**
**என்னென்றுன் சேவகமே ஏத்திப் பறைகொள்வான்**
**இன்றுயாம் வந்தோம் இரகலோர் எம்பாவாய்.**

(சொ.பொ) : அன்று - (மாவலி உலங்களையெல்லாம் கவர்ந்து கொண்ட) அக்காரத்தில்; இடலகம் - இந்த உலகங்களையெல்லாம் (மாவலியிடம் இரந்து நீரேற்று); அளந்தாய் - அளந்தவனே; அடி - (உனது) திருவடிகள்; போற்றி - வாழ்க; அங்கு - (பிராட்டியைப் பிரித்த இராவணன் உள்ள) அந்த இடத்திலே; சென்று - நடந்து சென்று ; தென் இலங்கை - தென் திசையிலுள்ள இலங்கையிலுள்ள பொல்லா அரக்கரை; செற்றாய் - அழித்தொழித்தவனே; திறல் - (உனது) திருத்தோளின் வலிமை; போற்றி - வாழ்க; சகடம் - சகடாசுரனை; பொன்ற - அழியும்படியாக; உதைத்தாய் - காலால் உதைத்தவனே; புகழ் - (உனது) கீர்த்தி; போற்றி - வாழ்க; கன்று - கன்றுவடிவாக வந்த வதசாசுரனை; குணிலா - எறிதடியாகக் கொண்டு; எறிந்தாய் - (பிளாமரமாய் இருந்த கபித்தாசுரன் மீது) வீசினவனே; கழல் - (உனது) திருவடிகள்; போற்றி - வாழ்க; குன்று - கோவர்த்தன மலையை; குடையாய் எடுத்தாய் - குடையாக எடுத்துப் பிடித்தவனே; குணம் - (உனது) குணம்; போற்றி - வாழ்க; பகை -விரோதிகளை; வென்று கொடுக்கும் - மூலத்தோடு அழிக்கும்; நின் கையில் - (உனது) கையிலுள்ள; வேல் - வேல் என்னும் ஆயுதம்; போற்றி - வாழ்க; என்று என்று - என்று பலவற்றையும் சொல்லி; உன் சேவகமே ஏத்தி - உனது வீரச் செயலையே துதித்து; பறை கொள்வான் -

(நோன்புக்கு வேண்டிய) பறையைப் பெற்றுக் கொள்ள; இன்று - இப்போது; யாம் - நாங்கள்; வந்தோம் - வந்துள்ளோம்; இரங்கு- நீ மனமிரங்கிக் கருணைகாட்ட வேண்டும்.

**(க-து) :** ஆய மகளிர் விரும்பினவாறே கண்ணன் செய்தருள்க கண்டு வந்த காரியத்தை மறந்து, அத்திருப்பள்ளியறையினின்றும் திவ்விய சிங்காசனத்தளவும் வருகின்றபோது அவனது நடையழகுக்குத் திருப்பல்லாண்டு பாடுகிறார்கள். "காணும் அளவும்தான் அது வேண்டும், இது வேண்டும்" என்பது கண்டால் அவனுக்குப் பரிவார்களித்தனையிறே" என்பது மூவாயிரப்படி.

**விளக்கம் :** ஆயமகளிரின் வேண்டுகோளின்படியே கிருட்டிணன் தான் படுத்திருந்த அறையை விட்டு வெளி மண்டபத்திற்கு வருகிறான். மகளிரும் தாம் வந்த காரியத்தை மறந்து அவனிடத்துப் பரிவு கொண்டு மங்களாசாசனம் செய்கின்றார்கள். பிறகு தம் வேண்டுகோளைத் தெரிவிக்கின்றார்கள் இப்பாசுரத்தில். வடிவழகு அவர்களை இப்படிச் செய்விக்கின்றது. இனி பாசுரத்தை ஆழ்ந்து சுவைப்போம்.

**அன்றிவ்வுலகம் அளந்தாய் - இன்று யாம் வந்தோம் :** தன் விபூதியை மாவலி அபகரித்ததால் நோவுபட்டிருக்கிற அன்று. தன்னைப் பிரிந்து நாங்கள் ஆர்த்தியாலே நோவுபட்டிருக்கின்ற இன்று. இவ்வுலகை மாவலியினுடைய அபிமானத்தினின்றும் மீட்ட அன்று. எங்களுடைய பெண்ணின் செல்வமாகிய அச்சம் மடம் முதலியவற்றின் அபிமானத்தினின்றும் மீட்ட இன்று. நாட்டுக்கெல்லாம் தன் திருவடிகளைத் தூளிதானம் பண்ணின அன்று. அழகையும் சீலத்தையும் எங்கட்குத் தூளிதானம் பண்ணின இன்று. இவையல்லவா வாமனனுக்கும் கண்ணனுக்கும் சாம்யம். ஒப்பு?

பார்த்தன் இரண்டு சேனைகளின் நடுவிலே தன் தேரைக் கொண்டு போய் நிறுத்துமாறு பரந்தாமனுக்குக் கட்டளையிட அவனும் அங்ஙனமே கொண்டுபோய் நிறுத்தினான். அதுபோல, இங்குக் கண்ணன் பெண்களின் வேண்டுகோளை மறுக்கமாட்டானாதவனாகி அவர்களின் பிரார்த்தனைக்கு இசைந்து 'பெண்காள் இதோ புறப்பட்டு வருகிறேன்' என்று சொல்லித் திருப்பள்ளி அறையினின்றும் திவ்விய சிங்காதனத்தளவும் வருகின்றான். இதனைக் கண்ட ஆயமகளிர், பண்டு தண்டகாரணிய முனிவர்கள் இராமபிரானைக் கண்டவுடனே இராக்கதர்கள் தமக்கு நேர்ந்த துன்பங்களைச் சொல்லி முறையிட வேண்டும் என்று பாரித்திருந்தவர்கள் இராமபிரானைக் கண்டதும் அரக்கர்களால் தமக்கு நேரிட்ட துன்பங்களை மறந்து இராமபிரானுக்கு மங்களாசாசனம் செய்யத் தொடங்கினதைப்

போலவே, இவர்களும் தங்கள் விருப்பங்களையெல்லாம் மறந்து, மென்மையும் பேரழகும் கொண்ட திருவடிகளைக் கொண்டோ நடக்கச் சொல்லுவது?' என வருந்துகிறார்கள்.

**இவ்வுலகம் அளந்தாய்** : வடிவழகிற்கு இணையில்லாத பெரிய பிராட்டியாரும், பொறுமைக்கு ஒப்பில்லாத பூமிப் பிராட்டியாரும் பூத்தொடுமாறு போலே கூசிப் பிடிக்கும் மெல்லடிகளைக் கொண்டு வெவ்வியகாடு மேடெல்லாம் அகப்பட அளப்பதோ? அன்று எல்லை கடந்து மாவலியிடமிருந்து பூமியை மீட்டுக் கொண்டாற்போல, இப்போது தன் நடையழகினைக் காட்டிப் பிரிவினின்றும் தங்களை மீட்டுக் கொண்டதாகக் கூறுகிறார்கள். **அடிபோற்றி** : தாங்கள் சொன்னவுடனே சுகுமாரமான திருவடிகளைக் கொண்டு உலாவி யருளினபடியை நினைக்கின்றார்கள். திருவுலகளந்தபோது இரண்டடி தானே இட்டது. இப்போது தங்களுக்காகப் பத்தெட்டடியல்லவா இடுவது என்பதை நினைக்கிறார்கள். திரு உலகளந்த அன்று சிலர் வருந்திப் போனார்கள். சிலர் (சுக்கிரன் போன்றவர்கள்) 'அப்பன் அறிந்திலன்' என்று ஆணையிடத் தொடங்கினார்கள். சுக்கிரன் கண்ணிழந்து தொலைந்தான். நமுசிவானில் சுழற்றப்பட்டொழிந்தான். சிலர் (இந்திரன் போன்றோர்) பயனைக் கொண்டுகளித்துப் போனார்கள். மாவல ஔதார்யம் (வள்ளன்மை) பெற்றுப்போனான். அப்போது பரிந்து காப்பிட ('பல்லாண்டு' பாட) தாங்கள் இல்லையே என்ற இழவு தீர இப்போது 'பல்லாண்டு' பாடுகின்றார்கள். 'உன் செவ்வடி செவ்வி திருக்காப்பு' (திருப்பக்கல் காப்பு) என்று சொல்லுகிறவர்களன்றோ இவர்கள்? இத்தகைய உயர் குடியிற் பிறந்தவர்களாதலாலே 'அடிபோற்றி' என்றார்கள். திருவுலகளந்தபோது 'சிவந்த தன்மையனைத்தும் ஆர சென்னி மேலேறக் கழுவினான்' என்று நான்முகன் முதலியோர் கூறும்படி சிறந்த செயல்களைச் செய்த அவதாரமிகையாலும் 'அங்க நின்று' என்னும்படி நின்று இரண்டாம் அடியிலே 'தாவடி' இட்டு வருத்தமுறச் செய்ததாகையாலும் அவ்வளவு வயிறொதல் இல்லை. இராமாவதாரத்தில் தேவத்துவம் கலசாதபடி நான்முகன் உருத்திரன் ஆகியோர் **'நாராயணன்'** என்றாலும் மனிச்சுக்கு இசையுமிடமாகையாலும் 'கான மருங்கல் கல்லதர் போய்' துட்டர்கள் பயிலுமிடமான வெங்கானத்தூடே அம்புவாள் புழங்குமிடமாதலாலும், இராமாவதாரத்தில் செய்த செயலுக்கு வயிறு எரிகின்றார்கள்.

**சென்று** : 'இசையவோர் மூவடி வேண்டிச் சென்ற' என்று ஒரு செல்லுகை உண்டல்லவா? அவ்விடம் அழகாலே நெஞ்சு உருகலாமல்லவா? அழகுக்கு இலக்காகாத தீமனத் தரக்கரை

அம்புக்கு இலக்காக்கின பராபிபவந்நா சாமர்த்துக்குப் பரிகிறார்கள். தென்னிலங்கை செற்ற பிறகு இராமாவதாரத்தில் மங்களாசாசனம் இல்லை என்ற குறை தீர இவர்கள் காப்பிடுகிறார்கள். **சென்றங்கு :** புலி கிடந்த தூற்றிலே சென்ற தட்டி எழுப்பிக் கொல்லுவாரைப் போலே பிராட்டியைப் பிரித்த கொடியவன் இருக்குமியிடத்தில செல்லுவதோ. வழிப்போக்கிலே கரன், தூஷணன், கபந்தன் விராதன் முதலியோரை அழித்த செயல்களை நினைக்கிறார்கள். நீரின்றி வரண்டு கிடக்கும் காடுகள் மலைகள் தொடக்கமானவையெல்லாம். 'கானகம்படி உலாவி உலாவி' என்றவாறு கொடிய காட்டிலே பரலாய மெல்லடிகள் குருதிசோர அந்தத் திருவடிகளைக் கொண்டு நடப்பதோ என்று வயிறு பிடிக்கின்றார்கள். இவ்வாறு நொந்து அழுவது இவர்கட்குக் குடிப்பிறப்பு. "எவ்வாறு நடந்தனை? எம் இராமாவோ" (பெரு.திரு.9.2) என்று சக்கரவர்த்தி புலம்புவதையும் நினைக்கிறார்கள். **தென்னிலங்கை :** அழகிதான கோட்டையையும் அரணையும் உடைத்தாய்க் குளவிக் கூடு கொண்டாற் போலே இம்சிப்பவர்கள் நிறைந்த தேசம். **செற்றாய் :** அடியார்கள் விரோதிகள் தனக்குச் சத்துருக்களாவார்கள்.

**திறல் போற்றி :** இலங்கையில் இராமன் செயல்களையெல்லாம் நினைந்து 'திறல்' என்கின்றார்கள். "தீமனத்தரக்கர் திறலழித்தவனே" என்று - இம்மிடுக்குக்குத் தங்கள் துக்க நிவர்த்திக்கு உடலாயிருந்தது மல்லாமல், அரணுக்கு அரணிடுவாரைப் போலே பரிகிறார்கள். 'மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா' என்று போற்றுபவர்க ளாகையால் இந்த எண்ணம் குடிப்பிறப்பாலே வந்தது. "இலங்கை, பாழாள் ஆகப் படைபொருதானுக்குப் பல்லாண்டுப் பல்லாண்டு கூறுவதும்" (திருப்பல் 3) என்று பரியும் பிறப்பு சித்தமுள்ளவர் களல்லவா? உலகளந்த பொன்னடிகளுக்குக் காப்பிட்டது போல காடுறைந்த பொன்னடிகட்குத் தேடுகிறவர்களுக்கு அஞ்சாமைக்குத் திறலைக் காட்டினான். அத்திறலுக்கு அஞ்சத் தொடங்கினவர்கள், தோளின் அழகுக்குக் காப்பிடப்புக, மல்லடர்த்த திண்மையைக் காட்ட, அதற்கு வயிறெரிந்தாற்போலே. **திறல் போற்றி :** 'கல்லாத வரிலங்கைக் கட்டத்த காகுத்தன்' (நான்.திரு.53) 'தேவனே தேவனாவான்' என்று மண்டோதரி உள்ளிட்டாரைப் போலே தத்துவ நிர்ணயம் பண்ணுதல். "தன் விலங்கை வைத்தான்", "என்றன் தனிச்சரண்", "கூரம்பன் அல்லால்", "மற்றிலேன் தஞ்சமாகவே" என்று இரட்சத்துவ புத்திநடத்தல். 'தென்னிலங்கை ஈடழித்த தேவர்க்கு என்னையும் உளள் என்மின்கள்' என்று போக்கியதா புத்தி நடையாடி இழவு சொல்லி விடுத்தல் செய்யாமல் தங்களை

இரட்சகராக நினைத்துப் பரிகின்றார்கள். சக்கரவர்த்தி திருமகன் தசரதனிலும் விஞ்சும்படி இளமை நிலையில் ஆயுதப் பயிற்சி பெற்ற விசுவாமித்திரர் முதலியவர்களோடு வாள், அம்பு செலுத்தும் மந்திரங்கள் கற்று பெரியவனான பின்பு செய்த செயலல்லவா இலங்கையை அழித்த செயல்? "பிறந்த எழுதிங்களில்" என்கின்றவாறு - எதிரிகள் உண்டென்று அறிவதற்கேற்ற ஞானம் இல்லாத நிலையிலும், ஆயுதம் பிடிக்கவும் அறியாத தொட்டில் பருவத்தில் செய்த செயலல்லவா சகடாசுரவதம்? **பொன்ற :** மாரீசனைப்போல் குற்றுயிராக்கி மேலும் தீங்கு நேரிட சந்தர்ப்பம் இல்லாதபடி கொன்றொழித்தல். இராவணனைப் போல் நேரே சத்துருவாகத் தோன்றாமல், "கள்ளச் சகடம்" (திருப்.6) என்பதை அறிந்து முற்படச் செயற்பட்டமைக்கு வயிறெரிந்து பரிகிறார்கள். **பொன்றச் சகடம் :** சகடம், பொன்ற - கட்டுகுலைந்து உருமாற. சூர்ப்பணகையையும் மாரீசனையும் குற்றுயிராய் விட்ட பின்பு மேலும் தொல்லை விளைவதற்கு வாய்ப்பு தராமல் சகடாசுரனைக் கொன்றொழித்தபடி. **உதைத்தாய் :** முலைவரவு தாழ்த்ததால் தொட்டிலை உதைத்த திருவடிகட்கு இலக்காய் முடியும்படி பண்ணின அநாயாசம். பெருமாள் கைக்கு வில்பிடித்த தழும்பு போலே கண்ணன் திருவடிகட்குச் சாடுதைத் தழும்பு: "தழும்பிருந்த". **புகழ்போற்றி :** பெற்ற தாயும் கூட உதவப் பெறாத சமயத்தில் தன் வலியையே கொண்டு தன்னைக் காத்துக் கொண்டதனால் உண்டான புகழ். நம் போலியருக்கு இரட்சகமான திருவடிதானே அவனுக்கும் இரட்சகம் ஆயிற்றென்று பரவின புகழ் என்றுமாம்.

'தளர்ந்தும் முறிந்தும் சகடவ சுரர் உடல் வேறாப், பிளந்து வீயத் திருக்காலாண்ட பெருமானே' (திருவாய் 6.9.4) என்ற வாக்கிற் கிணங்க காவலாக வைத்து சகடந்தானே அசுராவேசத்தாலே கண்ணனுக்குத் தீங்கு விளைக்கப்புக்கது. உடனே கண்ணபிரான் பாலுக்கழுத பாவனையில் நிமிர்த்தப்பட்ட தன் திருவடிகளால் உதைத்துத் தள்ளி அசுரனை முடித்தபடியை அநுசந்தித்து, அப்போது மங்களாசாசனம் செய்வாரில்லையே என்ற குறை தீர இப்போது மங்களாசாசனம் செய்கிறார்கள். **போற்றி :** இராமாவதாரத்தில் காட்டிலும் கிருட்டிணாவதாரத்தில்தான் மங்களாசாசனம் பண்ண வேண்டியிருத்தல் முக்கியமானதாகத் தெரிகின்றது. இராமவதாரத்தில் தந்தை தசரதன் சம்பராந்தகன், ஊர் திருவயோத்தி, ஆசாரியர்கள் மந்திரவாதிகளான வசிட்டர், விசுவாமித்திரர் முதலியோர். பிள்ளைகள் ஆண் திறல் மீளி மொய்ம்பில் அரக்கன் குலத்தைத் தடிந்தவர்கள். சிறந்த குணவான்கள். இங்கோ (கிருட்டிணாவதாரத்தில்), மாதா

பிதாக்கள் இடையர்கள். ஊர் ஆயர்பாடி (இடைச்சேரி). கம்சன் முதலியோர் எதிரிகள். பிருந்தாவனத்தில் முளைத்தெழும் பூண்டுகளுடைய இராக்கதர்கள். தமையன் ஒருக்கணம் தப்பில் பாம்பின் வாயில் விழும் தீம்பன். பூதனை முதலியவர்களாலே பிறந்த அபாயங்களுக்கு ஒரு முடிவு இல்லை. ஆகவே, இனி மங்களாசாசனம் தவிரக் காவல் இல்லை.

**இன்னும் புகழ் போற்றி** : 'செய்ய பாதம் ஒன்றால் செய்த சிறுச் சேவகமும்' (திருவாய் 5.110.3) என்று க்ஷரை மூரிருகிக் காப்பிட வேண்டுமல்லவா? "அருளின் பெருநசையால்" என்று ஆண் பிள்ளையென்று ஆசைப்படுவார். "என்னை நிறை கொண்டான்" என்று - என்று அடக்கங்கெட்டு மடலெடுக்கத் தேடுவார். "உறக்கில் நிமிர்த்தி" என்று ஊடுதலாய்ப் போனார்கள். இவர்கள் செயலுக்கு வயிறெரிகின்றார்கள்.

பசலைத் தனத்தில் செய்த செயல் என்று அதனை விட்டுவிடலாம். பருவம் நிரம்பிச் செய்த செயலோ கணக்கு வழக்குப் பட்டிருக்கிற தென்று அதற்கு வயிறெரிகிறார்கள். **கன்று குணிலா எறிந்தாய்** : இதனை இளங்கோ அடிகள் 'கன்று குணிலா கனி உதிர்த்த மாயவன்'[51] என்று நினைந்து போற்றுவர். இங்கு வத்ஸாசுரனைக் கொண்டு கபித்தாசுரனைக் கொன்றது முள்ளைக் கொண்டு முள்ளைக் களைவது போன்றது. இது எதிரிகளைக் கொண்டு எதிரிகளை அழித்த செயலாகும். கன்றாய் நின்ற அசுரனைக் கொன்ற தீம்பு பூவுலகமெல்லாம் பிரகாசிக்கும்படி செய்தாய் என்று வயிறெரியும் செயலல்லவா?

**'வழக்குஅன்று கண்டாய் வலிசகடம் செற்றாய்**
**வழக்கு என்று நீமதிக்க வேண்டா – குழக்கன்று**
**தீவிளவின் காய்க்குஎறிந்த தீமை, திருமாலே!**
**பார்விளங்கச் செய்தாய் பழி' (இரண்.திருவந். 19)**

என்ற பூதத்தாழ்வாரின் பாசுரம் ஈண்டு நினைவிற்கு வருகிறது. சகடாசுர நிரசனம் தன்னைத்தான் காப்பாற்றிக் கொண்டதுமல்லாமல் உலகத்தை வாழ்விக்கச் செயல் என்றாலும், பிராட்டிமாரும் தொட்டுப் பிடிக்கக் கூசும்படி மிகவும் மென்மையான திருவடியைக் கொண்டு ஒரு முரட்டு வண்டியை உதைத்துத் தள்ளியது மிகவும் தகுதியற்ற செயல் என்று தோற்றுவது மங்களாசாசனம் செய்பவர்கட்கு இயல்பாதலால் 'வழி சகடம் செற்றது வழக்கன்று' என்கின்றார். கடினப் பிரகிருதியான அசுரனை மிக மென்மையான திருக்கையாலே பிடித்துச் சுழற்றியெறிந்த போது அத்திருக்கைகள் எவ்வளவு

51. சிலப் – ஆய்ச்சியர் குரவை – பாட்டு1 குணில் – எறிதடி, எறிகருவி.

நொந்திருக்குமோ என்று கொண்ட வயிற்றெரிச்சலால் 'வழக்கென்று நீ மதிக்க வேண்டா' என்றும், 'பார் விளங்கத் தீமை செய்தாய்' என்றும் 'பழி செய்தாய்' என்றும் பேசினார் ஆழ்வார். மார்பிலிருக்கிறவர்களோடு மண்ணில் கிடப்பவர்களோடு வாசியற (வேற்றுமை நீங்க) 'பழிகேடன்' என்று சொல்லும்படி நேரிட்டது. 'திரிகாற்சகடம் சினமழித்துக்கன்றால் விள வெறிந்தான்' என்கின்றபடியே, ஓரசுரன் விளவாய் நிற்க ஓரசுரன் கன்றாய் நிற்க, சத்துருவையிட்டு சத்துருவை எறிந்தால், அவர்கள் இருவரும் ஒன்று சேர்ந்து கொண்டு மேல்விழுந்தால் 'என்படக் கடவோம்' என்று வயிறு பிடிக்கிறார்கள். குஞ்சித்த திருவடிகளுக்குப் பல்லாண்டு பாடுகிறார்கள். "என்று மென் பிள்ளைக்குத் தீமைகள் செய்வார்கள் அங்ஙனமாவார்கள்" என்று தாயார் உட்பட வயிறு பிடிக்கின்றார் களன்றோ? **அடி போற்றி, கழல் போற்றி** : நீட்டின திருவடிகளுக்கும் குஞ்சித்த திருவடிகளுக்கும் சூழ்ந்திருந்து பரிவாரைப் போல் பரிகின்றார்கள். விரோதி நரசனம் பண்ணித் தன்னை நோக்குகைக்கு அடைவு கெட்டிருந்தால் அநுகூலர் விரோதிகளாக ஆச்ரிதரட்சணம் பண்ணுவது சால அடைவுண்டாயிருக்கிறதென்று அதற்குப் பரிகிறார்கள்.

**குன்று குடையாய் எடுத்தாய்** : இதற்கு முன்பு இந்திரனுக்காகச் செய்த செயல் அவனுக்கு உதவுவதற்காக. அவன்தான் இப்போது பகையாகிவிட்டான். முன்னர் இந்திரனுக்குப் பகையானவர்கள் நலிந்த நலிவுக்காக வயிறெரிந்தார்கள். இப்போது அவன்தான் நலிந்த நலிவுக்கு வயிறெரிகின்றார்கள். பகவத் சேஷமான பொருளைத் தங்களுடையனவாக நினைத்துக் கொள்வதில் அசுரர்கட்கும் தேவர்கட்கும் வேற்றுமை இல்லையல்லவா? இந்திரன் மேகங்களை ஏவி ஏழுநாள் விடாமழையாகக் கல்மாரி பெய்வித்துத் திருவாய்ப் பாடிக்குப் பெருந்தீங்கு இழைத்த காலத்தில் கண்ணன் அவனைத் தலையறுத்துப் போகச் செய்யலாம். ஆனால் அவன் அங்ஙனம் செய்திலன். 'இவன் உணவைக் கொள்ளை கொண்ட நாம் உயிரையும் கொள்ளை கொள்ளலாகாது. கைசலித்துப் பாகும்போது தானே ஓய்ந்து நிற்கிறான்' என்று திருவுள்ளம் பற்றித் தன் செயலான இரட்சணத்தை மட்டும் செய்து போனானல்லவா? இதுதான் மகத்தான குணம். தவிர மலையைக் குடையாக எடுத்து ஆயர்களையும் ஆநிரைகளையும் காப்பாற்றியதால் இவன் இரட்சகத்துவம் தெளிவாகிறது.

**குணம்** : "பாயும் பனி மறைத்த பண்பாளா" (முத.திருவந். 86), "சீர் கற்பன் நாளும்" என்று அறிவுடையார் நாள்தோறும்

கற்பதொரு குணமல்லவா? குணம் போற்றி : "என்றனக்கோர் துணையாளனாகாயே" என்று போற்றுதல். மழை நின்றதும் மலையை விட்டு வேலைப் பிடிப்பவனல்லவா? அதனால் வேலுக்குப் பரிகின்றார்கள் ஆயமகளிர். எல்லாக் குணங்களையும் ஒருவர் பற்றியே சொன்னால் இவன் மிடுக்கைக் கண்டு கண்ணெச்சில்[52] படுவர் என்று அஞ்ச, அவ்வாறு போற்றுவதைவிட்டு இவ்வேலன்றோ அவ்வளவையும் செய்தது என்கிறார்கள். "மிடுக்கிலாமையால் யான் மெலிந்தேன்" என்பதல்லவா இவர்கள் நிலை?

**வென்று பகை கெடுக்கும்** : சக்கரவர்த்தியும் வில் பிடித்து பெருமாளும் வில் பிடித்தாற் போலே 'கூர்வேல் கொடுந்தொழிலன்' (திருப். 1) மகனாகையாலே அவனுக்கும் வேலே ஆயுதம். மேலும், ஆச்ரித விரோதிகளான பிரதிபட்சத்தை அறச் செய்து மாய்த்தலுமாம். "வேலைப் பிடித்தென்னைமார்கள்" என்றது காண்க. **நின் கையில் வேல் போற்றி** : வெறும் புறத்திலே ஆலத்தி வழிக்க வேண்டியிருக்க, அதற்கு மேலே வேலைப் பிடிப்பதே என்று வேல் பிடித்த கைக்குத் திருப்பல்லாண்டு பாடுகின்றார்கள். 'வடிவார் சோதி வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு' (திருப்பல்லாண்டு 1) என்று ஆயுதங்களுக்கு மங்களாசாசனம் பண்ணினாரல்லவா இவர் தமப்பனார்?

**கையில் வேல்** : வேலை எதிரிகள் மீது செலுத்த வேண்டா. பிடித்த பிடியிலே உகவாதாரை முடித்துவிடும். நின் கையில் வேல் இருப்பதை உணராதிருக்கும்போது சீறின போதுதான் பிறவியை முடிப்பதற்காகத் திருவாழியை எடுக்கும் நிலை வந்தெய்தும். **வேல் போற்றி** : ஈசுவரனைக் காணும்போதன்றோ 'ஆழியும் பல்லாண்டு' என்பது. பெருமாளைக் காணும்போதன்றோ "சார்ங்கமென்னும் வில்லாண்டான் தன்னை - பல்லாண்டு" (திருப்பல்லாண்டு - 11) என்பது. **நின் கையில் வேல் போற்றி** : வெற்றியடைய நெடுங்கடலுள் தனி வேலுய்த்த வேள் (முருகன்) முதலாக வென்றவன் கையிலன்றோ வேல் இருப்பது? ஆகவே, பரிகிறார்கள்.

**என்றென்று** : இதுதானே பயன் எனல். 'எனக்கு நீ ஒரு பலனைக் கொடு. யான் உனக்கு ஒரு பிரதிபலனைத் தருகிறேன்' என்பது யஜுர்வேதம். சம்சாரிகள் புறம்புங் கொள்ளுவர். இவன் பக்கலும் கொள்ளுவர். இவர்கள் புறம்புங் கொள்ளுவார்கள். இவன் பக்கலிலும் கொள்ளார்கள். "ஒன்று நூறாயிரமாகக் கொடுத்துப் பின்பு ஆளுஞ் செய்வன்" (நாச். திரு. 9.7) என்று அவனுக்குத் தான் கொடுத்து 'ஆந்தனையும் காட்டி' (திருப். 2) என்று - புறம்பும்

52. கண்ணெச்சில் – அழுக்காறுள்ளத்தோடு காண்பதால் வரக்கூடிய தோஷம். கிருட்டிணன் மிடுக்கை வேலின் மேலேற்றிச் சொல்வது இத்தோஷம் வாராமைக்காக.

தானே கொள்ளும் எனல். பயன் பெறுமளவும் சொல்லி பிறகு அது மாறும்போது 'பயனுக்குப் பயன் வேண்டுமோ?' என்று இதுதானே பலமாக இருக்கும் என்று கருதுபவர்களல்லவா? மேலும், பல்லாண்டென்றால் பின்னரும் பல்லாண்டு என்பதுதானே. 'போற்றி' என்று பிரமேமமும் அடியாக வந்த கலக்கத்திற்குத் தெளிவு உண்டாகும்போதுதானே இச்சொல்லுக்கு மாறுவது? "வெம்மா பிளந்தான் தன்னைப் போற்றி" என்பது காண்க. 'அடிபோற்றி, திறல் போற்றி, புகழ் போற்றி, கழல் போற்றி, குணம் போற்றி, வேல் போற்றி' என்று இவர்கள் நாக்குக்கு இடும் அறுசுவைகள் அநுபவித்து மகிழத்தக்கவை.

**உன் சேவகமே ஏத்திப் பறை கொள்வான் :** கண்ணனுடைய வீர குணத்துக்கன்றோ இவர்கள் தோற்பது, அதனை ஏத்தித்தானே இவர்கள் அவனை அநுபவிக்கிறார்கள்? உறவினர்களின் தொல்லைகளாலே தளர்ந்த அபலைகட்கு அவனுடைய வெற்றிச் செயலன்றோ பலத்துக்குக் காரணம்? **என்றென்றுன் சேவகம் :** "உன்னுடைய விக்கிரமம் ஒன்றொழியாமல் எல்லாம், என்னுடைய நெஞ்சகம்பால் எழுதிக் கொண்டேன்" (பெரியாழ்.திரு. 5.4:6) என்று சொல்லுபவர்களல்லவா இவர்கள்? **உன் சேவகமே ஏத்தி :** வேறொருவருடைய சேவகம் கலந்தேத்தோம். திரிவிக்கிரமனையும் பெருமாளையும் (இராமன்) கலந்தன்றோ ஏத்துகிறார்கள்? அது அவதார முடிவின் செயல் என்றிருக்கின்றார்கள். இவன் சிறுவனாக இருந்தபோது ஆற்றிய செயல்கள் முன்னைய நிலையில் ஆற்றியவை என்றிருப்பார்கள். "சிலை இறுத்தாய் திரிவிக்கிரமா திருவாய்ப்பாடிப் பிரானே", "வருக வருக வருக இங்கே, வாமனநம்பீ வருக இங்கே காகுத்த நம்பீ வருக இங்கே" (பெரியாழ்.திரு. 2.9:2) என்று தாயார் உட்பட கிருட்டிணனை அழைப்பது இப்படித்தானே. இவனுக்கு நாள் ஸ்ரீவாமனன் பிறந்தநாளாக்கினாள். எட்டு மாதம் வயிற்றிலே இருந்த இவனை "பன்னிரு திங்கள் வயிற்றில் கொண்ட அப்பாங்கினால்" (மேலது 3.2:8) என்றாள். "சிறியன் என்று என் இளஞ்சிங்கத்தை இகழேல் கண்டாய், சிறுமையின் வார்த்தையை மாவலியிடைச் சென்று கேள்" (மேலது 1.5:8) என்றாள். "தடந்தாளிணை கொண்டு சார்ங்கபாணி தளர் நடை நடவானோ" (மேலது 1.8:1) உன்றாள். "மாணிக் குறளனே தாலேலோ வையம் அளந்தானே! தாலேலோ' (மேலது 1.4:1) என்று தாலாட்டினாள். இவர்கள் (ஆயச் சிறுமிகள்) "ஓங்கி உலகளந்த உத்தமன்" (திருப். 3) என்கின்றார்கள். "ஆயர் குலத்தினில் தோன்றும் அணி விளக்கு" (திருப்.5) என்கிறார்கள். "நாற்றத் துழாய்முடி நாராயணன் நம்மால்,

போற்றப் பறைதரும் புண்ணியன்" (திருப். 10) என்றார்கள். எழுப்புகிறபோது "அம்பரம் ஊடறுத்து ஓங்கி உலகளந்த உம்பர் கோமானே" (திருப். 17) என்றார்கள்.

**ஏத்திப்பறைகொள்வாள்** : ஏத்துகைக்குப் பிறகு புருஷார்த்தமே பலமாயாலும், ஏத்தாதபோது புருஷார்த்தம் இல்லையாகையாலும் ஏத்துவதே புருஷார்த்தம் என்பது கருத்து. **இன்று** : இசைவு பிறந்த இன்று என்னுதல். நென்னேற்று வந்தோமா? உராக இசைந்த இன்று வந்தோம். **யாம்** : உறவினர்களாலே நெடுங்காலம் நலிவுபட்ட நாங்கள். பெரு மிடுக்கரான கிழவர்கள் கிடந்துறங்க, குளிர் பொறாத சிறுமிகளான நாங்கள். **வந்தோம்** : நீ வருவதற்குப் பிராப்தமாயிருக்க, விரகவேதனை பொறுக்க முடியாமல் 'எங்கள் வரவு உனக்குப் புண்ணாயிருக்க ஆற்றாமை உந்த வந்தோம். எங்களை அறியாமல் செய்தோம். நீயும் உன்னையறியாமல் செய்வதுண்டல்லவா? **இரங்கு** : எல்லாம் பட்டாலும் அவன் இரங்கினாலல்லது காரியம் ஆகாது, "அவனருளால் அவன் தாள் வணங்குவது" (சிவபு. அடி. 18) தான் பிராப்தம் என்பது மணிவாசகம். அவன் இரங்குவது அவனுடைய சொரூபம். அவனுக்கு என் வருகின்றதோ என்று இரங்குவது ஆய்ச்சிகளின் சொரூபம். தாங்கள் பண்ணின மங்களாசாசனம் சாதனமன்று என்றிருக்கின்றார்கள். தாங்கள் கடைப்பிடிப்பது சாத்தியோபாயமன்று, அது சித்தோபாயமே என்பது குறிப்பு.

**அன்று இவ்வுலகம் அளந்தாய் - இன்று யாம் வந்தோம்** : நீ எங்களைத் தேடி எல்லாவுலகமும் கடந்து அன்று வந்தாய். இன்று உன்னைத்தேடி நாங்கள் வந்தோம். வையம் அளந்தானைத் தேடி நாங்கள் வந்தோம். **யாம் வந்தோம்** : வையந்தாய மலரடிக் கீழ் முந்தி வந்து நீ நிற்க நாங்கள் பெற்றோம். அளந்தாய், தென்னிலங்கை செற்றாய், சகடம் உதைத்தாய். **யாம் வந்தோம்** : "மண்ணளந்த கண் பெரிய செவ்வாய் என் காரேறு வாரானால்" "காகுத்தன் வாரானால், கண்ணனும் வாரானால்" என்றிருத் உன்னுடைய பிரதான துணைவியரில் எங்களுக்குண்டான வேற்றுமை (வாசி) பாராய். **அன்றிவ்வுலகம் அளந்தாய் இரங்கு** : உவந்த உள்ளத்தனாய் எங்களோடு அணைந்ததில்லையாகிலும் மனத்தினாலாகிலும் கருணை காட்டுவாய். **அளந்தாய் இரங்கு** : "நீரேற்று அளந்த நெடிய பிரானருளாவிடுமே" என்றன்றோ நாங்கள் இருப்பது. **தென்னிலங்கை செற்றாய் - இரங்கு** : சிறிது தாழ்ந்தால் "இரக்கம் எரீர்" என்று உன்னை வசைபாடுவர்களன்றோ என்று தாய்மார்கள் சொல்லுவது போலேயோ "இரக்கமேல் ஒன்றுமிலாய்" என்று நாங்கள் சொல்லோமோ? **சகடம் உதைத்தாய் - இரங்கு** :

உருளும் சகடம் உதைத்த பெருமானார் அருளின் பெரு நசையாலன்றோ நாங்கள் வந்தது? குன்று குடையாய் எடுத்தாய் - இரங்கு : குன்று கடையாக எடுத்து ஆநிரைகாத்த கோவலனார் ஒன்றும் இரங்கார் என்று சொல்லாமல் கருணை காட்டுவாயாக.

உள்ளுறை : 'வந்தோம்' என்பதனால் போற்றியிலுள்ள ருசியின் காரியத்தையும், 'இரங்கு' என்பதனால் - பேற்றுக்குச் சாதனமான பகவானுடைய கருணையையும், 'ஏத்திப் பறை கொள்வான்' என்பதனால் புருஷார்த்தமாகிய கைங்கரியத்தையும் கூறியவாறாயிற்று. பிராப்ய வேகத்தால் தாங்களே வந்த குற்றத்தைப் பொறுக்க வேண்டும் என்ற கருத்தும், 'இன்று யாம் வந்தோம் - இரங்கு' என்றவிடத்துத் தொனிக்கும்.

# 25. தடைகளைப் போக்கி தங்களை அங்கீகரிக்குமாறு வேண்டுதல்

## இருபத்தைந்தாம் பாசுர விளக்கம்

### "ஒருத்தி மகனாய்"

**ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓர்இரவில்**
**ஒருத்தி மகனாய் ஒளித்து வளர**
**தருக்கில்லா னாகித்தான் தீங்கு நினைந்த**
**கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்**
**நெருப்பென்ன நின்ற நெடுமாலே உன்னை**
**அருத்தித்து வந்தோம் பறைதருதி யாகில்**
**திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி**
**வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்தேலோர் எம்பாவாய்.**

(சொ.பொ) : ஓர் இரவில் - ஓர் ராத்திரியில்; ஒருத்தி மகனாய் பிறந்து - (தேவகி) என்ற ஒப்பற்றவளுக்கு மகனாய்த் திருவவதரித்து; ஒருத்தி மகனாய் - வேறொருத்தியாக ஒப்பற்ற யசோதைப் பிராட்டிக்குப் பிள்ளையாய்; ஒளித்து வளர - மறைந்து வளர; தரிக்கிலானாகி - (அவ்வாறு வளர்வதைக் கேட்டு) பொறாதவனாய்; தான் - (பின்னால் படப் போகிறதை அறியாத) தான்; எவ்வகையிலாவது இவனைக் கொல்லக்கடவோம் என்று) தீங்கு நினைத்த - தீமையை எண்ணின; கஞ்சன் - கம்சனது; கருத்தை - எண்ணத்தை; பிழைப்பித்து - வீணாகும்படி செய்து; வயிற்றில் - அவனது வயிற்றில்; நெருப்பென்ன - நெருப்புப் போல் அழலும் படியாக; நின்ற - (அச்சத்தை உண்டாக்கிக் கொண்டு) இருந்த; நெடுமாலே - அடியார் பக்கள் பெருங்கருணையுடையவனே; உன்னை அருத்தித்து வந்தோம் - உன்னிடத்தில் புருஷார்த்தத்தை யாசித்துக் கொண்டு வந்தோம்; பறை தருதியாகில் - (எமது) வேண்டுகோளை அருளுவாயானால்; (அதனைப் பெற்று), திருத்தக செல்வமும் - பிராட்டி ஆசைப்படத்தக்க செல்வத்தையும்; சேவகமும் - அதனைக் காக்கவல்ல வீரியத்தையும்; யாம் - நாங்கள்; பாடி - உகப்புடன் சொல்லிப் பாடி; வருத்தமும் தீர்ந்து - உன்னைப் பிரிந்து படும் விசனமும் நீங்கி; மகிழ்ந்து - மகிழ்ச்சியடைந்து (இருப்போம்) என்கிறார்கள்.

**(க-து)** : கண்ணன் இவர்களை நோக்கி 'உங்களுக்கு வேண்டுவது என்ன?' என்று வினவ, அவர்களும், 'எங்களுக்கு உன்னை அடைவதில் தடையாக ஏதேனும் இருப்பினும் அதையெல்லாம் போக்கி எங்கள் துயரமெல்லாம் நீங்கி நாங்கள் மகிழுமாறு எங்களை அங்கீகரிக்க வேண்டும்' என்கின்றார்கள் இப்பாசுரத்தில்.

**விளக்கம் : ஒருத்தி** :[53] எம்பெருமான் சேதநரின் உள்ளே வியாபித்து நியாமகனாயும் சர்வான்மவாயும் உள்ளான் (யஜுர்வேதம் 3.21) என்கின்றபடியே சர்வலோகங்களுக்கும் நியாமகனானவனையும் கூட நியமிக்குமவளாகையாலே நாட்டில் தனக்கு ஒப்பற்றிருக்குமவள். **ஒருத்தி மகனாய்** : சர்வலோகங்களுக்கும் பிதாவானவன் ஒருத்தி மகனாவதே. சக்கரவர்த்தி (தசரதன்) தவம் பண்ணி மாணிக்கம் போலே நாலு பிள்ளைகளைப் பெற்றாற்போலே நால்வரும்[54] கூடி தவம் பண்ணி ஒருவனைப் பெற்றாலும் பேறு ஒருத்தியதாகையாலே **'ஒருத்தி'** என்கிறார்கள். **'ஊழி முதல்வன் ஒருவனே'** (திருப். 4) என்கின்ற பொருளை வயிற்றில் அடக்கப் பெற்றவள் ஒருத்தி தானே. ஒருத்தி - ஒப்பற்றவள். பரப்பிரம்மமே தனக்கு மகனாகப் பிறக்க வேண்டும் என்று கோரினவள் இவளன்றோ? ஆகவே இவளுக்கு ஒப்புண்டோ என்றார். ஆகவே இவளை ஒருத்தி என்றது. இப்படிப்பட்ட தேவகியும் 'திருவிலேன் ஒன்றும் பெற்றிலேன். எல்லாம் தெய்வ நங்கை யசோதை பெற்றாளே' (பெரு.திரு.7.5) என்று கூறியதனால் அவளையும் ஒருத்தி என்றது. **ஒருத்தி மகனாய்:** எல்லா உலகங்களுக்கும் எல்லாப் பூதங்கட்கும் முந்தைத்தாய் தந்தையாய் இருப்பான் ஒருவனைத் தனக்குப் பிள்ளையாகப் பெறுவதற்கு நோன்பு நோற்க, உலகிற்குத் தலைவனுமாய், எங்கும் வியாபகனுமாய், நித்தியனுமாயிருக்கின்ற மகன் ஒருவர்க்கல்லா மாமேனி மாயன், சிலர் விரும்பியதற்காக மகன் ஆனான் என்பதற்காக அன்றி **'தேவகி புதல்வன்'** என்றே தன்னை நினைக்கும்படி அவ்வருகு தனக்கு ஒரு ஏற்றமுண்டு என்று அறியாதபடி பிள்ளையானான்.

**மகனாய்ப் பிறந்து** : பிறந்தபோது நடைபெற்ற செய்கையைச் சொல்வது. சக்கரவர்த்தி திருமகன் (இராமன்) பெரியவனான பின்பு

53. ஒருத்தி மகனாகப் பிறந்து – ஒப்பற்ற தேவகிப் பிராட்டியின் வயிற்றில் பிறந்து, அவள் நியமித்தபடி, நான்கு கைகளில் இரண்டையும், அவற்றில் பிடித்திருந்த சங்கு சக்கரங்களாகிய ஆழ்வார்களையும் மறைத்தபடியாலே ஒப்பற்றவளாகின்றாள். பிறந்து – வாசுதேவர், தேவகி, நந்தகோபர், யசோதை ஆகிய நால்வரும் தவம் செய்து பெறுகையாலே பிறந்து. கண்ணன் பிறப்பு கிருபையால் ஏற்பட்டது. நமது பிறப்புகள் கர்மத்தினால் ஏற்படுவன.

54. நால்வர் – வசுதேவர், தேவகி, நந்தகோபர், யசோதை என்பவர்கள்.

'பித்ரு வசன பரிபாலனம்' பண்ணினான். இவன் பிறந்தபோது வசுதேவர் கேட்டுக் கொண்டபடி ஆழ்வார்களையும் (சங்கு, சக்கரம்) தோள்களையும் மறைத்தான் அன்றோ? **பிறந்து** : கர்மவசத்தால் பிறந்தவன் படுவதெல்லாம் கிருபைவசத்தால் பிறந்தவன் பட்டபடி. சிலர் 'மகனாக வேண்டும்' என்று ஆசைப்பட்டால் தூணிலே தோன்றினாற் போலேயாதல், ஆனைக்கு (கஜேந்திரன்) உதவினாற் போலே யாதல் வந்து உதவலாம். ஈசுவரனே வந்து பிறக்க வேண்டும் என்று நோற்றபடியாலே, பத்து மாதம் கர்ப்ப வாசத்திற்குப் பதிலாக 'பன்னிரு திங்கள்' கர்ப்பவாசம் பண்ணிப் பிறந்து 'உம்முடைய வயிற்றினின்றும் நாம் பிறந்தோமே' என்று பெருமை (சோபனம்) சொல்லிக்கொண்டு பிறந்தான். "பிறந்தவாறும்" என்று - நம்மாழ்வார் (திருவாய் *5.10:1*) ஆழங்கால் படும்படியல்லவா பிறந்தது? ஆவிர்ப்பவித்தான் என்கிறது கர்ப்பத்தில் தோஷஸ்பர்சம் இல்லை என்கைக்காக. நித்திய சூரிகள் சேவிக்க இருக்கிறவன் சம்சாரத்திலே பிறந்த இக்குணம் இழக்கவொண்ணாது என்று இருடிகளைப் போலே ஆவிர்ப்பித்தான் என்று குறை (அவத்யம்) சொல்லாமல் நிறம் பெறும்படி பிறந்தான் என்பார்கள் ஆழ்வார்கள். நம்முடைய கர்மம் நம்முடன் அவனை ஒரே சாதியாக்கும்; அவனுடைய கிருபை நம்மை அவனுடன் ஒரே சாதியாக்கும். "பொன்மேனியனாவும் கர்த்தாவாயும் ஈசனாயும் பிரம்மகாரணனாயுமுள்ள புருஷனை, பிரம்ம ஞானி எப்போது காண்கிறானோ, அப்போது வித்வானாகிய இவன் புண்ணிய பாவங்களை விட்டு நிரஞ்சனனாய் பரமான்மாவுடன் சமம் பெறுகின்றான்" (முண்டக உபநிடதம்), அவன் பிறவி நமக்கென்று கோல, நம் பிறவி அவன் மாதா பிதாக்கள் காலில் விலங்குபட்டது படும்; நம் பிறவி நம்மையும் அவனையும் அகற்றுவதற்கு உடலாய் இருக்கும்; அவன் பிறவி இருவரும் அணுகைக்கு உடலாய் இருக்கும்.

**ஓர் இரவில்** : அவ்விரவை ஒக்கும் இரவு முன்பும் இல்லை. பின்பும் இல்லை. **ஒருத்தி மகனாய்** : ஒருத்தி இவனை 'மகனாகப் பெற வேண்டும்' என்று ஆச்ரயிக்க, அவளுக்கு அவதார ரசத்தைக் கொடுத்து, இவளுக்கு லீலா ரசத்தை அநுபவிப்பித்தான். **ஒருத்தி மகனாய்** : அவ்விடத்தில் முலைச்சுவடு அறியாமல் போந்தபடியாலே, அமுது முலைப்பால் குடித்த இடம் அல்லவா பிறந்த இடம்? பிறப்பித்தவர்களைவிட வளர்த்தவர்கள்தாமே முக்கியர்? யாதவத்வத்தையும் கோத்வத்தையும் ஏக காலத்திலேயாக்கினான். யதுகுலோத்பவன் என்ற இருடிதானே கோபாலன் - யாதவ குலத்தை எடுக்கக் கடவன் என்றானன்றோ? யசோதைப் பிராட்டியாக பூதனை பாவித்து, இவன் உண்ணாதபோது முலைவிரியும்படியான

தசையையுடையவளாய், பிள்ளையாகக் கண்டெடுத்து முலை கொடுக்க, அது பெறாவிடில் வயிறாராதபடியாய் இவனும் முலையுண்ண, இவளைப் "பிள்ளை" என்று விச்வஸிக்க ஒண்ணாமல் துணுக்குத் துணுக்கென்னும்படி இவளாகப் பாவித்து அவள் பக்கல் பிமாறுபவன் இவள் பக்கல் பிள்ளைத்தனத்தில் தப்ப நில்லானே. "மகனாகக் கொண்டெடுத்தாள்" என்பன போன்ற வாசகங்கள் காண்க.

மகனாய் : மதுரையில் தேவகிக்குப் பிள்ளையாக வந்ததனால் இழவு ஏற்பட்டது. 'நந்தன் பெற்றனன்' - யசோதைப் பிராட்டி நந்தனைக் கைப்பிடித்த நேரம் அவரைப் பேறு பெற்றவராக்கியது; தேவகியைக் கைப்பிடித்த முகூர்த்தத்தாலே கண்ணனை இழக்கும்படி நேரிட்டது.

**நந்தன் பெற்றனன் நல்வினை இல்லா**
**நங்கள் கோன்வசு தேவன்பெற் றிலனே** (பெரு.திரு. 7.3)

**திருவி லேன்ஒன்றும் பெற்றிலேன் எல்லாம்**
**தெய்வ நங்கை யசோதை பெற்றாளே** (மேலது 7.5)

என்ற குலசேகரரின் வாக்குகள் நம் நினைவில் எழுகின்றன. மேலும், 'மருவும் நின்திரு நெற்றி' (மேலது 7.5) என்பதால், யசோதை கண்ணனுக்குத் திருப்பவளத்தில் முலை கொடுக்கும் காட்சியும், அப்போது குழந்தையின் நெற்றியில் சாத்தின சுட்டியின் அசைவும் அவன் முறுவலும், அவன் தந்தையைப் போலுள்ளான் என்று தேவகி உள்ளம் குளிர்தல்; அப்போது குழந்தை தன் விரலை வாயில் இட்டுக் கொண்டு பேசும்போது வெளியிட்ட மழலைச் சொல் - இவையெல்லாம் யசோதை கண்டு அநுபவித்த பேறுகள். **ஒருத்தி மகனாய்** : கம்சன் மாய்ந்து பல நாட்கள் ஆகியும் இந்நாள் என்று கூறாமல் மறைத்துப் பேசுகிறார்கள் பொல்லாங்கு விளையும் என்னும் அச்சத்தாலே 'அத்தத்தின் பத்தா நாள்' என்னுமாப்போலே. **ஒருத்தி:** "என்ன நோன்பு நோற்றாள்கொலோ இவனைப் பெற்ற வயிறுடையாள்" (பெரியாழ்.திரு. 2.2:6) "ஞாலத்தில் புத்திரனைப் பெற்றார் நங்கைமீர் நானே மற்றுயாரும் இல்லை" (மேலது 3.3:1) என்ற பெரியாழ்வார் வாக்குகள் யசோதையை ஒப்பற்றவள் என்பதைக் காட்டுகின்றன.

**ஒளித்து வளர** : கம்சனுடைய தீய பார்வை படாதவாறு வளர்ந்த படியைச் சொல்லுகிறது.[55] பிறந்த இடத்தில் தோன்றப் பெறாவிட்டாலும்

55. தொட்டில் பிராயத்தில் பூதனை, சகடாசுரன் நளகூபர மணிக்கிரீவர்கள் ஆகியோரை எளிதாகச் செய்து முடித்த பெருமிடுக்கன் கம்சனிடத்தில் அஞ்சி வளர்ந்தான் என்று சொல்ல முடியுமோ? ஆகவே ஒளித்தென்றது – தன்னுடைய பெருமைகளையெல்லாம் மறைத்துக் கொண்டு என்றலே பொருந்தும் (அண்ணாசாமி – திருப்பாவை ஆய்பொருள் விளக்கு)

போந்த இடத்திலாவது வெளியிலே வளர முடிந்ததோ? தீயவர்களான பூதனை முதலியோர் கண்பட வொண்ணாதென்று நாட்டார் செய்வன செய்யப் பெறாமல் நிலவகைளிலன்றோ வளரும் நிலை ஏற்பட்டது? "வானிடை தெய்வங்கள் காண" என்று - அநுகூலர் கண்ணில் பட அநுமதியாதவள் (யசோதை) பிரதிகூலர் கண்ணில் பட அநுமதிப்பாளோ? "கன்றின் பின், என்செயப் பிள்ளையைப் போக்கினேன்?" (பெரியாழ். திரு. 3.2:1) என்று இப்பதிகம் முழுவதும் இரங்குவதைக் காண முடிகின்றது. **ஒளித்து வளர** : உகப்பார் சதா கண்டுகளித்து அநுபவிக்க வேண்டிய பொருள் கண்ணுக்குத் தோற்றாதபடி மறைக்க வேண்டும்படி கள்ளர்போல செய்ய வேண்டியது நேரிட்டதே! அவதாரம் செய்தவன் அந்தர்யாமி போல் படநேர்ந்ததே.

**ஒளித்துவளரத் தரிக்கிலாதானாகி** : நாரதர் போன்றவர்கள் கம்சனிடம் சென்று 'உன்னுடைய சத்துரு திருவாய்ப்பாடியில் வளர்கின்றான்' என்று சொல்லக்கேட்ட மாத்திரத்தில் "நம் கண் வட்டத்தில் இல்லையாகில் அவன் என்ன செய்யில் என்?" என்று இராமன், "நால்வகைப் படையுடன் ஐசுவரியத்திற்கு யாதொரு கேடும் இல்லாமல் இருந்தால் அது வந்த அன்று போரிடுவோம் என்று ஆறியிராமல் தரிக்கமாட்டாமல் இருந்தான்.[56] **தான் தீங்கு நினைந்த**: பயத்தாலே பரிந்து மங்களாசாசனம் பண்ணும் விஷயத்தில் தீங்கு நினைத்தது தீயவன் ஆகையாலே. **தான்** : வெகு சீக்கிரத்தில் படப்புகுகின்ற பாடறியாத தான். **தீங்கு நினைந்த** : தங்கள் வாயாலே சொல்லமாட்டாமையாலே "தீங்கு" என்கின்றார்கள். அதாவது - பூதனையுள்ளிட்டாரை வரக்காட்டியும் வில்விழவுக்கு என்று அழைத்தும் நலியத் தேடினவையெல்லாவற்றையும் நினைத்துச் சொல்லுகிறார்கள். கம்சவதத்தளவும் அநுசந்தித்தவர்களாகையாலே மேலே படப்புகுகின்ற பாட்டை அநுசந்தித்துக் கூறுகிறார்கள். **கருத்தைப் பிழைப்பித்து**:[57] பூதனை முதலானோர் நிலவுகளைப் பண்ணப்புக அதற்குத் தப்பித் தன்னை நமக்குத் தந்தபடி. அவன் நினைவை அவன் தன்னோடு போம்படி செய்து என்றுமாம்.

**கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்ற** : 'கிருட்டிணன்' என்றால் வயிறு எரிதலோடேயிருக்கக் கடவராய பெண்களுடைய

56. தரிக்கிலான் : கிருட்டிணன் ஒளித்துத் திருவாய்ப்பாடியில் வாருவதைத் தரிக்கிலான். கிருட்டிணன் தனது (கம்சனது) இதயத்தில் அந்தர்யாமியாயிருக்கிறான் என்பதையும் தரிக்கிலான்.

57. கருத்தைப் பிழைப்பித்து : மனத்தைப் பிழையாக்கிக் கொண்டு அவன் நினைவை அவனோடே போம்படி பண்ணி – அவன் கிருட்டிணனை நலிய எண்ணிய எண்ணத்தை அவனே நலியும்படி செய்து.

பயத்தையெல்லாம் அவன் வயிற்றிலே ஆக்கினபடி. **கஞ்சன் வயிற்றில்** : கம்சனுடைய தப்புகளை நினைத்து, "என் செய்ய என்னை வயிறு மறுக்கினாய்" "வாழகில்லேன் வாசுதேவா" "ஊடுற என்னுடை ஆவிவேமால்" என்றெல்லாம் பேசும்படியான அடியவர்களுடைய பயங்களையெல்லாம் கம்சன் வயிற்றில் கொளுத்தினான். **கஞ்சன் வயிற்றில்** : தேவகியார் வயிற்றில் பிள்ளை. கம்சன் வயிற்றில் நெருப்பு. **நெருப்பென்ன** : 'கஞ்சன் நாள்கவர் கருமுகில் எந்தாய்' - தேவகியார் வயிற்றில் நீரைச் சொரிகிறவனே கம்சன் வயிற்றில் நெருப்பைச் சொரிகிறான்.

**நெருப்பென்ன நின்ற** : கஞ்சனைக் காய்ந்த காளமேகத் திருவுருவன். **நெருப்பென்ன நின்ற** : கம்சன் அநாதி காலம் சஞ்சிதமான பாபம் அனைத்தையும் கண்ட காட்சியிலே அநுபவித்தலும்படி நின்றவன். ஆச்ரிதர் வயிற்றின் நெருப்பை கம்சன் வயிற்றில் கொளுத்தினவன் என்கிறார்கள். அதாவது பயமாகிய நெருப்பு என்றபடி. **நெடுமாலே** : இதெல்லாம் படவேண்டி நேர்ந்தது ஆச்ரிதர் மீது கொண்டிருந்த வியாமோகத்தாலே. **நெடுமாலே** : அப்போது வசுதேவர் பக்கலிலும் தேவகியார் பக்கலிலும் திருவுள்ளம் மண்டி

**"குன்றி னால்குடை கவித்ததும், கோலக்**
**குரவை கோத்த துவும்,குட மாட்டும்**
**கன்றினால்விளவு எறிந்ததும், காலால்**
**காளி யன்தலை மிதித்ததும், முதலா**
**வென்றி சேர்பிள்ளை நல்விளை யாட்டம்**
**அனைத்தி லும்அங்குஎன் உள்ளம்உள் குளிர,**
**ஒன்றும் கண்டிடப் பெற்றிலேன் அடியேன்**
**காணு மாறுஇனி யுண்டெனில், அருளே.** (பெரு.திரு. 7.9)

என்று அவள் பெற்ற இழவெல்லாம் தீர முலைப்பால் திருமேனி யாலேயாய் அவளுக்கு நின்று பாலசேஷ்டிதங்களைக் காட்டின வியாமோகத்தை அவள் காண்பதற்கு முன்னே மஞ்சங்களில் பெண்கள் கண்டு வாழும்படி பண்ணின வியாமோகதிசயத்தை "நெடுமாலே" என்கிறது.

**"கஞ்சனை அஞ்சமுன் கால்வி சைத்த**
**காளையர் ஆவர்;கண் டார்வ ணங்கும்**
**அஞ்சன மாமலை யேயும் ஒப்பர் –**
**அச்சோ, ஒருவர் அழகியவா** (பெரி.திரு. 9.2.6)

என்றல்லவா பெண்கள் பார்த்துக்கொண்டு நின்றது?

'நான் அவ்விடத்தில் அப்படிச் செய்த தீமை உண்டு. உங்களுக்குச் செய்ய வேண்டுவதென்ன?' என்று கண்ணன் கேட்க,

அவர்கள் பின் நான்கு அடிகளில் தங்கள் கோரிக்கையைக் கூறுகிறார்கள்.

**உன்னை அருத்தித்து** : எங்களுக்குப் பிறந்து காட்டவும் வேண்டா. வளர்ந்து காட்டவும் வேண்டா. கொன்று காட்டவும் வேண்டா. உன்னைக் காட்ட அமையும். **உன்னை அருத்தித்து** : உன் பக்கலில் ஒன்று வேண்டி வந்தோம் அல்லோம். உன்னையே வேண்டி வந்தோம். **உன்னை அருத்தித்து** : "என்னையாக்கிக் கொண்டு எனக்கே தந்த" என்று அர்த்தித்துவத்தில் நிரபேட்சனான உன்னை வைகுண்டத்தில் நின்றும் இரப்பாளனாய் இவ்வளவும் வந்தது யாரபேட்சித்து. **நெடுமாலே உன்னை அர்த்தித்து வந்தோம்** : பண்டே வியாமுக்தனான உன்னை அர்த்திக்கையாலே பிச்சின் மேலே பிச்சேற்ற வந்தோம். அர்த்தித்துவத்தின் அளவு எங்கள் வடிவத்தைப் பார்த்தாலே தெரியும்.

"பறை கொள்வான் இன்று யாம் வந்தோம்" என்று சொலலுவது "உன்னை அர்த்தித்து வந்தோம்" என்பதாகக் கொள்ள வேண்டுமோ? என்று கண்ணன் கேட்க, **பறைதருதியாகில்** : எங்கட்கு உத்தேச்யம் செய்ய நினைக்குதியாகில். **உன்னை அருத்தித்து வந்தோம்** : பறைக்குப் பொருள் மேலே சொல்லியபடியல்லவா இருக்கிறது. **தருதியாகில்** : அவர்கள் அர்த்தித்துவம் பயனற்றது. அவன் நினைவாலே பலம் என் கைக்காக "ஆகில்" என்று சொல்லப்பட்டது. இவன் எல்லாம் செய்தாலும் அவன் "அல்லேன்" என்றவாறு சுதந்தரனை வளைப்பிட வொண்ணாதே. இவர்கள் அர்த்தித்துவம் அவன் சுதந்திரத்தைப் போக்கமாட்டாதே. ஆகையாலே "தருதியாகில்" என்கிறார்கள். எத்தனையேனும் தாழ்ந்தவர்கள் "திருவுள்ளமாகில் செய்தருள வேண்டும்" என்றல்லவா சொல்லுவது?

"ஆகட்டும், நினைவுச் சுருக்கம் ஒழிய அறிந்தோம். வந்த காரணம் ஏன்? வருகிறபோது சிலேகித்து வந்ததற்குக் காரணம் என்ன?" என்று கண்ணன் வினவ, "ஒரு கிலேசமும் இல்லாமல் உகப்போடுதான் வந்தோம்" என்கிறார்கள் ஆயச் சிறுமிகள். "பிரிந்திருக்கிற நீங்கள் உகப்புடன் வந்தது எப்படி?" என்று மீண்டும் கண்ணன் வினவ, **திருத்தக்க** : ஸ்ரிய: பதத்துவத்தால் வந்த சம்பத்தையும். "பிராட்டியை 'எனக்கு' என்னும் பெருமையுண்டாகும் போது" அவள் ஆசைப்பட்டு மேல்விழும்படி அதற்கு ஈடான சம்பத்து உண்டாக வேண்டுமல்லவா? **திருத்தக்க செல்வமும்** : "செல்வ சிறுமீர்காள்" (திருப். 1) இவர்களுக்கு செலவு தக்காப் போலே, "போதமர் செல்வக்கொழுந்தான" பெரிய பிராட்டியாருக்குத் தகுதியாயிருக்கும் செல்வத்தினால் வளர் பிள்ளையுடைய செலவு.

சேவகமும் : அந்த ஐசுவர்யத்தைக் காத்து ஊட்டவல்ல ஆண் பிள்ளைத்தனமும் (வீர்யமும்) பிராட்டியினுடைய விரோதிகளையும் பெண்களுடைய விரோதிகளையும் போக்கி உபய விபூதி ஐசுவர்யத்தையும் காத்து ஊட்டவல்ல வீர்யம். "என்றென்று உன் சேவகமே ஏத்தி" (திருப். 24) என்ற இடத்தில் இரண்டும் உண்டல்லவா? "ஆற்றப் படைத்தான் மகனே" (திருப். 21), என்றதுவும், "கப்பம் தவிர்க்கும் கலியே" (திருப். 20) என்றதுவும் ஆகிய இரண்டையும் நினைவுகூரலாம்.

யாம் பாடி : 'கிருட்டிணன்' என்ற பேரையும் வாயினால் சொல்லக்கூடாது என்று முதியவர்களான இடையர்களின் கட்டுப்பாட்டிலிருந்த நாங்கள் அவர்கள் இசைவு கொடுக்க உவப்போடு பாடும் பேற்றை அடைந்து. "புள்ளின் வாய்க் கீண்டானை" (திருப் 13) என்று - ஊரெல்லாம் பாடிக் கொண்டு திரிகிறார்களல்லவா? வருத்தமும் தீர்ந்து : உன்னைப் பிரிந்து நெடுநாள் பட்டகிலேசம் எல்லாம் தீர்ந்து. கேவலரைப் போலே துக்கநிவர்த்தி மாத்திரமேயன்றே இவர்கட்குப் பயன்? பாடுகிற போது பிரீதிக்குப் போக்குவாகையாலே அநுபவ காலத்தில் ஆனந்தம் போலே அநுசந்தான காலத்தில மகிழ்ச்சிப் பெருக்கு கணக்க உடையோமாய். வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்து : "நினைந்திருந்தே சிரமம் தீர்ந்தேன்" "உகந்தே உன்னை உள்ளும் என் உள்ளம்" என்பவை போல அநுசந்தான காலத்தில் அநுபவகாலம்போலே இருப்பது. 'தூய அமுதைப் பருகிப் பருகி'. கிருட்டிணாநுபவம் தித்திக்குமல்லவா? "வருத்தம்" தீருகைக்குச் சேவகம் பாடினார்கள். "மகிழ்ச்சி பெருக்கைக்குச்" செல்வம் பாடினார்கள். சௌர்யவீர்யாதிகள் கிலேச நிவர்த்திக்கு உடல்; ஐசுவரியம் ஆனந்தத்திற்கு எது. பாடி வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்து : "இசை மாலைகள் ஏத்தி மேவப்பெற்றேன் வெய்ய நோய்கள் முழுதும் வியன் ஞாலத்து விய" "வீவிலின்பம் மிக வெல்லை நிகழ்ந்த நம்" (திருவாய். 4.5:3) விரோதி நிவர்த்தியும் உண்டாயிற்று. விருப்ப சித்தியும் உண்டாயிற்று. பாடி, வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்து, தருதியாகில், உன்னை அருத்தித்து வந்தோம்.

உள்ளுறை : முன் பாசுரத்தில் "ஏத்திப் பறை கொள்வான் இன்று யாம் வந்தோம் இரங்கு" என்று இவர்கள் விரும்பின படியாகையாலே, 'உங்கட்கு நான் செய்ய வேண்டுவதென்? என்று கண்ணன் கேட்க, "நீ புருஷார்த்தத்தைக் கொடுத்தாயாகில், நாமும் பெரிய பிராட்டியாருக்குத் தகுதியான சொருபகுண விக்கிரக விபூதி விசிட்டனாகிற செல்வத்தையும் வீர சரிதத்தையும், அதுவே தாரகமாக யாம்பாடி உன்னைப் பிரிந்ததனால் ஏற்பட்ட விசனமெல்லாம் சிறிதும் இல்லாமல் தீர்ந்து ஆனந்திக்கக் கடவோம்" என்கின்றார்கள்.

# 26. நோன்புக்கு வேண்டியவை இவை இவை எனக் கூறுதல்

## இருபத்தாறாம் பாசுர விளக்கம்

### "மாலே மணிவண்ணா"

**மாலே மணிவண்ணா மார்கழிநீ ராடுவான்**
**மேலேயார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்**
**ஞாலத்தை யெல்லாம் நடுங்க முரல்வன**
**பாலன்ன வண்ணத்துன் பாஞ்ச சன்னியமே**
**போல்வன சங்கங்கள் போய்ப்பா டுடையனவே**
**சாலப் பெரும்பறையே பல்லாண் டிசைப்பாரே**
**கோல விளக்கே, கொடியே, விதானமே,**
**ஆலின் இலையாய் அருளேலோர் எம்பாவாய்.**

(சொ.பொ) : மாலே - (நின்னை விரும்பினவரிடத்தில்) ஆசைப் பெருக்கையுடையவனே; மணிவண்ணா - நில மணி போன்ற நிறத்தையுடையவனே; ஆலின் இலையாய் - (பிரளயகாலத்தில்) ஆலின் இலையில் பள்ளிகொண்டு கண்வளர்பவனே; மார்கழி நீராடுவான் - மார்கழி நீராடுவதற்க; வேண்டுவன - வேண்டிய உபகரணங்களை; கேட்டியேல் - கேட்பாயானல்; (சொல்லுகின்றோம்); ஞாலத்தை எல்லாம் - (பகைவர்களாயுள்ள) மதக்கள் எல்லாரும்; முரல்வன - ஒலிக்கின்றனவாய்; போய்ப்பாடு உடையன - பேரோசையை யுடையனவும்; பாலன்ன வண்ணத்து - பால் போன்ற வெண்ணிறத்தையுடையவாய்; உன் பாஞ்ச சன்னியமே போல்வன. நின் பாஞ்ச சன்னியம் என்ற திருச்சங்கையொத்தனவாய்; சங்கங்கள் - சங்குகளும்; சாலப் பெரும்பறை - மிகவும் பெரிய வாத்தியங்களும்; பல்லாண்டு இசைப்பார் - திருப்பல்லாண்டு பாடுபவர்களும்; கோலவிளக்கு - அழகிய மங்கல் தீபங்களும்; கொடி - கொடிகளும்; விதானம் - மேற்கட்டிகளும்; (ஆகிய இவற்றை); அருள் - கருணை செய்வாய்.

**(க-து) :** 'நாராயணன்' (1) என்றும், 'பையத் துயின்ற பரமன்' (2) என்றும் முன்பு சொல்லப்போந்த இடைச் சிறுமியர் 'உன் கோயிலினின்று போந்தருளி யாம் வந்த காரியம் ஆராய்ந்தருள்' (23) என்று கூறியதும், கண்ணன் அடியார்களிடத்துள்ள பேரன்பினால்

துயிலுணர்ந்து, நடந்து வந்து சீரிய சிங்கதனத்து வீற்றிருந்து (23) "பெண்காள் நீங்கள் நம்மை வேண்டாது 'பறை தருதியாகில்' (25) என்று வேறொன்றை வேண்டவே, உமது பேச்சில் ஐயம் உண்டாகின்றது. நீங்கள் சொல்வது என்? அதற்கு மூலம் என்ன? அதனை அநுட்டிப்பதற்கு வேண்டுவன யாவை? அவற்றைக் கூறுங்கள்" என்று கேட்கின்றான். அவற்றை இப்பாசுரத்தில் விவரித்துச் சொல்லுகின்றார்கள்.

சுருதி சுமிருதிகளில் இல்லையேயாகிலும் ஹோளி பண்டிகையைப் போலவும் காமன் பண்டிகையைப் போலவும் ஒரு பயனைக் கருதி முன்னோர்கள் அநுட்டித்ததாதலால், நாங்கள் அநுட்டிக்கின்ற 'மார்கழி நீராட்டம்' என்பது சிஷ்டாச்சாரங்களில் சேர்ந்ததாகும். இந்நோன்புக்கு வேண்டியவை : "இந்நோன்பிற்கு விரோதிகளாயிருப்பார் நடுங்கும்படி முழங்கவல்ல சங்கம், புறப்பாடு கொட்டப் பெரும் பறை, புறப்படும்போது எதிரே நின்று காப்பிடு வதற்காகப் பல்லாண்டு பாடுபவர்களும், ஒருவருக்கொருவர் முகம் தெரியும்படி ஒளிகாட்ட வல்ல மங்கல தீபங்கள், தொலைவி லிருப்பார்க்குத் தெரியவல்ல கொடிகள், நீராடப் போம்போது தலையில் பனி விழாமல் தடுப்பதற்கு மேற்கட்டி ஆகியவையே" இவற்றைத் தருமாறு வேண்டுகின்றனர்.

வெளிப்படைப் பொருளில் இவை யாவும் காத்யயானி நோன்புக்கு வேண்டுபவையே. தங்களுடைய குறிக்கோள் பொருளான கண்ணனைக் கிட்டின பின்பும் இவர்கள் நோன்பை மேற்கொண்டிருப்பதனால், பிரபந்தனானாலும் உலக நடையையொட்டி பகவத் கைங்கர்ய ரூபமான கர்மங்களை அநுட்டிக்க வேண்டு மென்பது பெறப்படும்.

விளக்கம் : "மார்கழி நீராட்டம் என்று ஒரு விரதத்தை அநுட்டிக்கின்றோம். இதற்கு வேண்டிய உபகரணங்களை நாங்கள் உன்னிடம் வேண்டுகின்றோம்" என்று கண்ணனிடம் வேண்டுகின்றனர் ஆயச் சிறுமியர்.

மாலே! கரியவன், பெரியவன் வியாமோகம் கொண்டவன் என்ற முப்பொருளையுடையது 'மால்' என்னும் சொல். கண்ணன் என்னும் கருந்தெய்வமே யாம் கடவுள் என்றிருக்கும் எவ்வுலகிற் கடவுளர்க்கும் ஆங்கடவுளானவனே அடியார் பக்கல் வியாமோகம் கொண்டவனே என்று விளித்தபடி.

மாலே : முன்பெல்லாம் 'நாராயணனே நமக்கே பறை தருவான்' (1), 'பையத் துயின்ற பரமன்' (2), 'ஓங்கி உலகளந்த உத்தமன்' (3), 'தேவாதி தேவன்' (8) என்று அவனது மேன்மையைப் பற்றியே

நினைந்திருந்தார்கள். இப்போது இவர்கள் இவனைக் கண்டவுடனே வாத்சல்யமே இவனது பிரதான குணம் - சொரூபம் என நிலையிட்டார்கள். இராமாயணத்திற்கு உள்ளீடான பிரதான குணத்தை, 'சரணாகதவத்சலர்' என்று பிராட்டி வெளியிட்டாள். அங்ஙனமே கிருட்டிணனுக்குப் பிரதான குணமாய், மகாபாரதத்திற்கு உள்ளீடான அடியார்களின்மீதுள்ள வியாமோகத்தை 'மாலே' என்ற சம்போதனத்தாலே வெளியிடுகின்றார்கள் இடைப் பெண்கள். இவர்கள் பேச்சைக் கேட்ட பின்னர் பண்டையிலும் பெரும் பித்தனாகி விடுகின்றான் கண்ணன். அவனது நீர்மையைத் தவிர, அவனது வடிவழகு இவர்களைப் பாடாய்ப்படுத்துகின்றது.

இடைப் பெண்கள் ஒருமாதம் சீவியோம் என்னில், கண்ணன் ஒருக்கணம் சீவியேன் என்றிருப்பான். "வாரிக்கொண்டு உன்னை விழுங்குவன் காணில்" (திருவாய். 9.6.10) என்று நம்மாழ்வார் கூறுவது போல் இவர்கள் இருந்தால், அவன் ஆழ்வார் கூறுவது போலே "என்னில் முன்னம் பாரித்து முற்றப்பருகினான்" (மேலது) என்றிருப்பான். 'அதனிற் பெரிய என் அவா' (திருவாய் 10.10.10) என்பது இவர்கள் நிலை. 'அவா அறச் சூழ்ந்தாயே' (மேலது) என்பது அவனது நிலை. 'நாராயணன் நமக்குக் கிடைக்குமோ' என்பது இடைப் பெண்களின் நினைவு. யதுகுலத்தில் பிறந்தார்க்குக் கிடைக்கப் புகுகிறதோ' என்பது அவன் நினைவு. ஒருத்தி மகனானதை விட்டு ஒருத்தி மகனாக வந்தது இவர்கட்காக. ஒளிந்து வளர்ந்தது நம் கம்சனுக்குக் காணப்படாதிருக்கும் பொருட்டு, அல்லது பெண்களைப் பிரியாமைக்காகவுமாகும். 'நெஞ்சு துக்கம் செய்யப் போந்தாய்', 'நாமறிய ஆய்ப்பாடி வளர்ந்த (மாலே)' இவர்கள் பக்கல் பிச்சேறி ஒரு பிறவியிலே இருபிறவி கொண்டா யன்றோ? 'மாலாய்ப் பிறந்த நம்பியை மாலே செய்யும் மணாளனை' (நாச்.திரு. 14.3) என்பது ஆண்டாள் வாக்கு. பிச்சேறியவனாய் பிறந்து பெண்களையும் பிச்சேற்றித் தன்னோடு கோவையாக்க வல்லவனன்றோ?

'நம்முடைய வியோமோகம் நீங்களறிந்தபடி என்?' என்று கண்ணன் கேட்க, 'நின்னுடைய வியாமோகம் நின் வடிவழகிலே நிழலிட்டுக் காட்டுகையாலே தெரிந்தது' என்கின்றார்கள். **மணிவண்ணா** : பெண்கள் பிச்சேறியதற்கு நிதானம் இருந்தபடி. 'மணிவண்ணா' என்பதனால் தாமரையில் இருக்கின்றவள் அதனை விட்டுவருவது இந்த வடிவழகைக் கண்டல்லவா? 'பனி மலராள் வந்திருக்கும் மார்வன் நீல மணிவண்ணன்' என்ற ஆழ்வார் வாக்கை நினைவுகூரலாம். இன்னும் 'வியாமோகனன்' என்றில்லாமல் காதுகளானாலும் விடவொண்ணாத வடிவழகு இருந்தபடியாம்.

**மாலே மணிவண்ணா** : இப்படி வடிவுபடைத்திருந்தாலும் பிறப்பால் அதனை ஆசைப்படுவார்களோ? பிச்சர் கையில் மாணிக்கமாய் நின் உடம்பு இருக்குமோ? அல்லது, "மால்" என்று - பெரியோன் என்றபடியாய் "சூட்டு நன்மாலைகள்" எடுத்து நித்திய சூரிகள் சேவிக்க இருக்கும் ஈசுவரத்துவம் சொல்லுகிறதாகவும் கொள்ளலாம். **'மணிவண்ணா'** என்று முன்தானையிலே முடிந்து பெண்களுக்கு அடக்கியாளலாம்படி இருக்கின்ற சௌலப்பியத்தைச் சொன்னதாகவும் கொள்ளலாம்.

**'மணிவண்ணா'** என்று - மணியினுடைய தன்மைகளைச் - ஸ்வபாவத்தைச் - சொல்லுகிறதாகவும் கொள்ளலாம். அதாவது - உண்டு என்ன உயிர் நிற்கையும், மணியை உடையவன் காலிலே அனைவரும் விழும்படி இருக்கையும், மணியை இழந்தார் பிழையாது ஒழிகையும், மணி கைப்பட்டார்க்குப் பூணும்படியா யிருக்கையும், கீழ்ச் சீரை அடக்கலாம்படி இருக்கையும், பிறர்க்கே யாயிருக்கையும், அளவுபடமாமல் உபகரிக்கையும், 'கொடுத்தோம்' என்று நினைத்திரா தொழிகையும், வேறொன்றில் கைவைக்க வொட்டாது ஒழிகையும் முதலானவை மணியின் தன்மைகளாம். அன்றியும் "என்றும் எனக்கு இனியானை என் மணிவண்ணனை" என்று - நம்மை ஆச்சி பலகாலும் சொல்லும். தாய்க்கு 'மணிவண்ணன்' இத்தனையன்றோ? இன்னும் மணியைப் பற்றி அடியிற் கண்டவாறும் யோசிக்கலாம்.

**மணிவண்ணா!** மணியாவது இரத்தினம். அஃது எவ்வளவு விலையுயர்ந்ததாயினும் முன்தானையில் முடிந்து வைத்துக் கொள்ளவும் வசதியாக இருக்கும். அதுபோல எவ்வளவு பராத்பரனாக இருந்தாலும் அடியார்க்குக் கையாளாக இருப்பான். இரத்தினம் சாதாரணமாக எல்லாராலும் பெற முடியாது. பேறு பெற்றவர்கட்கே அது கிடைக்கும். எம்பெருமானும் அப்படியே. இரத்தினத்தை வைத்துக் கொண்டிருப்பவனுக்குக் கண்ணுறக்கம் வராது. பகவானைப் பெற்றவர்களும் 'உண்டோ கண்கள் துஞ்சுதலே' என்னும்படி உறக்கமற்றிருப்பார்கள். பதினாயிரம் ரூபாய் விலை மதிப்புள்ள இரத்தினம் கடலிலே வலைவீசும் செம்படவன் கையிலே கிடைத்தால் அஃது ஒரு வணிகனிடம் ஒரு சிறு விலைக்கு மாறும். அதனை அவன் அரசனுக்கு அதிக விலைக்கு விற்றிடுவான். அதனை வாங்கின அரசன் செம்படவனைப்போலே அற்ப விலைக்கு விற்கான். வணிகனைப் போலே உயர்ந்த விலைக்கும் விற்கான். அதனை ஆனந்தமாக அணிந்துகொண்டு அநுபவிப்பான். பகவான் விஷயத்திலும் இங்ஙனமே காணலாம். பகவானிடம் சிலர் அற்ப

பலன்களை விரும்புவர். மற்றும் சிலர் வீடுபேறு போன்ற உயர்ந்த பலனையே விரும்புவர். இன்னும் சிலர் 'எனக்குத் தேனே பாலே கன்னலே அமுதே' என்று சொல்லிப் பேரானந்தத்துடன் அநுபவித்துக் கொண்டிருப்பர்.

"இத்தனை மிகையாக நம்மைச் சொல்வது இருக்கட்டும். நீங்கள் வந்த காரியத்தைச் சொல்லுங்கள்" என்று கண்ணன் வினவ, அவர்கள் பதில் கூறுகின்றார்கள். **மார்கழி நீராடுவான்** : "மகிழ்ந்து - மார்கழி நீராட" என்று ஊராகச் சங்கல்பித்த காரியம் தலைக் கட்டுகைக்காக. மார்கழி நீராடுகைக்கு உபகரணங்கள் வேண்டி வந்தோம்" என்கின்றார்கள். 'மார்கழி நீராட்டம் என்றால் என்ன?' அபூர்வமாகக் கேட்டதாக உள்ளதே எந்த சாத்திரத்திலும் கேட்டதில்லையே' என்று கண்ணன் சொல்ல, அதற்கு ஆயர் மகளிர் **'மேலையார் செய்வன்கள்'** என்கின்றார்கள். 'இது புகழ் பெற்றதன்றோ? பெரியோர்களால் வழவழியாக அநுட்டிக்கப்பட்டது. சாத்திரங்களில் இருப்பதைக் காட்டிலும் சிஷ்டாசாரம் பரம பிரமாணம் என்பதைப் பேதையர்களான நாங்கள் சொல்லியோ 'நிறை ஞானத்தொரு மூர்த்தியான' நீ அறிய வேண்டும்?' "பிரானே வேதங்களுக்கு முன்பேயன்றோ அறநெறியாளர்களின் பிரமாண்யம் சொல்லப் பெறுகின்றது?' என்கின்றார்கள் (மேலையார் செய்தனகள்). "யாதொன்றை யாதொன்றை சிரேஷ்டர்கள் ஆதரித்தார்கள் யாதொரு அளவு செய்தார்கள் அவ்வளவு லோகம் அநுவர்த்திக்கும் என்று சிஷ்டாசாரமே நிலையான பிரமாணம்" என்று தேர்த்தட்டிலிருந்து கொண்டு சொன்ன நீ எங்களைக் கண்டதும் மறந்தாயோ? சாத்திரம் விதித்திருந்தாலும் சிரேஷ்டர் அநுட்டானம் இல்லாதவிடத்தில் அஃது ஏட்டுச் சுரைக்காயாகிவிடுமன்றோ? உன்னைப் பரதேவதையென்றும் உனக்கு வாசக சப்தம் 'நாராயணன்' என்றும் நாங்கள் ஆதரிக்கிறது வேதசாத்திர சித்தம் என்பது அல்லவே. 'விட்டு சித்தன் விரும்பிய சொல்' (பெரியாழ்.திரு. 1.1.12) என்றும், 'விட்டுச் சித்தர் தங்கள் தேவரை' என்றும் அல்லவா சொல்லப் பெற்றுள்ளது? வைதிகவிதிகளும் எல்லாம் உன்னுடை யாருடைய கம்பீரமான மனதை அநுவர்த்தித்து அல்லவா பிரமாணமாகின்றது? மந்திரங்கள் தோன்றிய விதம் இப்படித்தானே "திருமால் திருநாமம் நானும் சொன்னேன் நமரும் உரைமின்" என்பதல்லவா வாசகம்?

ஆகில் 'வேண்டுவதைச் சொல்லுங்கள்' என்று கண்ணன் கேட்க **வேண்டுவன கேட்டியேல்** : கேட்டிதியாகில் என்கிறது, அந்யபரதையாலே அந்யபரதை என்? என்னில் : அஞ்சு லட்சம் குடியிற் பெண்களும் முன்னே நிற்கையாலே, இவர்கள் முலையிலும்

இடையிலும் கண்ணிலும் முகத்திலும் துவக்குண்டு ஆனைக்கப்பு[58] ஆடுவாரைப் போலே இருக்கையாலே தட்டி எழுப்புகின்றனர். இடைப்பெண்கள் 'மணிவண்ணா' என்று அவன் வடிவழகிலே கண் வைத்துக் கொண்டிருக்க, கண்ணன் இவர்கள் கண், முலை, இடை, முகம் இவற்றில் துவக்குண்டு அந்ய பரனாயிருந்தான்.[59] ஊரார் இசையாத போதல்லவா 'ஓடி அகம்புக வேண்டுவது?' இப்போது வைத்த கண் வாங்காமல் அநுபவிக்கலாமே. ஆகையால் பார்த்துக் கொண்டிருந்தான். அவற்றில் வைத்த கண் வாங்காது பார்த்து அநுபவித்துக் கொண்டிருந்தான். அதனால் தட்டியுணர்த்தி கேட்டி என்கின்றார்கள்.

"உங்களுடைய ஞான பக்தி வைராக்கியங்களினுடைய நிழலீடாகையாலே, கண்ணும் முலையும் இடையும் போக்கிய மாகையாலே, உங்கள் வடிவழகை உற்று நோக்கிக் கொண்டிருந்தோம். உங்களுடைய 'மழறுதேன் மொழிகள்' செவிக்கு போக்கியமாம்படிக் கேட்கின்றோம். திருவுள்ளமாகலாகாதோ வேண்டுவதெல்லாம்" என்றான் கண்ணன்.

இடைப்பெண்கள் சொல்லுகின்றார்கள் : 'ஞாலத்தை யெல்லாம்... போய்ப்பாடுடையனவே' என்கின்றார்கள். அதாவது, 'பூமியெல்லாம் அதிரும்படியான ஓசையுடையனவாய், அவை வாழும்படி பேராசையோடு ஒலிக்கைக்கு இடமுடைத்தானவையாய், பாலைத் திரட்டினாற்போல் அழகிய நிறத்தையுடையனவாய், உன் கையிலுள்ள பாஞ்சசன்யம் போல் இருக்கும் பல சங்கங்கள் வேண்டும்' என்றபடியாம். **ஞாலத்தையெல்லாம் நடுங்க:** பாரதப் பெரும் போரில் துரியோதனன் பக்கம் உள்ளவர்களை நடுங்கப் பண்ணினதுபோல நம்முடைய சேர்க்கைக்குப் பிரதிகூலராக இருப்பவர்கள் எல்லோரும் நடுங்க வேண்டும். நின் சங்க முழக்கம் சிலரை வாழ்விக்கும். 'பற்றாரைக்' கெடுக்கும். "பூங்கொள் திருமுகத்தூதிய" சங்கொலியல்லவா தாரகம். பெண்கள் வெள்ளம் போல புறப்படும்போது 'வலம்புரி போல் நின்றதிர்ந்து' என்னும்படி மேகங்கள் உட்பட முழங்கும்படி ஒலிக்க வேண்டும். **பாலன்ன வண்ணம் :** பாலைத் திரட்டினாற்போலே இருத்தல். 'மணிவண்ணா' என்று - இவன் நிறம் இவர்கட்கு உத்தேச்யமானால் இவனோடு தொட்டு உணர்வார் நிறமும் சொல்ல வேண்டுமோ? இப்படி இருக்கும்

58. ஆனைக்குப்பு – சதுரங்கம் (சிலீபீடீக)
59. உள்ளுறையில் ஞானபக்தி வைராக்கியத்தைச் சொன்னபடியாம். முலை போகோபகரணம் – பக்தி; இடை – வைராக்கியம்; கண் – ஞானம். ஆக ஞான பக்தி வைராக்கியங்களைக் கண்டு துவக்குண்டு என்றபடி. இவையே பகவத் விஷய அதிகாரிக்கு அழகு.

பல சங்குகள் வேண்டும். தாங்களும் 'வலம் புரிபோல் நின்று' அதிர வேண்டும் என்றல்லவா சொல்லுகின்றனர்? **போய்ப்பாடு உடையன் :** பேரொலியை உண்டாக்கக் கூடியனவாக இருத்தல் வேண்டும். அன்றியும் பேரிடமாயிருத்தல் என்றுமாம். இடம் உண்டானாலல்லவா ஒலி முழங்கியிருக்கும்? அன்றியும், புகழ் என்றும் கொள்ளலாம், உருக்குமிணிப் பிராட்டி போல்வாருக்கு உதவினான் என்று புகழ்.

**உன் பாஞ்சசன்னியம் :** அல்லாதவை வேண்டுதற்கு முன்னே பிரதானம் மங்கல ஒலியாகையாலே முதலில் சங்கை வேண்டு கின்றார்கள். தன்னுடைய பாஞ்சசன்னியம் போல இருக்கும் வேறொரு சங்கில்லை. அது கூடாமையாலே அவன் உகக்கும் சங்குடன் அவனே வருவான் என்று நினைக்கின்றனர். "ஒன்று கண்டோம். அடுத்து வேண்டுவது என்?" என்கின்றான். "**சாலப் பெரும் பறையே**' என்கின்றார்கள். 'எழுச்சிக்குச் சங்கு ஊதினால் புறப்பாட்டுக்குக் கொட்ட வேண்டுமல்லவா? சங்கொலி ஓடின திக்கெல்லாம் முழங்கவல்ல மிகவும் பெரியதொரு பறை வேண்டும்' என்கின்றார்கள். "இன்னும் வேண்டுவது என்?" என்றான். **'பல்லாண்டிசைப்பாரே'** என்கின்றார்கள். கொட்டி முழக்கிக் கொண்டு புறப்படும்போது திருப்பல்லாண்டு பாடிக் கொண்டு போவார் வேண்டும். அன்றியும், எதிரே நின்று காப்பிடுவார் வேண்டும் என்றுமாம். "பின்னையோ" என்றான். **'கோல விளக்கே'** என்கின்றார்கள். அதாவது அழகிய விளக்கு, மங்கள தீபம். "பாடுவார் எங்கள் முகத்திலே விழித்து, நாங்கள் அவர்கள் முகத்திலே விழித்துக் கொண்டு போவதற்கு வசதியாக இருக்கும் மங்கள தீபம் வேண்டும்" என்றபடியாம்.

இன்னும் கேட்கின்றார்கள் : **கொடியே :** அருகிலிருப் பார்க்கல்லவாவுளக்கு பிரகாசிப்பது? "எங்களைக் கண்டு தொலைவிலே வாழும்படி முன்னே பிடித்துக்கொண்டு போகும்படி திருக்கொடி ஆட வேண்டும்" என்கின்றார்கள். "பின்னும் என்ன வேண்டும்?" என்று கேட்க, **விதானமே**[60] என்கின்றார்கள். "நாங்கள்

60. திருவனந்தாழ்வான் ஓடியிடமாட்டாதவன். பிரிந்து போவதற்கு ஓடி கூட எடுத்து வைக்க மாட்டாதவன். அவதாரத்திலும் உடன் வருபவன். இராமாவதாரத்தில் இளையபெருமாளாகவும், கிருட்டிணாவதாரத்தில் நம்பி மூத்தபிரானாகவும் வருபவன். சர்வதேச சர்வகால சர்வநிலைகளிலும் தன்னைப் பிரியமாட்டாதவன். விதானத்துக்கு – கண்ணன் திருவவதரித்த அன்று பணத்தை (படம்) யிட்டுக் கவித்துக் கொண்டு போந்த திருவனந்தாழ்வான் குறிப்பிடப்பெற்றது.

புறப்படும்போது பனி தலையில் விழாதபடி (மார்கழி மாதமல்லவா?) ஒரு மேற்கட்டி வேண்டும்" என்கின்றார்கள். "நாங்கள் நீராடப் போவதற்கு இவையெல்லாம் தேவை" என்றார்கள்.

"பெண்காள் இப்படி இருப்பன எப்படித் தேடிக் கொடுப்பேன்? அரிதானவற்றைச் சொன்னீர்களே" என்று கண்ணன் சொல்ல "உனக்கு அரியன என்பன உண்டோ?" என்று பதிலுரைத்தார்கள் இடைப்பெண்கள். "இவையெல்லாம் எளியனவோ?" என்று கண்ணன் கூற, **ஆலின் இலையாய்** என்கின்றார்கள். "சிறியதொரு வடிவைக் கொண்டு எல்லா உலகங்களையும் சிறு வயிற்றிலே வைத்து சிறிய ஆலந்தளிரிலே கிடந்து செயற்கரியனவற்றைச் செய்த உனக்கு அரியது என்ற ஒன்று உண்டோ, உலகத்தில் இல்லாதனவற்றை யெல்லாம் எங்களுக்காக உண்டாக்கவல்லவனன்றோ நீ?" என்கின்றார்கள். வடதள சாயியின் வரலாற்றுச் சிறப்புகளையெல்லாம் கிருட்டிணன் பக்கலிலல்லவா காண்பது? இவற்றையெல்லாம் ஆராவமுதென்று இனிக்கும் ஆழ்வார் பாசுரங்களில் கண்டு மகிழலாம்.

'மாலே மணிவண்ணா' என்கின்ற இடத்தில் சௌலப்பியம் சொல்லப்பட்டது. 'ஆலின் இலையாய்' என்ற இவ்விடத்தில் அகடிதகடனா சாமர்த்தியம் சொல்லப்படுகின்றது. அங்குச் சொன்னது **"மாம்"** என்றதன் பொருள். ஈண்டுக் குறிப்பிட்டது **'அஹம்'** என்பதன் பொருள்.[61]

பின்னும் சொல்லுகின்றார்கள். **அருள்** என்று, "வேண்டா தொழியில் செய்யலாவதில்லை. சக்தி இல்லாமை இல்லை. தரில் அரியதில்லை. தாராதொழியில் வற்புறுத்த ஒண்ணாது. இப்போது செயற்கரியது என்று கண்ணழியாமல் கிருபை பண்ண வேண்டும். பிரசாதமாக அருள வேண்டும்.

**பாசுரத்தின் உள்ளுறை :** எம்பெருமானை அடைவதற்கு வேண்டிய சாதனங்களை வேண்டிக் கொள்ளுதல். அவ்வாறு வேண்டும்போது சரமசுலோகத்தில் **'மாம்'** என்பதனால் விளங்கும் சௌலப்பியத்தை 'மாலே மணிவண்ணா!' என்ற விளியினாலும், 'அஹம்' என்ற இடத்து ஏற்படும் வேறொரு துணை வேண்டாத உபாயத்துவத்தை 'ஆலினிலையாய்' என்ற விளியினாலும் தெரிவிக்கப்படுகின்றது. சங்கொலி - ஓங்காரம் என்று -

61. இவை சரமசுலோகத்திலுள்ள சொற்கள்.

பிரசித்தமாகையால், சங்கம் என்பது - ஓங்காரத்தில் ஆர்த்தமான சேஷத்துவ ஞானத்தையும் அதற்கு அடுத்துள்ள பறை நமஸின் பொருளான பாரதந்திரியத்தையும், பல்லாண்டிசைப்பார் என்பது நல்லோர் கூட்டுறவையும் (சாத்விக சகவாசத்தையும்), 'விளக்கு என்றது - பகவத் சேஷத்துவத்தையும் பிரகாசப்படுத்துகின்ற பாகவத சேஷத்துவத்தையும் கொடி சேஷத்தவ இலட்சியமான கைங்கரியத்தையும், விதானம் - 'அக்கைங்கரியத்தின் பயன் அநுபவிப்பவன் நான்' என்ற புத்தியின் நிவ்ருத்தியையும் காட்டும் என்பர் ஆசாரியப் பெருமக்கள்.

# 27. நோன்பு என்ற வியாஜத்தால் தாங்கள் பெறக்கூடிய பேற்றினைச் சொல்லுதல்

## இருபத்தேழாம் பாசுர விளக்கம்

"கூடாரை வெல்லும்சீர்"

**கூடாரை வெல்லும்சீர் கோவிந்தா உன்தன்னைப்**
**பாடிப் பறைகொண்டு யாம்பெறு சம்மானம்**
**நாடு புகழும் பரிசினால் நன்றாக**
**சூடகமே, தோள்வளையே, தோடே, செவிப்பூவே,**
**பாடகமே என்றனைய பல்கலனும் யாமணிவோம்**
**ஆடை யுடுப்போம், அதன்பின் பாற்சோறு**
**மூட நெய்பெய்து முழங்கை வழிவார**
**கூடி யிருந்து குளிர்ந்தேலோர் எம்பாவாய்**

(சொ.பொ) : கூடாரை - தன்னை அடிபணியாதவர்களை; வெல்லும் - சயிக்கும்; சீர் - குணத்தையுடைய; கோவிந்தா - கண்ணபிரானே; கூடியிருந்து - (நீயும் நாங்களும்) சேர்ந்திருந்து; குளிர்ந்து - மனம் குளிர்ந்து; நாடு புகழும் பரிசினால் - நாட்டார் புகழும்படியாக; சூடகம் - (கையில் அணியும் ஆபரணமான) சூடகங்களும்; தோள்வளை - தோள்வளையங்களும்; தோடு - (காதுக் கிடும் ஆபரணமான) தோடும்; செவிப்பூ - காதுக்கிடும் பூவும்; பாடகம் - பாத கடகமும்; என்றனைய பலகலனும் - என்று சொல்லப்படுகின்ற இவ்வாபரணங்கள் போன்ற மற்ற ஆபரணங்களும் (உன்னாலும் நப்பின்னைப் பிராட்டியினாலும் பூட்டபட்ட); யாம் நன்றாக அணிவோம் - நாங்கள் இனியனவாக அணிவோம்; ஆடை - சேலைகளை; உடுப்போம் - (நீ உடுத்த) உடுத்துக் கொள்வோம்; அதன் பின்னே - அதற்குப் பிறகு; பால்சோறு - பால் சோறானது; மூட - மறையும்படியாக; நெய்பெய்து - நெய் பரிமாறி; முழங்கை வழிவார - முழங்கை வழியாகப் பெருகும்படி (உண்ணுதலே); உன்தன்னை - (உபேயமான) உன்னை; பாடி - (நாடுதலையே பயனாகக் கொண்டு) வாயாரப்பாடி; பறை கொண்டு - (விரதத்திற்கு வேண்டிய) பறையைப் பெற்றுக் கொண்டு; விரதத்தை அநுட்டித்து முடித்து) யாம் பெறு - நாங்கள் அடைய விரும்பிய; சம்மானம் - வெகுமானாங்களாம்.

**(க.து)** : "நீராடப் போவதற்கு வேண்டுபவை இவை : நோற்ற பிறகு உன்னிடம் நாங்கள் பெறக்கூடிய சிறப்புக்கள் உண்டு. இவற்றிலும் அந்தரங்கமாயிருப்பன சில. அவற்றையும் நாங்கள் பெற வேண்டும்" என்று வேண்டிக் கொள்ளுகின்றார்கள்.

**விளக்கம் : கூடாரை வெல்லும் சீர்** : கூடோம் என்பாரை வெல்ல வல்லனாகிய பெருமையுடையவன். **கூடாரை வெல்லும்** : 'இருபத்தொரு தலைமுறை க்ஷத்திரியரை வென்ற எனக்கு ஒரு க்ஷத்திரிய புத்திரன் எதிரோ?' என்று பெருமாளை வெல்ல நினைத்து வந்த பரசுராமன் தன் கையிலுள்ள வில்லைப் பெருமாள் கையிலே கொடுத்து 'நான் பார்ப்பனன்' என்று வணங்கிப் போனான். வில்லோடு வணங்கினானாகில் இவர் எப்படித் தோற்பது? 'இந்திரன் முதலியோரை வென்ற எனக்கு ஒரு மானிடன் எதிரோ?' என்ற இராவணனை திருவடியை அனுப்பியும் அங்கதனை அனுப்பியும் பின்பு வில்லெடுத்தவுடன் 'இன்று போய் நாளை வா' என்று இத்தனையும் சொன்ன பின்பும், 'வணங்கலில் அரக்கனான' பின்பு 'அந்தனையும் பார்த்தோம், என் செய்வோம்' என்றல்லவா அவனைக் கொன்றது. கிருஷ்ணாவதாரத்தில் 'கிருஷ்ணன் காலிலே வணங்கேன்' என்ற துரியோதனனை வெல்ல வலலவனானான்.

**'கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா'** : என்ற விளி கூடுமவர்கட்குத் தோற்று நிற்பவனே என்ற கருத்தை உளப்படுத்தும். 'அடியார் திறத்தில் எல்லாப் படிகளாலும் பரதந்திரனாயிருப்பவனே' என்பது கருத்து. இராமாவதாரத்தில் தன்னோடு சேர்ந்த சுக்கிரீவனுக்குப் பரவசப்பட்டு வழியல்லா வழியில் வாலியை வதை செய்தமையும், சரணடைந்த அரக்கர் குலத்தைச் சார்ந்த வீடணனை ஏற்றுக் கொண்டமையையும், கிருஷ்ணாவதாரத்தில் பாண்டவர்க்குப் பரவசப்பட்டுப் பொய் சொல்லியும் கபடங்களச் செய்தும் நூற்றுவரை முடித்தமை முதலானவையும் அடியார்கட்குத் தோற்றுச் செய்த செயல்களன்றோ? இந்த விளியில் 'நீ எங்களுடைய மழலைச் சொற்களுக்குத் தோற்று நாங்கள் வேண்டினபடியே பறை முதலியவற்றையெல்லாம் தந்தருளினவன் அன்றோ?' என்ற தொனிப்பொருளும் அடங்கும்.

**வெல்லும் சீர்** : எல்லாரையும் வெல்லுவது குணத்தாலே. விற்பிடித்தபடியைக் காட்டி விரோதிகளைத் தோற்பிக்கும். அநுகூலரை அழகாலும் நீர்மையாலும் தோற்பிக்கும். இன்னும், கூடுவாரைச் சீலத்தாலே வெல்லும். கூடாதாரை சௌர்யத்தாலே வெல்லும். **சீர்** : சௌர்யம் அம்புக்கு இலக்காக்கும். சீலம் அழகுக்கு இலக்காக்கும். அம்புபட்ட இடத்தில் ஏற்படும் புண்

மருந்தூட்டத்தீரும். சீலமும் அழகும் நின்று ஈராநிற்கும். அம்பு தோல்புரையே போம். அழகு உயிர்க்கொலையாகும். **வெல்லும் சீர்** : இன்னும் அறிவுடையாரை முற்றறிவுடையராக்கும். முற்றறிவினரை 'எத்திறம்... ஏங்கிய எளிவே' (திருவாய் 1.3.1) என்ற நிலையை அடையச் செய்யும்.

**கோவிந்தா** : 'கூடமாட்டோம்' என்ற எண்ணம் இல்லாமல் இருந்தால் போதும். கூடியிருப்போம் என்ற எண்ணம் வேண்டுமென்ற நிர்ப்பந்தமும் இல்லை 'பகவான் பாதுகாத்தற்கு' என்பது இந்த விளியில் தோன்றும். **உன் தன்னைப்பாடி** : இரணியபுரம்போல் இவன் பேர் சொல்ல வொட்டுவார் இல்லை போலே இருந்தது பண்டு. அடுத்து இவர்கள் கோபிப்பார்கள் என்று தவிர்ந்த இழவெல்லாம் சந்நிதியிலே பாடப் பெறுகையாலே தீரப் பெற்றது. **உன் தன்னைப்பாடி** : வகுத்த உன்னுடைய பேரை சொந்தப் பயன் கருதிப் பாடப் பெறுகையாலே 'வாயினால் பாடி' என்று முன்னர்க் கூறியபடியே நாப்படைத்த பயன் கொள்ளப் பெற்றோம். 'உன்னைப் பாடி' என்னாமல் 'உன்தன்னைப் பாடி' என்றது கண்ணன் இவர்கள் பக்கம் வருவதைக் குறித்தது. உன் பணியே நாங்கள் ஏறிட்டுக் கொள்வது. **கோவிந்தா உன்தன்னைப் பாடி** : 'கோவிந்தன் குழல்கொடு ஊதினபோது' (பெரியாழ்.திரு. 3.6.2) என்று - நீ பாடும்போது 'யேகத் தீங்குழல் ஊதிற்றும்' என்னும்படி பெண்கள் புணர்ப்பைக் குழலிலே இட்டுப் பாடி எங்களைத் தோற்பித்தது அல்லாமல் எங்கள் வாசல்களிலே பாடி, ஆவி காத்திராதே உன் வாசலிலே வந்து 'கோவிந்தா' என்று பாடும்படியாயிற்றே. **பறை கொண்டு** : அடையும் பொருளிலே அடையும் வழிபற்றியது. ஊருக்குப் 'பறை' என்கிறது. தங்களுக்கு அடையத்தக்க பேறு.

**உன்தன்னைப் பாடிப் பறைகொண்டு** : பாடுகை வேறு, அதன் பிறகு குறை கொள்ளுதல் வேறு என்று கருதுதல் வேண்டா, பாடுகையாகின்ற பரம புருஷார்த்தத்தை அடைந்து என்பது பொருள். உண்டு பசி தீர்ந்தான் என்றால் உண்ட பிறகு பசி தீர்ந்தான் என்பது பொருளன்று. உண்ணப் புக்க போதே பசி தீருமாகையாலே உண்கையும் பசி ருகையும் ஒன்றேயாகும். அது போலவே ஈண்டும் கொள்ளுதல் வேண்டும். இதனால் நோன்பு நோற்பதென்பது வெறும் வியாஜம் (pretext). ஆயர்பாடிக் கிழவர்களின் இசைவு பெற்று உலகம் அறிய உன்னைப் பாடுகைதான் எங்களுக்குப் பரமபுருஷார்த்தமாகும் என்பது.

**யாம்** : தேவகியின் புத்திர இரத்தினமான உன் பெருமையறிந்து பற்றி, 'உன்னை ஆச்ரயித்தார்க்குப் பேறு தப்பாது' என்கிற ஆழ்ந்த

நம்பிக்கையுடைய நாங்கள். யாம் பெறும் சம்மானம் : சிலசன்மான சிறப்புகளை வேண்டுகின்றனர். இந்த சன்மானங்கள் சாமான்யமாக்க் கிடைக்கக் கூடியனவாக இருத்தல் ஆகாது. பெருமாள் பிராட்டிக்குப் பண்ணின சன்மானம் போலே இருத்தல் வேண்டும். தோள் மாலையை வாங்கி இடுகை இவர்கட்குப் பெறாப்பேறு என்பது. பெருமாள் தன் தோளில் மாலையை வாங்கி இட்டு, காலைப் பிடித்து 'நில்' என்று போன செயலல்லவா இவர்கட்குப் பண்ணப்புகுகின்றது. அவள் இவர் திருவடிகளைப் பிடிப்பது - கை பிடித்த முறையாலே. இவர் அவள் காலைப் பிடிப்பது பிரணயத்வத்தாலே. அவனுக்குச் சொல்லும் ஏற்றமெல்லாம் சொரூப நிபந்தம். அவனுடைய வியாபாரம் வைதம். இது ராகப்பிராப்தம். "பெருமாள் தோளில் மாலையை வாங்கியிட்டார்" என்று ஆழ்வான் பணிக்கும், பட்டரும் பணிக்கும். அநாதிகாலம் எல்லாராலும் பட்ட துன்பம் மறக்கும்படி கொண்டாடுவதுதான் வேண்டப்படுவது.

**நாடு புகழும் பரிசினால் :** அநாதிகாலம் எல்லாராலும் பட்ட அவமானம் மறக்கும்படியாக "ஒருவன் கொடுத்தபடி இது. சிலர் பெறும் படி இது" என்று நாட்டார் கொண்டாடும்படியாக அமைதல் வேண்டும். "பாரோர் புகழ்" என்னும்படியாகத் தலைகாட்ட வேண்டும் என்கின்றார்கள். கிருஷ்ணனும் சத்தியபாமையும் பார்த்தனும் திரௌபதியுமாகக் கால்மேல் கால் ஏறிட்டுக் கொண்டிருக்க, சஞ்சயன் திருவாசலில் வந்துள்ளான் என்ற அறிவிப்பு வருகின்றது. அப்போது கிருஷ்ணன் அருளிச் செய்தது: "நம்முடைய நிலையைக் கண்டால் உகக்கிறவன் அவன். உகவாதார் மண் உண்ணும்படி இந்நிலையை அவர்களுக்கு எடுத்துச் சொல்லவல்லவன். அவனைப் புகவிடுங்கள்" என்பதாக. அவனும் உள்ளே போந்து, நிலைமையினை நன்கு கண்டு, அப்படியே துரியோதனனிடம் சென்று, 'கெடுவாய், உன் காரியம் கெட்டது' என்று எடுத்துச் சொன்னான் அல்லவா? அங்ஙனமே சுக சாரணர்கள் இராவணனிடம் சென்று இராமனது நிலைமையை எடுத்துச் சொல்லி வீடணனுக்கு முடிசூட்டியதையும் வானரங்கள் ஆர்த்ததையும் எடுத்துச் சொன்னார்கள் அல்லவா? இப்படித் தன்னை அடைந்தாரை நாடு புகழும்படியல்லவா வாழ்விப்பது?

**நன்றாக :** சக்கரவர்த்தி திருமகனார் முடிசூட்டு விழாவில் சுக்கிரீவன் அங்கதன் முதலியோருக்குப் பரிசளித்தது சாமானியமாத விதம். இந்திரன் கொடுத்த மலர்மாலையை பெருமாளும் பிராட்டியும் கூடிவிருந்து திருவடிக்கு (அநுமனுக்கு)ப் பூட்டினாப்போலே பூணவேணும் அதாவது கண்ணபிரானும் நப்பின்னையும் சேர்ந்து ஆய்ச்சிமாருக்குப் பூட்டவேண்டும் என்பது கருத்து. இந்தப் பரிசளப்புதான் நாடு புகழும் பரிசளிப்பாக அமையும்.

இவர்கள் 'நோக்குதியேல்' எனப் பண்ணிய பூர்ணகடாட்சம் உண்டல்லவா, அப்பார்வைபட்ட இடம் இருக்கும்படியை மேலே சொல்லுகின்றார்கள். **சூடகமே :** கையில் அணியும் அணி. 'அணிமிகு தாமரைக் கையை' என்று தன் கையை கோபியர் ஆசைப்படுவது போலே, கோபியர் 'சூடகம்' பூண்டகையை 'அடிச்சியோம் தலைமிசை நீயணியாய்' என்று, அவர்கட்கு இவன் சொல்லுமாப்போலே சொல்லி மார்பிலும் தோளிலும் தலையிலும் வைத்துக் கொள்ளுவதற்காக அன்றோ இவன் ஆசைப்படுவது? 'வெள்ளிவளைக்கை பற்ற' என்கின்றபடியே - அநந்யார்ஹைகளாகப் பிடித்த கைகளையல்லவா முதல் ஆபரணம் பூட்டுவது, **தோள்வளை :** தோளுக்கிடுவது. கையைப் பிடித்த ஊற்றுணர்வாலே உடனே அணைக்க வேண்டிய தோளுக்கிடும் ஆபரணம். இவ்வாபரணம் அவனை அணைக்கும்போது அவன் கழுத்திலே உறுத்தும். அவன் நாண் தழும்பின் சரசரப்பு இவர்களுடைய முலைகளுக்கு உத்தேசியமாவது போல, இவர்களுடைய வளைத்தழும்பும் அவன் தோளுக்கு ஆசையாக இருக்குமல்லவா? 'வேயிருந் தடந்தோளினார்' என்று - 'சுந்தரத் தோளுடையான்' தோற்கும்படி தோள்படைத்த ஆபரணம். 'வேய் மருதோளிணை' மெலியும் காலத்திலல்லவா வளை பெறாதொழிவது? இப்போது தானே அணைக்க வேண்டிய காலம்?

**தோடே :** காதுக்கிடும் ஆபரணம் தோடு. தங்கள் கைக்கும் தங்கள் தோளுக்கும் ஆபரணம் பூண்டது போலவே, அவன் தோளுக்குப் பூணும் ஆபரணமும் பூணவேண்டும். இவர்களுடைய காதுப் பணியும் செவிப்பூவும் பட்ட விமர்திததாலே வந்த சோபையைக் கோள் சொல்லுமல்லவா அவன் தோள்கள்? "கண்டேன் கனமகரக் குழையிரண்டும் நான்கு தோளும் என்று - அவனுடைய காதணி அவன் தோள்கட்கு அலங்காரமானாற் போலே, இவர்களுடைய காதுப் பணியும் செவிப் பூவும் தோள்களுக்கு அலங்காரமாக அல்லவா இருப்பது, "பொற்றோடு பெய்து" என்ற - பண்டே தோடிட்டாலும் அவன் இட்டது போல் இராதல்லவா? **செவிப்பூவே :** காதில் அணியும் பூப்போன்ற ஓர் ஆபரணம். இஃது அணைத்திருக்கையிலே உறுத்தும் ஆபரணம் போலல்லாமல் அணைத்த உடனே ஆக்ராணத்துக்கு விஷயமான இடம்.

**பாடகம் :** காலுக்கு இடுவது. பாதகடகம் என்ற வட சொற் சிதைவு. அணைத்தால் தோற்றுப் பிடிக்கும் காலுக்கு இடும் ஆபரணம். **சூடகம் முதலியவை :** பிடித்தகைக்கும் அணைத்த தோளுக்கும் அணைத்த இடத்தே உறுத்துவதற்கும் உற்றுணர்தற்கும் தோற்றுவிழும் துறைக்கு. **சூடகமே - பாடகமே :** "கைத்தலம் பற்ற",

"திருக்கையால் தாள் பற்றி" - கையைக் காலைப் பற்றியல்லவா நடுவுள்ளவெல்லாம் நடத்துவது?

**என்றனைய பலகலனும்** : "இவ்வளவு எண்ணிக் காட்டி முடியாது. பருப்பருத்தன சிலவற்றைச் சொன்னோம். எல்லா வற்றையும் நீ அறிவாய்" என்கின்றார்கள். "பல பலவேயாபரணம்" என்றல்லவா சொல்லப் பெற்றுள்ளது? அவனுக்குரியனவற்றையும் சேர்த்து. **யாம் அணிவோம்** : ஆபரணங்களுக்கு அழகு கொடுக்கக் கூடிய அவயவங்களிலே கிடந்து தானும் நிறம் பெற்று, பூட்டின தானும் நிறம் பெற்றுப் போம்படி வடிவழகு பெற்ற நாங்கள். விரதம் அநுட்டிக்கும் போது "மலரிட்டு நாம் முடியோம்" என்றவர்கள் இப்போது "பூண்டோம்" என்கின்றார்கள். இன்னும், "நாம் முடியோம்" என்றால் பூட்டமாட்டான். "அணிவோம்" என்றால் பூட்டாதிருக்க மாட்டான். அவன் அலங்கரிப்பதற்கு இவர்கள் இசைவே அமையும். இன்னும் 'யாம் அணிவோம்' என்பதால் 'ஒருவரையொருவர் மாறி மாறி ஒப்பிக்கக் கணிக்கிறார்கள்' என்பது பெறப்படும். **'நாடு புகழும் பரிசினால் - யாம் அணிவோம்'** : "நிறை புகழ் ஆய்ச்சியர்", "அணியிழை ஆய்ச்சியர்" என்கின்ற இரண்டும் பெற வேண்டும் என்பது குறிப்பு.

**சூடகமே... அணிவோம்** : இதற்கு வேறு வகையான விவரணமும் காணலாம். காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய சுவாமிகள் ஆசாரிய ஹிருதயத்தின் 'பட்டஞ் சூடகமாவன்' (148) என்ற சூத்திரத்திற்குச் சேரும் முறையிடல் இவ்வாறு விளக்குவார். "சூடகமாகின்ற கரபூஷணம் எதுவென்னில் அஞ்சலி செய்வதாம். 'நின் தலையைத் தாழ்த்தி இருகை கூப்பு என்றால் கூப்பாத - பாழ்த்த விதி' (பெரிய.திருவந். 84) என்று கர்வம் வேண்டாதபடி கை கூப்பியிருப்பது கரபூஷணம். கோயிற் பொறியாலே யொற்றுண்டு நிற்றல் புய பூஷணம். முதல் உபதேச காலத்தில் தெரிந்தும் தெரியாததுமான மந்திரத்தைக் காதில் புகவிடுவது **தோடு**. பிறகு பொருள் சிறப்பைப் பரக்கக் கேட்பிப்பது **செவிப்பூ**. திவ்விய தேசங்களில் யாத்திரை செய்வது பாடகமாகிய பாதபூஷணம். இங்ஙனமே மற்றுமுள்ள அவயவங்களுக்கும் உசிதமான அலங்காரங்கள் பிராப்தமாகையாலே 'என்று அனைய பலகலனும் யாம் அணிவோம்' என்று கூறப்பெற்றுள்ளது" என்பதாக.

**ஆடையுடுப்போம்** : இதுகாறும் ஆடை உடாமலா இருக்கின்றார்கள், அவன் உடுத்து உடாதது உடையன்று என்றல்லவா இருப்பது, அவன் திருப்பரிவட்டம் இவர்கள் அரையிலாம்படி கூறைமாறவேண்டும் என்றுமாம். **நாடு புகழும் பரிசினால்** -

**ஆடையுடுப்போம்** - 'கூறையுடுக்கும் அயர்க்கும்' என்று வசை சொல்லாதபடி அரையிலே தொங்கும்படி உடுத்தல். **கோவிந்தா - உன்னைப்பாடி - ஆடை உடுப்போம்** : இவன் தொலைவிலிருந்த போது 'கோவிந்தா' என்று கூவி புடவை பெறுகின்றவள், இவன் சந்நிதியிலே சொன்னால் புடவை பெறக் கேட்க வேண்டுமோ? **ஆடை உடுப்போம்** : இவர்கள் உடுக்க, உடுத்தது அழகி ஒன்று என்று அவன் அழித்துதான் நன்றாக உடுத்தது. **நன்றாக - ஆடை உடுப்போம்** : "அரையிலே பீதக வண்ண வாடை கொண்டு" என்கின்றபடியே அவனைப் போலே வெளப்போடே வாங்கி உடுத்ததல்லாமல் உடுத்து முடித்து வேர்ப்பு மணத்தோடே கூடின கூறை மாறிடப்பட்ட உடையாக இடுதல். **அணிவோம் - உடுப்போம்**: பிரிந்திருந்தாலன்றோ "வரிவளையால் குறைவிலமே", "மேகலையால் குறைவிலமே" என்ன வேண்டுவது, **பல்கலனும் யாம் அணிவோம் - ஆடை உடுப்போம்** : "எண்ணில் பல்கலன்களும் ஏலும் ஆடையும்" என்னைக் கடவனவல்லவா?

**அதன் பின்னே** : புறம்பேயொன்றைப் பற்றினால் அவையும் இல்லை, அவனும் இல்லை. அவனைப் பற்றினார்க்கு அனைத்து இலாபமும் உண்டு. **'பால் சோறு மூடநெய் பெய்து** : 'நெய்யுண்ணோம் பாலுண்ணோம்' என்று விரதத்திற்காக இவற்றைத் தவிர்த்தவர்கள் இப்போது விரதம் முடிந்து இவற்றை உண்ண நினைக்கின்றார்கள். பகவத் சம்பந்தமுள்ள திருவாய்ப்பாடியிலே இவர்கள் உண்ணாததால், நெய்க்கும் பாலுக்கும் போக்கில்லையே. நெய்ப் பெருமையாலும் பால் பெருமையாலும் சோற்றை நீரில் ஆக்காது பாலில் ஆக்கி நெய்யை நிரம்பவிட்டு நெய்யியிலே சோறுண்ட என்று தடவி எடுக்க வேண்டும்படி இருத்தல். **முழங்கை வழிவார** : நம்பி திருவழுதி வளநாடுதாசர் 'நெய் வாயிலே தொங்காதோ' என்று கேட்க கண்ணபிரான் சந்நிதியிலே பரம திருப்தைகளாக இருக்கின்றவர்கட்கு சோறு வாயில் தொங்கினா லன்றோ நெய்வாயில் தொங்குவதற்கு? என்று பட்டர் அருளிச் செய்தார். 'பல்கலனும் யாம் அணிவோம்' 'ஆடையுடுப்போம்' என்று வினைமுற்றை இட்டுச் சொன்னது போல, இங்கு **'வார'** என்று சொல்லிய பிறகு **'உண்கை'** என்ற வினையைச் சொல்லாதுவிட்டது - கண்ணபிரான் சந்நிதியில் பரம திருப்தி அடைந்த இவர்கட்கு உண்ணும்படி ஒன்று வேண்டா வகையாலாம். நம்மாழ்வாருக்கு இருந்ததுபோலே இவர்கட்கும் "உண்ணும் சோறு பருகும் நீர் தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணன்" (திருவாய் 6.7.1) தானே.

**கூடியிருந்து** : பசிகெட உண்கின்றார்கள் அன்று. எல்லாரும் கூடி தொட்டுக் கொண்டிருத்தலல்லவா உத்தேசம் (பயன்)?

உண்ணுதல் பயன் அன்று என்பது குறிப்பு. **குளிர்ந்து :** பன்னெடு நாட்கள் பிரிந்து கமர்பிளந்த நெஞ்சங்கள் குளிரும்படி. 'நம் பெருமாள் திருநாள்' ஒரு பேரையிட்டு ஸ்ரீவைணவர்களைத் திரட்டிக் காணுமாப் போலேயும், தைத்திரீய உபநிடதம். பிருகவல்லியில் முக்தனானவன் 'நான் பரமான்மாவுக்கு போக்கியப் பொருள், போக்கியப் பொருள், போக்கியப் பொருள், நான் பரமான்மாவாகிய போக்கியப் பொருளை அநுபவிக்கிறவன், அநுபவக்கிறவன் என்று சொல்லிக் கொண்டு இருப்பது போலவும் இங்கும் ஒருவர்க்கொருவர் போக்கியமல்லவா?

**கூடியிருந்து - குளிர்ந்து :** நம்மாழ்வார் 'அடியார்கள் குழாங்களை உடன் கூடுவதென்று கொலோ' என்று முன்பு பாரித்த படியே முடிவில் 'வந்தெதிர் கொள்ள மாமணி மண்டபத்து, அந்தமில் பேரின்பத்து அடியரோடிருந்தமை' என்று பெற்றுத் தலைக்கட்டின மையை அருளிச் செய்தார். இதனால் அடியார்கள் குழாய்களுடன் கூடியிருந்து குளிர்வதுதான் பரம புருஷார்த்தம் என்பது இப்பாசுரத்தில் தெரிவிக்கப்பட்டதாகின்றது.

இன்னும் தைத்ரீய உபநிடதம் - ஆநந்தவல்லியில் சொல்லப்பெறுகின்ற பொருள் இந்தப் பாசுரத்தில் சொல்லப் பெறுவதாகப் பெரியோர் பணிப்பர். அஃது என்ன? "பிரம்மத்தைக் குறித்து இந்த ரிக் ஓதுபவர்களால் சொல்லப்பட்டது. சத்தியமாயும் ஞானமாயும் அநந்தமாயும் இதயக் குகையில் வைக்கப்பட்டதாயும் உள்ள பரமான்மாவை எவன் அறிகின்றானோ அவன் பரமபதத்தில், எல்லாக் குணங்களையும் முற்றறிவினனாகிய பரமான்மாவுடன் கூட அநுபவிக்கின்றான்" என்பது.

**நன்றாக - கூடியிருந்து - குளிர்ந்து :** இனி பிரிவுத் துன்பம் பிறவாத கூட்டறவாக வேண்டும். நன்னாளில் வருகிற கூட்டறவாகையாலே நன்றாகக் கூட வேண்டுமல்லவா? **உன்றன்னைப் பாடி - கூடி - குளிர்ந்து :** வாய்பாட, உடம்பு கூட, நெஞ்சு குளிர என்ற படியாம். **கூடி - குளிர்ந்து :** குள்ளக் குளிர நீரில் தோயாமல் நீர் வண்ணன் மார்பிலே தோய வேண்டும் என்று பாரிக்கின்றார்கள்.

**உள்ளுறை :** வடிவழகால் இடைப் பெண்களையும் சொருப ரூப குணங்களால் உண்டான வைலட்சண்யத்தால் ஆழ்வார்களையும் இவ்வொன்றிலும் ஈடுபடாத நம்போல்வாரை அவ்வாழ்வார் சம்பந்தத்தைக் காரணமாகக் கொண்டு ஈடுபடுத்தினான். இப்படி மிகவும் எளியவனான உன் பக்கல் நாங்கள் பெற பார்ப்பது என்ன? உன்னோடு சம்பந்தமில்லாத அன்று காப்பு நாணும், திருவிலச்சினையும் இரகசியத்திரயங்களும் அவற்றில் நுவலப்

பெறுகின்ற ஞான பக்தி வைராக்தியங்களும் என்ற இவற்றை ஒரு சமயம் வேண்டாத நிலையில் இருந்தோம். இப்போது அவற்றை வேண்டி நிற்கின்றோம். சேஷத்துவ ஞானத்தைப் பூர்ணமாகப் பெற்று, அதற்குமேல் கைங்கரியப் பிரார்த்தனையையும், அதையும் மறைக்கும் பாரதந்திரியத்தையும் வெளியிட்டு போக்தாவான உன்னோடு போக்கியரான நாங்கள் ஒன்றுபட்டிருந்து இத்தனை நாள் பிரிந்திருந்த இழவெல்லாம் தீரப் பெற்று உன்னோடு நாம் சேர்வதே நாம் பெறும் சன்மானம் என்பது.

தோடு திருமந்திரத்திற்கும், செவிப்பூ துவயத்திற்கும், பாடகம் சரமசுலோகத்திற்கும் உள்ளுறை. இம்மூன்றாலும் ஞான பக்தி வைராக்கியமும் சொல்லப்பெறுகின்றது. ஆடை சேஷத்துவ ஞானத்திற்கும், பாற்சோறு கைங்கரியத்தற்கும், மூடநெய் பெய்தல் பாரதந்திரியத்திற்கும் உள்ளுறை.

# 28. தங்கள் பக்கல் யாதொரு உபாயமும் இல்லையென்று தெரிவித்தல்

## இருபத்தெட்டாம் பாசுர விளக்கம்

"கறவைகள் பின்சென்று"

**கறவைகள் பின்சென்று கானம்சேர்ந்து உண்போம்**
**அறிவொன்றும் இல்லாத ஆய்க்குலத்து உன்தன்னைப்**
**பிறவி பெறுந்தனை புண்ணியம் யாம்உடையோம்**
**குறையொன்றும் இல்லாத கோவிந்தா உன்தன்னோடு**
**உறவேல் நமக்குஇங்கு ஒழிக்க ஒழியாது**
**அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உன்தன்னைச்**
**சிறுபேர் அழைத்தனவும் சீறி யருளாதே**
**இறைவாநீ தாராய் பறையேலோர் எம்பாவாய்.**

(சொ.பொ) : குறைவு ஒன்றும் - எந்தவகைக் குறைகளும்; இல்லா - இல்லாதவனாக உள்ள; கோவிந்தா - கோவிந்தன் என்னும் பெயரையுடையவனே; யாம் - நாங்கள்; கறவைகள் பின் சென்று - (புல்லுள்ள இடம் தேடி மேய்ப்பதற்காக) பசுக்களின் பின்னே போய்; கானம் - காட்டிலே; சேர்ந்து - அடைந்து; உண்போம் - உடலைப் போற்றித் திரிபவர்களாய்; அறிவு ஒன்றும் இல்லாத - சற்றேனும் அறிவில்லாத; ஆய்க்குலத்து - இடைக்குலத்தில்; உன் தன்னை - உன்னை; பிறவிபெறும்தனை - (ஒரே குலத்தில உள்ளவனாகப்) பெறுவதற்குத் தக்க; புண்ணியம் - புண்ணியத்தை; உடையோம் - உடையவர்களாய் இராநின்றோம்; இறைவா - சுவாமியான கண்ணபிரானே; உன் தன்னோடு - உன்னோடு; நமக்கு - எமக்குள்ள; உறவுஏல் - உறவே என்றால்; இங்கு ஒழிக்க - இப்போது நீக்குவதனால்; ஒழியாது - நீங்காது; அறியாத பிள்ளைகளோம் - (உலகமரியாதை ஒன்றும்) அறியாத சிறுமிகளாக இருக்கின்ற நாங்கள்; உன்தன்னை - உன்னை; அன்பினால் - (உன்னிடத்துள்ள) பக்தியினால்; சிறுபேர் அழைத்தனவும் - சிறிய பேராலே நாங்கள் அழைத்ததைக் குறித்தும்; நீ - (அடைந்தவரது குற்றத்தைக் குணமாக கொள்ளுகின்ற) நீ; சீறி அருளாதே - சினந்து அருளாமல்; பறை தாராய் - (எங்களுடைய நோன்பிற்கு வேண்டிய) பறையைத் தந்தருள்வாயாக.

(க-து) : 'வேண்டியவற்றை நாம் தருவதற்கு நீங்கள் என்ன உபாயம் செய்தீர்கள்?' என்று கண்ணபிரான் கேட்க, யாதோர் உபாயமும் தங்கள் பக்கல் இல்லாமையை இப்பாசுரத்தால் தெரிவிக்கின்றனர் ஆயச் சிறுமிகள்.[62]

**விளக்கம் : கறவைகள் :** அறிவுக் கேட்டுக்கு நிதர்சனமான பசுக்கள். பின் சென்று : நாங்கள் தேவரைப் பெறுவதற்குக் குருகுல வாசம் பண்ணினபடி இது. இவற்றைப் பின்பற்றினோம் - அவ்வளவே. எங்களை நோக்கினால் வசிட்டர் முதலிய இருடிகளுக்கு சாதாரண மக்களை விட எவ்வளவு உயர்ந்த ஞானம் உண்டோ அவ்வளவு உயர்ந்த ஞானம் இடைச்சிறுமிகளாகிய எங்களைவிட பசுக்களுக்கு உண்டு. **கறவைகள் பின்சென்று :** அறிவு கேட்டுக்குத் தலையாய கன்றுகாலிகள் முன்னே ஏக, அவற்றின் பின்னே சென்றதுதான் இத்தனை காலமும் நடைபெற்றது. எங்களைப் பார்த்தால், பசுக்களும் வசிட்டபராசரா முதலிய இருடிகளின் பக்கல் நின்று, எங்கள் இளிம்பு கண்டு சிரித்து, எங்கள் ஆர்ஜவத்தை அநுகரித்து அவை வழிகாட்ட அவற்றின் பின்னே திரிந்தோம். 'காலிகள் பின் சென்று' என்னாமல் 'கறவைகள் பின் சென்று' என்றது - பசுக்கள் கறப்பதனால் பால் உண்ணக் கிடைக்கும் என்று அவற்றின் பின்னே சென்று மேய்க்கின்றோ மேயன்றிப் பசுவைக் காத்தல் எங்கள் குலதர்மம் என்று நினைத்துப் பசுக்களைக் காத்தோம் இல்லை. எருதுகளை என்றும் காத்தல் செய்து அறியோம்.

**கறவைகள் பின் சென்று :** பசுக்களை மேய்த்துப் பின்னே திரிந்தாலும், நாங்கள் போய்த் தங்குவது சத்துக்களிருக்கும் புண்ணியத் தலங்களாகில் அழகியது என்றும், கோவலூர், சாளக்கிராமம், அயோத்தி, மதுரை, கோயில் தொடக்கமான ஊர்கள், கிராமங்கள், ஆசிரமங்கள் இவற்றிலே இராத்தங்கினால் அழகிது என்றும் கருதலாம். ஆனால் இந்தப் புண்ணியத்தையும் பெற்றோம் அல்லோம். **'கானம் சேர்ந்து'** என்கின்றார்கள். மானிடர் தங்கும் காட்டிலும், நீ விரும்பித் திரியும் பிரதேசங்களிலும் மழைக்கு ஒதுங்கி ஓரிரவு தங்கியும் அறியோம். பசுக்களுக்குப் புல்லும் நீரும் உள்ள இடம் தேடி அவ்விடத்துக்கு நெருங்கிச் சென்றோம் அல்லோம். **கானம்** - காடுகளிலே. தண்ட காரணியம், நைமிசாரணியம், பதகரிகாச்ரமம் முதலியவற்றில் அபிமானம் உண்டாகில் நன்மை பயக்கலாம். ஆனால் ஒரு சிறப்பும் இல்லாத **கானம்** என்கின்றனர். இவர்கள் இருந்து திரியும் காடு 'எவ்வும் சிலையுடைய வேடர்கள்'

62. முதல் பாசுரத்தில் 'நாராயணனே நமக்கே பறை தருவான்' என்று சுருக்கமாகச் சொன்னவற்றை இந்த 28, 29 ஆம் பாசுரங்களில் விவரிக்கின்றனர்.

திரியும் காடு. அக்காட்டில் அடியிடுவார் காலில் கல்லும் முள்ளும் தீண்டும் பிருந்தாவனம் (நெஞ்சிக்காடு) ஆகையாலே சத்துக்கு இடம் அன்று. **சென்று - சேர்ந்து** : 'சென்று சேர்மின்களே' (பெரி.திரு. 3.2) 'சென்று வணங்குமினோ' என்னும் இடங்களில் சென்றறியோம். 'சீராம விண்ணகரே சேர்மின்நீரே' (மேலது 4), 'திருநறையூர் மணிமாடம் சேர்மின்கள்' (மேலது 6.6) என்கின்ற இடங்களில் சேர்ந்து அறியோம். 'பரன் சென்று சேர்' என்று உனக்கும் கந்தவ்யமுமாய், பிராப்யமுமாய் அன்றோ அவை இருப்பது. அவற்றில் சென்று அறியோம், சேர்ந்தும் அறியோம்.

சத்துக்கள் தங்குமிடமும், புண்ணிய தலவாசமும் பெற்றில்லை என்று கருத வேண்டா. நீங்கள் வைசியராகையாலே பசுக்களைக் காத்தலை வர்ண தர்மத்தில எழுதலாம். காட்டில் தங்குதலை வானப் பிரஸ்தாச்ரமித்தில் முதலிட்டு ஆச்ரமதர்மமாக்கலாம். ஆசார் யார்த்தமாகப் பசுக்களை மேய்த்துக் காடுகளில் தங்குதலையும் தர்மமாகச் சொல்லலாம். தாபதரான இருடிகளும் ஆரண்ய வாசம் பண்ணியன்றோ தர்மத்தை நிலை நிறுத்துவது? இவற்றையெல்லாம் கர்ம யோகத்திலே அடக்கலாம் என்று கருதலாம். ஆனால் **உண்போம்** என்கின்றார்கள். வர்ணச்ரமங்கள் நடத்துகைக்காகவும், ஆசார்யார்த்தமாகவும், அத்ருஷடார்த்தமாகவும் நாங்கள் இவற்றைக் கடைப்பிடிக்கவில்லை. உடலை வருத்தி அதனால் ஒரு புண்ணியம் உண்டாகைக்காக அற உணர்வால் இவற்றை மேற்கொள்ளவில்லை. உதர போஷகபரராகவே செய்தோம். **உண்போம்** : வயிறு வளர்த்தலே புருஷார்த்தம்.

**கானம் சேர்ந்துண்போம்** : காட்டில் சென்றால் புழுதியும் வேர்வையும் போகக் குளித்து உண்டறியோம். ஆகாரநியமமு மின்றியும் தூய்மையின்றியும் கண்டவற்றையெல்லாம் உண்டோம். **உண்போம்** : அருகில் இருந்தார் கையில் ஒரு பிடி இட்டோமாகில் அதிதி பூசை பண்ணினதாக அமையும். அதுவும் செய்யவில்லை. **சென்று உண்போம்**: அமர்ந்து உண்ணவேண்டும் என்ற நியமம் இல்லாமல் நடந்துகொண்டே உண்போம். **உண்போம்** : பசுக்கள் உண்டு அசையிடாதிருக்கையிலும் நாங்கள் உண்ணாதிருப்பதில்லை. இவற்றால் தங்கள் செயல்களில் குறை சொல்லி, "உன்னைப் பெறுவதற்கு நாங்கள் அநுட்டித்த கர்மயோகத்தின் நிலை" என்கின்றார்கள்.

ஆக முதலடியில் சாத்தியோபாயங்களை ஒழித்து சித்தோபாயத்தைக் கடைப்பிடிக்கும் அதிகாரிகட்குக்

கைம்முதலாயிருக்கும் நற்செயல் ஒன்றும் இல்லை என்பதைத் தெரிவிக்கின்றனர்.

**அறிவொன்றும் இல்லாத :** இப்போது இல்லையாகில் விதுரன், வியாதன் முதலியோர்களைப் போல பல பிறவிகளில் செய்த நற்செயலால் உண்டான ஞானம்தான் உண்டோ என்னில், அதுவும் இல்லை. **ஒன்றும் :** கர்மயோகத்தாலுண்டான பகவத் ஞானத்திற்கு அடியான ஆன்ம ஞானமும் இல்லை. பக்தி என்பது ஞானச் சிறப்பாகையாலே அந்த ஆன்ம ஞானம் அடியாக உன் பக்கலில ஞானம் பிறந்து, நீதான் உத்தேசியன் என்று உணர்ந்து, உன் பக்கலிலே உண்டான அநவரதபாவநாரூபமாய் வரும் பக்தி ரூபபாபந்ந ஞானமும் இல்லை. இவை இரண்டுக்கும் அடியான பிரகிருதி ஆன்மவிவேகம் முதலியவை. சமதர்மம் முதலியவை, சாதன சமபத்தி தொடக்கமானவை உண்டாகி முமுட்சுவாதலுக்கு யோக்கியமாயிருக்கும் அவற்றிலும் ஓர் அந்வயம் இல்லை. இப்போது தனித்து உபாயமாய் நிற்கும் ஞான யோகத்தையும் பக்தி யோகத்தையும் இல்லை என்கிறது. பக்தியானது ஞானச் சிறப்பாகையாலே, இவர்கள் அலமாப்பு பக்தியன்றோ என்னில் : அது சொரூபமாகையாலே உபாயமாக நினையார்கள். ஆக இவற்றால் தங்களிடம் கர்ம ஞான பக்திகள் இல்லை எனல்.

இன்னும் 'அடியேன் அபசாரங்கட்கு உறைவிடம், அகிஞ்சன், அகதி' (பகவத் சாத்திரம்) 'நோற்ற நோன்பு இலேன். நுண்ணறிவு இலேன்' (திருவாய். 5.7.1) இவையும், 'குளித்து மூன்று அனலையோம்பும் குறிகொள் அந்தணமை தன்னை ஒளித்திட்டேன்' (திருமாலை 25), நான் கர்மயோக நிஷ்டனன், ஞானயோக நிஷ்டனன்று, உனது சரணாரவிந்தத்தின்கீழ் பக்தி செலுத்துபவனுமன்று, அகிஞ்சகன், அநந்யகதி' (ஸ்தோத்திரத்னம் - 22) இவையும் அறிவுடையார் சொற்கள். நைச்சியாநுசந்தமாக (தங்களைத் தாழ்வு சொல்லிக் கொள்ளும் முறையில்) சொன்னவை. நாங்கள் **'ஆய்க்குலம்'** என்கின்றார்கள். ஆய்க்குலம் - அறிவு உண்டென்று ஐயப்பட வொண்ணாத குலம். இங்கு அறிவு இல்லாமை சன்ம சித்தம். "எங்கள் பிறப்பு கண்டு அறிவுண்டு என்று சொல்லுகின்ற அறிவுக்கேடனே அன்றி வேறில்லை" என்கிறார்கள். எங்கள் பிறப்பு கண்டவர்கட்கு கர்ம ஞான பக்திகள் உண்டோ என்று கேட்க வேண்டுமோ? கீழ் இல்லை என்றது உபேட்சையால் வந்ததன்று, யோக்கியதை இல்லாமையால் கலைந்ததென்கின்றார்கள். இராவணன் துர்விருத்தன் என்பதற்கு அடி 'இராட்சசன்' என்றாற்போலவும், 'ஏழை ஏதலன்' (பெரி.திரு. 5.8.1) என்பதற்கு

அடி 'கீழ்மகன்' என்றாற்போலவும் அறிவில்லாமைக்கு 'ஆய்க்கலம்' என்கின்றார்கள். "ஒன்றும் அறிவொன்றில்லாத ஒருவரைக் கோபாலர்" என்று சொல்லுவது உண்டல்லவா? ஆக **இரண்டாம்** அடியில் - மேலும் தங்களுக்கு யோக்கியதை இல்லை என்பதைத் தெரிவிக்கின்றனர்.

**உன்தன்னை :** "எவர் வேதப்பொருளை அறிந்துளரோ, எவர் ஆன்ம ஞானம் உடைவரோ, அவர்கள் மகாத்மாவான கண்ணபிரானை சநாதன தர்மம் (சித்தோபாயம்) (பாரதம் - ஆரண்யபர்வம் 88.26), என்னும்படியான உன்னை என்றபடி.

**ஆய்க்குலத்துப் பிறவி பெறுந்தனை புண்ணியம் யாம் உடையோம் :** பேற்றுக்கு உடலான புண்ணியம் இல்லாதார் என்று எங்களைச் சொல்லலாமா? சித்தோபாயமாய் சாட்சாத புண்ணியத்திற்குப் பாலும் சோறும் இட்டன்றோ வளர்கின்றவர் களன்றோ நாங்கள்? அசேதநங்களும் அசக்தங்களுமாகையாலே பயனை விளைவிப்பதில் பரமசேதநனுடைய கைபார்த்திருப்பனவான கர்ம ஞானபக்தி பிரபத்த முதலிய சாத்தியமான உபாயாந்தரங்கள் எங்களுக்கு வேண்டுமோ?

**ஆய்க்குலத்து உன் தன்னை :** நீ எங்கள் குலத்திலே விரும்பிவந்து பிறக்கும்படியன்றோ எங்கள் ஐசுவரியம்? இதுதானே எங்கள் ஏற்றம்? **ஆய்க்குலத்து :** நாங்கள் எத்தனையேனும் கைகழியச் செய்தாலும் நீ அவ்வளவெல்லாம வந்து கிட்டிய பின்பு எங்களுக்கு அதிகாரத்தில் குறையுண்டோ? எங்களுடைய இடைக்குலத்தில் நீ வந்து பிறப்பதற்கான புண்ணியத்தை நாங்கள் உடையோம். எங்கள் பேற்றுக்கு உபாயமும் நீயே. அதற்கு அடியான சுக்ரதமும் நீயேயாகப் பெற்றோம்.

**ஆய்குலத்து உன்தன்னை :** இங்கு வந்து ஏதாவது பெறுவதற்கா நீ பிறந்தது? இவ்வாய்க்குலத்தைக் கரையேற்ற அல்லவா நீ தோன்றினாய்? "உய்ய இவ் ஆய் குலத்தினில் தோன்றிய ஒண்சுடர் ஆயர் கொழுந்தே" என்று சொல்லக் கடவது அல்லவா? **உன் தன்னை :** நித்திய சூரிகள் அணுக்கத் தொண்டர்களாய்க் குற்றேவல் செய்கின்ற உன்னை கறவைகள் பின் செல்லுகின்ற குலத்திலே பெற்றோம். தடங்கல் சேர்ந்த உன்னை கானஞ்சேர்ந்த குலத்திலே பெற்றோம். ஒட்டறுத்து உண்ணாதே நிற்கும் உன்னை 'உண்போம்' என்கின்ற குலத்திலே பெற்றோம். திவ்யஞ்ஞோபபந்தர்க்கு முகங் கொடுக்கின்ற உன்னை அறிவொன்றும் இல்லாத ஆய்க்குலத்தில் பெற்றோம். இமையோர் குல முதலான உன்னை ஆயர்குல முதலாகப் பெற்றோம். வெங்கதிரோன் குலத்திற் காட்டில் இக்குலத்திற்கு உண்டான

வாசிபாராய். நீ பகல் விளக்கான குலமும் அணி விளக்கான குலமும் ஒக்குமோ?

**பிறவி பெறுந்தனை** : நாட்டிலுள்ளார் அடைய வேண்டியவர் இருக்கும் இடத்திற்குச் சென்று அடிமை செய்வார்கள். அவர்களைப் போலவா நாங்கள்? அடைய வேண்டியவனான நீ நாங்கள் இருக்கும் இடத்தில் வந்து எங்களோடு ஒரே குலத்தவனாக வந்தவதரிக்கும் நிலை ஏற்பட்டதன்றோ எங்கள் ஏற்றம். "நந்தன் பெற்ற ஆனாயன்' (பெரி.திரு. 5.5.3) என்னும் இடமன்றோ இது? **பெறுந்தனை புண்ணியம்** : பெறுகைக்குத் தக்க பாக்கியம். புண்ணியத்தை உன்னாலே தேடலாம். புண்ணியமே வடிவாயிருக்கும் உன்னைப் பெறுவதற்குத் தக்க புண்ணியம் வேண்டுமல்லவா? கிருஷ்ணனே சநாதனதர்மம் (சித்தோபாயம்) ஆக இருக்கும்போது 'நீயே சநாதன தர்மம்' அல்லவா என்கின்றார்கள். **பெறுந்தனை புண்ணியம்** : பறை தரும் புண்ணியனேயன்றோ தன்னையும் தருவது? பிறப்பதற்குள்ள ஏதுவல்லவா தருவதற்கும் எது, வேண்டிவந்து பிறந்ததும் நம்மைப் பெறும்படியான புண்ணியம், "என்ன நோன்பு நோற்றாள் கொலோ இவனைப் பெற்ற வயிறுடையாள்?" என்பதன்றோ யசோதை பெற்றபேறு? **யாம் உடையோம்** : அவள் பெற்று உடையளனாள், நாங்கள் பிறந்து உடையோம் ஆனாம். **புண்ணியம் நாமுடையோம்** : நாட்டில் புண்ணியங்கள் பலவாய், பிரதிநியதங்களுமாயிருக்கும். எங்கள் புண்ணியம் ஒன்றாய் அது எல்லார்க்கும் பொதுவாய் இருக்கும் "யாவர்க்கும் புண்ணியம்" என்னக் கடவதல்லவா?

**குறையொன்றும் இல்லாத கோவிந்தா** : நீ பரிபூர்ணனா யிருந்தும் இந்த ஆயர் குலத்திலே பிறந்தது, ஒன்றும் அறிவொன்றும் இல்லாத கோபாலரை ஈடேறச் செய்வதற்கேயன்றி எங்களால் ஏதேனும் பெறுவதற்கோ? "எங்களுடைய அறிவொன்றும் இல்லாமைக்குப் போதாதோ உன்னுடைய குறைவொன்றும் இல்லாமை? எங்கள் குறையாலே எங்களுக்கு இழக்க வேண்டுவது - உன்னுடைய பூர்த்தியால் ஏதேனும் குறையுண்டாகிலன்றோ?" என்கின்றார்கள். இப்பள்ளத்துக்கு அந்த மேடு நிரப்பப் போதாதோ? இப்பாதாளத்திற்கு அப்பர்வதம் நேர் என்றவாறு.

இக்குறை ஒன்றுமில்லாமை பரத்துவத்திலன்று, தாழ நின்ற நிலத்தாலே. சமமானவர்க்கும், அவர்களிலும் சிறியவர்கட்கும், அவர்களோடொத்தவர்கட்கும் முகம் கொடுக்கும் என்கின்ற குறை அங்கு. குறை உண்டு என்னவும் அறியாதாரோடே பொருந்தித் திரிந்தவன்றோ? **கோவிந்தா** : கன்றுகள் மேய்த்து கோவிந்தாபிஷேகம் பண்ணி கோப குலத்திலே கலந்து பரிமாறி காலிகள் பின்னே

வருகின்ற வேடத்தை எல்லோர்க்கும் காட்டி, ஏற்கெனவே அறிந்து கோவர்த்தனத்தையெடுத்து இரட்சித்துப் போருகையாலே வாத்சல்யம் முதலிய குணங்களாலும், ஞான சக்தி முதலியவற்றாலும் பூர்ணனானவனன்றோ? எங்களுக்கு ஞான சக்திகள் கையுகுந்ததில்லை. உனக்கு ஞான சக்திகள் குறைந்ததில்லை.

**கோவிந்தா** : 'மாமேகம்' என்றவன் பாசுரமன்றோ? கோலும் கடையாவும் கழிகோலும் கையிலே பிடித்த கண்ணிக் கயிறும், சேனைகள் நடப்பதற்குக் கிளப்பிய தூசு படிந்திருக்கும் குழலும், மறித்துத் திரிகின்றபோது திருவடிகளிலே கிடந்து அரவாரிக்கின்ற கழல்களில் அணிந்த சதங்கைகளும் குளிர் முகத்தின் கோடலமுமாய் நிற்கின்ற உபாயவேடத்தைக் 'கோவிந்தா' என்கின்றார்கள். ஆக நான்காம் அடியில் ஈசுவரனுடைய குணபூர்த்தியின் அநுசந்தனம் சொல்லப் பெறுகின்றது.

'குறையாளர்கட்கு நிறைவாளர் கொடுக்கக் கடவார்கள் என்று ஒன்றுண்டாகிலன்றோ என் பூர்த்தியும் உங்கள் அபூர்த்தியும் சொல்லுவது?' என்று கண்ணன் சொல்ல, இவர்கள் சொல்லுகின்றார்கள் : **உன் தன்னோடு உறவு** : "உன் பூர்த்தி குலையிலும் பந்தம் குலைய ஒட்டுதியோ? நீ எங்களுக்கு உறவன்றோ? நீ எங்கள் காரியம் செய்ய வேண்டாவோ? குடல் துடுக்கு உண்டான இடத்தில் சுவாதந்திரியம் சீவிக்குமோ?" என்கின்றார்கள். 'அதுகொண்டோ நீ பேசுவது, ஆனால் அந்த உறவு ஒருகுட நீரோடு போய்விடுகின்றது[63] என்று கண்ணன் சொல்ல, இவர்கள் பேசுகின்றார்கள் : **உறவேல் - ஒழிக்க ஒழியாது** : "உன்னோடு உண்டான சம்பந்தம் உன்னாலும் விடவொண்ணாது. எங்களாலும் விடவொண்ணாது. கிருத சங்கேதரானாலும் விட ஒண்ணாது. பிரகாரியை ஒழிய பிரகாரத்துக்கு நிலை உண்டோ?' என்கின்றார்கள். "இப்படிச் சொல்லுவதற்கு ஆதாரம் என்ன?" என்று கண்ணன் வினவ, "நான் உன்னை அன்றி இலேன் கண்டாய் நாரணனே, நீ என்னை அன்றி இலேன்" (நான். திருவந். 7) என்ற பிரமாணம் கேட்டறியாயோ?' என்கின்றார்கள். 'அவர்கள் உங்களைப் பெற்றவர்களன்றோ?' என்று கண்ணன் கூற, "ஆனால் நீ எங்கள் கையில் தந்த மூலப் பிரமாணத்தின் (ஓம் என்பது) முதல் எழுத்தை (அகாரத்தை)ப் பார்த்துக் கொள்ளாய்" என்கின்றார்கள். அதாவது - 'நாராயணனே நமக்கே பறைதருவான்' என்று தொடக்கத்தில் சொன்னோமல்லவா?' என்றபடி.

63. ஒருகுட நீரோடு போகிறது – உறவுள்ள ஒருவன் இறந்தால் ஒரு குடம் நீர் தலையில் வார்த்து முழுகினால் அந்த உறவு நிலை அறுந்து போகின்ற இலௌகிக வழக்கம்.

"இவையெல்லாம் அறிவொன்றுமில்லாத உங்களுக்கும் வார்த்தைகள் அல்ல. உறவு, சுற்றம் என்று ஒன்றில்லா நமக்குத் தெரியாது" என்றான். நமக்கு - **ஒழிக்க ஒழியாது** : "உன்னுடைய ஞானவான்களுடைய பந்தமல்லகாண் நாங்கள் சொல்லுகிறது. இடையாலே வந்த உறவு காண் எங்களது. அறிவில்லாதார்க்கு மறக்கலாம் அந்த உறவு. அறிவில்லாதார் இட்டீடு[64] கொள்ளும் உறவு கண் இவ்வுறவு. நீமைத்துனன் நம்பி. நாங்கள் மாமிமார் மக்கள், இதனை எங்ஙனமே ஒழிப்பது?" என்கின்றார்கள். "இஃதென்ன புதிது, நமக்கு சிசுபாலன் மைத்துனன் அன்றோ?" என்றான். உடனே இவர்கள், "கோவிந்தத்துவத்திற்குப் பழிப்பு சொன்னவனாகையாலே அவனை விடாய். கோவிந்தாபிஷேகம் பண்ணினவன்று உன் காலிலே குனிந்த மைத்துனன் (பார்த்தன்) காரியம் எல்லாம் உன் தலையிலே ஏறிட்டுக் கொண்டு முன் நடந்து செய்திலையோ? அந்த உறவு காண். "தாழ்ந்த தனஞ் செயற்காகி", "பாலைப் பிராயத்தே பார்த்தற்கு அருள் செய்து" என்றெல்லாம் உன்புகழ் சிறக்கின்ற தல்லவா?" என்கின்றார்கள்.

"போருக்காக ஒரு நிமித்தத்தை ஏற்படுத்திக் கொண்டு காரியம் செய்த அப்பொழுதே அதனை விட்டுவிட்டோமல்லவா?" என்றான். **இங்கு - ஒழிக்க ஒழியாது** : "அங்கு ஒழிக்கலாம். இங்கு ஒழிக்க ஒண்ணாது காண். சுதந்திரன் தாழ்ந்தவிடத்தில் பண்ணின உறவு போன்றதா பரதந்திரரைத் தாழ் நின்று கையைக் காலைப் பிடித்துப் பண்ணின உறவு?" என்கின்றார்கள். **கோவிந்தா - உன்தன் னோடுறவேல் - ஒழிக்க ஒழியாது** : "உன்னுடைய நாராயணத் துவத்தில் உறவு பழங்கிணறு கண் வார வேண்டுமோ? எங்களுக்கு இந்த உறவு போதாதோ? அளிக்கின்றவன் ஆனாயனாகையாலே 'இரட்சிய - இரட்சகபந்தமும்' உன்னோடே. குன்று குடையாய் எடுத்த அடிகள்" என்று. கோவிதநாபிஷேகம் பண்ணுகையாலே சேஷசேஷி பாவனையும், உன்னோடே. ஏசம்படி அன்ன செய்யும்படியான எம் ஈசராகையாலே நியந்தரு நியாம்ய பாவனையும், உன்னோடே. "தம்மனையானவனே" "ஆனாயர்தானவனே" என்று கரிய - காரண பந்தமும் உன்னோடே. "என்னுயிர்க் கண்ணபிரான்" என்று - நீ உரியாய், நீ விட்டகன்ற பின் என் உயிர் ஆற்றமாட்டாது, நாங்கள் துடிக்கும்படி இருக்கையாலே 'தார்ய - தாரக பந்தமும்' உன்னோடே. 'எண்ணத்துள் என்றும் இருந்து தித்திக்கும்' என்று -- 'வியாப்ய வியாபக சம்பந்தமும்' என்னோடே. இங்ஙனம் உன்னோடு உண்டான சம்பந்தத்துக்கு எல்லையுண்டோ?[65] **கோவிந்தா - ஒழிக்க ஒழியாது** :

64. இட்டீடு – பலவிதமான கோலாகலங்கள்.
65. எட்டெழுது மந்திரம் குறிப்பிடும் நவவித சம்பந்தத்தை ஈண்டு நினைப்பது.

"நீ கோவர்த்தன மலையைத் தூக்கி நிறுத்தினபொழுது வேறொருவனோ இதைச் செய்தது? என்று ஆயர்கள் ஐயுற்ற பொழுது, 'நான் பந்துவாய்ப் பிறந்தேன். நீங்கள் வேறொன்றை நினையாமல் கொள்ளுங்கள்' என்று சொன்ன சொல் அமோகமன்றோ?" என்கின்றார்கள்.

**ஒழிக்க ஒழியாது :** "உன்னால் விடவொண்ணாது, எங்களாலும் விடவொண்ணாது. உன்னுடைய உறவினரால் விடுவிக்க வொண்ணாது, எங்களது உறவினராலும் விடுவிக்க வொண்ணாது, ஊராகக் கூடி முயன்றாலும் விடுவிக்க வொண்ணாது. நீ துறந்து எம்மை விட்டகன்ற விடத்திலும் உன்னால் செல்ல முடியாது. நாங்கள் புள்ளுவம் பேசாமல் 'கழகம் ஏறேல்' என்றவிடத்திலும் நம் உறவு குலைந்ததில்லை. 'ஊனமுடையன செய்யப் பெறாய்' என்றவிடத்திலும் நம் உறவு அறுந்ததில்லை. "இவ்வூர் ஒன்று புணர்க்கின்றதே" என்று திரள அவத்தியம் சொன்னவிடத்திலும் நம் உறவு ஒழிந்ததில்லை. அறிவொன்றுமில்லாத எங்களுக்குக் குறைவொன்றுமில்லாத நின் உறவு தயா பூர்ணைகளான எங்களுக்கு உண்டானதற்கு எவரும் குறை சொல்ல ஒண்ணாதே" என்கின்றார்கள். ஆக, **ஐந்தாம்** அடியில் பரமான்ம - சீவான்ம உறவு சொல்லப்பெறுகின்றது.

"இப்படி நம்முடைய உறவு சொல்லா நின்றீர்கள். இப்பொழுது தான் உங்களைக் கோபிகைகளாகவும் நம்மை கோவிந்தனாகவும் சொன்னீர்கள். நம்மை மருமத்திலே தொட்டு மேலும் அதிலே தொடர்ந்து காலம் வாய்த்த பிறகு வாலைக் குழைத்து 'கோவிந்தா' என்றீர்கள். இப்போது நான் செய்ய வேண்டுவது என்ன?" என்று கண்ணன் கேட்க, இவர்கள் "எங்கள் பிழைகளைப் பொறுத்தருள வேண்டும்" என்று வேண்ட "இவற்றையெல்லாம் பொறுப்பதற்கு ஏது சொல்லுங்கள். பொறுக்கின்றோம்" என்று கண்ணன் கூற, இவர்கள் **அறியாத பிள்ளைகளோம்** என்கின்றார்கள். பிழைகளைப் பொறுப்பதற்கு இடைச்சிறுமியர் சொன்ன ஏதுக்கள் : 1. முதலில் அறியாமல் செய்தவற்றைப் பொறுக்க வேண்டும். 2. பாலகர்களாக இருந்தபோது செய்தவற்றைப் பொறுக்க வேண்டும். 3. தோழிகள் செய்தவற்றைப் பொறுக்க வேண்டும். 4. அநவதாநத்தாலே சொல்லுவதறிந்தோம். பால்யத்தாலே சொல்லுவதறிந்திலோம். பிரேமத்தாலே வந்த விரலட்சியாலே சொல்லுவதறிந்திலோம். 5. எங்களாலே அறிவுகெட்டோம். உன்னாலே அறிவு கெட்டோம். யாதுமொன்றறியாத பிள்ளைகளன்றோ நாங்கள், அறிவொன்று மில்லாத ஆய்க்குலத்தில பிறந்தமையால் அறிவு கெட்டோம். "அழகு

கண்டென் மகளயர்கிறது" என்கின்றபடியே உன்னைக் கண்டு மதிகெட்டோம். "அறிவழிந்தனர் ஆய்ப்பாடி ஆயர்" என்று - இடையரை மதிகெடப் பண்ணக் கூடியது பெண்களை மதி கெடுக்கச் சொல்ல வேண்டுமோ? "பித்தர் சொல்லிற்றும் பேதையர் சொல்லிற்றும் பத்தர் சொல்லிற்றும் பன்னப் பெறுவரோ?" என்பது பிரசித்தம் வாய்ந்தது அன்றோ? கவனமில்லாமையாலும் நெடுங் காலத்திய பழக்கத்தாலும், உமது மகிமைகளை அறியாது உம்மை நண்பன் என்று எண்ணிக்கொண்டு வாய்மீறிச் சொன்னவற்றைப் பொறுக்க வேண்டும் (கீதை 11.41) என்பதை நினைக்க வேண்டும்.

**அன்பினால்** : பிரேமத்தாலே வந்த அறியாமை. பிரேமத்தாரைக் குற்றம் கொள்ளுதலாவது - ஒரு படுக்கையில் இருந்து கைத்தாக்கிற்று கால் தாக்கிற்று என்பதன்றோ?

**உன்தன்னை** : கோவிந்தாபிஷேகம் பண்ணியிருக்கின்ற உன்னை. அநவதாநாதிகளும் அன்பை விளைவித்தற்கு நிமித்தமாயிருக்கின்ற உன்னை. "இளையார் விளையாட்டொடு காதல் வெள்ளம் விளைத்த" என்று - என்பதல்லவா அவற்றுக்கு அடி. **"உன்றன்னைப் பிறவி பெறுந்தன்னை"** என்றதைப் போலன்று இந்த உன் தன்னை. அவ்விடத்தில் பெருமையுடையவன், தாழ நின்று நீர்மை சம்பாதிக்க வந்த இடத்தில் மேன்மை சொல்லுதல் குற்றமன்றோ? 'நாராயணன்' என்ற முதல் திருநாமம் சொல்லுதல் குற்றமல்லவா?

சிறுபேர் : கோவிதநாபிஷேகம் பண்ணின பின்பு முதல் திருநாமம் சொல்லுதல் குற்றம். முடிசூடினவனை 'அரசன்' என்று பேர் சொல்லாமல் சாதாரண இயற்பெயர் சொல்லுதல் குற்றம். இப்போது 'சிறுபேர்' என்று நினைப்பது 'நாராயணன்' என்பதைத் தங்களுக்கு அசாதாரணனாக இருக்கின்றவனை சாதாரணன் என்று சொல்லுதல் குற்றமல்லவா? ஊடல் உள்ளபோது சொல்லுவதை படுக்கைத் தலத்தில் சொல்லலாமோ? அந்தப்புர வாசலில் படுகாடு கிடப்பாரை நாட்டுக்குக் கடவன் என்பது உண்மையானவன் அல்லன் அன்றோ? இவன் உடைய விபூதிக்கும் முடி கவித்து வைகுந்தத்திலே இருப்பவன் என்று சிறிது ஞானமுண்டாயிருக்கும்போது இந்திரன் வந்து 'பசுக்களை மேய்த்தவன்' என்று முடிசூட்டினான். உபய விபூதிக்கும் முடி சூட்டினதற்கு அவ்வருகே ஓர் ஐசுவரியமல்லவா இது? 'நாராயணன்' என்கிற பேர் நாராயணபரங்களான பிராமாணங் களுக்குச் சொல்லலாம் கோவிந்தா சக்தமான நெஞ்சுடையாருக்குச் சொல்லுதல் குற்றம். **சிறுபேர்** : சகஸ்ர அட்சரங்கள், துவாதச அட்சரங்கள் முதலிய பெரும்பேர்கள் எல்லாம் அவன் பெயராகிய எட்டெழுத்தையும் கண்டதும் சிறிதாயிற்று. அதுதான் மூன்றெழுத்து

உடைய பேரைக்[66] (அ+உ+ம=ஓம்) கண்டதும் சிறுத்தது. முழுகி மூக்கைப் பிடிப்பார்க்கு யோக்கியமான பேர் ஆயிற்று. வாச்யன் சிறுக நின்று நிறம் பெற்றால் வாசகமும் அப்படியாயாகும் அல்லவா? 'அஷ்டாத்திர மந்திரம்' என்பார் கலங்கினவர்கள். தெளிவுடையவர்கட்கு சிறுத்துத் தோன்றுமல்லவா இது? மூல நாமுமாய் அதிகுஹ்யமுமாய் செவியிலே சொல்ல வேண்டும் படியல்லவா இருப்பது, பிறந்து பன்னிரண்டும் கழிந்த பிறகு பேரிட்டுத் தாலாட்டினதல்லவா? 'மன்னு நாரணன் நம்பி பிறந்தமை' (பெரியாழ். திரு. 1.2.10) என்றும், 'நாராயணா அழேல் தாலேலோ' (மேலது 1.4.8) என்றும் அப்போது செய்தலை நீலநிறத்துச் சிறுபிள்ளையாகையாலே சொல்லலாம். இப்போது பெருங் கண்ணன் அல்லவா?

**அழைத்தன** : அந்த 'நாராயணன்' என்ற பெயரை ஒரு தடவை சொல்லாமல் 'நாராயணனே' (திருப். 1) என்றும், 'நாற்றம் துழாய் முடி நாராயணன்' (மேலது 10) என்றும், 'நாராயணன் மூர்த்தி' (மேலது 7) என்றும் பல தடவை சொன்னார்களல்லவா, **அழைத்தனவும்** : எங்களில் நாங்கள் முதல் நாமத்தைச் சொல்லியதேயன்றி மூலக்கிழங்கிலே தட்டச் சொன்னவற்றையும் அதாவது "பாழியந் தோளுடைப் பத்மநாபன் (மேலது 4), 'ஓங்கி உலகளந்த உத்தமன்' (மேலது 3), 'பாற்கடலில் பையத்துயின்ற பரமன்' (மேலது 2), 'முகில் வண்ணன்' (மேலது 11) என்பனவற்றையும் சொன்னார்களல்லவா? **உன்றன்னை - அழைத்தனவும்** : எங்களில் நாங்கள் அன்பின் காரணமாகவும் நட்பின் காரணமாகவும் 'பேய்ப் பெண்ணே' (மேலது 7). "ஊமையோ? அன்றிச் செவிடோ?" (மேலது 9), நாணாதாய்' (மேலது 14), 'பண்டே உன் வாய் அறிதும்' (மேலது 15) என்று சொன்னவற்றையும் பொறை கொள்ள நினைத்தார்கள். முக்கரணங்களாலும் உண்டான அபசாரத்திற்கு மன்னிப்பு கோருகின்றார்கள். பகவத் பாகவத விஷயங்களில் உபசார பத்தியாகப் பண்ணும் அபசாரங்களுக்கும் மன்னிப்பு வேண்டுகின்றார்கள். கலபனைப் பரன் என்கிறது அபசாரமன்றோ? குளிர்ந்த நீரை விநியோகம் கொள்ளுபவனுக்கு காய்ச்சின நீர் பகையல்லவா? கண்ணனுடைய ஆற்றலுக்கு ஈசுவரத்துவத்தால் வந்த அழல் பகையல்லவா? "போற்றுக்குப் பயனாவது புறம்பே கிடக்கும் பயின்றவைகளைக் கிடந்து ஆராய்கிறதென்" என்று **'சீறியருளாதே'** என்கின்றார்கள். செய்வதையெல்லாம் செய்துவிட்டு 'சீறியருளாதே' என்று வேண்டுவது ஆகாதுதான். இவர்களைப் பற்றி ஆராயின் சீற வேண்டும்படியன்றோ இருப்பது? நப்பின்னைப் பிராட்டியை

66. பெரியாழ். திரு. 4.7:10 உரை காண்க.

முன்னிட்டவர்களாகையாலே, பழைய வரலாறு இலக்கல்லவே. போர்க்களத்தில் விசுவரூபம் கண்ட காண்டீபன் கண்ணனிடம் 'நீ என்னுடன் மேல் விழுந்து கலசினபடியாலே உன் பெருமையை அறிந்திலேன். அநவதாநத்தாலும் அன்பினாலும் பண்ணின அபசாரங்களைப் பொறுத்தருள வேண்டும்'' என வேண்டினான். சௌலப்பியத்திலே பறிமாறின குற்றங்களில் பரத்துவம் கண்டதும் பொறை கொண்டான் அவன். சௌலப்பியத்தைக் கண்டு பரத்துவ புத்திக்கு மன்னிப்பு கொள்ளுகின்றார்கள் இவர்கள். பக்தியில் தலையாக நிற்கவுமாம். அவன் தன்னைப் பற்றவுமாம். கிருட்டிணனால் சொல்லுவது இது என்றபடி.

இங்ஙனம் பொறுத்தருள வேண்டும் என்று வேண்டின ஆயச் சிறுமியரை நோக்கிக் கண்ணபிரான் "நம்மாலே பேறாம்படியான உறவு நம்மோடு உண்டாகிலும், குற்றத்தைப் பொறுக்க வேண்டும் என்றாலும், பலனை அநுபவிப்பவர்கள் நீங்களாக இருப்பதால், நீங்களும் ஏதாவதொன்றைச் செய்ய வேண்டாவோ? வியாஜ மாத்திரமாகிலும் வேண்டுமே. 'இவர்கள் இன்னது செய்தார்கள் இவன் இன்னது செய்தான்' என்று நாட்டார்க்குச் சொல்லுவதற்கு ஒரு அலம்பனம் வேண்டுமே'' என்று கூற, அது கேட்ட ஆயச் சிறுமியர் 'எங்களிடம் ஒன்றையும் எதிர்பாராமல் நீ காரியம் செய்தால் உன்னை விலக்குவதற்கு உரியார் உண்டோ?' என்ற கருத்துப்பட 'இறைவா' என்கின்றார்கள். **இறைவா :** " பிழை செய்தாராகிலும் தம் அடியார் சொல பொறுப்பது பெரியோர் கடனல்லவா, இந்த நீதியை பள்ளியின் ஆசனத்தின் கீழிருந்து கேட்டு அறியவில்லையா? நீ இறைவனாக இருத்தலுக்கும் சீறுதலுக்கும் ஏதாவது பொருத்தம் உண்டா?'' என்கின்றார்கள். **இறைவா :** வானோர் இறையை நினைத்தன்று. ஆய குலத்தில் வந்து தோன்றின நாம் இறை என்றபடியாம். **நீ தாராய் பறை :** எங்கள் விருப்பத்தை நிறைவேற்றி அருளாய்.

**கோவிந்தா - இறைவா - ஒழிக்க ஒழியாது - பறைதாராய் :** உன்னை நோக்கினாலும் கைவிடவிரகில்லை. எங்களை நோக்கினாலும் கைவிடவிரகில்லை. (நீ) "நான் இரட்சிப்பதற்கு நீங்கள் பண்ணின சாதனாநுட்டானம் என்?' என்று கேட்டால் "வேதர் நிலையில் இருப்பதற்குக் குறை சொல்லப்போமோ?' என்கின்றார்கள். அறிவுடையார் அறிவொன்றும் இல்லாத உங்களுக்கு விஷய வாச மாத்திரமேயன்றி குடல் துடக்குண்டானால் இரட்சிக்கச் சொல்ல வேண்டுமா, **குறைவொன்றுமில்லாத கோவிந்தா - இறைவா - பறைதாராய் :** உன்னுடைய சேஷித்வம் நிறை நிற்க வேண்டுமானால்

செய்கின்றாய். சீறாமைக்கும் எது இது. **பறைதாராய்** : 'சாது பரித்திராணம் பண்ணுகைக்கு' - சாதுக்களை இரட்சிப்பதற்கென்றே இங்கு வந்து பிறந்தருளினது? 'பறை தாராய்' என்று கேட்டால் கோவலர்களின் மிகுதியான குறையை ஆராயலாமா? **நீ தாராய்** : சுலபனான நீ தாராய். சுவாமியான நீ தாராய். சித்த சொரூபனான நீ எங்கள் சாத்தியத்தை எதிர்பாராது உன்னையே நோக்கிக் காரியம் செய்தருள வேண்டும்.

**கறவைகள் முதலியவை** : எங்களைப் பார்க்கிலும் நீ காரியம் செய்ய வேண்டும். எங்களையும் உன்னையும் பார்க்கிலும் காரியம் செய்ய வேண்டும். உன்னைப் பாராதே எங்களை நோக்குதியாகில் நாங்கள் இழக்கின்றோம். எங்களைப் பாராமல் உன்னை நோக்கினாயாகில் பெறுகின்றோம். ஆகவே, எங்களுடைய இரட்சணம் உன்னாலே விடலாமா, எங்கட்கு விருத்த ஞானம் பிறப்புகளால் நன்மை இல்லை என்றோம். நீ நன்மைக்கு அடி என்றோம். பூரணன் என்றோம். சுலபன் என்றோம். உன்னோடு எங்களுக்குக் குலையாத சம்பந்தம் உண்டு என்றோம். எங்கள் பிழைக்கு அநுதபித்தோம். பொறை கொண்டோம். எங்கட்கு இனி செய்ய வேண்டும் அம்சம் இல்லை. இனி உன்னை இழவாமல் காரியம் செய்யப் பாராய். உடைமையை இழத்தல் உடையவனின் இழவன்றோ?

"உனக்கு ஞானசக்தியிலும் குறைவற்றிருந்தது. பிராப்தியிலும் குறைவற்றிருந்தது. எங்கட்கு அஞ்ஞான முதலியவைகள் பூரணமாய் இருந்தது. 'குற்றங்களைப் பார்த்துச் சீறவொண்ணாதபடி சகல விரோதிகளையும் போக்குகின்றேன்' என்று சொல்லக்கூடியவனாய் இருந்தாய் நீ. ஆக 'பிராப்பிய இலாப நிமித்தமாகச் சோகியாதே' என்று சொன்ன நீ எங்கள் விருப்பத்தை நிறைவேற்றலாகாதோ?" என்று தங்கட்குப் புகல் இல்லாமையையும், தகுதியற்ற நிலையையும் எடுத்துக் கூறி, எங்கள் பிராப்பிய சித்திக்கு நீயே உபாயமாக வேண்டும்" என்று கண்ணபிரானை வேண்டுகின்றார்கள்.

## 29. தங்கள் உத்தேச்யம் கைங்கரியம் என்பதைச் சொல்லுதல்

### இருபத்தொன்பதாம் பாசுர விளக்கம்

"சிற்றஞ் சிறுகாலே"

**சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்துஉன்**
**பொற்றா மறையடியே போற்றும் பொருள்கேளாய்**
**பெற்றம் மேய்த்தண்ணும் குலத்தில் பிறந்துநீ**
**குற்றவேல் எங்களைக் கொள்ளாமல் போகாது**
**இற்றை பறைகொள்வான் அன்றுகாண் கோவிந்தா**
**எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு**
**உற்றோமே யாவோம் உனக்கேநாம் ஆட்செய்வோம்**
**மற்றைநம் காமங்கள் மாற்றேலோர் எம்பாவாய்.**

(சொ.பொ) : கோவிந்தா - கண்ணபிரானே; சிற்றம் சிறுகாலே - மிக விடியற்காலத்திலேயே; வந்து - (நீ இருக்கும் இடத்தில்) வந்து; உன்னை சேவித்து - உன்னைத் தெண்டனிட்டு வணங்கி; உன் பொன் தாமரை அடியே - உன் அழகிய தாமரை மலர் போன்ற திருவடிகளையே; போற்றும் பொருள் - மங்களாசசாநனம் செய்வதன் பயனை; கேளாய் - கேட்டருள வேண்டும்; நீ - நீ; பெற்றம் - பசுக்களை; மேய்த்த - வயிறார மேய்த்து அவை உண்டது கண்டபின்; உண்ணும் - உண்கின்ற; குலத்தில் - இடைக்குலத்திலே; பிறந்து - பிறந்து விட்ட (திருவவதரித்து); எங்களைக் குற்றவேல் கொள்ளாமல் - அந்தரங்கக் கைங்கரியங்களைக் கொள்ளாமல்; (திருவுள்ளம் பற்றியருளாமல் விட்டுவிடுவது); போகாது - (உனக்குத்) தகாது; இற்றை - இன்றைக்கு (நாங்கள் வந்தது); பறை - பறையை; கொள்வாள் அன்று - கொள்ளும் பொருட்டாக அன்று; கோவிந்தா - கோவிந்தனே; நாம் - நாங்கள்; எற்றைக்கும் - காலம் உள்ள அளவும்; ஏழ்ஏழு பிறவிக்கும் - (உன்னுடைய) எல்லா அவதாரங்களிலும்; உன்தன்னோடு - உன்னோடு; உற்றோமேயாவோம் - உறவு உடையவர்களாகக் கடவோம்; உனக்கே - உனக்கு மாத்திரமே; நாம் - நாங்கள்; ஆள் செய்வோம் - அடிமை செய்யக் கடவோம்; நம் - எங்களுடைய; மற்ற - (இவற்றைவிட) வேறுபட்ட; காமங்கள் - விருப்பங்களை; மாற்று - தவிர்த்தருள வேண்டும்.

**(க-து)** : மேல் பாசுரத்தில் (28) உபாய சொருபத்தைச் சொல்லி, இத்திருப்பாசுரத்தில் தங்கள் உத்தேசியம் (குறிக்கோள்) கைங்கரியம் என்ற பிரபந்தத்தின் தாற்பரியத்தைச் சொல்லி முடிக்கின்றார்கள். மேலும், பேற்றிலே தங்களுக்குள்ள ருசியையும், பேறுதான் இன்னது என்பதையும், அதனை அவன்தானே தரவேண்டும் என்பதையும் பேற்றினைப் பெறுவதில் தங்கள் விரைவையும் அறிவிக்கின்றார்கள்.

திருவாய்மொழியில் **'எம்மாவீடு'** (2.9) என்ற திருப்பதிகத்தில் பேற்றினை அறுதியிட்டு, அதன் சரமதசையான பொருளை **'நெடுமாற்கு அடிமை'** (8.10) என்ற திருப்பதிகத்தில் அருளிச் செய்தார். இதில், முந்துற சரமதசையான 'நெடுமாற் கடிமை' என்ற திருப்பதிகத்தின் பொருளைக் கூறி, அது நிலைநிற்பதற்காகவும், அதனைக் காத்து ஊட்டுதற்காகவும் 'எம்மா வீடு' என்ற திருப்பதிகத்தின் பொருளோடே முடிக்கின்றார்கள்.

**விளக்கம்** : சிற்றஞ் சிறுகாலே - சிறு பெண்கள் எழுந்திருக்க வொண்ணாத குளிர்ப்போதிலே. சத்துவம் தலையெடுத்த காலத்திலே. அநாதி அஞ்ஞான அந்தகாரம் நீங்கி பகவத் விஷயம் வெளிச்செறிந்த காலத்தில் "நாரணனைக் கண்டேன், பகற்கண்டேன்" (இரண். திருவந். 81) என்னக் கடவதல்லவா? **சிற்றஞ் சிறுகாலே வந்து** : 'காலைவந்து' என்னாமல், 'சிறுகாலை வந்து' என்னாமல் 'சிற்றஞ்சிறு காலை' என்பதன் கருத்து : 'எங்கள் பருவத்தை ஆராய்ந்தால் பொழுது விடிந்து பதினைந்து நாழிகையானாலும் குளிருக்கும் அஞ்சி குடிலைவிட்டுக் கிளம்ப மாட்டாதார் என்று தோற்றா நிற்க, குளிரை ஒரு பொருளாக நினையாமல் நாங்கள் இத்தனை சிறு காலையில் வந்தது எவ்வளவு ஆற்றாமையின் கனத்தினாலாகக் கூடும் என்பதை முற்றறிவினனாகிய நீயே ஆராய்ந்து கொள்' என்றவாறு.

**சிற்றஞ்சிறு காலை** : என்பது சாதிப்பேச்சு. 'செக்கச் சிவந்த' 'வெள்ளை வெளேர்', 'கன்னங்கறுத்த' என்ற பிரயோகங்களை யொக்கும் இப்பிரயோகம்.

**சிற்றஞ்சிறுகாலம்** : பிரம்ம முகூர்த்தமாய் வந்து விழுந்த காலம். பஞ்ச பஞ்ச உஷாக்காலம. சத்துவம் தலையெடுத்து அநாதியான அஞ்ஞான அந்தகார இருள் நீங்கி பகவத் விஷயம் வெளிச்செறிக்கும் காலம். பிரம்ம முகூர்த்தம். 'தொழுது மாமலர் நீர் சுடர் தூபம் கொண்டு, எழுதும் என்னும் இது மிகையாதலின்' (திருவாய் 9.3.9) என்று ஆழ்வார் அருளிச் செய்தபடி ஓரஞ்சலியும் உண்டறுக்க மாட்டாதவன் கிருட்டிணன். மாதம் மார்கழி மாதமாய், பட்சம் பூர்வபட்சமாய், அதிலே பௌர்ணமியாய், அப்படியே ஒரு நன்னாள் வந்து பலத்தாற்போலே, அத்திவசத்தின் முகூர்த்தமும் பிரம்ம

முகூர்த்தமாய் வந்து விழுந்தது. அஞ்ஞான தசை குலைந்து பிராப்தசை புகுவதற்கு முன்பு உள்ள ஞானதசையைச் சொன்னபடி. "முனிவர்களும் யோகிகளும்" உணரும் காலம் - சிற்றஞ் சிறு காலம். சம்சாரியான நிலை குலைந்து முக்தனாவதற்கு முன்பு முமுட்சுத்துவம் அங்குரித்த தசையல்லவா? "காலை நன் ஞானத்துறை படிந்தாடி" என்று ஞானதீர்த்தத்தில் மூழ்கினமைக்கு யோக்கியமான காலம் பெற்றபடியாம். "ஒண் தாமரையாள் கேள்வன், ஒருவனையே நோக்கும் உணர்வு" (முத. திருவந். 67) என்று, திருமகள் கேள்வனை விஷயீகரிக்குமல்லவா நன்ஞானம்? துறைடிபந்தாடுகையாவது - நல்லாசிரியர் உபதேசம் மூலமாக பிராட்டி புருஷகாரமாக, பாகவதர்கள் உசாத்துணையாக, எம்பெருமானைப் பற்றுவது. "உன் மணாளனை எம்மை நீராட்டு" என்று - துறைதப்பாமல் இழிந்தவர்களல்லவா இவர்கள்? "ஓயும் பொழுதின்றி" விடிவு காணாதபடி நீண்ட சம்சார காளராத்திரி கழிந்து "பகற்கண்டேன்" (இரண்டாம் திருவந். 81) என்று ஒருபகல் முகம் காட்டுகின்ற சமயமல்லவா? காலை மாலை என்று ஒரு நியதியல்லவா, அவன் தோற்றும் காலம் விடிவுகாலம் அல்லவா? திருவாய்ப்பாடிக்கு, நாட்டார் விடிவு அஸ்தமனமாய், சர்வ பூதங்களினுடைய அஸ்தமயம் விடிவாயல்லவா நடப்பது?

**சிற்றஞ் சிறுகாலே** : சிறுகாலேவரில் உன்னைக் காண வொண்ணாதென்று சிற்றஞ்சிறு காலே வந்தோம். "சிறு காலேயூட்டி ஒருப்படுத்தேன்" என்று மாத்ருபரந்தரனாய் இளங்கன்று மேய்க்க வேண்டும். விடிந்தவுடன் "காலிப் பின்னே போம்" "எல்லியும் போதாக வரும்", "நீராட்டமைத்து வைக்கையாலே", "ஆடி அமுது செய்யும்", "அல்லுற்றான் வந்த பின்னை" என்கின்றபடி இருளிலே ஆள்பார்த்து ஊரிலே திரியும், விருப்பமானவர்களை வேண்டின இடங்களிலே புணர்ந்து "இருநாழிகை மூவெழு சென்றவாறே" இங்கே கிடைகாட்டவரும். அக்காலமறிந்து வந்துகைக் கொண்டார்கள். நாள்தோறும் ஒரு விடிவு உண்டாகி நடப்பதல்லவா - இது? சுப்ரபாதபாதம் ஆகிற்று. இந்தத் திவசம் ஒன்றும் ஆகிற்று.

அதற்கடி என்னவென்றால் **'வந்து'** என்பது. வந்த வருத்தத்தை "வந்து தலைப்பெய்தோம்" (திருப். 22) என்று மேலே சொன்னார்களல்லவா? **வந்து** : சேதநர்க்கு ஈசுவர இலாபம் அவன் வரவாலே இருக்க, "வந்து" என்றது ஆதாராதிசயத்தாலே. இதுதானும் அவ்விடத்துக்கு மிகையாக அல்லவா இருப்பது, **வந்து:** சம்சார பதவியில் ஓடினவர்கள் மீண்டு வருவதிலும் வருத்தமுண்டு எங்கள் வரத்துக்கு. தேகாத்மாபிமானம் பண்ணியிருப்பாரை "எதிர்

சூழல்புக்கு" திரிகின்றவனுடைய முயற்சியால் வருவிக்கலாம். நிவ்ருத்தி சாத்தியமென்று சொரூபத்தை உணர்ந்து வாராதாரை வருவிப்பது அரிதல்லவா? உபாய ஸ்வீகாரத்தில் உபாயப் பிரதிபத்தி பண்ணாதபடியான நிலையில் நிற்கின்றவர்களை செய்பாட்டு ரூபமானதை ஏறிட்டுக் கொண்டு வரும்படி பண்ணுதல் அரிதல்லவா? இவ்வாறு பெருமாள் திருவுள்ளத்தைப் புண்படுத்தினாற்போல் சொல்லுகின்றார்கள். "வரவுக்கு நோவுபடுகின்றவனை வார்த்தையாலும் புண்படுத்தினான். தான் சரண்யராகப் பற்றி வந்தாரை யுண்டாக்கிக் காரியம் கொள்ள மாட்டிற்றிலன் என்றதல்லவா? - வீடணனை அப்படியே நாலடியிட்ட நாங்களே வந்தோம்" என்கின்றார்கள்.

**வந்து :** "இவ்வீதி போதுமாகில்" என்று வந்தால் காரியங் கொள்ள இருக்கும் நாங்கள் வரும்படியன்றோ வேகம் இருந்தபடி. **வந்து :** பிறந்த இடத்தில் நன்றும் ஆயர்குலத்திலே வந்து "மழை கொலோ வருகின்றது" (பெரியாழ். திரு. 3.4.1) என்னும்படி, "வீதியூடே வந்து" "நம் தெருவின் நடுவே வந்து", "கதவின் புறமே வந்து", "முற்றம் புகுந்து", "நம் இல்லம் புகுந்து", "நீ மலரணை மேல்வைகி" மாலை புகுவதற்குப் பிராப்தமாயிருக்க. படுக்கையை விட்டுப் படிகடந்து, "காவலும் கடந்து", "உன் தோரண வாசலிலே வந்து", உள் கட்டிலே புகுந்து, "பள்ளிக் கட்டிற் கீழே" சிற்றஞ்சிறு காலே வந்த வருத்தம் அறிய வேண்டாவோ? "கறவைகள் பின் சென்று" (திருப். 28) என்ற அந்தப் போக்கு அறுதியிட்டுச் சொன்னாற்போலே, இந்த வார்த்தையும் தப்பு என்றிருக்கின்றார்கள். சொரூபத்தை உணராதபோது அது பிராப்தமாயிருக்கும். சொரூபத்தை உணர்ந்தால் இது பிராப்தமாயிருக்கும். உபயாந்தரத்துக்கு நிவ்ருத்திதோஷம். இவ்வதிகாரிக்கு பிரவிருத்தி குற்றம். பிராப்பிய பிராவண்யம் சொத்தை மறப்பித்தது. "பூமருவு கோல நம் பெண்மை சிக்தித்திராது போய்" என்னப் பண்ணுமல்லவா?

நீங்கள் வந்து செய்த தப்பு என்? என்று கண்ணன் கேட்க, **'உன்னைச் சேவித்து'** - 'இதுதான் நாங்கள் செய்த தப்பு' என்கின்றார்கள். எங்கள் சொரூபத்தை அறியாவிட்டாலும் உன் சொரூபத்தைத்தான் உணர்ந்தோமா? இந்தலையில் மித்திரபாவனை யாயிருத்தல். இவனை விடில்தான் உளனாகாதபடி இருப்பவனல்லவா? **உன்னைச் சேவித்து :** பலம் வேண்டாமல் சாதனகாலத்தில் ரசிக்கும் உன்னைச் சேவித்து. ஓர் அஞ்சலியையும் உண்டறுக்க மாட்டாத உன்னைச் சேவித்து. "சென்று நாம் சேவித்தால்" என்கின்ற இரண்டுமிகையும் செய்தோமல்லவா? "பின்னே சென்று" "சூழவே நின்று" என்று எங்களைத் தொடர்ந்து சேவிக்கின்ற உன்னை, சுவடு

பார்த்துத் தொடர்ந்து திரிந்து. "நாரணன் போமிடமெல்லாம் சோதித்து ஊழி தருகின்றான்" என்னக் கடவதல்லவா?

சேவித்தது மட்டுமா, அதற்கு மேலும் சில செய்யவில்லையா? **உன் பொற்றாமரையடியே போற்றும் :** சூட்டக் கண்ட பூவை விலை மதித்து விற்பாரைப் போலே, கண்டு அநுபவித்தலே பயனாக இருக்கின்ற திருவடிகளைப் பெற்ற பிறகு வேறே ஒரு பயன் தோற்றும்படியான செயல் செய்ய செல்லாமை பாராய். 'உன்', 'பொன்' 'தாமரை' என அடிக்கு மூன்று சிறப்புகள் இடம்பெற்றுள்ளன. எம்பெருமானது திருவடிகள் பிராப்தமும், விலையற்றவையும் போக்கியமானவையும் என்று அறிவித்தற்காக. **'அடியே'** என்றதன் கருத்து வேறொரு பயனுக்கு ஆளாகாதிருத்தல் என்பதைப் பெற வைப்பதற்காக. **சேவித்து - போற்றும் :** "தொடர்ந்து ஏத்தவும்" என்கின்றபடியே. **அடியே - போற்றும் :** அவ்விடத்துக்கு மங்களாசாசனம் பண்ணி, தனக்கும் பாதுகாப்பு தேடிக் கொள்ளுத லேயன்றி, தன்னை அழிய மாறியும் அத்தலைக்கு நன்மைகளை வேண்டுதல். புத்திரன் சீடன் தாசன் ஆகியோர் தாங்களும் உண்டு உடுத்து பித்ராதிகட்கும் சேஷமாய் இருக்குமாபோலல்லாமல், அத்தலைக்கே சேஷமாயிருக்கும் இருப்பு தனக்கு உய்யும் பொருட்டாயிருத்தல். **உன் அடியே போற்றும் :** அடியானுக்கு அடியல்லவா பிராப்தி. **உன் - பொன் - அடி :** "உலகமளந்த பொன்னடி" போற்றுகிறவர்களோ, "காடு கறைந்த பொன்னடி" போற்றுகிறவர்களோ நாங்கள். அவை "உலகெலாம் தலைவிளாக் கொள்ளுதல்", வானவர்தம் சென்னிமலராய்" உதவுதல் அல்லவா அந்தப் பொன்னடிகள் இருப்பது, இது "மாகமா நிலம் முழுவதும் வந்திறைஞ்சும்" என்றல்லவா இப்பொன்னடி இருப்பது, **உன் - பொன் - அடி:** எல்லார்க்கும் பொதுவாயிருத்தலும், கண்டால் விடவொண்ணா திருத்தலும், விட்டால் பிழைக்கவொண்ணாதிருத்தலும் வெறும் பொன்னடி மட்டுமா? "பொற்றாமரை" அடியல்லவா? சாதனத்துவமும் சாத்தியத்துவமும் நிறைந்திருத்தல். "தாமரையன்ன பொன்னார் அடி" யல்லவா, **உன் பொற்றாமரையடியே :** எங்களுக்குப் பொன்னும் பூவும் புறம்பே தேட வேண்டுமோ? **உன் பொற்றாமரை அடி :** பெண்களுக்குப் புறம்பு அந்யபரதைகள் உண்டானால் கிருஷ்ணன் அவற்றைக் குலைப்பதும் திருவடிகளாலே. "அழித்தாய் உன் திருவடியால்" "கற்றினம் மேய்த்த எந்தை கழலிணை" என்று ஆச்ரணீயமும் இது. "அவன் தாளிணைக் கீழ்ப்புகும் காதல்" என்று ஆசைப்படுவதும் இது. ஆசாநுகுணமாக "தாள் கண்டு கொண்டு என் தலைமேல் புனைந்தேனே" என்று - இவர்கள் "சென்னிக்குக்

கோலமாகச் சூடுவதும் இதனை. **போற்றும்** : போற்றுகையாவது - சுவாமிக்கு மங்களாசாசனம் பண்ணுதல் - "பரமன் அடிபாடி", "அடிபோற்றி - கழல் போற்றி" என்று முடியச் சொல்லிக் கொண்டு போந்தார்களல்லவா இவர்கள்? "கண்ணன்தாள்" வாழ்த்துவது சொரூபப் பிரயுக்தமா இருக்குமல்லவா? இதற்கு மேலே ஒன்று நினைக்கும் படியல்லவா ரசிகார்யமாய் வந்த ஆற்றாமை இருந்தபடி?

**போற்றும் பொருள்** : போற்றுகின்ற பயன். இவர்கள் 'போற்றும் பொருள்' என்று பாரித்துக் கொண்டு சொல்லத் தொடங்கும்போது சிற்றஞ்சிறு காலேயுணர்ந்து வந்த உறக்கமயக்கத்தாலே சிவந்த "போதரிக் கண்களையும்" இவர்கள் 'கோவைக் கனிவாயில்' பழுப்பிலும், பேச்சின் இனிமையிலும் வடிவழகிலும் "பாடகமும் சிலம்பும்" ஒலிக்கும் இவர்கள் பொற்றாமரை அடியிலும் கண்ணை வைத்து நாம் சொல்லுவதைக் கேட்காமல் உள்ளான் என்று தோற்றும்படி அந்யபரனாயிருந்தான். இதனால் கேளாய் என்கின்றார்கள். இவர்கள்தாம், தங்களையறிந்தால் பேச்சினிடையே ஏதாவது வார்த்தை சொல்ல வேண்டாவோ? ஒன்றும் பேசாதிருந்தமையால், 'கேளாய்' என்னும்போது நடுவே அந்யபரனாக இருக்க வேண்டுமல்லவா? **கேளாய்** : எங்கள் பிராப்பியத்தை அழித்தோ நீ உன் பிராப்பியம் பெறப்பார்ப்பது என்று அடியையிட்டுத் தொடையைத் தட்டுகின்றார்கள். தம் முன்னே இருக்கின்றவனை 'கேளாய்' என்று விதந்து சொல்ல வேண்டுமோ என்னில் : இவர்களுடைய கொங்கை முதலிய அவயங்களிலே ஆழ்ந்து அந்யபரனாயிருக்கையாலே, "நின் பராக்கை விட்டு நாங்கள் சொல்லுகின்ற வார்த்தையைக் கேளாய்" என்கின்றார்கள். நீ - **கேளாய்** : "சீரிய சிங்காசனத்திலே" யன்றோ நீ இருப்பது, தர்மாசனத்திலிருப்பார் கேட்க வேண்டாவோ?

கண்ணனும் "இவர்களது பேச்சன்றோ?" என்று கேட்டான். **பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்த நீ** : பசுக்கள் மேய்த்து உண்ணக் கடவதான இடைச் சாதியிலே வந்து பிறந்து எங்களை அடிமை கொள்ளாதொழிய ஒண்ணாது. இங்கு வந்து பிறந்தது 'ஏதுக்காக? யாருக்காக' என்று விசாரிக்கலாகாதோ? **பெற்றம் மேய்த்துண்ணும்** : நீ பிறப்பிலியாய் பிறவாதார் நடுவேயிருந்து பிறவியற்றார்க்கு முகம் கொடுக்கிற நிலத்திலே வந்தோமா? பிறவிக்குப் போரப் பயப்பட்டு உனையே கால் கட்டுவோரிடத்திலே வந்தோமா? பிறவா நிற்கச் செய்தே ஆசாரப் பிரதானா புகுந்து வந்தோமா? பிறவா நிற்கச் செய்தே ஆசாரப் பிரதானா புகுந்து நியமிக்கும் அரச குலத்திற் பிறவியிலோ வந்தோமா, வாலால் வழக்குக்குப் பசுமேய்க்கவந்து வயிறு வளர்க்கும் எங்கள் குலத்திலே

நீ என் செய்யப் பிறந்தாய்? என்று விசாரிக்கலாகாதா? **பெற்றம் மேய்த்துண்ணும் குலம்** : இரட்சயமான பசுக்கள் வயிறு நிறைந்தாலல்லது நாங்கள் உண்ணாத குலம். உன் பிறப்பாலும் எங்கள் காரியம் தலைக்கட்ட வேண்டும் என்பது கருத்து. **பிறந்த நீ எங்களை** : பிறவாதாரைப் பிறவாதார் ஏவிக் கொள்ளவும், பிறந்தாரைப் பிறந்தார் ஏவிக் கொள்ளுகையும் முறையன்றோ? "இவ்வாய்க் குலத்து ஆய்ச்சியோமாகப் பிறந்த எங்களை விரும்பியன்றோ" - "நீ ஆயனாய்ப் பிறந்து" "ஆயனாகி ஆயர்மங்கை வேய தோள் விரும்பினாய்" **எங்களை** : பசுக்களுக்கு வேறு இரட்சகர் உண்டாகிலும் உன்னையொழிய வேறு இரட்சிப்பாரில்லாத எங்களை. பசுக்கள் தானும் பறித்துத் தின்னும் பிறகு ஐயோ என்னும்படி இருக்கும், இரண்டாகாரமும் இல்லாத எங்களை.

**குற்றேவல்** : அந்தரங்கமாய் ஏவிக் கொள்வது. "முகப்பே கூவிப் பணிகொள்ள வேணுமல்லவா? "விருத்த தசைக் கரமமும் அல்ல" "கருதுமிடத்தில்" வியாபாருரமும் அல்ல - அணுகின விருத்தியும் ஏவின விருத்தியம் ஆக வேண்டும். திருத்திரைக் குள்ளில் விருத்தி. உடைவாளும் அடுக்குருவும் எடுத்தல், கலசப் பானை பிடித்தல், படிக்கம் வைத்தல், "உமிழும் பொன்வட்டில்" எடுத்தல், திருவடிகள் விளக்குதல், ஒலியன் பணிமாறுதல், சாமரமிரட்டுதல், அடைக்காய் திருத்துதல், அடி வருடுதல், "முலைகள் இடர் தீர" அணைத்தல், இவை போன்றவை "கோவிந்தற்குப் பண்ணும் குற்றேவலாகின்றது. "இவையெல்லாம் முறைப்படி கொள்ளுகின்றோம்." என்கின்றான் கண்ணன். **எங்களை** : அடிமையின் சுவடு அறிந்து அதில் ருசியும் வேகமும் விளைந்து முறைமை அடைதல் பொறுக்கமாட்டாதபடி வந்து மேல் விழும் எங்களை. 'உடனே இரட்சணத்திற்கு நாங்கள் உள்ளோம்' என்று தோற்றியிருந்ததோ என்று தங்கள் ஆற்றாமையை அணித்துக் காட்டுகின்றார்கள். சிறிது விட்டுப் பிடிக்க அறியாத எங்களை ஒரு படுக்கையிலே யொக்க இருக்கப் பிரிவதற்கு இரங்கும் எங்களை. **கொள்ளாமற் போகாது** : உனக்கு விஹிதம். சப்தாதி விஷயங்களே தாரகமாயிருக்கிறது. அன்னபானாதிகள் தாரகமான நிலையைத் தவிர்த்து உன் வடிவழகைக் காட்டி "உண்ணும் சோறு பருகும் நீர் தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணன் எம்பெருமான்" (திருவாய் 6.7.1) என்னும்படி பண்ணி ஸ்வரூபாநுரூபமான அடிமை கொள்ளாமல் போகப் போகின்றாயா? "குற்றேவல் எங்களைக் கொள்ளாமற் போகாது" என்றவிடத்தில்.

**கொம்மை முலைகள் இடர்தீரக்**
**கோவிந் தர்க்கோர் குற்றேவல்**
**இம்மைப் பிறவி செய்யாதே**
**இனிப் போய்ச் செய்யும் தவந்தான் என்?** (நாச்.திரு. 13:9)

என்ற நாச்சியார் திருமொழியை நினைத்து மகிழலாம்.

"கொள்ளாமற் போகாது" என்று - மீள வொண்ணாதபடி நிர்ப்பந்தித்தபொழுது, "நாம் அந்தரங்கமாக் வேண்டுபவற்றை ஏவிக் கொள்ளுகின்றோம். உங்களுக்கு நம்மிடமும் சில கொள்ளாமற் போகக் கூடாதல்லவா? நீங்கள் நோன்புக்கு அங்கமாகச் சொன்னவற்றை இப்போது கொண்டுபோக வேண்டுமல்லவா? நீங்கள் அனைவரும் அறிய வேண்டி வந்ததைக் கொண்டு போக வேண்டும். இப்போது "பறை தருவான்" (1) என்றும், "ஏத்திப்பறை கொள்வான்" (24) என்றும், "சாலப் பெரும் பறையே" (26) என்றும், "நீ தாராய் பறை" (28) என்றும், "இற்றைப் பறை கொள்வான்" (29) என்றும், திருப்பாவையில் ஒருக்கால் சொன்னாற் போல் ஒன்பது தடவை சொன்ன பறையை "இற்றைக்குக் கொள்ளுங்கள்" என்று பறையைக் கொடுக்கப் புகுகின்றான். **இற்றைப் பறை கொள்வான் அன்று காண் கோவிந்தா :** "இன்று ஒரு பயனைக் கொண்டு போக வந்தவர்களா நாங்கள்? உன்னை அங்ஙனம் விட்டு விடுவோமா? உலக சம்வாதத்திற்காக அங்ஙனம் சொன்னோம் என்று இருக்க வேண்டாவோ? காதல் விஷயம் இருக்கும் இடம் சென்று, "தண்ணீர்" என்று கேட்டால் தண்ணீரை வார்ப்பார்களோ? சொல்லுகின்ற வார்த்தையையும் எங்களையும் அறிந்தன்றோ பரிமாறுவது, நாங்கள் "பறை" என்றால் வேறேயொன்று தொனிக்கின்ற தென்று அறிய வேண்டாவோ? **கொள்வான் அன்று காண் :** அன்று "காண்" - இதில் 'காண்' என்பதிலுள்ள வெறுப்பு. **கோவிந்தா :** பாவஞானமில்லாத சன்மம் அல்லவா? பசுக்களின் பின்னே திரிவார்க்கு பெண்கள் வார்த்தையின் கருத்துத் தெரியாதல்லவா? பசுக்களின் பின்னே திரிவார்க்கு அவற்றிற்குள்ள சன்மமன்றோ இருப்பது? நீ பசுக்களையே விரும்பி எம்மைத் துறந்தால் இதுவோ பலம்! **கோவிந்தா :** எங்களையும் எங்கள் பிராப்யத்தையும் மறந்தாற் போலே, உன்னையும் உன் பிறப்பையும் மறந்தாயே. **பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்த - கோவிந்தா :** பூமியை எடுத்து நோக்கினவராக அவதாரமாக நினைக்கின்றாயோ? பூமியை நீரேற்ற வாமனனாக நினைக்கின்றாயோ? சப்தராசியைப் பிரித்தெடுத்த ஹம்சரூபியாக நினைக்கின்றாயோ? அதனைப் பிரகாசிப்பித்த அயக்ரீவ வேஷமாக நினைக்கின்றாயோ?

அறிவில்லாத பசுக்களுக்கு நிர்வாககனாய் பிறந்து ஆயர் சிறுமிகட்கு உதவவில்லை என்றால் பரவியூகம் முதலியவற்றையும் யாதவ வம்சத்தையும் விட்டு, இடைச்சேரியில் சுலபனான உன்னுடைய கிருஷியும் விபலமாகாதோ?

"**நீங்கள் 'குற்றேவல்'** என்பதிலே இரண்டு வகையறிந்து சொல்லுங்கள். இன்றைய பொழுதை உங்களோடு போக்குகின்றோம்" என்று கண்ணன் சொல்ல, இவர்கள் 'எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும்' என்கின்றனர். **எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும்:** இன்றையளவிலும் போதாது. இப்பிறவியளவிலும் போதாது. **எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் :** காலம் நடையாடாத 'நலமறிந்த மில்லதோர் நாட்டிலே' உன்னோடு இருக்க வேண்டும். ஆச்ரித சஜாதியனாய் "நிலைவரம்பில் பல பிறப்பாய்" சம்சார மண்டலத்திலே அநேக அவதாரம் பண்ணும் போதும் உன்னோடு இருக்க வேண்டும். இதில் ஒரு நிர்ப்பந்தமில்லை. **உன்தன்னோடு :** நீ பிறவாதிருக்கு மிடத்திலும் பிறந்து திரியுமிடத்திலும்கூட உன்னோடேயே இருக்க வேண்டும். **எற்றைக்கும் :** பெரிய பிராட்டியார் நீ அவதாரம் செய்யும்போது கூடவே அவதரித்து ஏற்ற உருவம் கொள்வது போலவே (விஷ்ணுபுரா 1.9.145) நாங்களும் உன்னோடு ஒக்கப் பிறந்து உன்னோடு விடாது திரிய வேண்டும். இளைய பெருமாள் நாட்டிலும் காட்டிலும் படைவீட்டிலும் திரிந்தாற் போலே நாங்களும் திரியவேண்டும்.

**உன்தன்னோடு :** நீ சங்கு சக்கர தாரனாய் வைகுந்தத்தில் இருக்குமிடத்திலும் எங்களோடு கண்கலந்த உன்னோடும் ஒக்கத்திரிய வேண்டும். **உன்தன்னோடு :** அங்கே, "உருவார்ந்த சக்கரம் சங்கு" சுமந்து உன்னோடு திரிதலும் "தெறிவிலும் சென்று கோலும்" கொண்டு இங்கே திரியவும் பெறுவோம் என்றாக வேண்டும். இதனை நினைத்தன்றோ "கச்சொடு பொற்சுரிகை" (பெரியாழ்.திரு. 1.4.8) அடியிலே இவர்கள்தாம் அவனுக்கு வரவிட்டது. **கோவிந்தா என்றைக்கும் :** "கோயில் கொள் தெய்வம் எல்லாம் தொழ வைகுந்தம், கோயில் கொண்டு" (திருவாய் 8.6.5) நீ இருக்கும் இடத்திலும், "பின்னும் எம்மாண்புமானான்" என்னும்படி நீ திரியும் இடத்திலும் உன்னோடே திரியவேண்டும். "தேவும் தன்னையும்" என்கின்ற இரண்டு நிலைகளும் கோவிந்தனுக்கு அன்றோ? **உற்றோமே யாவோம் :** சர்வ வித சம்பந்தமும் உன்னோடே ஆக வேண்டும். ஓர் உறவைக்குரிது "அஃதுண்டாக வேண்டும்" என்று வேண்டாமல் ஒழிந்தது. ஒன்றைச் சிறப்பாகக் குறிப்பிட்டால் அல்லாதவை இல்லையாம் என்பதாகிவிடும் என்ற காரணத்தால், எலலாவித

உறவும் நீயேயாக வேண்டும். **உற்றோமே யாவோம்** : நீ காட்டுக்குப் போக மூச்சடங்கும் உறவு உண்டாக வேண்டும். அயலூரில் வளரப் போகப் பூண்டும் புலம்பும் உறவு உண்டாக வேண்டும். நீ அபிமத வஸ்துக்களை விஞ்சி விநியோகம் கொண்டால், 'பெறாதொழியில் செய்வதென்?' என்று வயிறு பிடித்துக்கொள்ளும் உறவு உண்டாக வேண்டும். நீ 'நில்லுங்கள்' என்றால் நீரை விட்டுப் பிரிந்த பிராணிகளைப் போலே துடிக்கும் உறவு உண்டாக வேண்டும். நீ பாம்பின் வாயில் விழுந்தாய் என்றால், பிணம்படும்படியான பாந்தவம் வேண்டும். கழிந்த பிழைகளுக்குக் காப்பிடும் உறவுவேண்டும். எங்கள் வீட்டிலேயிட்ட ஆசனத்தை ஊன்றிப் பார்க்கும் உறவு வேண்டும். விட்டணைக்கத் தேடில் வெளக்கும் உறவு உண்டாக வேண்டும். **கோவிந்தா உன் தன்னோடு** : "சுவரே இனியாவார்" என்றிருக்கவொண்ணாது. "அவர் உயிர் செகுக்கும் அண்ணல்" என்றிருக்க ஒண்ணாது. அவையுமெல்லாம் உன்னோடேயாக வேண்டும். "பெற்றதாய் நீயே பிறப்பித்த தந்தை நீ, மற்றையாரா வரும் நீ" (பெரி.திருவந்.5) என்றிருக்க வேண்டும். **உற்றோமே** : சம்பந்தம் உண்டாகியிருந்தால் பத்து மாதம் பிரிந்திருதல், பதினாலாண்டு பிரிந்திருத்தல், பதினாறாண்டு பிரிந்திருத்தல் செய்யவொண்ணாது.

கண்ணன் "இத்தனையா வேண்டும்? இதற்கு மேலும் என்ன வேண்டும்?" என்றான். **உனக்கே நாம் ஆட்செய்வோம்** : சம்பந்தம் ஒத்திருந்தால் பரதாழ்வானைப்போல் பிரிந்திராமல், இளைய பெருமாளைப் போலே அடிமை செய்யவேண்டும். **உனக்கே** - என்பதிலுள்ள தேற்றேகாரத்தின் கருத்து - நீ உகந்த அடிமை செய்வோம். உனக்கும் எங்களுக்குமாக இருந்த இருப்பைத் தவிர்ந்து "தனக்கே யாக எனைக் கொள்ளும் ஈதே" (திருவாய் 2.9.4) என்னுமாப்போலே நீ உகந்த அடிமையாக வேண்டும். அகங்கார நினைவான அடிமை புருஷார்த்தமாகாது.

**ஆட்செய்வோம்** : பந்தபலம் வேண்டாவோ? உறவு என்று சாதர்மியம் பெற்றிருக்கவொண்ணாது. பிராப்தி பலமான கைங்கரியத்தைப் பெற வேண்டும். **ஆட்செய்வோம்** : அரசுக்குப் பட்டம் கட்டி அருகிருக்கவொண்ணாது. "அப்படியானால் மற்று என்?" என்றான். **உனக்கு - ஆட்செய்வோம்** : ஆட்செய்யுமிடத்தில் எங்களுக்கு உறவை அறிவித்து அடிமை கொண்டு சாபேட்சனாய் நிற்கிற உனக்குச் செய்ய வேண்டும். **உனக்கு - ஆட்செய்வோம்** : "ஆட்கொள்ளத் தோன்றிய" உனக்குச் செய்ய வேண்டாவோ? **கோவிந்தா - உனக்கே நாம் ஆட்செய்வோம்** : "நீள் குடக் கூத்தனுக்கு

ஆட்செய்வதே" என்கின்றபடியே உனக்கு ஆட்செய்வதற்கன்றோ பிராப்தமாயிருக்கின்றது.

"அப்படியானால் இனி ஆக வேண்டியது என்?" என்று கண்ணன் வினவ 'மற்றை நம் காமங்கள் மாற்று' என்கின்றார்கள். "நாங்கள் 'எங்களுக்கு' என்று இருப்பதையும் நீயும் 'இவர்களுக்கு' என்று இருப்பதுமாகிய இவை இரண்டும் விரோதியாகையாலே அவற்றைத் தவிர்த்துத் தர வேண்டும்" என்கின்றார்கள்.

# 30. இப்பிரபந்தம் கற்றார் பிராட்டியாலும் பெருமானாலும் அங்கீகரிக்கப் பெறுவர் எனல்.

## முப்பதாம் பாசுர விளக்கம்

"வங்கக் கடல்கடைந்த"

**வங்கக் கடல்கடைந்த மாதவனைக் கேசவனை**
**திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி**
**அங்கப் பறைகொண்ட வாற்றை அணிபுதுவைப்**
**பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான் கோதைசொன்ன**
**சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே**
**இங்குஇப் பரிசுரைப்பார் ஈரிண்டு மால்வரைத்தோள்**
**செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்**
**எங்கும் திருவருள்பெற்று இன்புறுவர் எம்பாவாய்.**

(சொ.பொ) : திங்கள் திருமுகத்து - சந்திரன் போன்ற (குளிர்ந்த) அழகிய முகத்தையுடைய; சேய்இழையார் - செல்வில அணிகளையுடைய ஆய்ச்சியர்; வங்கம் - மரக் கலங்களையுடைய; கடல் - தீப்பாற்கடலை; கடைந்த - (தேவர்கட்கு அமுதம் கொடுப்பதற்காக) கடைந்தருளின; மாதவனை - திருமகள் கேள்வனும்; கேசவனை - கேசி என்ற அசுரனைக் கொன்றவனுமான கண்ணபிரானை; சென்று - போய்க்கிட்டி; இறைஞ்சி - வணங்கி (மங்களாசாசனம் பண்ணி); அங்கு - திருவாய்ப்பாடியில் (கிருஷ்ணன் சந்நிதியில்); பறைகொண்ட - நாட்டுக்குப் பறை என்று ஒரு வியாஜத்தையிட்டு அடிமை கொண்ட; அஆற்றை - அந்தச் செய்தியை; அணிபுதுவை - அழகிய ஸ்ரீவில்லிப்புத்தூரில்; பைங்கமலம் தண் தெரியல் - பசுமை பொருந்திய தாமரை மலர்களாலான குளிர்ந்த மாலையையுடைய; பட்டர்பிரான் - பெரியாழ்வாருடைய; திருமகளான; கோதை - ஆண்டாள்; சொன்ன - அருளிச் செய்த; சங்கம் - திரள் திரளாக அநுபவிக்க வேண்டிய; தமிழ்மாலை - தமிழ் மாலையாகிய; முப்பதும் - இம்முப்பது பாசுரங்களையும்; தப்பாமே - (ஒரு பாசுரமும்) குறையாமல்; இங்கு - இந்நிலத்தில் (இக்காலத்திலே அல்லது இந்த சம்சாரத்திலே); (ஆண்டாளைப் போல பக்தி இல்லாவிட்டாலும்); இப்பரிசு - இவ்வண்ணம் (பாசுரம் மாத்திரமாக); உரைப்பார் - ஓதுபவர்கள்; ஈர் இரண்டு மாலை வரை தோள் - நான்கு பெரிய மாலைகள் போன்ற திருத்தோள்களையும்; செம்கண் திருமுகத்து -

சிவந்த திருக்கண்களையுடைய திருமுகத்தையும்; செல்வம் - உபய விபூதியையும் உடைய; திருமாலால் - திருமகள் கேள்வனால்; எங்கும் - (இம்மை, மறுமை என்ற) எல்லா இடங்களிலும்; திரு அருள் பெற்று - (அப்பரமனுடைய) பெருங்கருணையை அடைந்து; இன்புறுவர் - (எம்பெருமானுடைய சேர்க்கையாலுண்டான) பிரம்மானந்தசாலிகளாவர்.

(க-து) : முடிவில், இப்பாசுரத்தால் இந்தப் பிரபந்தம் கற்றவருக்கு, நோன்பை அநுட்டித்துப் பயனைப் பெற்றவரைப் போலவும், அதனை அநுகரித்து (பாவனையால் அநுபவித்து)ப் பயனைப் பெற்றவரைப் போலவும் பிராட்டியாலும் எம்பெருமானாலும் எல்லாக் காலங்களிலும் திருவருள் செய்யப் பெற்று மகிழ்ந்திருத்தலாகிய பயன் சித்திக்கும் என்பதாயிற்று. "கன்று இழந்த தலை நாகு (பசு) தோற்ற கன்றுக்கு இரங்குமாப் போல, இப்பாசுரங்கொண்டு புக நமக்கும் பலக்கும்" என்று பட்டர் அருளிச் செய்வர்.

இந்தப் பாசுரம் பயனைத் தெரிவித்தலால் **பலச்ருதி** எனப்படும். இன்னார் செய்தது இப்பிரபந்தம் என்று தெரிவித்தலால் **திருநாமப் பாசுரம்** எனவும் வழங்கப்படும்.

**விளக்கம் : வங்கக் கடல் கடைந்த :** தேவகார்யம் என்ற வியாஜத்தையிட்டுப் பெரிய பிராட்டியாராகிய பெண்ணமுதத்தைப் பெற்றது போலவே ஊராருக்கு வர்ஷார்த்தமாக நோன்புக் கடன்கள் என்ற வியாஜத்தையிட்டு, கோகுலப் பெண்களோடு புணர்ச்சி பெறுதல் என்பது. பயனைக் குறிக்கோளாகக் கொண்டிருப்பவர் கட்கும் உடம்பு நோவக் கடல் கடைந்து தன் விருப்பத்தை முடித்துக்கொள்ளும் சீலவான் என்னுதல். கிருட்டிணனைக் கவிபாடுகின்ற இடத்தில் பாற்கடலில் பையத்துயின்றவனைச் சொல்லுதல் எப்படிச் சேரும் என்னில் : " விண்ணவர் அமுதுணஅமுதிலவரும் பெண்ணமுதுண்ட எம்பெருமானே" என்று - தேவாகர்யம் என்று வியாஜத்தையிட்டுப் பெரிய பிராட்டியாராகின்ற பெண்ணமுதத்தைப் பெறுவதற்காகக் கடல் கடைந்தபடி. ஊரார் காரியத்தை ஒரு வியாஜமாக்கிப் பெண்களைப் பெறுவதற்காக நோன்பிலே பொருத்தின கிருட்டிணனுடைய சுபாவத்தோடு இணையுமபடியிருக்கையாலே சொல்லுகின்றார்கள். 'ஒல்லை நானும் கடைவன் என்று' திருமஞ்சனம் செய்து சகல தேவதைகளும் பார்த்துக்கொண்டு நிற்க மார்பிலே சென்றணைந்த போதைச் செவ்விமார்கழி நீராடி ஆடையுடுத்து "பல்கலனும் அணிந்து" பெண்களை கூடியிருந்தபோது பிரகாசிக்கும்படி இருக்கையாலே அதனைச் சொல்லுகின்றார்கள்.

"அமரர்க் கமுந்த ஆயர்கொழுந்தை" என்கின்றபடியே கிருட்டிணன் அல்லவா தேவர்கட்கு அமுதிட்டவன், பாற்கடல் நாதன் கடைந்தால் கடல்தான் அமுதம் சுரவாதோ? வங்கக்கடல் : கீழேயுள்ள அமுதம் எல்லாம் மேலே கிளரும்படி படுதிரை விசும்பிடைப் படரும்படிக் கடையாநிற்க மரக்கலம் அலசாதபடி கடைந்த சாமர்த்தியம் சொல்லுகிறது. **வங்கக்கடல் :** கடைகிறபோது "சுழலமலை திரிகையாலே" கடல் முழுவதும் மரக்கலமாய் நின்றபடி. "வங்கம் விட்டுலவும் கடலல்லவா? - பாற்கடல். "வைகுந்தன் என்பதோர் தோணிசேர்ந்த" விடமென்று ஆழ்கடலைப் பேணாதே கடைந்தான். "பாற்கடலில் பையத் துயின்ற" என்று பாற்கடல் சயனத்தைத் தொடங்கி அதனுடைய மதநத்தைச் சொல்லி முடிக்கின்றார்கள். "அதிற்கிடந்து முன்கடைந்த".

**கடல் கடைந்த மாதவனை :** சாதநாநுஷ்டம் பண்ணினால் சாத்தியசித்தி உண்டாகுமல்லவா? "அமுதம் கொண்ட பெருமான் திருமார்வன்" என்று - அமுத லாபம் என்று வியாஜமாய் "அமுதில் வரும் பெண்ணமுதை"யல்லவா கிருட்டிணன் பெற்றது? **மாதவனை:** ஆச்ரணீய வஸ்து லட்சுமி சகிதமுமாய் ஆச்ரயணந்தான் இலட்சுமி சநாதமுமாய் இருப்பது? அடைந்தாரின் குற்றம் பொறுப்பித்து விருப்பங்களைச் செய்விப்பார் அருகே உண்டு என்னுதல். அன்னையின் முன்பு குழந்தைகள் செய்த குற்றம் தந்தைக்குத் தோற்றதாற்போலே, பிராட்டி சந்நிதியுண்டானால் சேதநருடைய அபராதங்கள் அவனுக்குத் தோற்றாது என்னல். பிராட்டியைப் புருஷகாரமாகப் பற்றினவர்களுக்கு அரியன செய்து விருப்பங் களைத் தலைக்கட்டிக் கொடுக்கும் என்பதற்காக 'கடல் கடைந்த மாதவனை' என்று குறிப்பிடப்பெறுகின்றது.

**கேசவனை :** விரோதி நிரசன ஸ்வபாவனை. ஸ்திரீத்துவ பிரயுக்தமான ஸ்வாதந்திரியத்தையும் அந்யசேஷத்துவத்தையும் போக்கினவனை. இன்னும், "வாசஞ்செய் பூங்குழலாளான" பெரிய பிராட்டியார் ஆசைப்படும்படியான மயிர்முடி, கட்டு நெகிழ்ந்து அலைய நின்றது போல்லவா கடல் கடைந்தது? கடையப் புக்கார்க்கெல்லாம் குழல் அலையுமல்லவா? "வாச நறுங் குழலாய்ச்சியர்" "வண்டமர் பூங்குழல் தாழ்ந்துலாவ" என்று அவனோடு பிறரோடு வாசியில்லையே குழலசைய, "ஆமையான கேசவா" என்று சுமந்து நிற்கின்ற ஆமைக்குட்பட குழல் அசையா நின்றால் கடைகிறவனுக்குச் சொல்ல வேண்டாமல்லவா? "மாமாயன் மாதவன்" என்றும், "கேசவனைப் பாடவும்" என்றும் "மாவாய்ப் பிளந்தானை" என்றும் சொன்னவற்றோடே தலைக்கட்ட வேண்டுமல்லவா?

துவயத்தின் முதல்பகுதியின்படியே ஆச்ரணீய வஸ்துவைச் சொல்லுகிறது. மாதவனை என்று - ஸ்ரீமதத் என்பதன் பொருளையும், 'கடல் கடைந்த' என்கிறதாலே பயன் கருதியவர்களுடைய குற்றம் பாராமல் வியாபித்த வாத்சல்யமும், "அண்ணல் செய்து" என்று - ஸ்திரமாம்படி பண்ணப்பட்ட சுவாமித்துமும், "அசுரர்களும் தானுமாய்" என்னும்படி நின்ற சௌசீல்யமும், "பெண்ணாகி அமுதூட்டிய சௌலப்பியமும், "ஆழ்கடலைக் கடைந்த துப்பன்" என்னும்படி வேண்டும் உபகரணங்களைத் தேடி வியாபித்த ஞானசக்திகளும் தோற்றுகையாலே - நாராயண சப்தார்த்தம் சூசிதம். "கேசவனை" என்று - நேரில் தோற்றும் மயிர் முடியாலே விக்கிரக யோகத்தை நினைத்து 'சரணம்' என்ற பதத்தின் பொருள் சொன்னதாகின்றது. "கேசவ நம்பியைக் கால பிடிப்பாள்" என்றிருப்பதல்லவா நிரூபகம். "பரமன் அடிபாடி" (2) என்று தொடங்கி "கேசவனை" (30) என்று தலைக்கட்டு கையாலே - பாதாதி கேசாந்தமாக கிருட்டிணனை அநுபவித்தாள் என்பதாம். "அசோதை முன் சொன்ன திருப்பாதகேசத்தை" (பெரியாழ்.திரு. 1.3.21) என்று இடைச்சிகளநுபவம் பெரியாழ்வார்க்குண்டாகையாலே அஃது இவளுக்குத் தாய் வழியாக அடைந்ததன்றோ?

இனி, மேல் ஆச்ரயித்த அதிகாரிகளின் வைலட்சண்யம் செல்லுகிறது. **திங்கள் திருமுகத்து** : கிருட்டிணனது சேர்க்கையிலே குளிர்ந்து மலர்ந்து செவ்வி பெற்ற முகத்தையுடையவர்களானார்கள். "கதிர்மதியம் போல முகத்தான்" என்று - பிரதாபமும் தண்ணளியும், கலந்தபடியாலே அநபிபவநியத்துவம் உண்டு - அவன் முகத்து. அநுகூலர்க்கேயான முகமாகையாலே குளிர்ச்சியே அமைந்தபடியால் 'திங்கள் திருமுகம்' என்கின்றார்கள் - இங்கு. இவனை அநுபவிப்பார் முகமும் இப்படியேயல்லவா இருப்பது? "மதிமுகமடந்தையர்" என்பதல்லவா பாசுரம்? "வங்கக்கடல் கடைந்த" என்று கடைந்த அமுதில் பிறந்தவள் முகத்தோடு சாதர்மியம் பெற்று இருப்பது இவர்கள் முகம். அவள், "திவளும் வெண்மதிபோல் திருமுகத்தரிவை" (பெரி.திரு, 2.7:1), இவள் "மதிமுக மடந்தையர்". **திங்கள் திருமுகத்து** : சகலகலா பூர்த்தி இவர்கள் முகத்திலே விழித்தபோதே தோற்றும்படி இருக்கும். "குழையும் வான் முகமும்" என்ற சொல்லக் கடவதன்றோ? முகத்தில் ஆனந்த பூர்த்தி கண்டவர்கள், "இவர்கள் எங்குள்ள மனிதர்கள்?" என்று ஐயுறும்படி உபயவிபூதியின் அம்சமும் தோற்று இருப்பவர்களல்லவா? அம்சமும் தோற்று இருப்பவர்களல்லவா? "வெஞ்சிலை வாண்முகத்தீர்". **திங்கள் திருமுகத்து** : இவர்கள் முகத்தில் விழித்தால் நம்முடைய மனத்தின்

அழல் ஆறும்படி இருக்கும். **திருமுகம்** : உபமானமான சந்திரமண்டலம் உபமேயமான முகத்திற்கு நேர்நிற்கமாட்டாமையாலே 'திருமகம்' என்கிறது. "முகக் கமலச் சோதி தன்னால்" திங்கள் முகம் பனிபடைக்கும் அல்லவா?

**சேயிழையார்** : இயல்பாகவுள்ள அழகுக்கு மேலே ஆபரணங்களாலே வந்த அழகைச் சொல்லுகிறது. "சூடகமே - பாடகமே" என்று தாங்கள் வேண்டினபடியே கிருட்டிணனும் நப்பின்னைப் பிராட்டியும் கூடவிருந்து பூட்டின ஆபரணத்தை யுடையவர்கள். **சேயிழையார்** : சொருப குணங்களாலும் பிரம்மாலங் காரங்களாலும் குறைவற்றவர்கள். "போதுவீர் போதுமினோ" (1) என்றபோதே நேரிழையாரானார்கள். நீராடினவுடனே "திருவருள் மூழ்கினபடியாலே" "புனையிழை களணிந்து" சேயிழையாரானார்கள். **சென்று இறைஞ்சி** : "அன்றிவ்வுலகம் அளந்தாய் அடிபோற்றி" (24) என்றவாறு அவனுக்கு மங்களாசாசனம் பண்ணி. **சென்று** : ஆச்ரணீய விஷயத்தில் ருசிகார்யமான வேகத்தைச் (த்வரையைச்) சொல்லுகிறது. **சென்று** : 'இவ்வொப்பனையோடே நாம் போவோம்' என்று அவன் வரவைப் பார்த்திருக்கும் அளவல்லது வேகம். கிருஷ்ண விஷயீகாரயோக்கியதையாலும் விஷயீகாரத்தாலும் பிறந்த புகர் நிறம் பெறும்படி சென்று. **இறைஞ்சி** : "தூமலர் தூவித் தொழுது, வாயினால் பாடி மனத்தினால் சிந்தித்து" (5), "அடிபோற்றி" (24) என்கின்றபடியே போற்றிப் புகழ்ந்து. "சென்று சேவித்து" கும்பிடுதல் முதல் செய்வதெல்லாம் செய்து.

**அங்கு** : ஆச்ரணீயத்தலம் இருக்கிறபடி. **அங்கு** : திருவாய்ப் பாடியிலே நந்தகோபருடைய கோயிலிலே நப்பின்னைப் பிராட்டியின் கட்டிலிலே திவ்விய ஆசனத்திலே திவ்விய சிம்மாசனத்திலே இருந்த இருப்பிலே. **அப்பறை கொண்டவற்றை** : நாட்டுக்குப் 'பறை' என்று ஒரு வியாஜத்தையிட்டு அடிமைகொண்ட படியை. **அப்பறை** : நாட்டுக்குச் சொன்ன பறையைக் கழித்து "எற்றைக்கும்" என்ற பறையை. அப்பரிமாற்றத்திலே நின்ற அவனை எல்லாக் காலத்திலும் எல்லாவகையிலும் கொண்டபடியைக் **கொண்ட** : "நீ தாராய்" என்றபடியே அவனால் தரப்பெற்றபடி. **ஆற்றை** : கொண்ட பிரகாரத்தை. தங்கள் வெறுமையையும் அவன் பூர்த்தியையும் பந்தத்தையும் முன்னிட்டுத் தப்புக்குப் பொறை கொண்டு ருசியையும் வேகத்தையும் (த்வரையையும்) காட்டி வளைப்பிட்டு அடிமையை விரும்பிக் கொண்ட பிரகாரத்தை. ஆச்ரயண பலமும் பல சித்தி முறையும் சொன்னபடி. **அணிபுதுவை** : சம்சாரத்திற்கு நாயகக் கல்லான சீவில்லிபுத்தூர். கிருட்டிணனுக்கு நந்தகோபர் சம்பந்தம்

ஏற்றமாய், அவர் இருக்கின்ற ஊர் என்ற திருவாய்ப்பாடியை 'சீர் மல்கும் ஆய்ப்பாடி' என்று சிலாகிக்குமாபாலே, தனக்குப் பெரியாழ்வார் சம்பந்தம் உத்தேஷ்யமாய், அவர் அபிமானித்த தேசமென்று சீவில்லிபுத்தூரைக் கொண்டாடுகின்றார்கள்.

**அணிபுதுவை :** நந்தகோபனின் கோயிலில் கிருட்டிணன் மாத்திரமே இருப்பான். இவ்வூரில் வடபெருங்கோயிலுடையானும் உள்ளான். **அணிபுதுவை :** சம்சாரத்துக்கு ஆபரணமான சீவில்லி புத்தூர் பிராட்டிக்கு மிதிலையும் திருவயோத்தியும் போலவும், நப்பின்னைப் பிராட்டிக்கு கும்பகுலமும் திருவாய்ப்பாடியும் போலவும் அல்லாமல், ஆண்டாளுக்குப் பிறந்த இடமும் புகுந்த இடமும் ஒருரிலே இருப்பதான ஏற்றம் இவ்வூருக்கு அல்லவா உள்ளது? பொன்னும் முத்தும் மாணிக்கமும் இட்டுச் செய்த ஆபரணம்போலே, நாய்ச்சியாரும் வடபெருங்கோயிலுடையானுமான அலங்காரமுள்ளதேசம் அல்லவா?

**பைங்கமலத் தண்தெரியல் :** பார்ப்பனருக்குத் தாமரைத்தாழ் அல்லவா சொல்லப் பெறுகின்றது. "திருவில் பெலிமறைவாணர்" (பெரியாழ். திரு. 3.5:11) என்னும்படி பார்ப்பன குலத்தில் தோன்றிய பெரியாழ்வாருக்குத் தாமரை தாராக அமைவது பொருத்தமல்லவா? **பைங்கமலத் தண்தெரியல் :** பசுத்த கமலத்தினுடைய குளிர்ந்த மாலை. "தண்ணந்துழாய் அழல் போல்" என்று - வட பெருங்கோயிலுடையானுடைய மாலை போலே கொதித்தக் கிடவாது பெரியாழ்வார் கழுத்தில் மாலை போலன்றே சேர்ப்பார் மாலை. **பட்டர்பிரான் :** பார்ப்பனருக்கு உபகாரமானவர். "வேதப் பயன் கொள்ளவல்ல" (மேலது 2.8:10) வராகையாலே தாற்பரியப் பொருளை அனைவருக்கும் உபகரிப்பவர். பட்டர்களுக்கு வித்யா பிரதானம் பண்ணின உபகாரகர். "மறைநான்கு முன்னோதிய பட்டனுக்கு" கன்யகாப் பிரதானம் பண்ணி உபகாரகர். **பட்டர்பிரான் கோதை சொன்ன :** ஆண்டாள் பாவனைப் பிரகாரத்தாலே அநுபவித்துச் சான்ன பராசரபுத்திரனான வியாசன் என்று ஆப்திக்குச் சொன்னாற் போலே பெரியாழ்வார் திருமகளாகையாலே சொன்ன பொருளில் பொருள்வாதம் இல்லை. "ஆற்றப் படைத்தான் மகன்" என்பதல்லவா பிரதிபாத்தியனுக்கு எற்றம். ஆழ்வார் சம்பந்தம் இவளுக்கு எற்றம். "விட்டு சித்தர் தங்கள் தேவரை" என்று - இவர்க்குத் தேவராய், வடபெருங்கோயிலுடையான் நிறம் பெற்றான். இவர் மகளாய் ஆண்டாள் நிறம் பெற்றாள். "ஒரு மகள் தன்னையுடையேன்" (பெரியாழ். திரு. 3.8.4) என்று இவள் சம்பந்தம் இல்லாமல் தமக்கு உத்கர்ஷமாகச் சொல்வது. (சொன்ன) ஆண்டாள்

பாவனையாலே அநுபவித்தது புறவெள்ளமிட்டபடி. **கோதை சொன்ன:** கோபிமார் தசையைப் பாவித்து "அணி குரு கூர்ச் சடகோபன் சொன்ன" என்று பும்சத்வம் மேலிடும்படியான குற்றமற்றிருத்தல். **சொன்ன :** தான்றோன்றியான வேதம் போலல்ல, பிறப்பாலுண்டான ஏற்றமுண்டு. பாற்கடல் நாதனைப் பற்ற ஒரு மகனாய்ப் பிறந்தவனுக் கல்லவா வரும் ஏற்றம் உள்ளது?

**சங்கத்தமிழ் மாலை :** "குழாங்களாய்" என்னுமாப்போலே, திரள் திரளாக வந்து அநுபவிக்க வேண்டும் பிரபந்தம். "சங்கம் இருப்பவர் போல் வந்து" என்று ஐந்து லட்சம் குடியில் பெண்கள் திரளாக வந்து அநுபவித்த அநுபவத்துக்கு ஆண்டாளும் தன் திறத்தில் பெண்களுக்குத் திரளவிருந்து சொன்ன பாசுரங்கள் : "சங்கமுகத் தமிழ்மாலை" என்னக் கடவதல்லவா? **தமிழ்மாலை :** பிராட்டி ஆண்டாளானாப் போலே உபநிடதம் தமிழாயிற்று. "யாவர்க்கும் சிந்தைக்கும்" கோசரமல்லாத வஸ்து "பெற்றம் மேய்த்துண்ணும்" (29) இடைச் சேரியிலே வந்து பிறந்து எளியனாப் போலயும், உத்தம சாதியிலே பிறப்புடைய ஆண்டாள் "ஆயர் சிறுமியர்" திரளிலே ஒருத்தியாய் சேர்ந்தாற்போலவும், அருமறையின் பொருளான உபநிடதம் தமிழாய் வந்து மிக்க சுலபமானபடி. பரிபந்தம் செய்தவளோடு பிரதிபாத்யனோடு பிரபந்தத்தோடு வாசியறத் தாழநின்று நிறம் பெற்றபடி. பாவனையானாவளன்றில்லாமல் போக போக்கியமுமாய், தலையாலே சுமக்க வேண்டும்படியுமாய் தலையணியுமாயிருத்தல். **கோதை சொன்ன மாலை :** மாலைக் கட்டின மாலை. அடுத்த பத்தியோடே இரண்டு தலையும் தாள் பூவும் நடுவே நாயகமுமாகத் தொடுப்புண்ட மாலை. **கோதை சொன்ன மாலை :** "செவிப்பூவே" (27) என்று - இவள் செவிக்கு ஒரு பூவல்லவா அவன் கொடுத்தது. சிலாக்கியமான மாலை கொடுத்தாள் இவள். குழலில் மல்லிகை மாலையாலே விலங்கிட்டு அவனை ஓதுவித்த மாலை இருக்கிறபடி. **முப்பதும் :** திருமந்திரமும் திருப்பல்லாண்டும் போலே சுருங்கியிருத்தல். வேதமும் திருவாய் மொழியும் போலே விரிந்தில்லாமல் வேண்டுபவையெல்லாம் மிகுதிக் குறையுண்டாய் இல்லாமல் ஒழிதல். "நாராயணனே நமக்கே பறை தருவான்" (1) என்று சுருக்கமான சொன்ன சுவரூப உபாய பலங்கை ஒன்று பத்தாகச் சொன்ன இவ்வளவேயாம். **முப்பதும் தப்பாமே :** விலையில்லாத இரத்தினங்களாலே செய்யப்பெற்ற ஒற்றை வடமுள்ள மாலையிலே ஒரு மணி நழுவினாலும் நெடும் பாடாயிருக்குமல்லவா? அப்படியே ஒரு பாசுரம் குறைந்தாலும் பேரிழப்பாக இருக்கும்.

**இங்கு :** பிறப்பட்ட காலத்திலே எனல். சம்சாரத்திலே என்னுதல். பிறப்பட்ட காலத்திலே இப்பரிமாற்றத்திற்கு மேட்டு மடையான இந்நிலத்திலே. **இப்பரிசுரைப்பார் :** இம்முறை தப்பாமல் இப்பாசுரத்தைச் சொல்லுபவர்கள். இப்பாவனையோடு ஓதுபவர்கள். திருவாய்ப்பாடியில் கோபிகளுக்குச் சமாகாலமாகையால் அவர்கள் நேர்காட்சியாக கிருஷ்ணாநுபவம் பெற்றார்கள். ஆண்டாள் அதனைப் பாவனைப் பிரகாரத்தாலே பெற்றாள். ஆகையால் அவளிலும் பிற்பட்டார் இப்பிரபந்தம் ஓதின உக்தி மாத்திரமே அமையும், போதும்.

இவர்கள் அளவு பாராமல் பண்டு பாடினவர்களையும் இச்சொல்வழியாலே நினைத்துக் காரியம் செய்யும் விஷயத்தைச் சொல்லுகிறது. **ஈர் இரண்டு மால்வரைத் தோள் :** ஆய்ச்சியரை அணைக்கப்புக்கு பின்பு கிருட்டினனுக்குத் திருத்தோள்கள் பணைத்தன. "வேயிருந்தோளினா"ரோடு அணைத்த தோள்களன்றோ? **ஈர் இரண்டு :** உகவாதார்க்குத் தோள் இரண்டாய்த் தோன்றும் ஆசைப்பட்ட பெண்களுக்கு நாலாய்த் தோன்றுமல்லவா? வங்கக் கடல் கடைந்த தோள்கள் நான்கும் கண்டிடப் பெற்றார்கள். **மால்வரைத்தோள் :** "மதுரக் கொழுஞ்சாறு கொண்ட சுந்தரத் தோளா யிராமல்" காத்தூட்டவல்ல திண்மையைச் சொல்லுகிறது. மால்வரை : "நீண்ட மாலைகளும்" என்ற நிலையிலல்லவா இருப்பது பெரிய பிராட்டியாருக்கும் கோபிமார்க்கும் கிரீடா சைலமான தோள்கள்.

**செங்கண் திருமுகத்து :** பெண்களைக் கண்ட பின்பு. அலப்ய லாபத்தாலே திருக்கண்களும் சிவந்து செவ்வி பெற்றுத் திருமுகமும் குளிர்ந்தது. இவர்களைப் பிரிந்த போதல்லவா ஜலட்சயத்தில் பதுமம் போலே முகமும் விழியும் உறாவுவது. **செங்கண் திருமுகம் :** "கண்ணன் கோளிழைவாண் முகம்", அதிலே "நீரார் கமலம்" போல செங்கண். 'தோழிமார் பாரீர்' என்று ஒருவர்க்கொருவர் காட்டி அநுபவித்த கடைக்கண்களும் முகமும். **செங்கண் :** "கதிர்மதியம் போல் முகத்தான்" *(1)*, "பங்கயக் கண்ணானை" *(14)*, "செங்கண் சிறிச்சிறிதே" *(22)*, "அங்கண் இரண்டும் கொண்டு" *(22)* என்று முடிய இம்முகமும் கடைக்கண்ணும் அல்லவா இவர்கள் நெஞ்சில் கிடந்தன? "திங்கள் திருமுகம்" என்று - கோபிமார் முகத்தையும் அவர்கட்கு அநுபவம் ஆனவன் முகத்தையும் ஒரு முகப்பட அநுபவிக்கின்றார்கள்.

இச்செங்கண் திருமுகமுடையவன்தான் யார்? என்னில் : **'செல்வத் திருமாலால்'** என்கின்றார்கள். **"கண்ணன் திருமால்"** திருமுகமல்லவா இது? **செல்வத் திருமாலால் :** உபய விபூதி

ஐசுவர்த்தையும் உடைய திருமகள் கேள்வனாகையாலே. **செல்வத் திருமால் :** "திருத்தக்க செல்வம்" செல்வத்துக்குத் தகுதியானவள். **திருமால் - செல்வம் :** "திருவுக்குந் திருவாயாகிய செவம்" செல்வச் சிறுமியரைப் பெற்ற பின்பு சிறந்தது.

**எங்கும் :** கண்ணுக்கு இலக்கான இலக்காகாத இடங்கள் இரண்டிலும் இங்கிருக்கும் நாளும் பரமபதத்தில் போனாலும். **திருமாலால் எங்கும் :** "இங்குமங்கும் திருமால்" (திருவாய் 7.9.11) என்றல்லவா இருப்பது. **திருவருள் பெற்று :** இப்பிரபந்தம் ஓதுகிறவர்கள் இருந்த இடத்திலே தானும் பிராட்டியும் நித்திய காட்சி தரும்படி பிரசாதத்தைப் பெற்று. **திருவருள் பெற்று :** "திருமாலால் அருளப்பட்ட" " திருமாமகளால் அருள்மாரி" என்று - இவளது அருள் பெறுதலல்லவா குறிக்கோள்? "பண்டை நாளாலே நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளும் கொண்டு" (திருவாய் 9.2.1) **திருமால் - திருவருள் பெற்று :** பெரிய பிராட்டியார் திருக்கையாலே காட்டிக் கொடுக்க "பூவளரும் திருமகளால் அருள் பெற்று" என்கின்றபடியே - அவனடியாக இவளுடைய அருளைப் பெற்று. உபாய நிஷ்டையும் இவளாலே. பிராப்ய விருத்தியும் இவளாலே. விரோதி தவிர்வதும் பலம் அடைவதும் அவனாலே. **இன்புறுவர் :** இறைவனோடு சேர்வதால் வந்த ஆனந்தம் பெறுவர். **எங்கும் - இன்புறுவர் :** இவ்வுலகில் இருக்கும் காலத்தில் கவலையற்றவராய் பிரபந்தத்தினுடையளவும் எம்பெருமானுடையவும் ஆண்டாளு டையவும் சீலத்தையும் பாவனையையும் அநுசந்தித்து இனிய ராவார்கள். பரமபதம் சென்றால் பெருமானுடன் நிரந்தர சேர்க்கை யால் "மிகவெல்லை நிகழ்ந்தனம்" என்னும்படி பரமானந்தத்தில் சேர்வார்கள். **திருமாலால் - இன்புறுவர் :** "இன்பம் பயக்கவன்றோ அவர்கள் இருப்பது ஒருவரோடொருவர் கலக்கையாலே பெறும் ஆனந்தம் போலல்லவா மிதுநாநுபவனாந்தம். "அடியேனுக் கின்பாவாய் பொன்பாவை கேள்வா" எப்படி இன்புறுவார்கள் என்னில் : **எம்பாவாய் - இன்புறுவர்** எங்கள் குழுவில் இன்புறுவர் நாங்கள் எப்படி இன்புறுகின்றோமோ அப்படி இன்புறுவார்கள்.

"விடிவோறே எழுந்திருந்து முப்பது பாசுரங்களையும் அநுசந்தித்தல், அப்படி அநுசந்திக்க முடியாநிலையில் 'சிற்றஞ்சிறுகாலை' (29) என்ற பாசுரத்தை அநுசந்தித்தல், அதுவும் முடியாநிலையில் நாம் இருந்த இருப்பை நினைப்பது" என்று பட்டர் அருளிச் செய்வர். "நாம் இருந்த இருப்பை" என்றது - நாம் (பட்டர்) இப்பிரபந்தத்தை அநுசந்தித்து ஈடுபட்டிருந்த இருப்பை என்றபடி.

சுருக்கமாக உரைத்தால் : முதற்பாசுரத்தில் நோற்க இசைந்தவர்கள் அழைக்கப் பெறுகின்றனர். இரண்டாம் பாசுரத்தில் நோற்கின்றவர்கள் செய்வன, தவிர்வன விளக்கப் பெறுகின்றன. மூன்றாம் பாசுரத்தில் நோன்பினால் நாட்டிற்கு விழையும் பயன் நவிலப் பெறுகின்றது. நான்காம் பாசுரத்தில் மழைக்கடவுள் மழை பெய்ய வேண்டுமென்று நியமிக்கப் பெறுகின்றனர். ஐந்தாம் பாசுரத்தில் எம்பெருமானைப் பாடினால் நோன்பிற்கு மாறாகத் தோனறும் தடைகளெல்லாம் ஒழியும் என்று அருளிச் செய்யப் பெறுகின்றது. ஆறாம் பாசுரம் தொடங்கி பதினைந்தாம் பாசுரம் முடியும் வரையிலும் தம்மோடொத்தவர்களை எழுப்பி எல்லாருமாகத் திரண்டு நந்தகோபரின் திருமாளிகை திருவாசலில் சேர்கின்றபடியைச் செப்பப் பெறுகின்றது. பதினாறாம் பாசுரத்தில் கோயில் காப்பானையும் தோரண வாசல் காப்பானையும் எழுப்பி அவர்கள் இசைவு பெற்று உள்ளே புகுகின்றார்கள். பதினேழாம் பாசுரத்தில் நந்தகோபர், யசோதைப் பிராட்டி, கிருட்டிணன், நம்பி மூத்தபிரான் (பலராமன்) இவர்களை எழுப்புகின்றார்கள். பதினெட்டாம் பாசுரத்தில் புருஷகார பூதையான நப்பின்னைப் பிராட்டியை முன்னிட்டுப் போக வேண்டுமென்று அவளை எழுப்புகின்றார்கள். பத்தொன்பதாவது இருபதாவது பாசுரங்களில் அடைந்தாருடைய விருப்பத்தை நிறைவேற்றுவதில் ஒருவாலும் மற்றொருவர் விஞ்சுகின்ற நப்பின்னை, கிருட்டிணன் என்ற இருவரையும் துயில் உணர்த்துகின்றார்கள். இருபத்தொன்றாம் பாசுரத்தில் கிருட்டிணனைத் துயிலுணர்த்தித் தாங்கள் அவனுடைய திருக்குணத்திற்குத் தோற்று வந்தபடியை அறிவிக்கின்றார்கள். இருபத்திரண்டாம் பாசுரத்தில் தாங்கள் அபிமானம் குலைந்து வந்தபடியால் தங்கள் எளிமையெல்லாம் தீர மெல்ல மெல்லக் கூடாட்சிக்க வேண்டும் என்று பிரார்த்திக்கின்றார்கள். இருபத்து மூன்றாம் பாசுரத்தில் சீரிய சிங்காதனத்தில வீற்றிருந்து தாபங்கள் வேண்டி வந்த காரியத்தை ஆராய வேண்டுமாறு பிரார்த்திக்கின்றார்கள். இருபத்துநான்காம் பாசுரத்தில் இவர்கள் பிரார்த்தனைப்படிக்கு வீற்றிருந்தமைக்கு மங்களாசாசனம் செய்கின்றார்கள். இருபத்தைந்தாம் பாசுரத்தில் தாங்கள் அருத்தித்து வந்தமையை விண்ணப்பிக்கின்றார்கள். இருபத்தாறாம் பாசுரத்தில் நோன்புக்கு வேண்டியவை இன்னவை என்று அபேட்சிக்கின்றார்கள். இருபத்தேழாம் பாசுரத்தில் தங்கள் நோன்பு முடிந்தபின் தாங்கள் பெறும் சன்மானத்தை விண்ணப்பிக்கின்றார்கள். இருபத்தெட்டாம் பாசுரத்தில் தங்களுடைய சிறுமையையும் அவனது பெருமையையும்

உறவையும் அநுசந்தித்து தங்கள் குற்றங்களைப் பொறுத்துருளுமாறு வேண்டுகின்றார்கள். இருபத்தொன்பதாம் பாசுரத்தில் தங்களுடைய முக்கியமான குறிக்கோள் இன்னதென்று விண்ணப்பித்துப் பெறுகின்றார்கள். முப்பதாம் பாசுரத்தில் இவ்வாறு இடைச்சிறுமியர் கிருட்டிணனிடத்தில் தமது மனோரதத்தை வேண்டிப் பெற்ற வரலாற்றை ஆண்டாள் அருளிச் செய்த இந்தப் பிரபந்தத்தை அநுசந்திப்பார்க்கு உண்டாகும் பயன் உணர்த்தப் பெறுகின்றது.

திருப்பாவை நிறைவு அடைந்தது.

## சீவில்லிபுத்தூரின் பெருமை

கோதை பிறந்தவூர் கோவிந்தன் வாழுமூர்
சோதி மணிமாடம் தோன்றுமூர் – நீதியால்
நல்லபத்தர் வாழுமூர் நான்மறைகள் ஓதுமூர்
வில்லிபுத்தூர் வேதக்கோன் ஊர்.

## திருப்பாவையின் சிறப்பு

பாதகங்கள் தீர்க்கும் பரமன்அடி காட்டும்
வேதம் அனைத்திற்கும் வித்தாகும் – கோதைதமிழ்
ஐயைந்து ஐந்தும் அறியாத மானிடரை
வையம் சுமப்பது வம்பு.

## வாழித் திருநாமம்

திருவாடிப் பூரத்துச் செகத்துதித்தாள் வாழியே
திருப்பாவை முப்பதும் செப்பினாள் வாழியே
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே
பெரும்புதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே
ஒருநூற்று நாற்பத் தொருமூன் றுரைத்தாள் வாழியே
உயரரங்கற்கே கண்ணி உகந்தளித்தாள் வாழியே
மருவாருந் திருமல்லி வளநாடி வாழியே
வண்புதுவை நகர்க்கோதை மலர்ப்பதங்கள் வாழியே

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

# பின்னிணைப்பு - 1

ஆழ்வார்களை எழுப்புவதில் வேறொரு முறை

(வானமாமலைத் திருமடத்தை நிறுவிய முதல் ஜீயர் சுவாமிகள் அருளியது)[1]

ஆறாம் பாசுரம் - பொய்கையாழ்வாரை எழுப்புவது. இப்பாசுரத்தில் "பிள்ளாய்! எழுந்திராய்!" என்று "பிள்ளைப் பெண்" என்கின்றது பொய்கையாழ்வாரை. 'அரவம் அடல் வேழம்' (முதல். திருவந். 54) என்ற பாசுரத்தால் கிருஷ்ணாநுபத்திற்குத் தேசிகராகையாலும், இவள் சூடிக் கொடுத்த வடிவுக்கு "வையந்தகளி" (முதல் திருவந். 1) என்ற பாசுரத்தில் "சுடராழியான் அடிக்கே சூட்டினேன் சொல் மாலை" என்றும் "மாலும் கருங்கடலே! என் நோற்றாய்" (19) என்பதால் அவனுடைய உடல் உறுப்புகளின் சேர்க்கையை ஆதாத்துப் பேசியும், "மணமருவமால் விடையேழ் செற்று" (62) என்று நப்பின்னைப் பிராட்டியைப் பெறுகைக்கு எருதுகளின் மேலே பாய்ந்தபடியைப் பேசுகையாலும், இதிலே 'பேய் முலை நஞ்சுண்டு' என்றதை "பேய்முலை நஞ்சுண்டாக உண்டான்" (11) என்றும், "கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி" என்று கன்னிப் போரான றுச்சேவகத்தை "ஓரடியும் சாடுதைத்த" (100) என்றும், 'வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்தினை' என்றதை "வெள்ளத்தினுள்ளானும்" (99) முதலியவற்றால் பேசியும், "ஒன்றும் அதனை உணரேன் நான்" (2) என்றும் முந்துற முன்னம் பகவத் விஷயத்திலே இழிந்தவராகையாலும், "பிள்ளைப் பெண்" என்கிறது பொய்கையாழ்வாரை. பிள்ளை - மௌக்த்யம்.

1. இவர் பெரிய ஜீயருடைய சீடர். பூர்வாசிரமத்தில் அழகியவரதர்; அவதாரத்தலம் வானமாமலை. திருநட்சத்திரம் புரட்டாசி புனர்பூசம். திருவாராதனம் பெரிய ஜீயர் சாதித்த அரங்க நகரப்பன். இவருடை திருநாமங்கள் : இராமாநுஜ ஜீயர், வானமாமலை ஜீயர், தோத்ரி யோகி முதலியன. இவர் பெரிய ஜீயர் (மணவாள மாமுனிகள்) நியமித்த அஷ்டதிக் கஜங்களில் ஒருவர். இவருடைய சீடர்கள் ஆத்தான் இராமாநுஜன் முதலானவர்கள்.

ஏழாம் பாசுரம் - பேயாழ்வாரை எழுப்புவது. "பேய்ப்பெண்" என்கிறது பேயாழ்வாரை. "திருக்கண்டேன்" (மூன். திருவந். 1) முதலியவற்றால் நாயகனுடைய சிறப்பைக் காட்டுவதாலும் மற்றும் ஸ்த்ரீத்வாபத்தியாலே "வெற்பென்று வேங்கடம்" (69) என்று தொடங்கி "நீண்டதோள் மால்கிடந்த நீள் கடல் நீராடுவான், பூண்டநாள் எல்லாம் புகும்" என்கையாலும், "கோவலனாய் ஆநிரை மேய்த்துக் குழலூதி" (42) என்று கிருஷ்ணசேஷ்டிதங்களைப் பேசுகையாலும், "பின்னைக் காய், ஏற்றுயிரை அட்டான்" (85) என்று நப்பின்னைப் பிராட்டிக்காக அவன் எருதுகளில் மேலே பாய்ந்தபடியை பேசுகையாலும், "பேய்ப் பெண்ணே" என்கிறது - பேயாழ்வாரை என்றபடியாம்.

எட்டாம் பாசுரம் - பூதத்தாழ்வாரை எழுப்புவது. **"கோதுகல முடைய பாவாய்"** என்கிறது . பூதத்தாழ்வாரை. ஸ்த்ரீத்வாபத்திற்கு உடலாக "அன்பே தகளியா" (இரண்.திருவந். 1) முதலியவற்றால் பக்தியைப் பேசி "பெருந்தமிழன் நல்லேன் பெரிது" (74) என்று உடனே "பெருகுமத வேழம்" (75) என்று அவனுடைய அதிமானுஷ சேஷ்டிதத்தையும் ஜாத்யுசிததர்மத்தையும் பேசியும், "ஏறின், பெருத்தெருத்தம் கோடொசியப் பெண்ணசையின் பின் போய், எருத்து இறுத்த நல்லாயர் ஏறு" (62) என்று நப்பின்னைப் பிராட்டியைப் பெறுவதற்கு எருதுகளின் மேலே அவன் பாய்ந்த பாய்ச்சலைப் பேசியும், இதில், "தேவாதி தேவன் எனப்படுவான் முன்னொரு நாள், மாவாய்ப் பிளந்த மகன்" (28) என்றும், "மாலே! நெடியோனே! கண்ணனே! விண்ணவர்க்கு, மேலா! வியன்துழாய்க் கண்ணியனே! - மேலால், விளவின்காய் கன்றினால் வீழ்த்தவனே! என்தன், அளவன்றால் யானுடைய அன்பு" (100) என்று அருளிச் செய்கையாலும், **'கோதுகலமுடைய பாவாய்'** என்றது பூதத்தாழ்வாரை என்றபடி. "மாதவன் பூதம்" என்கிறது 'கோதுகலமிறே' ஆகையாலும் "மாதவன் பேர் சொல்லுவதே ஒத்தின் சுருக்கு" (39) என்றவரிறே. ஆக மூவரும் ஞானாதார்சன பிராப்த்யவஸ்தைகளோடே கூடியாயிற்றிருப்பது.

ஒன்பதாம் பாசுரம் - திருமழிசையாழ்வாரை எழுப்புவது. மேற்குறிப்பிட்ட மூவருக்கும் அடுத்தவரான திருமழிசையாழ்வாரை "மாமான் மகள்" என்கிறது. "உலகுதன்னை, வைத்தெடுத்த பக்கத்தும் மாநீர்மழிசையே, வைத்தெடுத்த பக்கம் வலிது" (தனியன்)[2] என்னும்படி மகிஷாக்ஷேத்திரமான திருமழிசையிலே ஸ்ரீஜகந்நாதனை உத்தேசித்து பூஜித்துக் கொண்டிருக்கின்ற காலத்திலே பார்க்கவனுடைய துணைவி கருப்பிணியாய்த் திருமழிசைபிரானைத்

2. 'திருக்கச்சி நம்பி அருளியது.

திருவயிறு வாய்த்ததாலே. "பார்க்க வீலோகஜநீ" என்னும்படியான பிராட்டியோடே உடன்பிறந்த பார்க்கவ புத்திரர் ஆகையாலும், "காட்டில் வேங்கடம்" (நாச்.திரு. 4.2) முதலியவை. "கூட்டுமாகில் நீ கூடி கூடல்" என்கின்றபடியே, "அழைப்பன் திருவேங்கடத்தானைக் காண, இழைப்பன் திருக்கூடல் கூட" (நான்.திருவந்.39) என்று பெண் பாவனையாய்ப் பேசுகையாலும் "தூமணிமாடத்துச் சுற்றும் விளக்கெரிய" (திருப். 9) என்கின்ற ஞான தீபப் பிரகாசத்தை "என்மதிக்கு விண்ணெல்லாம் உண்டோ விலை" (51), "ஞானம் ஆகி ஞாயிறு ஆகி" (திருச்சந்த - 114) என்று பேசுகையாலும், "ஆயன் துவரைக் கோனாய் நின்ற மாயன்" (நான்.திருவந். 71) என்றும், "அடிச்சகடம் சாடி" (33) என்பதில் "வடிப்பவள, வாய்ப்பின்னை தோளிக்காவல் ஏற்று எருத்து இறுத்து" (33) என்றும், "ஆயனாகி ஆயர்மங்கை வேயர் தோள் விரும்பினாய்" (திருச்சந்த 41) என்றும், "பின்னை கேள்வ! நின்னோடும், பூட்டி வைத்த என்னை நின்னுள் நீக்கல்" (மேலது 99) என்றும் கிருஷ்ண சேஷ்டிதங்களையும் நப்பின்னைப் பிராட்டி புருஷகாரச் சிறப்பையும் சொல்லி, இதிலே "மாமாயான் மாதவன் வைகுந்தன்" (திருப். 9) என்றதை "மாதவனை" (நான்.திருவந். 6.6.5) என்றும், "வைகுந்த செல்வனார்" என்றும் பேசுகையாலும் **"மாமான் மகள்"** என்கின்றது **திருமழிசையாழ்வாரை** என்றபடி.

பார்க்கவனும் பார்க்கவியும், பிருகுவுக்குக் கியாதியினிடத்திலே சகோதரராகச் சம்பவிக்கையாலும், உலகமாதாவுடன் பிறந்தவன் உலகத்துக்கெல்லாம் மாமனாகத் தட்டில்லையல்லவா? அந்தப் பார்க்கவ புத்திரனாகையாலே இவரை "மாமான் மகள்" என்ன குறையில்லை. அல்லது, யசோதைப் பிராட்டிக்குப் பின் பிறந்த கும்பர் மகனான நப்பின்னைப் பிராட்டி தரத்தையுடையார் ஒருவராகையாலே "மாமான் மகள்" என்று சொல்லுகிறதாகவுமாம்.

**பத்தாம் பாசுரம் - குலசேகரப் பெருமாளை** எழுப்புகிறது. இதில் 'அம்மனாய்' என்கிறது - குலசேகரப் பெருமாளைக் குறிக்கும். குலசேகரனாகையாலும், எல்லையில் அடிமைத் திறத்தினில் என்று மேவு மனத்தனாகையாலும், "அல்லி மலர் திருமங்கைக் கேள்வன் தன்னை நயந்து இள ஆய்ச்சிமார்கள், எல்லிப் பொழுதினில் ஏமத்து ஊடி எள்கி உரைத்த உரையதனை" (6.10) பெண்பாவனையாகப் பேசுவதாலும், "ஏறு அடர்த்ததும்" (2.3), "ஆனேறு ஏழ்வென்றான் அடிமைத்திறமல்லால்" (4.1) என்று நப்பின்னைப் பிராட்டி விஷயமாக வியாரித்த வியாபாரத்தில் தோற்று "அடிமை அல்லது" என்கையாலும், "ஆலை நீள் கரும்பு அன்னவன்" (7.1) என்று

தொடங்கி "மல்லை மாநகர்க்கிறைவன் தன்னை வான் செலுத்தி" (7.11) என்னும் வரையில் கிருட்டிணன் சேஷ்டிதங்களைப் பேசி அநுபவிக்கையாலும், இதில் "நாற்றந்துழாய் முடி நாராயணன்" என்றதை "வண்டு கிண்டு நறந்துழாய் மாலையுற்றவரைப் பெருந் திருமார்வனை" என்றும், அந்நாராணனை "நலந்திகழ் நாரணன்" (10.11) என்றும் பேசுகையாலும் இவர்க்கு அசலுணர்த்தி அநுபவம் போலே திரு அரங்கயாத்திலையில் அநுபவம் நடந்து செல்லு கையாலே பிரபந்த குலசேகரரான குலசேகரப் பெருமாளை "நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்" என்று விளிக்கப் பெறுகின்றது.

பதினோராம் பாசுரம் - பெரியாழ்வாரை எழுப்புகிறது. "கோவலர் தம் பொற்கொடியே" என்கின்றது **'பெரியாழ்வாரை'**. சூடிக் கொடுத்த சுடர்க்கொடியான இவளைப் போலே கோவலப் பட்டம் கவிக்கும்படி கோப ஜந்மத்தை (இடைக்குலப் பிறப்பை) ஆஸ்தானம் பண்ணினவராகையாலும் "கன்னியரோடெங்கள் நம்பிக்கரிய பிரான் விளையாட்டை" (நாச். திரு. 311) என்னும்படி "கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்" (1.2.1) என்று தொடங்கி "பண்டு அவன் செய்த கிரீடை எல்லாம்" (2.9.11) என்னும்படி கிருஷ்ண குணசேஷ்டிதம் பேசி அநுபவிக்கையாலும், "நப்பின்னை தன் திறமா நல்விடை ஏழவிய நல்ல திறலுடைய நாதனுமானவனே" (1.6.7) என்றும், "ஐயபுழுதி உடம்பு அளைந்து" (3.7.1), "நல்லதோர் தாமரை" (3.8.1) இவற்றில் திருத்தாயார் பேச்சாகப் பேசுகையாலும், "தழைகளும் தொங்களும்" (3.4) இவை போன்றவற்றில் கன்னிமார் காமுற்ற மாற்றத்தைப் பேசுகையாலும், இதில் "முகில்வண்ணன்" என்றதை - "விட்டுசித் தன்மனத்தே, கோயில் கொண்ட கோவலனைக் கொழுங்குளிர் முகில் வண்ணனை" (5.4.11) என்கையாலும், **"கோவலர்தம் பொற் கொடியே" என்கிறது பெரியாழ்வாரை** எனத் தட்டில்லை.

பன்னிரண்டாம் பாசுரம் - தொண்டரடிப் பொடியாழ்வாரை எழுப்புவது. பெண் பாவனைக்கு அநுகுணமாக, "தன்பால், ஆதரம் பெருக வைத்த அழகன்" (திருமாலை - 16)என்றும் "உடலெனக்கு உருகுமாலோ" (19) என்றும், "கண்ணனைக் கண்ட கண்கள், பனியரும்பு உதிருமாலோ" (18) என்றும், தம்முடைய பக்தியைப் பேசுகையாலும், 'கற்றினம் மேய்த்துக் கனிக்கொரு' (பெரியாழ். 2.5.5) கீழ் உற்ற திருமாலைப் பாடுகையாலும், "மழைக்கு அன்று வரை முன்னேந்தும் மைந்தனே" (36) என்று குன்று குடையாக எடுத்த படியைப் பேசுகையாலும், "கவளமால் யானை கொன்ற கண்ணனை" (45) என்கையாலும் மாலாகாரரைப் போலே செண்பக

மல்லிகையொடு செங்கழுநீர் இருவாட்சி செண்பகப் பூவும் கொணர்ந்து சாற்ற, அத்தால் வந்த கைங்கர்ய ஸ்ரீயையுடைய பெரியாழ்வாருக்குப் பிற்பாடராய், அவர் கைங்கர்ய ஸ்ரீயை அநுவிதாநம் பண்ணுகையாலே "அவர்க்கு அநுஜர்" (கூடப் பிறந்தவர்) என்னும்படியாய், திருப்பள்ளியுணர்த்து திறத்திலும் வந்தால் "விஷ்ணுசித்த துளஸ்ப்ருத்யா" என்று சகபடிதர் ஆகையாலும் **"நற்செல்வன் தங்காய்"** என்கின்றது தொண்டரடிப்பொடியாழ்வாரை என்க. இவரும் இதிலே "சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக்கினியானை" என்றதை, "இலங்கையர் குலத்தை வாட்டிய வரிசிலைவானவர் ஏறே" (திருப்பள்ளி - 4) என்றும், "செருவிலே அரக்கர் கோனைச் செற்ற நம் சேவகனார்" (திரு. 11) என்று அருளிச் செய்தார் அன்றோ?

**பதின்மூன்றாம் பாசுரம் - திருப்பாணாழ்வாரை** எழுப்புவது. இதில் **"போதரிக் கண்ணினாய்"** என்பது **திருப்பாணாழ்வாரை.** திருப்பாணாழ்வார் "அடியார்க்கு என்னை ஆட்படுத்த விமலன்" (அமலனாதி - 1) என்றும், "என் கண்ணின் உள்ளன" (மேலது - 1) என்றும், "கொண்டல் வண்ணனைக் கோவலனாய்" (10) என்று தொடங்கி "என் அமுதினைக் கண்ட கண்கள்" என் கையாலே, **"போதரிக் கண்ணினாய்"** என்கின்றது **திருப்பாணாழ்வாரை.** "மெய்ம்மையை மிக உணர்ந்து" என்று ததீயசேஷத்துவ பர்யந்தமான ஞானமல்லவா ஞானம் என்பது. ததீயர்க்கு உகப்பாகப் பண்ணும் பகவநுபமல்லவா இவரது. பெண் பாவனையால் உண்டான பக்தி பத்தும் பத்தாக அடி தொடங்கி முடியளவுமாய் மேலாயிருக்கும். இப்பாசுரத்திலே "பொல்லா அரக்கனைக் கிள்ளிக் களைந்தானை" என்றதை இவரும் "சதுரமா மதிள் சூழ் இலங்கைக் கிறைவன் தலை பத்து, உதிர ஓட்டியோா வெங்கணை உய்த்தவன்" (4) என்றாரல்லவா?

**பதினான்காம் பாசுரம் - நம்மாழ்வாரை** எழுப்புவது. "திருமாலுக்குரிய தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன்" (6.9.1) என்னும்படியான சேஷ பூர்த்தியையுடையராய், "அவனடியார், நன்மாக்கலவி இன்பமே நாளும் வாய்க்க நங்கட்கே (8.10.7) என்னும்படி பாகவத சம்ருத்தியைக் காண்கையிலே அபிவிருத்த மனோரதத்தை உடையராய், அந்யாபதேசத்திலும் "அடிச்சியோம்" (10.3.6) என்கையாலும், "பின்னை கொல்" (6.5.10) என்கின்ற ஒப்பனையாலும், "சூட்டு நன்மாலைகள்" (திருவிருத் 21) என்று தொடங்கி "அடாயர் தம் கொம்பினுக்கே" என்று நப்பின்னைப் பிராட்டிக்காக அவன் விடையுடர்த்த வீரச் செயலைப் பேசியும்,

"பின்னை நெடும்பணைத் தோள் மகிழ பீடுடை முன்னையமரர் முழு முதலானே" - "என் நெகிழ்க்கிலும் என்னுடைய நன்னெஞ்சம், தன்னை அகல்விக்கத் தானும் கில்லான்" (1.7.8) என்றும், "வேயின் மலிபுரை தோள் பின்னைக்கு மணாளனை" (3.9.8) என்பன போன்றவற்றாலும், "வாள் கெண்டை ஒண்கண் மடப்பின்னை தன் கேள்வன், தாள் கண்டுகொண்டென் தலைமேல் புனைந்தேனே", "ஆள்கின்றான் ஆழியான். ஆரால் குறையுடையேம்" (மேலது. 10.4.3) என்றும், "எருது ஏழ்தழீ சடையினார்" என்பனவற்றாலும் பலபடியாக அவள் புருஷகாரத்தின் சிறப்பை ஆதரித்து, மற்றும் "ஏத்திறம், உரலினோடு இணைந்திருந்து ஏங்கிய எளிவே!" (1.3.1) என்று பிறந்த வாற்றிலே கிருஷ்ண சேஷ்டிதங்களிலே ஈடுபட்டு, குரவை ஆய்ச்சியரிலே நண்ணி வணங்கி அநுபவித்தும், "எல்லாம் கண்ணன்" (6.7.1) என்றும், **"நீராடப் போதுவீர்"** என்றதை "கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர்" (10.5.1) என்கையாலும், மந்தாதிகாரிகளை "என் நெஞ்சினால் நோக்கிக் காணீர்" (5.5.2) என்று உணர்த்தியும், சகோதரிகளை உயிராகத் தேடி **"இசைமின்"** என்று போதிக்கையாலும், **"நீராட"** என்றதை "காலை நல் ஞானத் துறை படிந்தாடி" (திருவிருத் 93), "அப்பன் திருவருள் மூழ்கினள்" (8.9.5) என்கையாலும், இதில் **"நாணாதாய்"** என்றதை "நாணும் நிறையும் எனக்கிங்கில்லை" என்றும், **'நாவுடையாய்'** என்றதை "என்நா" (7.9.3) என்றும், "வலக்கையாழ் இடக்கைச் சங்கம் இவையுடை மால் வண்ணனை, மலக்கும் நாவுடையேன்" (6.4.9) என்றும், "நாவியலான் இசை மாலைகள்" என்றும் சொல்லுகையாலே **"எங்களை முன்னம் எழுப்புவான் வாய் பேசும் நங்காய்"** என்கிறது - **நம்மாழ்வாரை.** இப்பாசுரத்தில் **"சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன் பங்கயக் கண்ணானைப் பாட"** என்றதை "பங்கயக் கண்ணனையே" (3.4.2), "பங்கயக் கண்ணன் என்கோ" (3.4.3) என்றும், "வீவில் சீரன் மலர்க்கண்ணன் விண்ணோர் பெருமான் தன்னை, வீவில் காலம் இசை மாலைகள் ஏத்தி" (4.5.3) என்றும் பேசினாரன்றோ.

பதினைந்தாம் பாசுரம் - **திருமங்கையாழ்வாரை** எழுப்புவது. "அடிகளடியே நினையும் அடியவர்கள், தம் மடியான்" (பெரி. திரு. 2.6.10) என்று சேஷத்துவத்தின் எல்லை நிலத்திலே நிற்கையாலும், பெண் பாவனைக்கு அநுகுணமாக "பேராளன் பேரோதும் பெண்ணை" (திருநெடுந் 20) என்றும், "கடிமாமலர்ப்பாவை யொப்பாள்" என்றும் இலக்குமி சாம்யத்தையுடையராயிருக்கும் இருப்பைப் பேசுகையாலும், "பேராளன் பேரோதும் பெரியோரை

ஒருகாலும் பிரிகிலேன்" (7.4.4) என்றும், "வண்சேறை யெம்பெருமான் அடியார் தம்மைக் கண்டேனுக்கு இது காணீர் என்செஞ்சும் கண்ணிணையும் களிக்குமாறே" (7.4.6) என்றும், ததயாநுபவதத்பரராய் தத்பிரீதி ஏதுவாக "ஆயர் பூங்கொடிக்கு இனவிடை பொருதவன்" என்றும், "பின்னை பெறும் பெற்றார்" என்றும், "பின்னை மணாளர் தம் திறத்தும்" என்றும், "அன்றாயர் குல மகளுக்கு அரையன் தன்னை" (திருநெடுந் 29) என்றும் நப்பின்னைப் பிராட்டி புருஷகாரத்தை அடியே தொடங்கி முடிய நடத்தியும், **"நீராடப் போதுவீர்"** என்றதை "பொற்றாமைக் கயம் நீராடப் போனாள்" (திருநெடுந் 19) என்றும், "சந்த மலர்க்குழல்" (10.4.1) "பூங்கோதை" (10.5.1) "எங்கானும்" (10.6.1) "மானமுடைத்து" (10.7.1) இவை போன்றவற்றாலே கிருஷ்ண குண சேஷ்டிதங்களை மண்டியநுபவித்து "பண்டிவன் ஆயன் நங்காய்" (3.7.2) என்று தொடங்கி, அவன் பின் "கெண்டை ஒண் கண் மிளிரக்கிளி போல் மிழற்றி நடந்து" (மேலது) என்றும், "மென் கிளி போல் மிக மிழற்றும்" (திருவிருத். 15) என்கையாலும் **"இளங்கிளியே"** என்கிறது திருமங்கையாழ்வாரை. **"வல்லையுன் கட்டுரைகள் பண்டே உன் வாய் அறிதும்"** என்பதும் உண்டு இவருக்கும். இப்பாசுரத்திலே **"வல்லானை கொன்றானை"** என்கிற இதனை, "ஆவரிவை செய்தறியார்" (3.3.7) என்பன போன்றவற்றாலும் "கரிமுனிந்த கைத்தலமும்" (திருநெடுந். 25) என்றும் அருளிச் செய்தார்.

இங்ஙனம் இப்பத்துப் பாசுரங்கட்கும் குணசாம்யத்தாலும் கௌரவத்தாலும் பத்துப் பெண்களை எழுப்புகிற முகத்தாலே ஆழ்வார்கள் பதின்மரையும் கூட்டிக்கொண்டு பெரியாழ்வாரின் திருமகளார் அநுசந்திக்கிதாக அறுதியிட்டார்கள் இப்படி பக்தராய் முக்தராய் இருப்பர் ஆழ்வார்கள்.

## பின்னிணைப்பு – 2

### சிலரது வரலாறுகள்

## 1. ஆண்டாள் வரலாறு

இந்தப் பெருமாட்டியின் பிறப்பு விநோதமானது. சீதாப் பிராட்டியின் பிறப்பைப் பற்றிக் கேள்வியுற்றிருக்கின்றோம். சனகன்யாக பூமியை ஏற்படுத்துவதற்காக நிலத்தை உழும்பொழுது படைச் சாலலே பிராட்டி அகப்பட்டதாகப் பேசுவர். இதனைப் போலவே பெரியாழ்வார் தமது நந்தவனத்தில் திருந்துழாய் பாத்தி அமைத்தற்காகத் களைக் கொட்டு கொண்டு கொத்தகையில் கொத்தின நிலத்தடியில் சீதேவி - பூதேவியின் அம்சமாக ஒரு பெண் மகவு கிடைத்தது. கிடைத்த நாள் ஆடி மாதம். பூர நட்சத்திரம்.

**இன்றோ திருவாடிப் பூரம்எமக்காக**
**அன்றோ இங்காண்டாள் அவதரித்தாள்**[1]

என்று மணவாள மாமுனிகளின் திருவாக்கால் இஃது அறியப் பெறுகின்றது.

பெரியாழ்வாரும் அவருடைய துணைவியார் விரஜையும் இறைவன் அளித்த தெய்வக் குழந்தைக்குக் கோதை என்ற திருநாமமிட்டுச் சீராட்டிப் பாராட்டி வளர்த்து வந்தனர். கோதையும் இளமையில் கலைகள் முழுவதும் தன்னடைவே நிரம்பப் பெற்று வளர்ந்து வந்தாள். தந்தையாரைப் போன்றே கோதையும் இளமை தொட்டே கண்ணன் பக்தியில் ஈடுபட்டாள். தந்தையாரால் குழந்தையாகக் கருதப்பெற்ற கண்ணன் இவளுக்குக் காதலனாக அமைந்துவிடுகின்றான். கோதை தக்க வயதை எய்தியதும்

1. உ.ர.மா. 22

ஆழ்வாரே அவளுக்குப் பஞ்ச சம்ஸ்காரம்[2] செய்து வைத்து பரஞானத்தையும் போதித்தார்.

கோதை தந்தையாரை அதிகம் நேசித்து வந்தாள். தந்தையார் அதிகாலையில் துயிலெழுந்து நந்தவனத்திற்குச் சென்று பூக்கொய்து வதை வழக்கமாகக் கொண்டிருந்தார். கோதையும் அவருடன் சென்று பூ எடுப்பாள். அவர் மலர்களைக் கொண்டு பலவித மாலைகளைத் தொடுப்பார். அச்செயலை உற்றுக் கவனித்த கோதையும் அவற்றைத் தொடுக்க முயற்சி செய்வாள். ஆழ்வார் நந்தவனக் கைங்கரியம் செய்ய கோதையும் சின்னஞ்சிறு குடமொன்றை ஒக்கலில் இடுக்கிக் கொண்டு தண்ணீர் எடுத்துவந்து துளசிசெடிகட்கு ஊற்றுவாள்.

பெரியாழ்வார் தாம் தொடுத்த மலர்மாலைகளைச் சிறப்பான பக்தி வினயத்துடன் ஆலிலைப் பள்ளியானுக்குச் சாத்திவருவதைக் கண்டு வரும் கோதைக்கும் அதைப் பார்த்துப் பார்த்து நாளடைவில் பக்தியும் விநயமும் பெருகி வந்தன. தன் தந்தையும் பல்வேறு அடியார்களும் பஜனை செய்வதையும், உருக்கமான பக்தி பாடல்கள் பாடுவதையும் அவற்றிற்கேற்ப ஆனந்த கூத்தாடுவதையும் குழந்தைப் பருவம் முதற்கொண்டே பார்த்துக் கொண்டிருந்ததால் கோதையின் விளையாட்டு விருப்பம் இலட்சியம் எல்லாம் பக்தி மயமாகவே இருந்தன. இவளும் அவர்களுடன் பஜனை முதலிய நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வாள். அழகின் கொழுந்தாகவும், அன்பின் கொழுந்தாகவும் வளர்ந்த கோதை பக்தியின் கொழுந்தாகவும் விளங்குவது கண்டு பெருமகிழ்ச்சி கொண்டார் பெரியாழ்வார்.

கோதைக்கு ஆழ்வாரே கல்வி கற்றுத் தந்தார். அவளும் அழகிலும், அறிவிலும், பக்தியிலும், ஞானத்திலும் ஒருங்கே வளர்ந்து வருவது கண்டு ஆழ்வார் பூரித்துப் போனார். நாளடைவில் பெரியாழ்வார் வளர்த்த செல்வி அக்காலத்தில் கலைகளெல்லாம் நிரம்பப் பெற்று ஒப்பற்ற ஞானசுந்தரியாக ஞானப் பூங்கொடியாக, கோல்தோடி ஓடும் கொழுந்தாக (இரண். திருவந்., 27) விளங்கினாள்.

**இளமைப் பருவம்** - தந்தையைப் போலவே மகளும் இயற்கை அழகுகளிலெல்லாம் அழகனாகிய கண்ணனையே கண்டு களித்தாள்.

**கொண்டல்தான் மால்வரைதான்**
**மாகடல்தான் கூர் இருள்தான்**

2. பஞ்ச சம்ஸ்காரம் – தாபம், புண்ட்ரம், நாமம், மந்திரம், யாகம் என்ற ஐந்தும் புறச்சுத்தியாக ஆசாரியன் மூலமாகப் பெறுதல். தாபம் – சங்கு சக்கரங்களைத் தோளில் சுட்டுத்தரித்துக் கொள்ளல். புண்டரம் – மேல் நோக்கி இட்டுக் கொள்ளும் திருமண் காப்பு அணிதல் நாமம் – இராமாநுசன் என்ற தாஸ்ய நாமம் பெறுதல் மந்திரம் எட்டெழுத்து மந்திர உபதேசம் பெறுதல். யாகம் – பகவதாராதனம் – எம்பெருமானை வழிபடுதல்.

**வண்டுஅறாப் பூவைதான்**
**மற்றுந்தான் - கண்டநாள்**
**கார்உருவம் காண்தோறும்**
**நெஞ்சோடும் - கண்ணனார்**
**பேர்உரு என்று எம்மைப் பிரிந்து.**

**பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற**
**காவி மலரென்றும் காண்தோறும் - பாவியேன்**
**மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும் அவ்வவை**
**எல்லாம் பரான்உருவே என்று**[3]

என்ற நம்மாழ்வாரின் இறையநுபவம் இவளுக்கும் ஏற்பட்டது. இந்தத் தெய்விக அழகை அவளுடைய கண்கள் ஆர்வத்துடன் பருகின. அந்த அழகு அவள் உள்ளத்தில் பாய்ந்து உயிரோடு கலந்துவிட்டது.

யுவதியாக வளர்ந்த பிறகு கோதையின் காதல் நிமிடத்திற்கு நிமிடம் அதிகரித்து வளரத் தொடங்கியது. நாளடைவில் காதல் இவளை முற்றும் விழுங்கிவிட்டது. தான் படர வேண்டிய கோலைத் தேடிக் குழைந்து வளையும் பூங்கொடி போலானாள்.

**கோல்தேடி ஓடும் கொழுந்ததே போன்றதே**
**மால்தேடி ஓடும் மனம்.**[4]

என்ற நம்மாழ்வாரின் அநுபவம் இவளை ஆட்கொண்டது. புருடோத்தமாகிய வேணுகோபாலன்தான் தான் படரவேண்டிய கொள்கொம்பு என்பதை உணர்ந்தாள். உறுதியும் கொண்டாள். தம் அருமை மகளின் தெய்வக் காதல் நிலைகளையெல்லாம் பெரியாழ்வார் உணர்ந்தார், ஆழ்ந்த கவலை கொண்டார்.

சூடிக் கொடுத்த சுடர்க்கொடி - தான் கண்ணனுக்கேற்ற காதலி என்ற கருத்து கோதையிடம் நாளுக்கு நாள் உறுதிப்பட்டு வந்து கொண்டிருந்தது. ஒரு சமயம் பெரியாழ்வார் இறைவனுக்குத் தொடுத்து வைத்திருந்த மாலைகளை எடுத்துப் பார்த்தாள். பல வகையான நிறமும் மணமும் உள்ள மாலைகளை உற்று நோக்கினாள். அவை யாவும் தன் திருத்தகப்பனாரின் கைவண்ணத்தில் தெய்விக அழகு பெற்றிருப்பதாகத் தோன்றியது. அவற்றைத் தான் சூட்டிக்கொண்டு நிலைக் கண்ணாடியின் முன் நின்றுகொண்டு பெருமிதத்துடன் பார்த்து மகிழ்ந்தாள். பின்னர் அவற்றைக்

3. பெரி.திருவந் - 49, 73
4. மேலது - 27

கசங்காமல் அப்படியே பூக்கூடையில் வைத்துவிட்டாள். இப்படிப் பல நாட்கள் நடைபெற்று வந்தது. இதனையறியாது ஆழ்வர் மாலைகளை வழக்கம் போல் ஆலிலைப் பள்ளியானுக்கு அணிந்து வந்தார். அவை என்றுமில்லாத மணமும் ஒளியும் பெற்றுத் திகழ்ந்ததை அர்ச்சகர்கள் கண்டு அதிசயித்தனர். ஆழ்வாரின் பக்தி முதிர்ச்சியே இந்தச் சிறப்புக்குக் காரணம் என்று கருதினர். இதனால் அவர்களுக்கு ஆழ்வாரிடம் உள்ள பக்தியும் விசுவாசமும் அதிகரித்தன. உண்மையில் கோதையின் அன்பு மனந்தான் அப்படி அந்த தெய்வமாலைகட்கு மணமும் பொலிவும் ஊட்டியது என்பது அவர்கட்கு எப்படித் தெரியும்? அஃது ஆழ்வாருக்குக் கூடத் தெரியவில்லையே!

ஒருநாள் இவளது செய்கையைத் தந்தையார் பார்த்துவிட்டார். அவளோ தன்னை மறந்த நிலையில் இருந்தமையால் சில நிமிடங்கள் அவரைக் கவனித்தாளிலள். ஆழ்வாரும் ஒன்றும் தோன்றாதவராய்ச் சிறிது நேரம் வாளா இருந்தார். அவள் அப்படிச் செய்வாள் என்று அவர் கனவிலும் கருதவில்லை. அவளோ "அவன் அழகிற்கு நாம் ஒத்தவளாகுமோ? காதலன் நம்மை அங்கீகரிப்பானோ?" என்ற பகற் கனவுகளில் தன்னை முழுக்க முழுக்க மறந்திருந்தாள். "என்ன அபசாரம்?" என்று பதறினார் ஆழ்வார். அவர் உள்ளம் திடுக்கிட்டு நடுங்கியது. தன் அருமை மகள் முன் சென்று தழுதழுத்த குரலில், "அம்மா குழந்தாய்! இங்ஙனம் செய்ய உனக்கு மனம் எப்படித் துணிந்ததோ? எத்தகைய குற்றம் செய்துவிட்டாய்! பகவானுக்குத் தொண்டு செய்வதென்றால் எவ்வளவு பயபக்தியுடன் செய்ய வேண்டும்!" என்று சற்றுக் கடிந்து கொண்டார்.

மீண்டும் நந்தவனம் சென்று பூக்களைக் கொய்தார். அவர்தம் திருவுள்ளம் தம் அருமை மகள் செய்த அபசாரத்தையே எண்ணிக் கொண்டிருந்தது. விரைவில் பூக்களுடன் வீடு வந்து சேர்ந்து மகளை உற்சாகப்படுத்திக்கொண்டே மாலைகள் தொடுத்தார். கோதையும் ஒன்றும் பேசாமல் தந்தைக்கு உதவி செய்த வண்ணம் இருந்தாள். எனவே, அவர் "இனி இவள் திருந்திவிடுவாள். பிழையை உணர்ந்து விட்டாள்!" என்று கருதினார். பெரியாழ்வாரும் ஆலிலைப் பள்ளியானின் சந்நிதிக்குச் சென்று வழக்கம்போல் மாலைகளை அர்ச்சகரிடம் தர, அவரும் அவற்றை வாங்கிப் பெருமாளுக்குச் சாத்தினார். வீடு திரும்பும்போது தமது செல்வச் சிறுமியின் அடாத செயலை ஆலிலைப் பள்ளியானுக்கு எவ்வளவு அதிருப்தியை உண்டாக்கியிருக்க வேண்டும்? என்று எண்ணிக்கொண்டே வீடு வந்து சேர்ந்தார்.

அன்றிரவு பெரியாழ்வாருக்கு உறக்கம் சரியாக வரவில்லை. பெருமூச்சு விட்டுப் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தார். தம் மகள் செய்த அபசாரம் மன அமைதியைக் குலைத்துவிட்டது. சிறிது நேரத்தில் கனவு வந்தது. அந்தக் கனவில் ஆலிலைப் பள்ளியான் தோன்றி "ஆழ்வீர், நும் திருமகள் சூடிக் கொடுத்த மாலையே நறுமணம் மிக்கு நம் உள்ளத்திற்கு நனி உகப்பானது காண். ஆதலால் அத்தன்மைத்தான தொடை மாலையையே நாடோறும் நமக்குக் கொண்டு வருவீராக!" என்று அருளிச் செய்தனன். உறக்கம் கலைந்து எழுந்ததும் ஆழ்வார் தம் கனவை நினைத்து பெருவியப்புற்றார். தாம் கண்டது கனவு என்றே தோன்றவில்லை. எல்லாம் நேர் காட்சியாக நடந்தனவாகவே தோன்றியது. அதனை நினைக்க நினைக்க அது மீண்டும் மீண்டும் தம் கண்முன் நடைபெறுவது போல இருந்தது. "என்னபேறு பெற்றேன்? என் அருமைச் சிறுமியால் பெற்ற பெரும்பேறல்லவா இது?" என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார். மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்தார். அன்று முதல் ஆழ்வார் தாம் கட்டிய மாலைகளைக் கோதை முன் வைத்து "அம்மா குழந்தாய்! நீ நேற்றுச் சூடிக் கொண்டது போல் இன்றும் கண்ணாடி முன் நின்று இந்த மாலைகளைச் சூடிப் பார்த்துக் கொடுத்தருள்க" எனக் கெஞ்சியும் கொஞ்சியும் வேண்டினார். கோதை வியப்பும் மகிழ்ச்சியும் ஒருங்கையே அடைந்தவளாய் அவற்றைச் சூடிக் கொண்டாள். பிறகு நாணத்தால் தலை குனிந்து நின்றாள். பிறகு மாலைகளை எடுத்துப் பார்க்கும்போது அவை அபூர்வ மணமும் அழகும் கொண்டனவாக அமைந்திருப்பதைக் கண்டார். களி கூர்ந்தார். அவற்றை அப்படியே ஆலிலைப் பள்ளியான் சந்நிதியில் சேர்ப்பித்தார். அன்றைய சேவையில் பெருமாளின் கண்களிலும் முகத்திலும் கண்ட தேசு அவர் முகத்தில் கண்டதைப் போன்றே இருப்பதாக அவர் மனத்திற்குப்பட்டது! அருகிலிருந்த கோதையை நோக்கி ஆனந்தக் கண்ணீர் பொழிந்து, "எம் பெருமானுக்குச் சூடிக் கொடுத்து என்னை ஆண்டாள் இவளே! என்று சொல்லி ஆனந்தக் கடலில் ஆழ்ந்தார். அன்று முதல் "சூடிக் கொடுத்த சுடர்க்கொடி", "ஆண்டாள்" என்ற திருநாமங்கள் அச்செல்விக்கு வழங்கிவரலாயின.

**அருளிச் செயல்கள்** - ஆண்டாள் அருளிச் செயல்கள் இரண்டு. 1. திருப்பாவை, 2. நாச்சியார் திருமொழி. இரண்டும் பாவனா சக்தியின் விளைவே.

**ஆண்டாள் திருமணம்** - திருமணத்திற்கு ஏற்ற பருவம் வந்ததும் இவளுடைய திருத்தந்தையார் இவளுக்கேற்ற கொழுநனைக்

காணப்பெறாது கவலையுற்றார். இவளை அழைத்து "நீ யாருக்கு வாழ்க்கைப்பட விரும்புகின்றாய்?" என்று வினவ,

**மானிடவர்க் கென்று பேச்சுப்படில்**
**வாழகில்லேன்**[5]

என்றும்,

**அன்றிப்பின்**
**மற்றொருவர்க் கென்னை**
**பேசலொட்டேன் மாலிருஞ்சோலை யெம்**
**மாலிருஞ்சோலை யெம்**
**மாயற்கல்லால்**[6]

என்றும் மறுமொழி பகர்ந்தாள். "பின்னை எங்ஙனம் நிகழ்வது?" என்று கேட்க, சூடிக் கொடுத்தாள் "பெருமாளுக்கு உரியவளாவேன்" என்று மறுமொழி கூறினாள்.

பின்னர், பெரியாழ்வார் (விஷ்ணுசித்தர்) 'நூற்றெட்டுத் திருப்பதி எம்பெருமான்களுள் யாருக்கு வாழ்க்கைத் துணைவியாக விரும்புகிறாய்?' என்று விசாரித்தார். கோதையின் வேண்டுகோளுக் கிணங்க பட்டர்பிரானும் ஒவ்வொரு எம்பெருமான்களுடைய சிறப்புகளை எடுத்துக் கூறிக்கொண்டே வந்தார். தந்தையார் வடமதுரையில் எழுந்தருளியுள்ள கண்ணபிரான் வரலாற்றை எடுத்துக் கூறினார். அதனைக் கேட்ட ஆண்டாளுக்கு மயிர்ச்சிலிர்ப்பு ஏற்பட்டது. திருவேங்கடமுடையானது வரலாற்றைக் கூறிய பொழுது முகமலர்ச்சி தோன்றியது. திருமாலிருஞ்சோலைமலை அழகரது வடிவழகை அறிந்த மாத்திரத்தில் மனமகிழ்ச்சி உண்டாயிற்று. அணி அரங்கனது மகிமையைக் கேட்டவுடனே அளவற்ற ஆனந்தம் அடைந்து நின்றாள். அப்பொழுது அந்தத் திருப்பதி எம்பெருமான்கள் யாவரும் ஆண்டாளது சுயம்வரத்தை உத்தேசித்து சிரீவில்லிபுத்தூருக்கு எழுந்தருளி அவனது ஞானக் கண்ணுக்குப் பொருளாயினர். இவோள அவர்களுள் அரங்கப் பெருமானிடமே உள்ளத்தைச் செலுத்தி அவனையே தனது கணவனாக உறுதி செய்தாள். அவனையே நாடோறும் சிந்தித்திருந்தாள்.

இதனைக் கேட்ட ஆழ்வார் "நம் பெருமாள் இவளை மணத்தல் கூடுமோ?" என்று சிந்தித்தவண்ணம் இருந்தார். இந்நிலையில் திருவரங்கப் பெருமான் இவரது கனவில் எழுந்தருளி "ஆழ்வீர்! உமது திருச்செல்வியைப் பெரிய கோயிலுக்கு அழைத்து வாரும். அவளை நாம் ஏற்றுக் கொள்வோம்" என்று அருளிச் செய்தான்.

5. பெரி. திருவந் – 49, 73
6. மேலது – 27

இதனால் ஆழ்வார் கவலை நீங்கியவராய் மகிழ்ந்திருந்தார். அரங்க நாதன் தன் கோயிற் பரிசனங்களின் கனவிலும் தோன்றி சகலவித மங்கள வாத்தியங்களுடனும் இதர ஏற்பாடுகளுடனும் ஆண்டாளை நவரத்தினம் இழைத்த பல்லக்கில் ஏற்றி அழைத்துவருமாறு பணித்தான். அவர்களும் ஸ்ரீவில்லிபுத்தூர் சென்று பெரியாழ்வாரைச் சந்தித்து அரங்கன் கட்டளையை விண்ணப்பம் செய்தனர். செவிக்கு அமுதமான இச்செய்தியைக் கேட்ட அளவில் பெருமகிழ்ச்சியுற்றார் ஆழ்வார். கோதையும் அவளுடைய தாதையும் ஆலிலைப் பள்ளியான் சந்நிதி சென்று அரங்கனது திருமணத்தை விண்ணப்பம் செய்து இவை பெற்று திருவரங்கத்திற்குப் பயணப்பட்டனர்.

இச்செய்தி பாண்டிய மன்னனது செவியில் பட்டதும் தானும் திருமண விழாவை உடனிருந்து சிறப்பாக நடத்திக் களிகூர விரும்பினான். ஸ்ரீவில்லிபுத்தூரையும் திருவரங்க நகரையும் பல்வேறு விதமாக அலங்கரித்து விழாக்கோலம் பூணச் செய்தான். தானும் தன் யானை, குதிரை, தேர், காலாட் படை பலத்துடன் ஆழ்வார் பக்கல் வந்து சேர்ந்தான்.

இவ்வளவு சிறப்புடன் ஆண்டாளை மணிச்சிவிகையில் எழுந்தருளப் பண்ணி மங்கல ஒலியுடன் திருவரங்கம் பெரிய கோயிலை அடைந்தான். பெரிய பெருமாளின் முன் மண்டபத்தில் பிராட்டியை நிறுத்திப் பெருமாளைச் சேவிக்கச் செய்தனர். பெரிய பெருமாளின் பேரழகு இரும்பை ஈர்க்கும் காந்தம் போல ஆண்டாளைக் கவர்ந்தது. அவளும் சிலப்பார்க்க கொங்கை குலுங்க சீரார்வளையொலிப்ப அன்ன மென்னடை கொண்டு ஆனந்தக் கடலில் ஆழ்ந்தவண்ணம் அரங்கனன் திருவடிவருடக் கருனிதாள். அரவப் படுக்கையை மிதித்தேறி பெரியபெருமாளின் திருமேனியில் கலந்து அவனை என்றும் பிரியாதிருக்கும் நிலையை அடைந்தாள்.

**ஆழ்வார் பெற்ற அருளிப்பாடு** - இந்தத் தெய்வக்காட்சியை ஆழ்வாரும் அவன் சீடனான பாண்டியன் உள்ளிட்டாரும் சேவித்து அதிசயத்து நின்றிருந்தனர். திருவரங்கமுடையான்அர்ச்சகமுகமாக ஆழ்வாரை அருகில் அழைப்பித்து, "ஆழ்வீர்! திருப்பாற் கடல் நாதன் போல நீரும் நமக்கு மாமனராகிவிட்டீர்!" என்று முகமன் கூறித் தமது தீர்த்தம், திருப்பரிவட்டம், திருமாலை, சடகோபன் முதலியவற்றைச் சாதிக்கச் செய்தான். "வில்லிபுத்தூருறைவானுக்குத் தொண்டு பூண்டிரும்" என்று கூறி விடை கொடுத்தருளினன். ஆழ்வாரும் வில்லிபுத்தூர் திரும்பி பல்வேறு மலர்களுடன் ஆர்வம் என்பதொரு மலரையும் இட்டு எண்பத்தைந்து ஆண்டு காலம் வாழ்ந்திருந்து பேரானந்தப் பெரும்பதம் அடைந்தார்.

அஞ்சு குடிக்கொரு சந்ததியாய் ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சிநிற்கும் தன்மையளாய் பிஞ்சாய்ப்
பழுத்தாளை ஆண்டாளைப் பக்தியுடன் நாளும்
வழுத்தாய் மனமே மகிழ்ந்து'

என்ற மாமுனிகள் பாசுரத்தால் இப்பெருமாட்டியின் வரலாற்றை நிறைவு செய்கின்றோம்.

7. உ.ர.மா. 24

## 2. பெரியவாச்சான் பிள்ளை வரலாறு

இந்தப் பெரியார் சோழவளநாட்டில் **திருவெள்ளியங்குடி**[1] என்ற திவ்விய தேசத்திற்கு ஒரு கல் தொலைவிலுள்ள **சேங்கநல்லூர்** என்ற தலத்தில் பிறந்தவர் (ஆவணி - ரோகிணி). இயற்பெயர் கிருஷ்ண பாதர், அபயப்ரதராஜர் என்பன. தந்தையார் - யாமுநதேசிகர், தாயார் நாய்ச்சியாரம்மாள். நஞ்சீயரிடத்திலும் நம்பிள்ளையிடத்திலும் திருவாய்மொழி வியாக்கியானங்களை முறையாகக் கேட்டு அநுசந்தித்தவர். நம்பிள்ளையின் நியமனப்படி நாலாயிரம் முழுமைக்கும் வியாக்கியானம் செய்தவர். திருவாய்மொழிக்கு இவர் செய்த வியாக்கியானம் **இருபத்து நாலாயிரப்படி.** (இராமாயணம் இருபத்து நாலாயிரம் சுலோகங்களையுடையதாதலின அத்தொகையளவில் இந்த வியாக்கியானம் எழுந்தது.) இவரது வியாக்கியானங்க்ள் பட்டரின் அணட சலோகி, நம்பிள்ளையின் ஈடு முதலியவற்றின் துணை கொண்டு எழுதப் பெற்றமையால் அவை மிகச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் இருக்கும். இராமாயணத்தில் இவருக்கு அளவுகடந்த ஈடுபாடுள்ளமையால், இவர்கட்கும் பிரமாணங்களுள் இராமாயண சுலோகங்களே மிகுதியானவை. ஆழ்வார்கள் அருளிச் செயல்கள் முழுவதற்கும் உரைகண்டவர் இவர் ஒருவரே. இக்காரணம் பற்றி இவர் **'வியாக்கியான**

1. திருவெள்ளியங்குடி : கும்பகோணத்திலிருந்து அணைக்கட்டுக்குப் போகும் வழியில் செங்கனூர் என்ற ஊரின் தென் திசையில் 3 கி.மீ. தொலையிலுள்ளது. சுக்கிரன் தவம் புரிந்து பேறு பெற்ற தலம். (கோயிலுக்குச் செல்லும் வழியில் ஒரு கி.மீ. தொலைவில் சேங்கநல்லூர் உள்ளது.) எம்பெருமான் கோலவில்லி இராமன்; தாயார் மரகதவலலி. கிழக்கு நோக்கிய திருமுகமண்டலம்; சயனத்திருக்கோலம் (புயங்கசயனம்). கைகளின் மீது தலையை வைத்துக் கொண்டு சேவை சாதிக்கின்றான். இத்தலத்து எம்பெருமானைச் சேவித்துவிட்டால் 108 எம்பெருமான்களைச் சேவித்த பலன் கிட்டும் என்ற நம்பிக்கை அடியார்களிடம் இருந்து வருகின்றது.

**சக்கரவர்த்தி'** என்று புகழ்பெற்றவர். இவர் பூர்வசிகை பார்ப்பன குலத்தினர் (பிள்ளைஎன இக்காலத்தவர் வழங்கும் குலத்தினரல்லர்).

இவருடைய திருஆராதனப் பெருமாள் கிருஷ்ண விக்கிரகம். இருப்பிடம் பெரிய கோயில் என்று வழங்கப்பெறும் திருவரங்கம்.

**இவர் அருளிச் செய்த நூல்கள்** - 1. திருவாய்மொழிக்கு 24000 படி வியாக்கியானம், 2. திருப்பாவைக்கு 3000 படி வியாக்கியானம், 3. நாலாயிரத்திற்கு வியாக்கியானம், 4. திரிமத சித்தாந்த சாரசங்கிரகம், 5. பாசுரப்படி இராமாயணம், 6. கலியன் அருளப்பாடு, 7. பரந்த இரகசிய விவரணம், 8. மாணி மாலை, 9. நவரத்தின மாலை, 10. சகல பிரமாண தாத்பரியம், 11. உபகார ரத்தினம், 12. கத்ய சிரய வியாக்கியானம், 13. ஆளவந்தார் ஸ்தோத்திர ரத்ன வியாக்கியானம், 14. தனி சுலோகி வியாக்கியானம், 15. பரந்தபடி, 16. அபய பிரதான வியாக்கியானம், 17. சரம இரகசியம், 18. அநுசந்தான இரகசியம், 19. நிகமனப்படி முதலியன.

இவர் 95 திரு நட்சத்திரம் எழுந்தருளியிருந்தார். இவருடைய சீடர்கள் - (திருமகனாரும் தத்நுபுத்ரருமான) நைனாராச்சான் பிள்ளை, பரகால தாசர், பின்பழகிய பெருமாள் சீயர், சீரங்காச்சார்யர், முதலானோர். நிகமாந்த மகா தேசிகன் தாம் கண்ட ஒரு கனவில் பயனாக, இவரால் திருத்தியாளப்பட்டுத் திருப்பாணாழ்வார் விக்கிரகத்தை திருவாராதன மூர்த்தமாகப் பெற்றார் என்ற வரலாறும் சில நூல்களில் கூறப்பெற்றுள்ளன.

## 3. அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் வரலாறு

இப்பெரியார் வடக்குத் திருவீதிப் பிள்ளையின் இளைய திருக்குமாரர். இவரது தமையனார் அஷ்டாதாச இரகசியம் அருளிச் செய்த பிள்ளை உலக ஆசிரியர். திருத்தாயர் சீரங்க நாச்சியார். திருவரங்கத்தில் பிறந்தவர்.

அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அதிமேதாவியாய் தன் தந்தையாரிடம் பஞ்சசம்ஸ்காரங்கள் நித்தியாநு சந்தானங்கள் ஆகியவற்றைப் பெற்றவர். நம்பிள்ளையிடத்தில் ஸ்ரீபாஷ்யம், சுருதப்பிரகாசிகை, இரகசியங்கள், இரகசிய வியாக்கியானங்கள் முதலானவற்றையும் அறிந்தவர். திருவாய்மொழி திவ்விய பிரபந்தங் களைத் தம் தமயனார் பிள்ளை உலகாசிரியர் மூலம் தெளிந்தவர்.

அரங்கநாதரைத் திருவாராதனமாக அடைந்தவர். பிரமச்சரிய நிலையினர். பட்டரைப் போலவே இவரும் இப்பூவுலகில் நீண்ட காலம் வாழ்ந்திருக்கவில்லை. இளமையிலேயே தம் தமையனாருக்கு முன்பே அந்தமில் இன்பத்தழிவில் வீட்டினை அடைந்தவர்.

**மாமுடும்பை மன்னு மணவாள அண்ணலொரு**
**சேமமுடன் வைகுந்தம் சென்றக்கால் – மாபமென்று**
**தொட்டுரைத்த சொல்லும் துயந்தன்னின் ஆழ்பொருளும்**
**எட்டெழுத்தும் இங்குரைப்பார் ஆர்.**

என்பது இப்பெரியார் திருநாடு அலங்கரித்த காலத்து இவர்தம் திருத்தமையனார் இரங்கக் கூறியச் செய்யுள்.

**இவர்தம் அருளிச் செயல்கள்** - 1. அமலனாதி பிரான் வியாக்கியானம், 2. கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கியானம், 3. திருவந்தாதி வியாக்கியானம், 4. மாணிக்கமாலை வியாக்கியானம், 5. திருப்பாவை ஆறாயிரப்படி வியாக்கியானம், 6. பட்டோலை, 7. ஆசாரிய ஹிருதயம்.

**இவர்தம் சீடர்கள்** - கிடாம்பி திருமலை நாயனார், கூர குலோத்தும தாசர்.

## 4. சுத்தசத்துவம் தொட்டார்ச்சார்யர் வரலாறு

திருப்பாவைக்கு சுவாபதேச வியாக்கியானம் அருளியவர். இவரைப் பற்றி அதிக விவரம் தெரியவில்லை. சுத்த சத்துவம் அண்ணன் என்ற திருநாமத்தையுடையார் ஒருவர் வானமாமலைத் திருமடத்து முதல் ஜீயர் சுவாமிகளால் திருவாய்மொழி ஈடு பிரசாதிக்கப் பெற்றவர் என்ற குறிப்பு ஒரு குரு பரம்பரைப் பதிப்பில் வெளிவந்தது. அதை ஒட்டி இதே ஜீயர் சுவாமிகள் அருளிய திருப்பாவை ஸ்வாபதேசத்தைப் பெருக்கி சுத்தசத்துவம் தொட்டாச்சாரிய சுவாமிகள் விரிவாகத் தமது ஸ்வாபதேச வியாக்கியானத்தை அருளிச் செய்தார் என்று ஊகிக்கலாம். இவருடைய காலம் வானமாமலைத் திருமடத்தை நிறுவிய காலமாக இருத்தல் கூடும்.

